உ

சிவமயம்



கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்

அருளிச் செய்த

# கந்த புராணம்

## மகேந்திர காண்டம்

### மூலமும் — உரையும்



உரையாசிரியர் :

நவாலியூர் வை. நல்லையா அவர்கள்

பாவம்போம் பொல்லாப் பழிபோகும் பாருலகிற்
சேவற் கொடியோன் திருவடியைச் — சாமளவுஞ்
சிந்திப்பீர் செல்வஞ் செறியிலங்கை நன்னாட்டீர்
வந்திப்பீ ரென்றும் மகிழ்ந்து.

காமமுத லானுங் கடிந்து கடிகமழுஞ்
சேமந் தருந்திவ்விய பாதத்தை — ஆமளவும்
போற்றிப் புகழுவீர் பொன்னிலங்கை நன்னாட்டீர்
மாற்றிப் பிறக்க மருந்து.

புன்னுனிமேல் நீர்போல் நிலையாத பொய்யுடலை
என்னினிநீர் எண்ணி வருந்துவீர் — மண்ணுலகில்
ஆறுமுகன் பாதத்தை யன்பா யிலங்கையீர்
கூறு மதுவே குணம்.

இளமை நிலையா தெனவறிந்து வேலன்
பழமை தருமடியைப் பற்றும் — எழுமையும்
இன்பந் தருமே யிலங்கைமா நன்னாட்டீர்
அன்பிற் பணிவீ ரறிந்து.

அறிவுக் கறிவாகி யப்பாற்கப் பாலாய்ச்
செறியும் முருகன் திருவடி — நெறியுடனே
பற்றிப் பணிந்திடுவீர் பல்கா லிலங்கையீர்
வெற்றிதரு மென்றும் விழைவு.

வினையுமிச்சை யெல்லாம் வெறுத்தே யெஞ்ஞான்றும்
இளையோன் திருப்பாத மேத்த — மழைபோற்
கருணைவருமே கருதிலங்கை நாட்டீர்
தருண மிதுகண்டீர் தான்.

சிவமயம்

# முன்னுரை

இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி இடர் பாவம் கெடுத்து ஏழையோமை உய்யும் வண்ணம் தெளிவுபெறாத சிந்தையினைத் தெளிவுறவைத்து சிவலோக நெறியறியச் சிந்தை தந்தருளும் அருளாளனான ஆறுமுகமுடைய அப்பனின் நல்லருளால் மானிப்பாய் வேலக்கைப் பிள்ளையார் கோவிலில் கந்த புராணம் ஓதிவருங்கால் ஓர் உரை எழுத வேண்டும் என்னும் ஆசைப்பாட்டால் ஆரம்பித்து உரை அச்சிட்டு வெளியிடும் பணியில் தோன்றாத் துணையான குருபரனின் அருளால் அசுரகாண்டமும் பூர்த்தியாகி இப்பொழுது மூன்றாவதான மகேந்திரகாண்டம் உரையுடன் அச்சிட்டு வெளியாகின்றது.

இப்புராணத்தை அருளால் பாடியருளிய அளவிலாப் பெருமை உடையவராகிய கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகளின் பாடல்களின் பொருளின் பெருமையின் அளவில் ஒரு சிறுதுணையேனும் எடுத்துக் கூறுவது எனக்கு அரிதாக இருப்பினும் அளவிலாத ஆசை இதைச் செய்யும்படி தூண்டுதலாலே நான் இந்த உரையை எழுதுகின்றேன்.

கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் கருணைக் கடலான முருகப் பிரானின் புகழ் இங்கு இந்த மகேந்திர காண்டத்தில் சிறந்து காணப்பெறும். அவை புகுபடலம் சூரன் அமைச்சியற் படலம் இவை காண்க.

கல்நெஞ்சையும் உருக்கி உய்யக் கொள்ளும் வகையில் கந்தமாதனம் வீரவாகுதேவர் செல்லும் படலம் இருக்கின்றது. சயந்தன் கனவுகாண் படலமோ ஓத ஓத உவகைக் கண்ணீர் பெருக்குவ தொன்றாகும்.

அறிவு கல்வி இவற்றால் பெருமக்களால் எத்துணையும் கணிக்கப்பெறாத சிறியேனும் இப்பணியைச் செய்வதற்கு எவ்வளவோ ஆயிரக்கணக்கில் பொருள்வேண்டி இருந்தது. எனது இந்த நிலை குறித்து என்மீது எனது சங்கடங்கள் கண்டு பரிந்து இரங்குகின்ற என்னைப் பெற்றதாய் போன்று சில தாய்மார்களும் உத்தம உண்மை நெறிநிற்கும் பெரியோர்களும் பொருளுதவி புரிந்து வந்துள்ளார்கள். அவர்கட்கு எனது நன்றி.

இந்த மகேந்திர காண்டத்தை நான் அச்சிட்டு வெளியிடுவதற்கு எனக்கு கல்வி புகட்டிய அம்மையாரின் புதல்வர் ஒருவரும் நண்பரும் அன்புடன் இப்பணியை ஏற்று தமது அச்சகத்தில் செய்கின்றார். அவர்க்கு எனது நன்றி.

இதனை எல்லா அடியார்களும் ஏற்று சிறப்புடன் கொள்வார்களாக,

உயரப்புலம்
கொக்குவில் மேற்கு
கொக்குவில்.

இங்ஙனம்
வைத்திலிங்கம் நல்லையா

---

(1) பல்லவி

வேலைத் தூக்கிவிளை யாடுந் தெய்வமே — யென்
வினைப்பகைதீர் தெய்வமே.

அனுபல்லவி

காலைத்தூக்கி யாடும் கண்ணுதல் தந்த
கதிர்காமத் தையனே கழலடி நம்பி வந்தேன். (வேலைத்)

சரணம்

எங்கெங்கும் திருமுகம் எங்கெங்குந் திருவிழி
எங்கெங்குந் திருச்செவி எங்கெங்குந் திருக்கரம்.
எங்கெங்குந் திருவடி எங்கேநீ அங்கே நான்
ஈசனே கதிர்காம வாசனே முருகேசா. (வேலைத்)

— o —

(2) பல்லவி

வீர மாமயில் ஏறும் வேலவ — விளங்கு
கௌரி பாலகா — வா. (வீர)

அனுபல்லவி

கானக் குறத்தி மகிழும் பாதா — காக்கும்
கடவுள் துதிக்கும் நாதா. (வீர)

சரணம்

எனக்கும் உனக்கும் பேத மேனோ
எடுத்துச் சொன்னால் போதம் போமோ
மணக்கும் சோலை நல்லூர் வாசா
வணங்கும் யோகசுவாமி நேசா (வீர)

உ

சிவமயம்

முருகன் துணை

—0—

மூன்றுவது

# மகேந்திர காண்டம்

## வீரவாகு கந்தமாதனஞ் செல் படலம்

விரிஞ்சன்மால் தேவ ராலும் வெலற்கரும் விறலோ னுகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவு மாற்றி
அருஞ்சிறை அவர்க்குச் செய்த அவுணர்கோன் ஆவி கொள்வான்
பரஞ்சுடர் உருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம்.

பிரமதேவர் திருமால் தேவர்கள் எவராலும் வெல்லற்கரிய வலிமை உடைய வனுகியும், பெரிய தேவர்களுடைய மேலான பதங்களையும் அவர்களது வேதநெறிப் படி ஒழுகும் ஒழுக்கத்தையும் நீக்கி அவர்களுக்கு நீக்கரிய சிறையினைச் செய்த அசுரர்க்கு அரசனுன சூரபன்மன் உயிரினை நீசகும்படியாக மேலான சோதி சொரூபம் நிறைந்த உருவமாய்த் தோன்றியருளி வந்த குமரநாயகனைப் பணிதல் செய்வோம். 1

இந்திர னுதி யான அமரரும் ஏனை யோரும்
புந்தியில் உவகை பூத்துப் புடைதனில் ஒழுகிப் போற்றச்
செந்திமா நகரந் தன்னில் சீயமெல் லணைமேல் வைகுங்
கந்தவேள் அருளின் நீரால் இனையன கருத லுற்றுன்.

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரண்டு தோள்களுமாய் திருச்செந்தூரில் தித்தித்திருக்கும அமுதாகிய பெருமானை; இந்திரன் திருமால், பிரமன் ஆதியான தேவரும், முனிவரும், மற்றுளோர் யாவரும் மனதில் மகிழ்ச்சி மலர்வுற பக்கராக பத்திமையாகிய ஒழுக்கத்துடன் போற்றுதல் புரிய திருச்செந்தூரான நகரத்து சிம்மாசனமேற் சிறந்தருளி வீற்றிருக்குங் கந்தக் கடவுள் கருணையின் பெருக்கால் இதனைத் திருவுளத்து எண்ணியருள்கின்றுர். 2

நான்முக னுதி யான நாகரும் முனிவ ரும்போல்
மேன்முறை அவுண ராகும் வியன்தொகை யவரும் எங்கோன்
கான்முளை நெறிய ரேனுங் கடியரை முடிவு செய்தல்
நூன்முறை இயற்கை யாகும் நுவலரும் அறனும் அஃதே.

நான்கு முகமுடைய பிரமதேவர் முதலாக உள்ள தேவரும், முனிவரும் போன்று மேன்மை முறையுடன் இருக்கும் அசுரர்களாகும் பெருங் கூட்டத்தினரும் எங்கள் நாயகரான சிவபிரான் அருளால் தோன்றிய உயிர்களான சிவனருள் நெறியராக இருப்பினும் கொடியவர்களை முடிவு செய்தல் நூல்களில் விதிக்கப்பட்ட இயல்பான தொன்றுகும், அதுவுமல்லாமல் இது சொல்லற்கரிய தருமமுமாகும். 3

இற்றிது துணிபா மேனும் எண்ணெழிற் சூரன் றன்னை
அற்றமில் சிறப்பின் வைகும் அவன்றமர் தம்மை எல்லாஞ்
செற்றிடல் முறைய தன்றால் தேவர்தஞ் சிறைவீட் டுய்ய
மற்றவன் தனக்கோர் ஒற்றை வல்லையில் விடுத்து மன்னோ.

இது துணிபான முடிவு எனினும் நினைப்பரிய அழகு விளங்கும் சூரனை குற்றங் காணாத சிறப்பிலே இருக்கும் அவனுடைய சுற்றமாயினாரை எல்லாரையும் அழித்து விடல் முறையன்று. தேவர்களை சூரன் இட்டுவைத்து வைத்திருக்கும் சிறையின் நின் றும் அவர்களை நீக்கி அவன் உய்யும்படியாக அச்சூரனுக்கு உறுதி சொல்வதற்கு ஓர் தூதனை விரைவுடன் இப்போது நாம் செலுத்துவோம். 4

தூண்டுநம் மொற்றன் மாற்றஞ் சூரனும் அவுணன் கேளா
ஈண்டிரு சிறையின் நீக்கி அமரரை விடுப்பன் என்னின்
மாண்டிட லின்றி இன்னும் வாழிய மறுத்து ளானேல்
ஆண்டுசென் றடுதும் ஈதே அறமென அகத்துட் கொண்டான்.

நாம் அனுப்பிய தூதனின் அறிவுடைய வார்த்தையை சூரபன்மனென்கின்ற அசுரன் கேட்டு அவன் இவ்விடத்து சிறையிட்ட தேவரை சிறையின் நின்றும் நீக்கி விடுவனே என்னின் அவன் இறத்தல் இன்றி இன்னும் வாழ்ந்திருக் கட்டும், சூரபன்மன் எனது வார்த்தையை மறுப்பானேயானால் அவ்விடத்து நாம் சென்று அவனை சங்கரிப் போம், இதுவே தருமமாகும் என திரு உள்ளத்துள்ளே எண்ணியருளினார் ஆறு முக முடைய பரம்பொருளான முருகன். 5

வடித்தசெங் கதிர்வேல் அண்ணல் மாலயன் மகவா னாதி
அடுத்தபண் ணவரை நோக்கி அவுணர்தங் கிளையை யெல்லாம்
முடித்திடப் பெயர்தும் நாளை முன்னமோர் தூதன் றன்னை
விடுத்தனம் உணர்தல் வேண்டும் வெய்யசூர் கருத்தை என்றான்.

கூரிய செவ்வொளி பரந்த வேலினை ஏந்திய அண்ணலான முருகப்பெருமான் திருமால், பிரமன், இந்திரன் ஆதியாக அங்கு வந்துள்ள தேவர்களை நோக்கி; அசுர ருடைய கிளைகளை எல்லாம் முடித்திடும்படி நாளை நாம் இங்கிருந்து செல்வோம். அதற்கு முன்பாக ஓர் தூதன் தன்னை சூரபன்மனிடம் விடுத்து அவனிடம் தேவர் சிறையை விட்டு நன்னெறி கொண்டு வாழ்வதற்கு விரும்புகிறானா என்ற அவனது கருத்தை அறிதல் வேண்டும். 6

கடலுடைக் கடுவை உண்டோன் காதலன் இனைய செப்ப
மடலுடைப் பதுமப் போதில் வைகினோன் மாயன் கேளா
அடலுடைப் பெரும்போர் எந்தை ஆற்றுமுன் சூரன் முன்னோர்
மிடலுடைத் தூதன் றன்னை விடுத்தலே அறத்தா றென்றார்.

கடலிடத்துள்ள நஞ்சை உண்ட சிவபிரான் காதல் மைந்தரான எங்கள் முருகன் இதனைச் சொல்லியருள; அதனை மடல் கொண்ட அழகிய இதழினை உடைய தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவரும் திருமாலும் கேட்டு மிக்க வலியுடைய பெரியதோர் போரினை எந்தைபிரானே தேவரீர் சூரனோடு செய்யுமுன்பாக திண்மை உடைய ஓர் தூதுவனை அவனிடத்து விடுத்து அவனிடம் நற்புத்திகளைக் கூற முயலு தலே தருமத்தின் சார்பான செயலாகும் என்றார்கள். 7

என்றலுங் குமர மூர்த்தி இப்பெருந் திறலோர் தம்முள்
வென்றிகொள் சூரன் றன்பால் வீரமா மகேந்தி ரத்துச்
சென்றிட விடுத்தும் யாரைச் செப்புதி ரென்ன லோடு
நன்றென அதனை நாடி நான்முகன் நவிற லுற்றான்.

என்று பிரம விஷ்ணுக்கள் கூறுதலும், மணம் கமழ் தெய்வத்து இள நலம் உடைய குமரப் பெருமான் அதனைக் கேட்டு இங்குள்ள இந்தப் பெரிய வீரருள்ளே வெற்றிகளைப் பெற்று விளங்கும் சூரன் முன்பு தூதாக அவனது வீரமகேந்திரபுரத்திற்கு செல்லும்படி யாரை விடுப்போம் சொல்வீராக என்று கேட்டருளலோடும் அதனை நன்கு நாடி உணர்ந்துள்ள பிரமதேவர் சொல்கின்றார். 8

மெல்லென உலவைக் கோனும் வீரமா மகேந்தி ரத்திற்
செல்லரி தெனக்கு மற்றே செய்பணி நெறியால் அன்றி
ஒல்லையில் அங்கண் ஏகி ஒன்னலர்க் கடந்து மீள
வல்லவன் இனைய வீர வாகுவே ஆகு மென்றான்.

பெருமானே! எங்கும் நிறைகின்றவனும் எங்கும் செல்லக்கூடியவனுமான வாயுபகவானும் வீரமகேந்திரத்தினிடம் மெல்லத்தானும் செல்வது அரிது; அடியேனுக்கும் அப்படித்தான் அவன் வரச்சொல்லி அவனிடம் ஏதேனும் பணி புரியும் நிலையால் அன்றி அங்கு நான் போதல் முடியாது. ஆதலின் விரைவுடன் அங்கு சென்று அங்குள்ள பகை அசுரர் எதிர்ப்பினும் அவர்கள் யாரையும் வெற்றி கொண்டு தனது தூதான பணியைச் செய்து திரும்பி மீள வல்லமை உள்ளவர் இதோ இந்த வீரவாகுதேவரே ஆவர் என்றார் பிரமதேவர். 9

சதுர்முகன் இனைய வாற்றால் சண்முகன் உளத்துக் கேற்பக்
கதுமென உரைத்த லோடுங் கருணைசெய் தழகி தென்னா
மதுமலர்த் தொடையல் வீர வாகுவின் வதனம் நோக்கி
முதிர்தரும் உவகை தன்னால் இத்திறம் மொழிய லுற்றான்.

நான்கு முகமுடைய பிரமதேவர் இத்தன்மையாக ஆறுமுகப்பெருமான் திருவுள்ளத்திற்கு ஏற்கும் வண்ணம் விரைவுடன் இதனைச் சொல்லலும் எம்பெருமான் பிரமதேவர் மேல் கருணை புரிந்து இது அழகாகும் என்று அருள் செய்து தேன் துளிக்கும் மலர் மாலையணிந்திருக்கும் மேனி கொண்ட வீரவாகு தேவரின் முகத்தினைப் பார்த்தருளி முதிர்ந்து விளங்கும் மகிழ்வுடனே இத்தன்மையாகச் சொல்லியருள்கின்றார். 10

மயேந்திர மூதூ ரேகி வல்லைநீ அமலன் நல்குஞ்
சயேந்திர ஞாலத் தேரோன் தனையடுத் தொருநாற் றந்தக்
கயேந்திரன் மதலை வானோர் காப்பைவிட் டறத்தா றுன்னி
நயேந்திர வளத்தி னோடும் உறைகென நவிறி யன்றே.

வீரவாகுதேவனே! நீ வீரமகேந்திரபுரம் சென்று விரைவுடனாகச் சிவபிரான் கொடுத்தருளும் இந்திரமாஞாலம் என்னும் சிறப்புடைய தேரினைப் பெற்றுக்கொண்ட சூரபன்மனை அடைந்து அவனிடம் நீ நான்கு தந்தங்களையுடைய ஐராவத யானையை வாகனமாக உடைய இந்திரன் மைந்தன் சயந்தனை தேவர்களை வைத்திருக்கும் சிறையை நீக்கி விடுத்து இனிமேலாக தருமத்தின் வழியையே நினைந்து கொண்டு மிகச் சிறந்துள்ள வளத்தினை அனுபவித்துக் கொண்டு வாழ்வாயாக என்று கூறுவாய். 11

அம்மொழி மறுத்து ளானேல் அவுணநின் கிளையை யெல்லாம்
இம்மென முடிக்து நின்னை எஃகவேற் கிரையா நல்கத்
தெம்முனை கொண்டு நாளைச் செல்லுதும் யாமே யீது
மெய்ம்மைய தென்று கூறி மீள்கென வீரன் சொல்வான்.

அந்த வார்த்தையைச் சூரபன்மன் மறுத்துப் பேசுவானெனில் சூரபன்மனே! உனது சுற்றத்தை எல்லாம் ஒரு நொடிப் பொழுதில் முடிவாக்கி அழித்து உன்னையும் கூரிய வேலுக்கு இரையாகக் கொடுப்பதற்கு கொடிய பகையான போர்நிலை கொண்டு நாம் நாளை வருவோம், இது உண்மையாகும் என்பதைச் சூரனிடம் கூறி விட்டு மீள்வாயாக என்று எம்பிரான் சொல்லியருளவும் வீரவாகுதேவர் எம்பிரானை நோக்கி இதனைச் சொல்வார். 12

வெந்திறல் அவுணர் ஈண்டும் வீரமா மகேந்தி ரத்திற்
சுந்தரத் திருவின் வைகுஞ் சூரபன் மாவின் முன்போய்
எந்தைநீ அருளிற் றெல்லாம் இசைத்தவ னுள்ளம் நாடி
வந்திடு கின்றேன் என்று வணங்கியே தொழுது போனான்.

கொடிய வலியுடைய அசுரர் நெருங்கி வாழும் வீரமகேந்திர புரத்து மிக்க சுந்தரம் உடைய செல்வத்தில் இன்புற்றிருக்கின்ற சூரபன்மன் முன்பாகச் சென்று எந்தை பிரானே, நீர் அருள் செய்தபடி யாவையும் நான் அவனிடம் கூறி அவனுடைய உள்ளக்கருத்தை அறிந்துகொண்டு வந்திடுகின்றேன் என பன்னிரு புயமுடைய பகவானை வணங்கி தொழுது எழுந்து விடை பெற்றுக்கொண்டு போனார் வீரவாகுதேவர். 13

கூர்ந்திடு குலிசத் தண்ணல் குமரவேள் ஒற்றன் தன்பின்
பேர்ந்தனன் சென்று வீர பெருந்திறற் சூரன் மூதூர்
சார்ந்தனை சிறையில் வானோர் சயந்தனோ டிருந்தா ரங்கட்
சேர்ந்தனை தேற்றிப் பின்னுன் செயலினை முடித்தி யென்றான்.

இவ்வாறு செல்கின்ற குமரக்கடவுள் தூதர் வீரவாகுதேவர் பின்னராக கூரியகுலிசப் படையை கையில் ஏந்திய இந்திரதேவன் தொடர்ந்து சென்று அவரை நோக்கி வீரனே! தேவரீர் பெரிய திறல் உடைய சூரபன்மனது முதுமை கொண்ட வீரமகேந்திரபுரம் செல்லும் பொழுதில் அந்த தேவர்கள் சயந்தனுடன் சிறையில் இருந்தார் அவர்களிடம் நீர் சென்று அவர்களுக்கு முன்னர் தேறுதலைக் கூறி தெளிய வைத்துவிட்டு அப்பால் பின்னர் உனது தூதான செயலை முடிப்பாயாக என்றான். 14

அவ்வழி அமரர் கோமான் அனையன அறைத லோடுஞ்
செவ்விது நிற்றி யற்றே செய்வனென் றவனை நீங்கி
எவ்வமில் துணைவ ராகும் எண்மரும் இலக்கத் தோரும்
மெய் வருந் தொடர்பிற் செல்லக் கண்ணுற்றி விடலை சொல்வான்.

இந்தப் பிரகாரம் இந்திரதேவன் இந்த வார்த்தையை வீரவாகு தேவரிடம் சொல்லலோடும் இது செப்பமானது அப்படியே செய்வேன் நீ நிற்பாயாக என்று கூறி இந்திரனை விட்டு நீங்கி குறைவு ஒன்றும் இல்லாத தம்பிமாராகும் எட்டுப்பேரும் இலக்கம் வீரரும் உடன்பிறந்த தொடர்பால் பின்னாகத் தொடர்ந்து வர அதனை வீரவாகு தேவர் கண்ணுற்று அவர்கட்கு வீரவாகுதேவர் சொல்வார், 15

நீயிர்கள் யாருங் கேண்மின் நெடுந்திரைப் பரவை வாவித்
தீயதோர் மகேந்தி ரத்திற் சென்றுசூர் முன்போய் நந்தம்
நாயகன் பணித்த மாற்றம் நவிலுவன் மறுத்து ளானேல்
ஆயவன் மூதூர் முற்றும் அட்டபின் மீள்வன் அம்மா.

நீங்கள் யாரும் கேளுங்கள்: நெடிய திரைகளை உடைய பெருஞ் சமுத்திரத்தை தாண்டி தீமை பயக்கும் வீரமகேந்திரபுரத்திற் சென்று சூரபன்மன் முன்பாகப் போய் நமது நாயகரான சிவசுப்பிரமணியப் பெருமான் என்னிடம் கூறும்படி பணித்த வார்த்தைகளை யான் அவனிடம் எடுத்துக் கூறுவேன் ஆனல் அந்த சூரபன்மன் எம்பிரானது திருவார்த்தையை மறுத்துளான் எனில் என்செய்வேன் தெரியுமா? அந்த சூரபன்மன் நகரம் முழுவதையும் அழித்த பின்பே இங்கு வருவேன் என்ருர் வீரவாகு தேவர். 16

என்றலும் வியந்து பின்னேர் யாவரும் இறைஞ்ச லோடும்
பொன்றிகழ் ஆகத் தூடு பொருந்துறப் புல்லிக் கொண்டு
வன்றிறற் பூதர் தம்முள் மன்னவ ரோடும் அங்கண்
நின்றிட வருளி வல்லே நெடுங்கடல் வேலை போந்தான்.

வீரவாகுதேவர் கூறலும் அவர்கள் அதுகேட்டு வியந்து தம்பிமார் யாவரும் வணங்குதலோடும் அவர்களை எல்லாம் தமது பொன் போன்ற திருமேனியோடு பொருந்தும்படி தழுவிக்கொண்டு அவர்களை வலியால் மிகுந்த பூதங்களுள் சேனதிபதிகளுடன் அங்கு நிற்கும்படி நல்லருள் செய்து விரைவுடனுக பரந்த நெடிய சமுத்திரக் கரையில் சென்ருர் வீரவாகுதேவர். 17

அலங்கலந் திரைகொள் நேமி அகன்கரை மருங்கின் மேரு
விலங்கலின் உயர்ந்த கந்த மாதன வெற்புத் தன்னில்
பொலங்குவ டுச்சி மீது பொள்ளென இவர்த லுற்ருன்
கலன்கலன் கலனென் றம்பொற் கழலமர் கழல்கள் ஆர்ப்ப,

அலைந்து மோதும் திரைகள் கொண்ட சமுத்திரத்தின் அகன்ற கரையின் பக்கராக இருக்கின்ற மேருமலையிலும் உயர்ந்த கந்தமாதனம் என்னும் மலையில் மிக அழகுடன் விளங்கும் உச்சிமீது விரைவுடன் ஏறிச் செல்லத் தொடங்கினர். அவ்வேளை வீரவாகுதேவருடைய பாதத்தணிந்த அழகிய பொன் சிலம்புகள் கலின், கலின் என்று சத்தமிட்டு ஆரவாரிக்கும்படியாக. 18

புஞ்சமார் தமாலச் சூழல் பொதுழிய பொதும்பர் சுற்றி
மஞ்சுநின் றருத கந்த மாதனப் பிறங்கல் உம்பர்
விஞ்சுநுண் பொடிதோய் மேனி மேலவன் இவரும் பான்மை
அஞ்சன வரைமேல் வெள்ளி யடுக்கல்சென் றனைய தன்றே.

மலர்கள் நிறைந்து செழித்து வளர்ந்த கருமை வாய்ந்த சோலைகள் பெரிதும் துவன்றி நெருங்கிச் சூழ்ந்திட மேகங்கள் தங்கி நின்று நீங்காத கந்தமாதனம் என்னும் மலைமேலாக மிகுகின்ற ஒளி பரந்த திருநீறு அணிந்த மேனியை உடைய வீரவாகுதேவர் ஏறிச் செல்லும் தன்மை எப்படி இருந்ததெனில் கருமையான மலைமேலே வெள்ளி மலை ஏறிச் செல்வதுபோன்றிருந்தது. 19

கடுங்கலி மான்தேர் வெய்யோன் கையுற நிவந்த செம்பொன்
நெடுங்கிரி மிசைபோய் வீரன் நிற்றலும் பொறையாற் ருது
நடுங்கிய துருமுற் றென்ன நனிபகிர் வுற்ற தங்கண்
ஒடுங்கிய மாவும் புள்ளும் ஒஃலென இரிந்த வன்றே.

கடும் வேகமுடைய, குதிரைகள் பூட்டப்பெற்ற தேருடைய சூரிய பகவான்மேல் தொடுவது போன்று வளர்ந்து விளங்குகின்ற கந்தமாதன மலைமேல் சென்று வீரவாகு தேவர் நிற்றலும் அவரின் பாரத்தைத் தாங்கமுடியாது அம்மலை இடி வீழ்ந்துள்ளது போன்று நடுங்கிப் பிளந்து வெடித்தது. அம்மலையிடத்து ஒடுங்கி இருந்த பறவைகளும் விலங்கினங்களும் திடீரென ஏக்கத்தால் ஓடிச் சென்றன. 20

உண்ணிறை புள்ளும் மாவும் ஓலிட ஒலிமேல் கொண்டு
துண்ணென அருவி தூங்கத் தோன்றிய குடுமிக் குன்றம்
அண்ணலைத் தரிக்கல் ஆற்றேன் அளியனேன் அந்தோ வென்னுக்
கண்ணிடை வாரி சிந்தக் கலுழுதல் போலு மாதோ.

மலையின் சோலையுள் இருந்த பட்சிகளும் மிருகங்களும் ஓலமிட்டுச் சத்தமிட்ட ஓசை எழுந்து பெருகிட அருவிகள் பெருகி இரைந்து ஓடும் காட்சியுடன் நிலவுகின்ற பெருமுடியை உடைய கந்தமாதன மலையானது அண்ணலான வீரவாகு தேவர் என்மீது நிற்ப நான் தாங்கமாட்டேன், ஏழையேன் ஐயோ! என்செய்வேன் என்று கண்ணிடத்தாக நீர் பெருகிட அழுதல் போன்றிருந்தது. 21

அடல்கெழு திண்டோள் வீரன் அடிகளின் பொறையாற் ருது
விடர்கெழு குடுமி வெற்பு வெருவலும் ஆண்டை வைகும்
படவர வுமிழ்ந்த செய்ய பருமணி சிதறும் பான்மை
உடல்கெழு குருதி துள்ளி உகுக்குமா றெப்ப தன்றே.

வலிமை கொண்ட திண்மையான தோளுடைய வீரவாகுதேவரின் பாதங்களின் பாரத்தை தாங்கமுடியாது பெருமை கொண்ட பெருமுடியுடைய கந்தமாதன மலை நடுங்குதலும் அவ்விடத்து இருக்கும் படமுடைய நாகபாம்புகள் கக்கிவிட்டிருந்த பருத்த இரத்தினங்கள் சிதறிப் பாய்கின்ற தன்மை அம்மலையில் உள்ளிருந்து இரத்தம் துள்ளிக் கக்குவதுபோன்றிருந்தது. 22

அறைகழல் அண்ணல் நிற்ப அவ்வரை அசைய அங்கண்
உறைதரு மாக்கள் அஞ்சி ஒருவில வெருவி விண்மேல்
பறவைகள் போய துன்பம் பட்டுழிப் பெரியர் தாமுஞ்
சிறியரும் நட்டோர்க் காற்றுஞ் செயல்முறை காட்டுகின்ற.

ஒலிக்கின்ற வீரகெண்டை அணிந்த வீரவாகுதேவர் மலைமீது நிற்ப அந்த மலை நடுங்கி அசைதலும் அங்கு இருக்கின்ற மிருகங்கள் பயந்தாலும் ஓடிவிடவில்லை; ஆனால் பறவைகள் மட்டும் பயத்தால் வானத்தில் எழுந்து பறந்து சென்றது. இது எது போல என்றால் ஒருவன் துன்பப்பட்டபோது அவனுக்கு நட்பாயிருந்த அற்பனும் ஓர் பெருந்தன்மையுடையவனும் அவனிடத்துச் செய்து காட்டுகின்ற செயல்முறைபோன்றிருந்தது. 23

மழையுடைக் கடமால் யானை வல்லியம் மடங்கல் எண்கு
புழையுடைத் தடக்கை யாளி பொருப்பசை வுற்ற காலை
முழையிடைத் தவறி வீழ்வ முதியகா லெறியப் பட்ட
தழையுடைப் பொதும்பர் பைங்காய் தலைத்தலை உதிர்க்கு மாபோல்

மேகம் போன்று மதம் பொழியும் யானை, புலிகள், சிங்கம், கரடிகள், துதிக்கையை உடைய யாளி ஆகிய மிருகங்களெல்லாம் மலை அசைவுற்ற நேரத்து தாங்கள் இருந்த குகைகளில் தவறி வீழ்கின்றன. எதுபோலும் எனில் பெரும் புயல் காற்று வீசுகின்ற நேரத்து பெருத்த தழைகளை உடைய மரங்கள் செறிந்து காய்த்திருந்த மரங்கள் பசிய காய்களை முறை முறை உதிர்க்கும் தன்மை போன்றது. 24

நன்றிகொள் பரிதிப் புத்தேள் நகுசிர மாக என்றூழ்
துன்றிருஞ் சடில மாகச் சுரநதி தோயத் திங்கள்
ஒன்றொரு பாங்கர் செல்ல ஓங்கிரும் பிறங்கல் உச்சி
நின்றதோர் விசயத் தோளான் நெற்றிக் கண்ணன் போன்றான்.

உலகிற்கு நன்றி செய்யும் சூரியக் கடவுள் மேல் நிற்பது சிவபிரான் தலைமேல் சூடிய நகுவெண்டலையாக; சூரியதேவனுடைய வெயில் கிரணங்கள் சிவபிரானின் நெருங்கிய திருச்சடையாக; வானுலவு கங்கை சிவபிரான் சடைமீதில் அணிந்த கங்கையாக; சந்திரதேவன் ஒருபக்கமாகச் செல்வது சிவபிரானின் சடையில் இளம்பிறையாகக் காட்சிபெற; நீண்ட மலையின் உச்சியில் நின்ற வெற்றிதரும் வீரத் தோள்கொண்ட வீரவாகுதேவர் நெற்றிக்கண்ணுடைய சிவபிரான் போன்றார். 25

வலமிகு மொய்ம்பின் மேலோன் மலர்க்கழல் உறைப்ப ஆற்றா
தலமரு குவட்டின் நிற்றல் அன்றுதீ முனிவர் உய்த்த
கொலைகெழு முயல கன்மெய் குலைந்திடப் புறத்துப் பொற்றாள்
நிலவணி சடையோன் ஊன்றி நின்றிடு நிலைமை நேரும்.

பெரும் வலிமை கொண்ட தோளுடைய மேலவரான வீரவாகுதேவரின் மலர் போன்ற சிலம்பணிந்த திருவடிகள் ஊன்றிப் பதிதலும் அதனைக் கந்தமாதன மலை தாங்கமுடியாது நடுங்கி நிற்றல் அன்று கொடிய தாருகாவனத்து முனிவர் செலுத்திய கொலைத் தொழில் கொண்ட முயலகன் என்னும் அசுரனது மேனி நடுங்கிக் குலைய அவன் முதுகிலே தமது பொன்னார்ந்த திருவடிகளை ஊன்றி வைத்து நிலவு சொரியும் இளம் பிறையணிந்த சடையுடைய சிவபிரான் நின்றிடுகின்ற நிலைமைபோலும். 26

மாசிருள் செறியுந் தெண்ணீர் மறிதிரை அளக்கர் வேலைப்
பாசடைப் பொதும்பர் வெற்பிற் பண்ணவன் தூதன் நிற்றல்
காசியில் அரற்றத் தள்ளிக் களிறுடல் பதைப்பக் கம்மேல்
ஈசன்அன் றடிகள் ஊன்றி இருத்திய இயற்கை போலும்.

கொடிய இருள் செறிந்த தெள்ளிய நீரால் வீசும் அலைகளையுடைய சமுத்திரத்தின் கரையில் விளங்கிய பசுமையான சோலைகள் நிறைந்த மலையிடத்து எங்கள் கடவுளின் தூதுவன் நிற்கின்ற தன்மை எதுபோலும் எனில் காசியில் கயாசூரன் என்னும் யானை கத்தும்படி தள்ளி வீழ்த்தி அதன் உடலம் நடுங்கிப் பதைக்கும்படி முதுகின் மீது சிவபிரான் அன்று அடிகளை ஊன்றி யானையை அழுத்தி வைத்திருந்த தன்மை போன்றிருந்தது. 27

**தாரகன் படைஞர் பல்லோர் சமரிடை இரிந்து போனர்**
**பாரிடை யுறுமே அந்தப் பருவரை முழைக்கண் உற்றார்**
**வீரமொய்ம் புடையோன் அங்கண் மேவலும் அவற்கண் டேங்கி**
**ஆருயி ருலந்தார் தீயோர்க் காவதோர் அரணம் உண்டோ.**

தாரகாசூரனுடைய படைவீரர்கள் பலர் தாரகனுடன் முருகப் பிரான் செய்த போரிடைப் பயத்தால் விலகி ஓடிச் சென்றவர்கள் பூமியிடைஒளியாது அந்த கந்த மாதன மலைமேலாக ஓரிடத்து ஒளித்திருந்தார்கள். அங்கு வீரவாகு தேவர் வந்து சேர்தலும் அவரைக் கண்டு ஏக்கமுற்று அதனுல் தமது உயிரே நீங்கப் பெற்றார்கள். தீயவரான அசுரருக்கு எங்கு சென்றாலும் ஓர் பாதுகாப்பான இடம் உண்டா, இல்லையே. தீயார்க்கு ஒளிக்கக்கூட இடமில்லை. 28

**அனையதோர் சிமையக் குன்றம் அசைதலும் அங்கண் உற்ற**
**வனைகழல் விஞ்சை வேந்தர் மங்கையர் ஊடல் மாற்றி**
**இனிதுமுன் கலந்தார் அஞ்சி இன்புறு திடைக்கண் நீத்து**
**வினைவினை வுன்னி நொந்து விண்மிசை உயிர்த்துச் சென்றார்.**

அவ்வாறான நீண்ட பெருமுடியை உடைய கந்தமாதன மலை அசைந்து நடுங்கலும்; அவ்விடத்து வந்து தங்கி இருந்த வீரக்கழலை அணிந்த விஞ்சையர்களின் வேந்தர்கள்; தங்களது காதற் பெண்கள் தம்மீது கொண்ட ஊடலை மாற்றி கையால் தழுவி அணைத்து இனியன மொழிந்து சேர்ந்து இருந்தார்கள் பயத்தால் இன்புற முடியாது காம கொண்ட செயலை இடையில் நீக்கி இப்படி நேரவிருந்த வினையின் விளைவை நினைத்து நொந்து பெருமூச்சுவிட்டுச் சென்றார். 29

**வரைமிசை நின்ற அண்ணல் வனைகழல் அவுணர் கோமான்**
**பொருவரு நகர்மேற் செல்லப் புந்திமேற் கொள்ளா எந்தை**
**திருவுரு வதனை உன்னிச் செங்கையால் தொழுது மாலும்**
**பிரமனும் வியந்து நோக்கப் பேருருக் கொண்டு நின்றான்.**

கந்தமாதன மலைமேல் நின்ற வீரவாகுதேவர் வீரக்கழலை அணிந்த சூரபன்மனது நிகரற்ற விளங்கும் வீரமகேந்திரபுர நகரின் மீதாகச் செல்வதற்கு மனம் மேற்கொண்டு எந்தை பெருமான் ஆறுமுக ஐயனுடைய திருவுருவைத் தியானித்து சிவந்த திருக்கையால் தொழுது திருமாலும் பிரமனும் வியந்து அற்புதத்துடன் காணும்படியாக பெரியதோர் உருவம் கொண்டுநின்றருளினர். 30

**பொன்பொலி அலங்கல் தோழான் பொற்பின்மேற் பொருவி லாத**
**கொன்பெரு வடிவங் கொண்டு குலாய்நிமிர் கொள்கை செவ்வேள்**
**முன்பொரு ஞான்று மேரு முடியில்வந் தமரர்க் கெல்லாந்**
**தன்பெரு வடிவங் காட்டி நின்றதோர் தன்மை யாமால்.**

பொன்னார்ந்து விளங்கிப் பொலிவுறும் மாலையணிந்த தோளுடைய வீரவாகு தேவர் கந்தமாதன மலைமேலாக தனக்கு நிகரிலாத உயர்ந்த பெரும் வடிவங்கொண்டு குலாவி நிமிர்ந்து விளங்கி நிற்கும் தன்மை, செம்மை வாய்ந்த திருக்கோலமுடைய முருகப்பிரான் முன்பொருநாள் மகாமேரு மலையின் முடியில் வந்து நின்று தேவர்கட்கு எல்லாம் தனது பெரிய வடிவத்தைக் காட்டி நின்றருளிய தன்மை போன்றது. 3

ஆண்டகை நெடுந்தோள் வீரன் அண்டமேல் மவுலி தாக்க
நீண்டிடும் எல்லை அன்னான் நின்றிடு குன்ற ஞாலங்
கீண்டது பிலத்திற் சேறல் கேடில்சீர் முனிகை யூன்ற
மீண்டபா தலத்திற் புக்க விந்தமே போலும் மாதோ.

ஆண்டகமை பொருந்திய நெடிய தோளை உடைய வீரவாகு தேவர் அண்டங்கள் மேலாக தனது திருமுடி முட்டித் தாக்கும்படி நீண்டு நின்ற எல்லையில் அவர் நின்றிட்ட கந்தமாதன மலையானது பாரம் தாங்கொணாது பூமியைக் கிழித்துச் சென்று பாதாளத்தில் போதல் எப்படி இருந்ததெனில் கேடில்லாத சிறப்புடைய அகத்திய முனிவர் வான் மறைய வளர்ந்த விந்த மலையை அடக்கும்படி தனது திருக்கையை நீட்டி அதன் மேல் ஊன்றிய போது ஒடுங்கிப் பாதாளத்துப் போய அந்த விந்த மலையின் தன்மைபோன்றது. 32

விண்ணவர் உய்த்த தேர்மேல் மேலவர் புரம்நீ றுக்கும்
பண்ணவன் ஒருதாள் ஊன்றப் பாதலம் புகுந்த வாபோல்
கண்ணகல் வரையும் வீரன் கழல்பட அழுந்திற் றம்மா
அண்ணலந் தாதை வன்மை அருள்புரி மகற்கு றுதோ.

தேவர்கள் திருமுன்பு கொண்டுவந்து நிறுத்திய வைதிகத் தேர் மேலாக பகைவரான முப்புரத்து அசுரரின புரங்களை நீறுக்குபபடி சென்றருளிய சிவபிரான் தமது ஒரு திருத்தாளை ஊன்றுதலும் அத்தேர் அதனைச் சகிக்கொணாது பாதாளம் புகுந்தவாறு போல் அகன்ற பரப்பனையுடைய கநதமாதன மலையும் வீரவாகுதேவரின் திருவடிகளபடுதலால் அழுந்திப் பாதாளத்து போயது. எவ்வெவர்க்கும் மேலாகிய தந்தை சிவபெருமானின் செய்கை அவர் தந்தருளிய மைந்தர் வீரவாகு தேவர்க்கு வந்து சேர்ந்து கொள்ளாதோ? 33

கன்றிய வரிவிற் செங்கைக் காளைபொற் றுளும் அந்தண்
குன்றெடு பிலத்துட் செல்லக் குறிப்பொடு விழிக்கு றுமே
சென்றிட முடியுஞ் சேண்போய்த் திசைமுகத் தயனும் மாலும்
அன்றடி முடிகா ணாத அசலமும் போல நின்றான்.

கடினம் பொருந்திய வில்லை ஏந்திய சிவந்த கையுடைய வீரவாகு தேவரின் பொன்னார்ந்த திருப்பாதமும் அழகுடனும் குளிருடனும் விளங்கும் கந்தமாதன மலையுடன் சேர்ந்து பாதாளம் செல்லவும், குறிப்பாகக் கண்ணுக்கு தோற்றிடாமல் திருமுடியும் வான் மேல் மிக உயரச் சென்று நிற்றலாய தன்மை; அன்று பிரமதேவரும் திருமாலும் அடியையும் முடியையும் காணொணவகை நடுவே தோன்றிய அனல் மலை போன்று தமது அடியும் முடியும் தோன்றொணவகை நின்றருளினார். 34

ஆளரி அன்னோன் தாளும் அடுக்கலும் அழுந்தும் பாரின்
நீளிரு முடிசேர் வானின் நிரந்தமாப் பறவை போதல்
சூழுடை இமையோர் புள்ளும் மாவுமாய்த் தோமில் வீரன்
தாளொடு முடியும் நாடிச் சார்தருந் தகைமை தாமால்.

தலையான சிங்கத்தை ஒத்து விளங்கும் வீரவாகு தேவர் திருப்பாதமும் கந்தமாதன மலையும் தாண்டு பூமியிலே அமுங்கிப் போக மேல் நீண்ட முடி சேர்கின்ற வான

த்தில் வரிசைக் கிரமமாகப் பறவைகள் போதல், தேவர்கள் தங்களுள் சபத வார்த்தை பேசி இவருடைய அடியும் முடியும் எங்கென்று காண்போம் என எண்ணி பறவைகளும் விலங்குகளுமான வடிவங்கொண்டு இவரின் அடியையும் முடியையும் நாடிச் சேர்வதை ஒப்ப இருந்தது. 35

அந்தமில் வலியோன் நிற்ப ஆயிடைத் துஞ்சும் பாந்தள்
தந்தொகை வீழ ருது தழீஇ மருங் காகக் கீழ்போய்
முந்துயர் கமடஞ் சேர்ந்து முழங்குதெண் டிரைக்கண் வைகும்
மந்தர மென்னக் கந்த மாதனந் தோன்றிற் றம்மா.

எல்லையற்ற வலியினையுடைய வீரவாகுதேவர் கந்தமாதன மலை மேல் நிற்ப அதில் தங்கிய பாம்புகள் கீழே தவறி விழாதபடி மலையுடன் பக்கராக ஒட்டிக்கொண்டு கீழாகச் சென்றிடல் முழங்கி நிற்கின்ற தெள்ளிய திரைகளையுடைய பாற்கடலின் நடுவுமிக உயர்ந்த ஆதிகூர்மத்தின் முதுகில் சேர்ந்து இருக்கும் மந்தர மலையைப் போன்று கந்தமாதன மலையும் இருந்தது. 36

பதுமநேர் கண்ணன் வேதாப் பலவகை முனிவர் தேவர்
கதிபடர் உவணர் சித்தர் கந்தரு வத்தர் ஒண்கோள்
மதியுடுக் கதிர்கள் ஏனோர் வான்பதம் முற்றும் ஓங்கும்
அதிர்கழல் வீரன் பல்வே றுருமாய் ஒளிர நின்றான்.

இவ்வாறு வானமெல்லாம் தானாகவே நிறையும்படி நின்ற வீரவாகுதேவர் தாமரையை ஒத்த சிவந்த கண்ணுடைய விஷ்ணு மூர்த்தி, பிரமதேவர் பலவகை கொண்ட முனிவர்கள் தேவர்கள் வானமார்க்கத்தில் செல்லும் கருடர் சித்தர் கந்தருவத்தர், வலியுடைய கிரகங்கள், சந்திரன், நட்சத்திரங்கள், சூரியர்கள் ஏனையோர்களான வான உலகில் உள்ளார் முற்றும் மேலோங்கிய தமது திருமேனியில் மாலைக் கோர்வையாக பிரகாசமாய் அமையும்படி அத்துணைப் பெரிய திருஉருவம் கொண்டு வீரக்கழல்கள் அணிந்த வீரவாகுதேவர் நின்றருளினர். 37

எண்டிசை முழுதும் நேமி எழுதிறத் தனவும் மற்றைத்
தெண்டிசைக் கடலும் பாரும் சேண்கிளர் ஆழி வெற்பும்
அண்டமும் உலகம் யாவும் அகன்விழி பரப்பி நோக்கிக்
கண்டனன் அமலன் வைப்புங் கைதொழு தையன் நின்றான்.

இவ்வாறு கொண்ட பெரிய உருவினால் எட்டுத் திக்குகள் முழுதும் கடல்கள் ஏழுவகையானவும் மற்றைத் தெள்ளிய புறவாழிச் சமுத்திரமும் பூமியும் வானத்தில் கிளர்ந்து எழுந்த சக்கரவாள மலையும் அண்டங்களும் உலகம் யாவையும் தமது அகன்ற கண்களை எங்கும் பரப்பிப் பார்த்துக் கண்டார் வீரவாகுதேவர், கண்டு இதற்கெல்லாம் மேலாகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கைலாய மலையின் இருப்பிடத்தையும் கண்டார்; கண்டு கை தொழுதபடி எமது வீரவாகுதேவர் பெருமான் நின்றருளினர். 38

ஆணமில் சிந்தை வீரன் அச்சுதன் முதலோர் வைகுஞ்
சேணகர் நோக்கிச் சூழுந் திசைநகர் நோக்கிப் பாரின்
மாணகர் நோக்கி வீர மகேந்திரம் நோக்கிச் சூரன்
நீணகர் இதற்கி யாவும் நிகரில போலு மென்றான்.

ஆங்காரமிலாத சிந்தை உடைய வீரவாகுதேவர் விஷ்ணுபிரான் முதலியோர் வீற்றிருக்கும் வைகுந்தம், சத்திய உலகம் முதலாய மிக தூரத்திலுள்ள நகரங்களைப் பார்த்து அதனைச் சூழ்ந்து திக்குகளில் உள்ள உலகுகளைக் கண்டு பூமியாகிய பெரிய இவ்வுலகினையும் பார்த்து அதில் சூரன் வாழும் வீரமகேந்திரபுரத்தைப் பார்த்து ஓகோ எல்லா நகரங்களையும் யான் பார்த்துள்ளேன். ஆனல் இந்த சூரனுடைய வீரமகேந்திரத்துக்கு ஒப்பாக நீண்ட நகரங்கள் மற்று எல்லாம் ஒப்பிலைப் போலும் என்றுர். 39

விண்ணுலாம் புரிசை வெஞ்சூர் வியனகர் அதனை நோக்கி
உண்ணிலா வெகுளி கொண்டான் ஒருகரம் அங்கண் ஓச்சி
நண்ணலார் யாரும் துஞ்ச நாமறப் பிசைகோ வென்ன
எண்ணினன் சிறையில் உற்றேர்க் கிரங்கிஅவ் வெண்ணம் மீட்டான்

வானத்தில் உலவுகின்ற மதிலுடைய கொடிய சூரபன்மனது மேலான வீரமகேந்திரபுர நகரைப் பார்த்து உள்ளத்து நிலவுகின்ற பெருங் கோபங் கொண்டார் வீரவாகுதேவர். எனது ஒரு கையை அவ்விடத்துச் செலுத்தி பகை அசுரர் எல்லாரும் மாளும்படி ஒருங்கே நான் பிசையட்டோ என்று ஒருகால் எண்ணினர். ஆனல் அப்படிச் செய்யின் சிறைச்சாலையில் இருப்பார்களான தேவரும் பிசைபட்டு மாய்ந்து போவார்களே என இரக்கம் கொண்டு அந்த எண்ணத்தை விடுத்தார். 40

விஞ்சையர் இயக்கர் சித்தர் வியன்சிறை உவணர் திங்கள்
செஞ்சுடர்ப் பரிதி நாள்கோள் தெய்வத கணத்தர் யாரும்
வஞ்சினத் தடுதோள் வீரன் மாலுரு நோக்க லாற்று
தஞ்சினர் வெருவச் செங்கை அமைத்தனன் அழுங்க லென்றே.

விஞ்ஞையர்கள், இயக்கர்கள், சித்தர்கள், மேலான சிறகுகளை உடைய கருடர்கள், சந்திரதேவன் செவ்வொளிகாலும் சூரியபகவான், நட்சத்திரங்கள், கிரகங்கள் ஆகிய தெய்வ கணத்தவர் யாவர்களும் வஞ்சினத்தால் மாய்வு செயும் வெற்றித் தோள் உடைய வீரவாகு தேவர் கொண்டருளிய பெரிய உருவத்தைப் பார்க்க சகிக்கொணுது பயந்து வெருக்கொள்ளலும் அதுவேளை வீரவாகுதேவர் தமது சிவந்த கையால் அபயம் காண்பித்து துயரப்படல் வேண்டாம் என்றருள் புரிந்தார். 41

கோளியல் கருடர் தாம்வீழ் மாதரை விழைந்து கூடி
வாளுறு நகத்தின் ஊறு மதிக்கிலர் மயங்கித் துஞ்சி
வேளெனும் நெடியோன் ஊன்றும் வெற்பொடும் பிலத்திற் சென்று
கேளுடன் எழுந்து நாகர் கிளைதனக் கணங்கு செய்தார்.

கொடுஞ் செயல் வல்ல கருடர்கள் தாங்கள் விரும்பிய பெண்களை விழைவுடன் கூடி அவர்கள் கூரிய நகத்தால் கீறிவிடும் காம இன்பப் பெருக்கையும் மதியாதபடி மயக்கமுற்று சோர்ந்து மன்மதன் எனும்படி நீண்ட நெடியவரான வீரவாகு தேவர் ஊன்றி மிதித்த மலையோடும் பாதாளம் சென்று அங்கு தமது உறவினருடன் மயக்கம் நீங்கி எழுந்து அங்கு இருக்கின்ற தங்கள் இயல்பான பகைவரான நாகர் கூட்டத்தினர்களுக்கு அச்சத்தை செய்தார்கள். 42

ஆதியங் குமரன் தூதன் ஆற்றலால் ஊன்றி நிற்பப்
பூதலங் கீண்டு வெற்புப் பொள்ளென ஆழ்ந்து கீழ்ப்போய்ப்
பாதலங் குறுக அங்கட் பயிலராத் தொகையை நாகர்
காதலங் கேண்மை நாடிக் கலந்தனர் விருந்து செய்தார்.

ஆதியான குமரப்பெருமானின் தூதன் தனது முழுவலியாலும் அவ்விடத்து சந்தமாதன மலைமேல் ஊன்றி நிற்றலும் பூமியானது கிழிபட்டுப் பிளந்து மலையானது விரைவுடன் ஆழ்ந்து கிழாகப் போய் பாதாளம் சேரலும், அம்மலைமேலிருந்த பாம்புக் கூட்டங்களும் பாதாளம் அடைதலும், பாதாளத்திருந்த நாகர்கள் இந்தப் பாம்புகளைக் கண்டு காதலுடன் தமது இனத்தவர் என மதித்து அவருடன் கலந்து அளவளாவி விருந்து செய்தார்கள், 43

தேன்றிகள் தெரியல் வாகைச் சேவகன் கழல்கள் வெற்பின்
ஊன்றலும் அனைய பாங்கர் ஒருசிலர் அரக்கர் நோற்றுர்
ஆன்றுயர் பதத்தை வெஃகி ஆங்கவர் பிலத்துள் வீழ்ந்து
மான்றனர் இரங்க லுற்றுர் வன்கணுர்க் குய்வு முண்டோ.

தேன் துளித்து நிற்கும் மாலையணிந்த தோளையுடைய தூதராகிய வீரவாகு தேவர் பாதங்களை கந்தமாதன மலைமேல் ஊன்றலும் அம்மலையின் பக்கராக ஒருசில இராட்சதர் இருந்து மிக உயர்வான பதவிகளைப் பெறும்பொருட்டு தவம் செய்திருந்தனர் அந்த இராட்சதரும் மலையுடன் பாதாளத்து வீழ்ந்தார்கள். மயங்கி அவதியுற்று அழுதார்கள். ஆகவே கொடிவர்களான இவர்களுக்கு எங்கென்ருலும் உய்தல் உண்டோ? 44

புண்டர நீற்று வள்ளல் புரையுருத் தேவர் நோக்கி
மண்டலம் புகழும் வீர மகேந்திரஞ் சேறற் கன்ருல்
கொண்டவிவ் வுருவம் நோக்கிற் குரைகழல் அவுணர் தம்மை
அண்டமும் இடித்துச் சாடும் நினைவுகொல் ஐயற் கென்ருர்.

மூன்று குறியாகிய திருநீற்றுக் குறிகள் பொலிந்தருளுகின்ற திருமேனியுடன் கோரமான கோலமுடன் நின்ற வீரவாகு தேவர் திருவுருவத்தை தேவர்கள் பார்த்து இந்த உருவை எமது ஐயன் கொண்டது இப்பூமி புகழும் வீரமகேந்திரபுரத்திற்கு செல்வதற்கன்று. பின்னர் இவர் கொண்ட உருவின் நிலையைப் பார்த்தால் எம் ஐயனுக்கு சத்தமிடும் வீரக்கழல் அணிந்த அசுரர்கள் யாரையும் அண்டங்களையும் இடித்து அழித்து விடுகின்ற எண்ணமாக இருக்குமோ என்ருர்கள். 45

வீரமா மகேந்தி ரத்தில் அவுணரும் வீற்று வீற்றுச்
சாருறும் அவுணர் தாமுஞ் சயங்கெழு புயத்து வள்ளல்
பேருரு நோக்கி இங்கன் பிறந்தசொற் சளக்கே இன்னுந்
தேருவ துண்டு நந்தந் திறல்வரைப் புணர்ப்பி தென்ருர்.

வீரம் நிலவுகின்ற வீரமாமகேந்திரத்தில் வாழும் அசுரரும் வீரமகேந்திரத்தின் புறமாகச் சார்ந்திருக்கும் நகரங்களில் வாழும் அசுரரும் வெற்றியுடன் விளங்கும் தோளினை உடைய வீரவாகுதேவரின் பெரிய திருவுருவை நோக்கி இவ்விடத்திலே பிறந்துள்ள தாரகன் இறந்தான் என்ற கதை பொய்யாகும். இன்னும் நாம் அதனை வடிவாக அறியவேண்டும். ஏனென்ருல் இங்கோர் பெரிய உருவம் தோன்றுவது இது நம்முடைய கிரவுஞ்சம் என்னும் மலையின் மாயச்செயல் போன்றது என்ருர்கள். 46

ஒலிகழல் வீர வாகு ஓங்கலை யூன்றி இந்த
நிலைமையின் நிற்ற லோடும் நெடியமால் சுதனும் விண்ணோர்
தலைவனும் பிறரும் அன்னோன் தம்பியர் அளப்பி லோருங்
கலிகெழு பூதர் யாருங் கண்டுவிம் மிதத்தின் ஆர்த்தார்.

ஒலிக்கின்ற வீரக்கழலை உடைய வீரவாகுதேவர் கந்தமாதன மலையை ஊன்றி இந்த நிலைமையால் நிற்றலோடும் நெடிய விஷ்ணு மூர்த்தியும் மகனான பிரமதேவரும் தேவர் தலைவனான இந்திரனும் இன்னமும் பிற தேவரும் வீரவாகுதேவரின் தம்பியரான அளவு கடந்துளோரும் கலி மிகுந்த பூதங்கள் யாவரும் கண்டு அற்புதத்துடன் நோக்கி ஆச்சரியப்பட்டு நின்றார்கள். 47

தேவர்கள் முனிவர் ஏனைத் திறத்தவர் யாருந் தத்தம்
ஓவரும் பதத்தின் நின்றே ஒல்வதோர் உறுப்பின் மேவக்
காவரு கடிமென் பூத்தூய்க் கைதொழு தைய வெஞ்சூர்
மேவரு நகர்சென் றெங்கள் வியன்துயர் அகற்று கென்றார்.

தேவர்கள் முனிவர்கள் ஏனையோர்கள் யாவரும் தங்கள் தங்களது நீங்க முடியாத பதங்களில் நின்று கொண்டபடியே வீரவாகுதேவர் கொண்டுள்ள பெருமையானதோர் திருவுருவில் சேரும்படியாக தேவஉலகில் உள்ள கற்பக விருட்சங்களின் வாசனையுடைய அழகிய பூக்களைத் தூவிச் சொரிந்து கைகளைக் கூப்பித் தொழுது; எமது ஐயனே! கொடுமை நிறைந்த சூரபன்மன் மேவி இருக்கின்ற நகரில் சென்று மேலாகிப் பெருகும் எமது துயரினை நீக்கி விடுவீராக என்றார்கள். 48

ஆவதோர் காலை எந்தை ஆறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க
தூவுடை நெடுவேல் வாழ்க தொல்படை பிறவும் வாழ்க
தேவர்கள் தேவன் சேயோன் திருவடி வாழ்க என்றான்.

அவ்வாறாக எல்லாரும் பூத்தூவி வணங்கும் நேரத்தில் வீரவாகு தேவர் எந்தை அப்பனின் பன்னிரண்டு விசாலித்த தோள்கள் வாழ்க, அழகுடன் பரந்து விளங்கும் ஆறுமுகம் வாழ்க, முழுமையும் அருள் சுரந்து நின்றருளும் திருவிழிகள் வாழ்க ஊண் தோய்ந்த நெடியவேல் வாழ்க. மிக முதியதான மற்றும்பிறபடைகளும் வாழ்க, தேவர்கட்கு எல்லாம் தேவனாகிய செவ்வொளி பரந்த திருமேனி உடைய குமரநாயகப் பெருமான் திருவடிகள் வாழ்க என்றார். 49

ஆண்டகை தொழுத பாணி அணிமுடிக் கொண்டிவ் வாற்றால்
ஈண்டுசீர்க் குமரவேளை ஏத்தலும் அன்பின் கண்ணீர்
வீண்டுதெண் கடலுள் ஏகி வெள்ளமிக் குவரை மாற்றப்
பூண்டகண் டிகையை மானத் தோன்றின பொடிப்பின் பொம்மல்.

ஆண்டகமை உடைய வீரவாகு தேவர் தொழுத கையை தமது அழகிய முடி மீது குவித்துக் கொண்டு; இந்தவாறாக எல்லாச் சீரும் சிறப்புமுடைய முருகப் பிரானை துதித்து வணக்கம் புரிதலும் அவரது அன்பாய் பெருகிய கண்ணீர் விசாலித்த தெள்ளிய சமுத்திரத்தில் சென்று கண்ணீர் வெள்ளம் சமுத்திரத்தின் உப்புத் தன்மையை மாற்றிடவும்; அவரது மேனிமேல் அணிந்த உருத்திராக்க மாலைபோன்று விளங்க மேனி முழுவதும் உரோமங்கள் சிலிர்த்து நின்றது. 50

மீதுகொள் பொடிப்பு மூட மெய்ப்புலன் சிந்தை யொன்ற
ஓதுவ தவற என்பும் உருகிட செருக நாட்டங்
கோதில்பே ரருளின் மூழ்கிக் குதூகலித் திடுத லோடு
மூதுல கனைத்தும் ஆவி முழுவதும் மகிழ்ந்த வன்றே.

மேனி எல்லாம் பொடிப்பு மூடி நிறைகின்றது. அழிவில்லாத புலன்கள் சிந்தையில் தாமாக ஒடுங்கி விளங்கியது வாக்கு சொல்வது தவறியது; எலும்பும் உருகியது; கண்கள் செருகிடவும் பொருந்திய நிலையில் விளையும் குறைவிலா நிறைவாகிய பேர் அருளில் மூழ்கி குதூகலித்து இன்புறலோடும் முதிய உலகங்கள் அனைத்தும் உயிர்முழுவதும் மகிழ்ந்தது அன்றே. 51

அவ்வகை நிகழச் செவ்வேள் ஆரருள் அதனைப் பெற்று
மொய்வரை மீது நின்றோன் முழுதுல களந்து சேண்போம்
இவ்வுரு வோடு செல்லின் இறந்திடும் உலகம் ஈது
செவ்விதன் றென்று வேண்டுந் திருவடி வமைந்தான் அன்றே.

அவ்வகைய திருவருள் கைகூடி நிகழச் செவ்வொளியாகி நிறையும் முருகப்பிரானின் அருளினைப் பெற்று வலிமையுடைய கந்தமாதன மலையில் நின்ற வீரவாகு தேவர் முழு உலகங்களையும் அளவிட்டு மீண்டும் அப்பால் வளர்ந்தோங்கும் இந்த உருவோடும் செல்வேன் என்றால் உலகம் எல்லாம் அழியும் ஆதலின் இவ்வுரு செப்பமுடையது அல்ல என்றுகொண்டு உலகம் திங்குறாதபடி தாம் வீரமகேந்திரபுரம் செல்வதற்கு வேண்டிய திருவுருவமாக அமைந்து கொண்டார். 52

கிரிமிசை நின்ற அண்ணல் கிளர்ந்துவான் எழுந்து சென்னிக்
குருமணி மகுடம் அண்ட கோளகை புடைப்ப வீரன்
உருகெழு சீற்றச் சிம்புள் உருவுகொண் டேகிற் றென்ன
வரைபுரை மாட வீர மகேந்திரம் முன்னிப் போந்தான்.

மலைமேலாக நின்ற வீரவாகு தேவர் மேல் எழுந்து வானில் சென்று தலைமீது அணிந்த அழகிய சிறந்த இரத்தின முடிகள் அண்டகோளகையை புடைத்தெறிய மிகுதியுடைய வேகங்கொண்ட கோபத்துடன் சரபப்பட்சி வடிவு கொண்டு சென்றதுபோன்று மலைகளை ஒத்து உயர்ந்த மாடங்கள் நிரம்பிய வீதியுடைய வீரமகேந்திரத்தை அடைய நினைந்து வான மார்க்கமாகப் பாய்ந்து சென்றருளினார். 53

ஆகத்திருவிருத்தம் 53

வீரவாகு கந்தமாதனஞ் செல் படலம் முற்றிற்று.

---

# கடல்பாய் படலம்

அழுங்கிய கழற்கால் வீரன் அவ்வழி அவனிக் கீழ்போய்
விழுங்கிரி நிலைமை நோக்கி மீண்டுநீ எழுதி யென்னா
வழங்கினன் வழங்கும் எல்லை வல்லையிற் கிளர்ந்து தோன்றி
முழங்கிருங் கடலின் மாடே முந்துபோல் நின்ற தன்றே.

சத்தமிட்டு ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த வீரவாகுதேவர் அவ்வழி மேல் எழுந்து செல்லலோடும் பூமியின் கீழாகச் சென்று முன்னர் வீழ்ந்த கந்தமாதன மலையை நோக்கி 'மலையே மீண்டும் நீ எழுவாயாக' என்று அருள் வாக்கு கொடுத்தார் ; கொடுத்த எல்லையில் மிகு விரைவுடன் கந்தமாதனமலைமேல் கிளர்ந்து தோன்றி முழங்கிடுகின்ற சமுத்திரத்தின் பக்கராக முன்புபோல நின்றது 1

வீரனங் கெழலும் அன்னோன் விண்படர் விசைப்பின் காலால்
பாருறு வரைகள் யாவும் படர்ந்தன பாங்க ராகச்
சாரதத் தலைவர் ஏனைத் தம்பியர் இலக்கத் தெண்மர்
ஆருமங் கவன்தன் பாலாய் அணிந்துடன் சேற லென்ன.

வீரவாகு தேவர் அங்கு வான்மேல் எழலும் அவர் வானத்தில் செல்லும் வேகத்தால் எழுந்த காற்றினால் சுழற்றி புரட்டப்பட்டு பூமிமீது நின்ற மலைகள் யாவுமே அவருடன் பக்கராகச் சென்றன, அது எப்படி இருப்பதென்றால் பூதத் தலைவர்கள் மற்றைய தம்பிமார்களான இலக்கத்து எட்டுபேர் எல்லாரும் வீரவாகு தேவரின் பக்கராக வீரமகேந்திர புரத்திற்கு அணிவகுத்துச் செல்வது போன்றது. 2

விரைந்துவான் வழிக்கொள் வீரன் விசைத்தெழு காலின் அண்டந்
திரிந்தன உயிர்கள் முற்றுந் தெருமரல் உற்ற தெண்ணீர்
சுரந்திடு கொண்டல் யாவுஞ் சுழன்றன வடவை உண்ண
இருந்திடும் ஊழிக் காலும் ஆற்றலா திரியல் போன.

விரைவுடன் வானில் எழுந்து வழிபட்டுச் செல்லும் வீரவாகு தேவரின் விசையினால் அண்டங்கள் எல்லாம் மாறுகி குலைவுற்றன, உயிர்கள் முழுவதும் தெளிவுபெற முடியாது திகைப்புற்றன, தெளிந்த நீரைச் சுரந்து பொழிகின்ற மேகங்கள் யாவும் சுழன்றன, வடவாமுகாக்கினியையும் உண்ணும்படி இருந்த ஊழிக்காலத்து தோன்றும் காற்றும் தனது ஆற்றல் கெட்டு ஓடிப்போயது. 3

பெருமிடல் பூண்ட தோன்றல் பெயர்தலும் விசைப்பின் ஊதை
பரவினா வெம்மை மாற்றிப் பரிதியைக் கனலைத் திங்கள்
வருணனா தியற்கை யாக்கி வடவையின் முகத்துத் தோன்றித்
திரைகட லிருந்த ஊழித் தீயையும் அவித்துச் சென்ற.

பெரும் வலிமை கொண்ட தலைவரான வீரவாகுதேவர் எழுந்து பாய்ந்து போதலும் அவர் செல்லும் விசையின் காற்றுப் பரவியது. அந்த விசைக்காற்று சூரியனுடைய வெப்பத்தை மாற்றி அவனை சந்திரன் போன்றும், வருணதேவனைப் போன்றும் குளிரச் செய்தும் வடவாமுகாக்கினியின் முகத்திலே தோன்றி திரைக் கடலையும் உண்ணும்படியிருந்த ஊழி நெருப்பையுமே நூரச் செய்து போயது. 4

விரைசெறி நீபத் தாரோன் விரைந்துசெல் விசைக்கால் தள்ளத்
திரைகடல் சுழித்துள் வாங்கித் திறன்மகேந் திரத்கிற் சேறல்
அரசியல் புரிவெஞ் சூரன் அனிகங்கள் அவன்மேற் சென்று
பொருமுரண் இன்றித் தம்மூர் புகுவன இரிவ போலாம்.

வாசம் நிறைந்த கடப்ப மலர் மாலையணிந்த வீரவாகுதேவர் விரைவுடன் செல்கின்ற விசையில் எழுந்த காற்று தள்ள திரைக்கடல் சுழி கொண்டு உள்ளிழுத்து பின் மேலெழுந்து திறமை கொண்ட வீரமகேந்திரபுரத்து மோதிச் சேரல் எதுபோல் இருப்பதெனில்; அரசாட்சியை நடத்தும் கொடிய சூரனுடைய சேனைகள் சூரன் மேலாகப் போர் புரியச் சென்றபோது; முரண்கெட்டு, வலியிழந்து தமது ஊரிற் திரும்பி வந்தமை போன்றது. இதோ அழிக்கிறேன் என்று விசைக் காற்றினால் உந்தப்பட்ட கடல் பெருகிச் சென்று வீரமகேந்திரத்தில் மோதும் நேரத்து அலைகள் இயல்புடன் வலி கெட்டு திரும்புவது சேனைகள் அவன் மேற்போர் செய்யச் சென்று ஆற்றாது திரும்பியது என பெருகி எழும் அலை வேகமாக வரினும் கரையில் மோதிய நேரங்களில் வலிகெடும் இயல்பை எடுத்து சிறப்புடன் கூறுகிறார் ஆசிரியர். 5

விடைத்தனி யாற்றல் சான்ற விடலைகால் வெற்பி னோடும்
படித்தலங் கிண்டு முன்னம் பாதலங் காட்டிற் றன்னான்
அடற்படு விசையின் காலும் அளியதோ வலிய தன்றே
கடற்புவி கிண்டு நாகர் உலகினைக் காட்டிற் றன்றே.

இளமையான இடபத்தின் தனி வலிமையை ஒத்த வீரவாகுதேவரை திருப்பாதம் கந்தமாதன மலையோடு பூமியை முன் கிழித்துப் பாதாளத்தைக் காட்டியது இப்பொழுது அவரின் வேகப்பட்ட விசையால் எழுந்த காற்றும் குறைந்ததோ, வலியுடையதுதானே, அது கடலின் அடியில் உள்ள பூமியைக் கிழித்து நாகர்கள் வாழும் உலகினைக் காட்டியது

அவரது கால் மலை ஊன்றியபோது பூமி கிழிந்து பாதாளம் தெரிந்தது, அவர் விசையான கால் தள்ள சமுத்திரம் கிழிந்து பாதாளம் தெரிந்தது. ஆகவே காலின் வலிக்கு விசையான கால் குறைந்தது அல்ல என கால் என்னும் சொல்லின் பொருள் சுவைபடச் சொல்லியவாறு காண்க. 6

பாசிழை அலங்கல் தோளான் படர்தலும் விசையின் காலைக்
காய்சின உயிர்ப்புச் செந்திக் கலந்துடன் தழீஇக்கொண் டேகி
மாசுறு சூரன் வைகும் வளநகர் சுற்றி யன்னோன்
தூசிய தென்ன முன்னங் கொளுவிய தூமஞ் சூழ.

பசிய இலைகளுடன் கூடிய மாலைகளை அணிந்த தோளுடைய வீரவாகுதேவர் செல்லலும் விசையின் காற்றும், மனதில் எழுந்து காய்கின்ற சினமெனும் மூச்சுடன் கூடிய நெருப்பு எனும் இவைகள் ஒன்றை ஒன்று தழுவச கொண்டுபோய் வீரவாததேவரது முதற் படை போன்று சூரபன்மனது வீரமகேந்திர புரத்து நெருப்பை உண்டாக்கி புகை தோன்றி எரியச் செய்தது. 7

பூஞ்சிலம் பரற்றுந் தாளான் போதுமுன் விரைவின் ஓதை
வேய்ஞ்சிலம் படுதோட் சூரன் வீரமா மகேந்தி ரத்தின்
நாஞ்சிலம் புரிசை பொன்செய் நளிர்வரை குளிர்பூங் கிள்ளை
தாஞ்சிலம் புற்ற சோலை அலைத்தன தரையில் தள்ளி.

பூஞ்சிலம்புகள் மெல்லென ஒலிக்கின்ற திருப்பாதமுடைய வீரவாகுதேவர் செல்லுகின்ற விசையான காற்று; மூங்கிலின் முரண் ஒத்த தோளினை உடைய சூரபன்மனது வீரமகேந்திரபுரத்தில் உள்ள நாஞ்சில்கள், அழகிய மதில்கள், பொன்னால் செய்த அழகிய மலைகள், குளிர்மை நிறைந்த பூவுடன் கூடி கிளிகள் கீச்சிடுகின்ற சோலைகள் எல்லாவற்றையும் அலைத்து பூமியில் தள்ளி வீழ்த்தின.

உறைபுகு நெடிய வேலான் உயிர்ப்புறு கனன்முன் னேடிச்
செறுநனூர் கொளுவ அன்னுன் சென்றிடு விரைவின் கால்போய்
எறிபுனற் கடலைத் தாக்க இடைந்துமற் றதுதான் ஏகி
முறைமுறை திரைக்கை நீட்டி மூண்டிடா தவித்துப் போமால்.

உறையில் புகுத்திய நெடிய வேலினை உடைய வீரவாகு தேவர் மூச்சில் தோன்றி வெளியாகும் நெருப்பு முன்னுக ஓடி பகைவனுன சூரனின் ஊரினைப் பற்றி எரிய அதன் பின்னுல் வீரவாகுதேவர் சென்ற விசையான காற்றுச் சென்று திரைகள் மோதும் கடலைத் தாக்கி தள்ள அக்கடல் இடைந்து கட்டுநீங்கி எழுந்து சென்று மோதுதல் முறை முறையாகத் தனது திரையான கைகளை நீட்டி நெருப்பை மூளாது அணைத்திட்டு போதல் போன்றது. 9

அண்ணலங் காளை ஏக உயிர்த்தகால் அவன்செல் லோதை
கண்ணழல் துண்டம் ஓச்சுங் கடுங்கனல் எதிரா தோடும்
உண்ணிறை புணரி யாவும் ஒன்னலன் பதிமேற் சென்று
விண்ணிலம் ஒழிந்த பூதம் அடுதலின் விளைந்த பூசல்.

மேலான அழகிய காளை வடிவுடைய வீரவாகுதேவர் செல்ல அவர் விடுத்த மூச்சான காற்று அவர் செல்லும் விசையான காற்று கண்ணில் நின்றும் தோன்று பொறிகளான நெருப்பு மூக்கால் மூச்சுடன் வந்த வெப்பமான நெருப்பு, எதிராகச் சென்றிடாது தள்ளப்பட்டுச் செல்லும் உள்நிறைந்த சமுத்திரம் யாவும் சூரபன்மனின் நகரின் மேல் சென்று ஆகாயமும் மண்ணும் என்னும் இரண்டும் நீங்கிட ஐந்து பூதங்களில் காற்று, நெருப்பு நீர் என்னும் மூன்றும் சென்று தாக்குதலால் முதற்கண் பூதங்களின் போர் விளைதலின் சூரபன்மனது நகரத்துப் போர் உண்டாயது 10

வெள்வரைக் குவவுத் திண்டோன் வெலற்கருந் திறலோன் எண்காற்
புள்விசை கொண்டு செல்லப் புறந்தரப் புணரி அங்கண்
உள்வளைந் துலாய சின்னை ஒண்சுறுப் பனைமீன் நூறை
தெள்விரித் திருக்கை தந்தி திமிங்கிலம் இரிந்து பாய்ந்த.

வெள்ளிய மலைபோன்ற அழகிய தோளை உடைய வெல்லற்கரிய வலிமை கொண்ட வீரவாகுதேவர் எட்டுக் கால் உடைய சரபப்பட்சி செல்லும் விசையினை கொண்டு செல்ல சமுத்திரம் நிற்கமுடியாது அலைந்து புறமோட அங்கு சமுத்திரத்தி உள்ளே வளைந்து நின்று உலாவிய சின்னை மீன், பெரிய சுறு, பனை மீன், நூறை மீன், கூரிய கண்ணுடைய திருக்கை மீன், யானை மீன், திமிங்கிலம் முதலிய மீன்கள் பயந்து ஓடிப் பாய்ந்தன. 11

நாயகன் தூதன் ஏக நளிர்க்கடல் எதிர்ந்தி டாது
சாய்வது மீன முற்றுந் தரங்கவெண் கரங்கள் தாங்கித்
தீயசூர் மூதூர் உய்த்துச் சென்றது பொன்று வோர்க்கு
மேயின விச்சை யுண்டி மிகத்தமர் வழங்கு மாபோல்.

எமது ஆன்ம நாயகரான முருகப் பிரான் தூதுவன் செல்ல, திரைகளினையுடைய சமுத்திரம் எதிர்த்திடாது சாய்ந்து நகரினில் உள்ளே தனது திரைகளான கைகள் மீது கடலில் உள்ள மீன் முழுவதையும் தாங்கிச் சென்று தீயவனுன சூரபன்மனுடைய ஊரில் சேர்த்து விட்டுத் திரும்பச் சென்றது; இது எதுபோலாயிற்று என்ருல் இறந்து போவாக்கு அவர்கள் விரும்பி உண்ணுகின்ற ஆசைப் பண்டங்களை நல்லாகவேண்டிய மட்டும் கொடுத்துச் செல்வாரின் தன்மையை ஒத்தது. 12

காழ்தரு தடக்கை மொய்ம்பன் கடுமைகொள் செலவின் ஓதை
சூழ்தரு கின்ற காலைத் துண்ணெனத் துளங்கி விண்மீன்
வீழ்தர வேலை தன்னில் வேலையும் மறிந்து செல்ல
ஆழ்திரை எறிமீன் முற்றும் அந்தரம் புகுவ மாறுய்.

வயிரம் கொண்டு விசாலித்த திருக்கைகளுடன் கூடிய தோளை உடைய வீர வாகுதேவர் கடுமையான வேகமுடன் செல்லும் விசையின் காற்று சூழ்ந்துகொள்கின்ற நேரத்து திடுக்கிட்டு வானில் உள்ள நட்சத்திரங்கள் நடுங்கி சமுத்திரத்தில் உதிர்ந்து விழவும் சமுத்திரமும் அந்த விசைக்காற்றால் வானளவு உயரத் தள்ளப்படலால் ஆழ்ந்த கடல்மீன்கள் வான்மேல் செல்ல, இவ்வண்ணமே வானில் உள்ள வெள்ளியான மீனும் கீழுள்ள சமுத்திர மீனும் மாறி எழுவன. 13

காமரு நயக்குங் காளை கதுமெனச் செல்லப் பாங்கில்
தூமலர்த் கரத்தி லிட்ட சுடர்மணிக் கடக வாள்போய்
நேமியங் குவடு சூழ்ந்து நிமிர்தரு திமிர மோட்டி
ஏமநல் லண்ட வில்லோ டெதிர்ந்து போய் இகல்செய் கின்ற.

மன்மதனும் பார்த்து நயம் கூறும்படியான அழகுடைய வீரவாகு தேவர் விரைவுடன் செல்லப் பாங்குடன் பொருந்திய அவரது திருக்கரத்தில் அணியப்பெற்ற சுடர் கொண்ட இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற காப்புகளின் ஒளியானது சென்று சக்கரவாள மலையைச் சூழ்ந்து நிமிர்ந்தெழுநத இருளை ஓட்டி நல்ல இன்ப ஒளி சூழ்ந்த வானவில்லோடு எதிர்த்து மாறுபட்டுப்போய் சண்டை செய்கின்றன. 14

விண்ணவர் யாருந் தேரும் படையுமாய் விரவ மேலோன்
நண்ணலர் புரமே லோச்சு நகையழல் போதல் ஒத்தான்
கண்ணழற் செலவும் போன்ருன் கார்முகம் பூட்டி உய்த்த
மண்ணுல கிடந்த கூர்வாய் வாளியும் என்னச் சென்ருன்.

தேவர்கள் யாரும்; தேர்களும் படைகளுமாக அமைய திரிபுரம் எரிக்கச் சென்ற சிவபிரான் திரிபுரங்கள் மேல் செலுத்திய புன்சிரிப்பான நெருப்பு போதலை போன்ருர் வீரவாகுதேவர். அன்றியும் சிவபிரானது நெற்றிக் கண்ணின் நெருப்பு சென்றதையும் போன்ருர் வீரவாகுதேவர். சிவபிரான் திரிபுரங்கள்மேல் வில்லை வளைத்து செலவிடுத்த பூமியை பன்றியாய் கிண்டிய விஷ்ணுவான அம்பும் என்னும்படி சென்ருர் வீரவாகுதேவர். 15

தரைதனை அலைத்து நோற்குந் தாபதர்க் கலக்கண் செய்து
சுரர்திருக் கவர்ந்து வாட்டுஞ் சூரனைக் கிளையி னேடும்
விரைவுடன் முடிப்பான் முன்னி வெகுண்டுசெவ் வேளங் குய்த்த
ஒருதனிச் சுடர்வேல் போன்றும் போயினன் உயர்திண் டோளான்.

இப்பூமி முழுவதையும் அலைவு செய்து தவம் புரியும் முனிவர்கட்கு அலக்கண் புரிந்து தேவர்களது செல்வங்களைக் களவாண்டு எல்லாரையும் வாடச் செய்யும் சூர பன்மனை விரைவுடன் முடிக்கும்படி நினைந்து கோபங்கொண்டு முருகப்பிரான் அங்கு செலுத்திய ஒரு தனியான வேற்படையைப் போன்றும் வேகமுடன் சென்றருளினர் வீரவாகுதேவர். 16

இமிழ்தரு தரங்கப் பாலின் எறிகடன் மதித்து வானோர்க்
கமிர்தினை அளிப்பான் வேண்டி அகிலமும் உண்டு தொன்னாள்
உமிழ்தரு திருமால் உன்ன உணர்ந்துமந் தரமாம் ஓங்கல்
நிமிர்தரு புணரி செல்லும் நிலைமைபோல் வீரன் போந்தான்.

இனிமை தருகின்ற திரைகள் வீசும் பெரும் பாற்கடலைக் கடைந்து தேவர்கட்கு அமிர்தத்தினைக் கொடுக்க எண்ணி அகில உலகையும் உண்டு முன்னாளில் உமிழ்ந்துவிட்ட விஷ்ணு மூர்த்தி முன்னர் நினைந்தருளியபோது பாதாளம் சென்ற மந்தரம் என்னும் மலை உணர்ந்து நிமிர்ந்து விளங்கும் கடல்மேல் வேகமுடன் வரும் நிலைமை போல் வீரவாகுதேவர் சென்றார். 17

சேண்டொடர் உலகும் பாருந் தெருமர அனலம் வீசிக்
காண்டகு விடத்தை ஈசன் களத்திடை அடக்கி வைப்ப
ஈண்டெமை விடுத்தி யென்று ஏத்தலும் அவனங் குய்ப்ப
மீண்டது கடல்போந் தென்ன வீரருள் வீரன் சென்றான்.

வானத்தில் தொடர்ந்து விளங்குகின்ற உலகுகளும் பூமியும் ஏங்கி நிலைகுலைய நெருப்பைக் கக்கி வீசிக்கொண்டு வரக் காணப்பெற்ற நஞ்சை சிவபிரான் தமது திருக்கழுத்தில் அடக்கித் தங்கவைத்திருப்ப அந்த நஞ்சு; பெருமானே! என்னை விடுப்பீராக என வேண்டித் துதித்தபொழுது அந்த நஞ்சினை எம்பிரான் திருப்பி விட அந்த நஞ்சு மீண்டு கடலில் வேகமுடன் எப்படிப் போகுமோ அதேபோலும் தன்மையாக வீரருள் வீரரான வீரவாகுதேவர் சென்றருளினார். 18

பொலங்கழல் வீர வாகு புணரிமேல் இவ்வா றேகி
அலங்கலந் திண்டோள் வெஞ்சூர் அணிநகர் வடாது பாலின்
விலங்கலில் வீரன் யாளி வியன்முகத் தவுணன் போற்றும்
இலங்கையந் தொல்லை மூதூர் அணித்தெனும் எல்லை சென்றான்.

பொன்னாபரணங்களுடன் பொலிவுற்ற சிலம்பணிந்த வீரவாகுதேவர் சமுத்திர மேலாக இவ்வாறு சென்று நல்ல மலர் மாலையை அணிந்த திண்மையான தோளினை உடைய கொடிய சூரபன்மனது அழகிய நகரின் வடதிசையில் உள்ள மலைத்தொடரான காவல் நகரில் யாளிமுகன் என்னும் அசுரவீரன் இருந்து காவல் புரிகின்ற இலங்கை என்னும் மிகமுந்திய மூதூரானது கிட்டவாய் வந்துள்ளது எனும் எல்லையில் வந்தருளினார். 19

ஆகத் திருவிருத்தம் 72

கடல் பாய் படலம் முற்றிற்று.

—o—

952

# வீரசிங்கன் வதைப் படலம்

அன்னதோர் வேலை முன்னம் அகன்றலை யாளிப் பேரோன்
துன்னுபல் லனிகத் தோடுஞ் சூரனைக் காண்பான் ஏக
மன்னதி வீரன் என்னும் மதலையா யிரமாம் வெள்ளந்
தன்னெடும் இலங்கை வைகித் தணப்பறப் போற்றி யுற்றான்.

அவ்வாறாகிய நேரத்து முன்பாக அகன்ற தலைகளையுடைய யாளிமுகன் என்னும் காவல் சேனாதிபதியான அசுரன் தன்னுடன் பொருந்திய பல சேனைகளோடும் சூரபன்மனைக் காணும்படியாக சென்றுவிட, அவனுடைய மகன் உயர்வான அதிவீரன் என்னும் பிள்ளை இலங்கையில் ஆயிரம் வெள்ளம் சேனைதன்னோடும் இருந்து கொண்டு இலங்கையை குறைவேதுமின்றிக் காவல்பூண்டிருந்தான். 1

ஆனதோர் மிக்க வீரத் தாண்டகை அவுணர் போற்ற
மாநகர்க் கோயில் நண்ண வடதிசை வாயில் தன்னில்
மேனிமிர் அவுணர் தானை வெள்ளமைஞ் ஞூறெ டன்னன்
சேனையந் தலைவன் வீர சிங்கனாந் திறலோன் உற்றான்.

அவ்வாறான மிகு வீரமுடைய அதிவீரன் அசுரர் போற்றிடும்படி, இலங்கை நகரிலுள்ள தனது அரண்மனையில் வீற்றிருப்ப; வடக்குத் திக்கு வாய்தலிடத்து மேலோங்கி, நிமிர்ந்து சூழுகின்ற அசுரச்சேனை, ஐந்நூறு வெள்ளம் என்னும் தொகையுடன் அதிவீரனுடைய சேனாதிபதி வீரசிங்கன் என்னும் பெயருடையவன் இருந்தான். 2

உற்றதோர் வீர சிங்கன் ஒண்சிறைச் சிம்பு ளேபோல்
வெற்றியந் திண்டோள் ஏந்தல் விரைந்துசென் றிடலுங்கா ணூஉச்
சற்றுநங் காவல் எண்ணான் தமியன்வந் திடுவான் போலும்
மற்றிவன் யாரை என்னாச் சீறினன் வடவை யேபோல்.

அவ்வாறு இருந்த வீரசிங்கன் பெரிய சிறகுகளையுடைய சரபப்பட்சிபோல் வெற்றி பொருந்திய, அழகிய திண்மையான தோழினையுடைய வீ ர வா கு தேவர் விரைவாகச் சென்றிடலும் அதனைக் கண்ணுற்று வீரசிங்கன் நினைக்கின்றான். இங்கு வருகின்றவன் கொஞ்சமேனும் நமது காவலின் வலிமை எண்ணான். தனியனாக வந்திடுவான்போலும் அப்படிக்கொத்த வலிமையுடைய வீரன் 'இவன் யார்' என்று வடவாமுகாக்கினிபோல சீறிக்கோபித்தான். 3

உண்குவன் இவன்றன் ஆவி ஒல்லையென் றுன்னிக் காலும்
எண்கிளர் மனமும் பின்னர் எய்துமா றெழுந்து நேர்போய்
விண்கிளர் செலவிற் றானை வெள்ளமைஞ் ஞூறுஞ் சுற்ற
மண்கிளர் கடல்போல் வீர வாகுவின் முன்னஞ் சென்றான்.

இந்த வீரனுடைய உயிரை விரைவுடன் நான் உண்பேன் என்று வீரசிங்கன் நினைந்து காற்றும், எண்ணம் தோன்றும் மனமும், வேகத்தில் பிற்படுமாறு எழுந்து, நேராகச் சென்று வானமார்க்கமாகப் புறப்பட்டு தன்னுடன் ஐந்நூறு வெள்ளம் சேனையும் உடன் சுற்றிவர பூமியில் கிளர்ந்து பெருகிவரும் கடல்போல் வீரவாகு தேவர் முன்னாகச் சென்றான். 4

சென்றிடு வீர சிங்கன் திறல்கெழு புயனைப் பாரா
இன்றள வெமது காப்புள் ஏகினர் இல்லை யார்நீ
ஒன்றொரு தமியன் போந்தாய் உயிர்க்குநண் பில்லாய் நின்னைக்
கொன்றிடு முன்நீ வந்த செயல்முறை கூறு கென்றான்.

இவ்வாறு சென்றிட்ட வீரசிங்கன் வலிமைதோன்றும் தோளுடைய வீரவாகு, தேவரைப் பார்த்து இன்றளவும் எமது காவலில் வந்தார் ஒருவருமில்லை. யார் நீ ஒரேயொரு தனியனாக வந்தாய் உனது உயிர்மேல் உனக்கு விருப்பமில்லைப்போலும் உன்னைக் கொல்லுவதன்முன் நீ வந்த செயல்முறை கூறுவாயாக என்றான். 5

பொன்னியல் திண்டோள் வீரன் புகலுவான் இலங்கை வாவி
மன்னியல் சூரன் வைகும் மகேந்திரஞ் சென்று மீள்வான்
உன்னினன் போந்தேன் ஈதென் உறுசெயல் வலியை யென்னின்
இன்னினி வேண்டிற் றொன்றை இயற்றுதி காண்ப னென்றான்.

இதைக்கேட்டு பொன்னார்ந்த திரண்ட தோளுடைய வீரவாகு தேவர் சொல்லியருளுவார். இலங்கையைக் கடந்து மிகவுயர்ந்த இயல்புகள் பொருந்திய சூரன் இருக்கும் வீரமகேந்திரபுரம் மீளும்படியாக இங்கு வந்தேன். இதுதான் நான் மேற்கொள்ளவிருக்கும் செயல். இதனைத் தடுக்க நீ வலியுடையா எனின் இனிமேல் நீ வேண்டியதொன்றைச் செய்வாயாக. நான் அதைக் காண்பேன் என்றார். 6

திறன்மிகு சிங்கன் அன்னோன் செப்பிய மொழியைக் கேளா
இறையுநம் மவுண ராணை எண்ணலன் வலியன் போலும்
அறிகுதும் மீண்டு சேறல் அழகிதன் றென்னா உன்னிக்
குறுகிய படைஞர் தம்மை இவனுயிர் கோடி ரென்றான்.

வலிமை மிகுந்த வீரசிங்கன் வீரவாகு தேவர் சொல்லிய வார்த்தையைக் கேட்டு, கொஞ்சமேனும் நமது அசுரருடைய ஆணையின் சிறப்பினை எண்ணமாட்டான். பார்க்கப்போனால் இவன் மிகவும் வலியுடையன்போலும் இவன் இங்கு போகின்ற திறமையை நான் பார்க்கவேண்டும். இவன் இங்கு வந்ததும் அழகுடையதல்ல, என நினைந்து தன்னைச்சுற்றி நின்ற படைஞர்களை நோக்கி, இந்த வீரனுடைய உயிரை நீங்கள் பற்றுங்கள் என்றான். 7

என்றலும் அரிய தொன்றை எயினர்கள் வேட்டைக் கானில்
சென்றனர் திரண்டு சுற்றிச் செருவினை இழைப்ப தேபோல்
பொன்றிகழ் விசய வாகுப் புங்கவன் றன்னைச் சீற்ற
வன்றிறல் அவுணர் யாரும் வளைந்தமர் புரிய லுற்றார்.

என்று வீரசிங்கன் கூறலும், அதுபோது அரியதான ஒரு பெரிய பலமுடைய சிங்கத்தை வேடர்கள் வேட்டைக் காட்டில் சென்று திரண்டு வளைத்துப் போரினை இழைப்பதுபோல, பொன் திகழ்கின்ற மாலை பொலியும், வீரவாகு தேவரை கோபம் நிரம்பிய வலியையுடைய அசுரர் யாரும் சுற்றி வளைத்துப் போர்புரியலுற்றார். 8

வேலினை விடுப்பர் தண்டம் வீசுவர் முசலந் தூர்ப்பர்
சாலம தெறிவர் ஆலந் தன்னைஒச் சிடுவர் வார்விற்
கோல்வகை தொடுப்பர் நாஞ்சிற் கொடும்படை துரப்பர் வெய்ய
சூலம துய்ப்பர் கொண்டை தோமரஞ் சொரிவர் அம்மா.

சிலர் வீரவாகுதேவர்மேல் வேலைவிட்டெறிவார்கள், தண்டாயுதத்தால் வீசுவார்கள், முசலப்படையை சொரிவார்கள், சாலப்படை வீசுவார்கள், நஞ்சு பூசிய கூராகிய சூலத்தை ஓச்சுவார்கள், வார்பூட்டிய வில்லைவளைத்து அம்புகளைத் தொடுப்பர், நாஞ்சில் எனும் கொடிய படையை வீசுவர் கையில் பிடித்த கொடிய சூலத்தை எறிவார்கள், கையில்கொண்ட தோமரப்படையையும் சொரிவார்கள். 9

**கிளர்ந்தெழு பரிதி தன்னைக் கேழ்கிளர் உருமுக் கொண்மூ**
**வளைந்தென அவுணர் வீரன் மருங்குசூழ்ந் தாடல் செய்யத்**
**தளர்ந்திலன் எதிர்ந்து தன்கைத் தாரைவாள் உறையின் நீக்கி**
**உளந்தனின் முனிந்தன் னோரை ஒல்லைசூழ்ந் தடுத லுற்ருன.**

வானத்தில் கிளர்ந்தெழுகின்ற சூரிய தேவனை மிகச் சிறப்புற்ற கருமையும் இடியினையும் கொண்ட மேகங்கள் வளைந்துகொண்டதெனும்படி அசுரர்கள் வீரவாகு தேவரின் பக்கராக உடன் சூழ்ந்து போர்செய்ய வீரவாகு தேவர் அதனுல் மனம் தளர்ச்சியடையாது தம்மை எதிர்த்து வந்த அவர்களைத் தனது கையில் பிடிக்கும் கூரிய வாளை உறையினின்றும் நீக்கி, உள்ளத்தில் கோபித்து, அவர்களையெல்லாம் விரைவுடன் சுற்றி எதிர்த்து வெட்டி எறியலுற்ருர் 10

**அரக்குருக் கொண்ட வெற்பின் அடுகனற் கடவு ளெய்தி**
**உருக்கியே யதனை எல்லாம் ஒல்லையின் உடைக்கு மாபோல்**
**நெருக்கிய அவுணர் தானை நீத்தம துடைய வீரன்**
**தருக்கிளர் வாளொன் றேந்திச் சென்றுசென் றடுதல் செய்தான்.**

அரக்கு மெழுகினுல் உருவம்கொண்ட மலையின்மீது எல்லாவற்றையும் எரிக்கும் அக்கினிக் கடவுள் சென்று உருக்கியே அந்த அரக்கு மலையை எல்லாம் விரைவுடன் உடைத்தெறிவதுபோல் நெருக்கி வருகின்ற அசுரர் சேனையான கடல் உடைந்து போக, வீரவாகு தேவர் சிறப்புக் கிளர்ந்து விளங்கும் வாள் ஒன்றைக் கையிலேந்தி எதிர்த்துவரும் அசுரர் இருக்குமிடமெல்லாம் சென்று வெட்டிச் சங்காரம் செய்தார். 11

**பனிபடர் குழுமல் தன்னைப் பாயிருட் செறிவை அங்கிக்**
**கனிபடர் பொற்பில் தோன்றுங் காய்கதிர் முடிக்கு மாபோல்**
**நணிபடர் அவுணர் தானை நைந்திடச் சுடர்வாள் ஒன்றல்**
**தனிபடர் வீர வாகு தடிந்தனன் திரித லுற்ருன்.**

பனிபடர்ந்திருக்கும் படலத்தைப் படரும் இருட்கூட்டத்தை நெருப்பின் அழகிய சுடர், வெளிவரும் தன்மைபோன்று சிவந்த கிரணங்களைப் பரப்பி தோன்றுகின்ற எல்லாவற்றையும் காய்கின்ற கிரணங்களையுடைய சூரியதேவன் இல்லாமல் செய்கின்ற தன்மைபோல வேகமுடன் முன்னுக படர்ந்துவந்த அசுரர்சேனை நைந்து போய் வெட்டுண்டு அழிய சுடர்பொருந்திய வாள் ஒன்ருல் தனியாக வந்து வெட்டி வீழ்த்தி திரிவானுயினர் வீரவாகுதேவர். 12

**உறைந்தன குரிதி வாரி ஒல்லையில் உவரித் தெண்ணீர்**
**மறைந்தன அவுணர் தானை மால்கரி பரிதேர் முற்றுங்**
**குறைந்தன கரந்தாள் மொய்ம்பு கொடுமுடி துணிந்து வீழ்ந்த**
**நிறைந்தன அலகை ஈட்டம் நிரந்தன பரந்த பூதம்.**

இவ்வாறு அசுரரை வெட்டிவீழ்த்த இரத்தம் பெருகி கடல் போலாகிச் சென்று உப்புச் சமுத்திரத்தைக் கலந்து அதனை மறைத்தன, அசுரருடைய காலாட்படை, மதயானை குதிரை, தேர், முற்றும் குறைவுபட்டன. கைகளும், காலும், தோளும் கொடிய முடிகளும் துணிபட்டு வீழ்ந்தன. பேய்க்கூட்டங்கள் அங்கு நிறைந்தன. பூதங்கள் வரிசையாக பரந்து நிரந்துகொண்டது. 13

வெள்ளநூ றவுணர் தானை விளிந்திட இனைய பாலால்
வள்ளல்சென் றடுதல் செய்ய மற்றுள அவுணர் யாரும்
உள்ளநொந் திரங்கித் தத்தம் உயிரினை ஓம்பல் செய்து
பொள்ளென நிலனும் வானும் புலந்தொறும் இரியல் போனார்.

இவ்வாறு ஐந்நூறு வெள்ளம் அசுரச்சேனை அழிந்து மாண்டுபோக இப்படியான தன்மையாக வீரவாகு தேவர் சென்று கொலைபுரிய, மற்று அங்கு மாளாது நின்ற அசுரர் யாரும் இதனை நோக்கி உள்ளம் நொந்து இரங்கித் தத்தம் உயிரைப் பாதுகாத்துக்கொண்டு விரைவாக அவ்விடம் விட்டு பூமியிலும், வானிலுமுள்ள இடங்கள்தோறும் ஒழித்து ஓடினார்கள். 14

போதலும் வீர சிங்கன் பொள்ளெனச் சினமேற் கொண்டு
மாதிரங் கடந்து மேல்போய் வளர்தரும் வாகை மொய்ம்பன்
மீதொரு சூலந் தன்னை விட்டனன் விட்ட காலை
ஏதியங் கதனால் அன்ன திருதுணி படுத்தி ஆர்த்தான்.

இவ்வாறு அனைவரும் பயத்தால் போதலும், வீரசிங்கன் மிக விரைவுடன் கோபம்கொண்டு திக்கினைக் கடந்து மேலும் போய் வளர்ந்திருக்கின்ற வெற்றியை யுடைய வீரவாகு தேவரின் மேலாக பெரிய ஒரு சூலப் படையை விட்டான். அச் சூலம் வருதலும் வீரவாகு தேவர் தனது கைவாளினால் சூலப்படையை இரண்டு துண்டாகத் துணித்து வீழ்த்தி ஆரவாரம் செய்தார். 15

ஆர்தலும் மடங்கற் பேரோன் ஆண்டகை வீரன் மேன்மை
பார்த்தனன் தனது பாணி பற்றிய படைகள் தம்மில்
கூர்த்ததோர் குலிசம் வீசக் குறுகிவாள் அதனான் மாற்றிப்
பேர்த்தொரு படையெ டாமுன்பெயர்ந்தவன் முன்னஞ் சென்றான்.

சூலத்தை வெட்டி வீழ்த்தி ஆர்த்தலும் வீரசிங்கன் என்னும் பெயருடையோன், ஆண்தகைமைகொண்ட வீரவாகு தேவரின் மேன்மையைக் கண்டான். தனது கையில் பிடித்த படைகள் தம்மில் கூர்மையுடைய ஓர் குலிசாயுதத்தை எடுத்து வீரவாகு தேவர்மேல் வீசுதலும், வீரவாகு தேவர் அதைக் கண்டு தமது வாளால் அதனை வெட்டி வீழ்த்தி, வீரசிங்கன் மீண்டும் ஒரு படையெடுப்பதற்கு முன் விரைவுடன் அவன் முன்னாகச் சென்றார். 16

சென்றுதன் மணிவாள் ஓச்சிச் செங்கைகள் துமித்துத் தீயோன்
ஒன்றொரு முடியுங் கொய்தே உவர்க்கட லிடையே வீட்டி
நன்றுதன் னுறையுட் செல்ல நாந்தகஞ் செறித்து முன்னோர்
வென்றிகொண் டகன்றான் என்ப வேலவன் விடுத்த தூதன்.

வீரவாகு தேவர் சென்று தனது மணிபோன்ற ஒளியுடைய வாளை வீசி வீர சிங்கனுடைய சிவந்த கைகளை வெட்டி வீழ்த்தி, தீயவனான வீரசிங்கனுடைய ஒரே யொரு தலையையும் வாளால் கொய்து உப்பு நீர்க் கடல் இடையே வீழ்த்திவிட்டு நன்றுடனே தன்னுடைய உறையுள் சேரும்படி தனது கைவாளை செருகிவிட்டு, முன்னாக ஓர் வெற்றியைப் பெற்றுக்கொண்டு அப்பால் அகன்று போனார் என்பார்கள் வேலவரான முருகப்பிரான் விடுத்த தூதுவர் வீரவாகு தேவர். 17

ஆகத்திருவிருத்தம் 89

வீரசிங்கன் வதைப் படலம் முற்றிற்று.

956

# இலங்கை வீழ் படலம்

மலங்கொடு சுறவு தூங்கும் மறிகடல் மீது மேரு
விலங்கல்சென் றிட்ட தென்ன விண்ணிடந் தன்னின் நீங்கி
அலங்கலந் திண்டோள் வள்ளல் அவுணர்தம் மிருக்கை யாகும்
இலங்கையங் குவடு மூன்றில் இடைப்படு சிகரம் பாய்ந்தான்.

வலிமை கொண்ட சுறு மீன்கள் உலாவும் திரை எறியும் கடல்மீது மேருமலை சென்றிட்டது என்னும் படியாக வான இடத்தினின்றும் நீங்கி நல்ல அழகிய பூமாலைகளை அணிந்த திண்மையான தோளுடைய வீரவாகு தேவர், அசுரர்களின் இருப்பிடமாகிய இலங்கையான மலையின் மூன்று முடியிலே இடையில் உள்ள மலையுச்சியில் பாய்ந்தார். 1

நெடுவரை தன்னை வேலான் ஈறுசெய் திட்ட அண்ணல்
விடவரு தமியோன் தொல்லை இலங்கையின் மீது பாய
அடலதி வீரன் ஏனை அவுணர்கள் கலங்கி யேங்கி
இடியுறு புயங்க மென்ன யாருமெய் பனித்து வீழ்ந்தார்.

நெடியதாகிய கிரவுஞ்ச மலையை வேலால் முடிவுசெய்திட்ட கடவுள் முருகப் பிரான் தூதாய் விட வருகின்ற தனியவரான வீரவாகு தேவர் மிகப் பழமையுடைய இலங்கையின்மீது பாய அந்நேரம் வலிமையுடைய அதி வீரன் முதலாகிய ஏனைய அசுரர்கள் எல்லாம் கலங்கி ஏங்கி இடியேறுபட்ட பாம்புபோல எல்லாரும் மேனி நடுங்கி கீழே வீழ்ந்தார்கள். 2

வைப்புறு மகேந்திர வடாது புலமாகி
இப்புறம் இருந்திடும் இலங்கைதனில் ஏந்தல்
குப்புறுத லுங்குலை குலைந்தவுண ரோடும்
உப்புறு கடற்படிதல் கண்டுவகை யுற்றான்.

வீகமகேந்திரபுரத்து வடதிசையிலுள்ள காவல் கோட்டையாகி இப்புரத்து இருந்திட்ட இலங்கை நகரில் வீரவாகு தேவர் குதித்தலும் மலை நடுநடுங்கி அசுர ரோடும் உப்புப் பொருந்திய கடலில் ஆழ்ந்து மூழ்குதல் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டார். 3

தந்திமுக மாமதலை தன்னடி வணங்கா
தந்தரவிண் ணோர்கடல் அலைத்தடலும் அன்னோன்
சிந்தைமுனி வெய்தவிடை சேர்த்தகயி றோடு
மந்தர நெடுங்கிரி மறிந்தபடி மானும்.

இவ்விலங்கை கடலில் ஆழ்ந்தமை ; முன்பொரு காலத்து யானை முகத்துடன் விளங்கும் பெருமையான திருக்குமாரன் விநாயகரின் திருவடிகளை வணங்கிடாது, வானத்து தேவர்கள் பாற்கடலை கடைந்திடலும் அதனால் விநாயகப் பெருமான் தமது சிந்தையில் கோபம் எய்தியருள இடையில் கட்டிய கயிற்றோடு பாற்கடலைக் கடைந்த மத்தாகிய நெடிய மந்திரமலை பாற்கடலில் சரிந்துவீழ்ந்து, மூழ்கியதை ஒத்திருந்தது. 4

ஆடல்கெழு மொய்ம்பினன் அடித்தலம தூன்ற
மூடுதிரை வேலையிடை மூழ்கிய இலங்கை
கூடுமக வண்ணல்குலி சந்தொடர நேமி
ஊடுபுக லுற்றிடுமை நாகவரை யொக்கும்.

போர்ச்செறிவு மிகுந்த வீரவாகு தேவர் கம்முடைய திருப்பாதத்தை ஊன்ற திரை மூடிய சமுத்திரத்திடத்து ஆழ்ந்து மூழ்கிய இலங்கைமலை முன்னர் இந்திர தேவன் வச்சிரப்படையால எறிதலும் அப்படை வந்துசேர கடலினூடு சாய்ந்து வீழ்ந்த கருமைநிறம் கொண்ட மைநாகம் என்னுய பெயருகூட மலையையும் ஒத்திருந் தது.

மைநாக மலை — இது முன்பொருகால் இந்திரன் மலைகளின் சிறகுகளை வச்சிராயுதத்தால் வெட்டியபோது இந்த மலை இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடைப்பட்ட கடலிலே ஒளித்துச் சென்று வீழ்ந்தது. அது விழுந்ததுபோன்று இலங்கையும் ஆழ்ந் தது என்றார். 5

மாமறைகள் தம்மைமுனம் வஞ்சனை புரிந்தே
சோமுகன் மறைந்ததிரை தூங்குகட லூடே
ஏமமுறு பேருரு எடுத்ததொரு மாண்சேல்
போமதென வாழ்ந்தது பொலங்கெழும் இலங்கை.

பெரிய வேதங்கள் எல்லாவற்றையும் முன்னம் வஞ்சனை செய்து களவாண்டு சோமுகாசுரன் ஒளித்திருந்த திரைகள் பெருகும் பெருங்கடலிடத்து இன்பநிறையுடன் பெரிய சேல் மீன் வடிவத்தை எடுத்துக்கொண்டு முன்பு நாராணயக் கடவுள் அசுரனைத் தேடி கடலினுள் குதித்துச் சென்றதுபோல ஆழ்ந்துபோயது அழகு விளங்குப இலங்கை நகரம் 6

தொல்லைதனில் ஓர்விதி துயின்றகடை நாளின்
எல்லைய திகந்துகடல் ஏழுமெழ அங்கண்
ஒல்லையில முற்றபுவி உய்ப்பவொரு கேழல்
செல்லுவதின் ஆழ்ந்தது திரைக்கடல் இலங்கை.

முந்திய காலத்து ஓர் பிரமதேவன் நித்திரைகொண்ட உலக முடிவான நாளிலே கடல்கள் ஏழும் தங்கள் இருப்பிட எல்லையைக் கடந்து எழுந்து எங்கும் பரந்துமூடிக்கொண்ட நேரத்து விரைவுடன் பாதாளத்துட் சென்ற பூமியை மேலே கொண்டு வந்து சேர்ப்பதற்கு ஒரு பன்றி அப்பிரளயக் கடல் நீரில் ஆழ்ந்து செல்வது போல திரையையுடைய கடலில் இலங்கை ஆழ்ந்தது 7

சிந்துவின் அகன்கரையொர் திண்கிரி யழுந்த
அந்தமி லிலங்கையும் அழுந்தியிடு தன்மை
முந்தொரு மடக்கொடி விருப்பின்முனி மூழ்க
இந்திரனும் நேமியி னிடைப்புகுதல் போலும்.

சமுத்திரத்தின் அகன்ற கரையில் முன்னர் வலிமையான ஓர் கந்தமாதன மலை கீழே அமுங்கிப்போக; முடிவில்லாதிருந்த இலங்கையும் கடலில் மூழ்கிவிட்ட தன்மை இரண்டையும் நாம் ஆராய்ந்து பார்த்தால், முன்பு ஒரு காலத்து அகலிகை என்னும் பெண்ணின்மீது விருப்பத்தின் காரணமாக, கடலில் புகுந்து

மேலெழும்பாது அனேக காலம் தவஞ்செய்வோருக்கே கொடுக்கப்படுவாள் அகலிகை என்னும் காரணத்திஞல் கௌதம முனிவன் கடலிடத்து மூழ்கிட அவரைப் பார்த்து இந்திரனும்கள்ளத்தனமாக தான் கடலில் அநேகநேரம் நிற்க முடியாததால் கடலில் மூழ்கி எழுதல் போன்றது. இங்கு இலங்கை கௌதமருக்கும், கந்தமாதன மலை இந்திரனுக்கும் ஒப்பிடப்பட்டது 8

உலங்கொள் புய வீரனடி ஊன்றுதலும் முன்னோர்
விலங்கல்பணி தன்னுலக மேவியது கேளா
அலங்கல்பெறு வாகையவன் ஆற்றலது தாங்கி
இலங்கையது காண்பனென ஏகியது போலும்.

வலிமைகொண்ட தோளினையுடைய வீரவாகு தேவர் திருப்பாதத்தை ஊன்றுதலும் முன்பு கந்தமாதனமலை நாகர்களிருக்கு பாதாள உலகம் போயது ஆகவே அந்த மலை எனது நண்பன். அதை நான் சென்று தேடுவேன் என்று மாலையணிந்த வீரவாகு தேவரது உளக்கிஞல் ஏற்ற வலிமையைப் பெற்றுக்கொண்டு இலங்கைமலை கந்தமாதன மலையைத் தேடிப் போன்று போனது கடலுள் ஆழ்ந்தது. 6

இலங்கையிது பான்மையின் இருங்கடலுள் மூழ்கக்
குலங்களொடு வைகிய கொடுந்தகுவர் யாருங்
கலங்கினர் அழுங்கினர் கவன்றனர் துவன்றி
மலங்கினர் புலம்பினர் மருண்டனர் வெருண்டார்.

இலங்கை இதுபான்மையாக பெரும் கடலுள் மூழ்க அம் மலைமீது தங்கள் குலத்தோடு தங்கியிருந்த கொடிய அசுரர் யாரும் கலங்கிஞர்கள், அலறி அழுதார்கள், கவர்ச்சி கொண்டார்கள், நெருங்கி உளக்குப்பட்டு தடுமாறிஞர்கள், ஒவெனப் புலம்பி அழுதார்கள், அச்சம் கொண்டார்கள். 10

அற்றமுறு தானவர்கள் ஆழஅனை யோரைச்
சுற்றிய அளப்பில சுருவுழுவை மீனம்
பற்றிய வளைந்தன பலப்பல திரண்டே
செற்றிய திமிங்கில திமிங்கில கிலங்கள்.

குற்றம் பொருந்திய அசுரர்கள் கடலோடு மலையுடன் சேர்ந்து ஆழ்ந்துபோக அவர்களை வளைத்துச் சுற்றிய அளவு கடந்த சுரு முதலிய பெரிய மீன்கள் அவர்களைப் பற்றிப் பிடித்தன திமிங்கிலம். திமிங்கிலகிலம் என்னும் பலபல மீன்கள் வந்து திரண்டு அசுரருடன் போர் செய்தன. 11

கையதனை ஈர்ப்பசில கால்கள்சில ஈர்ப்ப
வெய்தலை ஈர்ப்பசில மிக்கவுயர் தோள்கள்
மொய்யுடைய மார்பதனை ஈர்ப்பசில மொய்த்தே
சையமுறழ் யாக்கையுள தானவரை மீனம்.

சில மீன்கள் அசுரரின் கையைப் பிடித்து இழுப்பன, சில மீன்கள் அசுரரின் காலைப் பிடித்து இழுப்பன, சில மீன்கள் அசுரரின் கொடிய தலையைப் பிடித்து இழுப்பன, சில மீன்கள் அசுரரின் தோளை, வலியுடைய நெஞ்சை பிடித்திழுப்பன, இவ்வாறு பலபாட்டிலும் மொய்த்து மலையையொத்த உடலினையுடை அசுரரை மீன்கள் பற்றியிழுப்பன. 12

அத்தனொடு யாயைமனை அன்பின்முதிர் சேயைக்
கொத்தினொடு கொண்டுசிலர் கூவியெழு கின்றார்
எய்த்தனர்கள் செய்வதென இரும்படையும் விட்டுத்
தத்தமுயிர் கொண்டுசிலர் தாமும்எழ லுற்றார்.

இவ்வாறாகிய நிலையில் ஆண்களும், பெண்களுமான அசுரர்கள் கலங்கி தந்தையோடு தாயை, மனைவியை, அன்பிற் பெருகிய குழந்தையை கையால் சேர வாரிக் கொண்டு சிலர் கூக்குரலிட்டு மேலெழுகின்றார், சிலர் எழுவதில் களைத்துப் போகின்றார்கள், என்ன செய்வது என்று தத்தமது கையிலே பிடித்த பெரும் படைக்கலங்களையும் கூட எறிந்து விட்டு தங்கள் உயிரை மட்டும் தாங்கிக் கொண்டு சிலர் மேலெழுந்து வருகின்றார்கள். 13

உற்றசில தானவரை ஒய்யென அளாவித்
திற்றிவிழை வான்நனி திரண்டனர்க ளெல்லாம்
பற்றுழி தனித்தனி பறித்தது பொருட்டாற்
பொற்றபுரை மீன்கள்பெரும் போர்வினை புரிந்த.

அசுரரைப் பிடித்து உண்கின்ற பெரும் விருப்பத்தினாலே திடீரெனச் சென்று அவர்களைப் பிடித்துக் கொள்ளும்படி விரைவுடன் சூழ்ந்து கொண்டு மீன்கள் பற்றிய நேரத்து அவற்றையெல்லாம் தனித்தனியே அசுரர் திமிறிப் பறித்தலும் அதன் பொருட்டால் மலைபோன்ற பெரும் மீன்கள் அசுரரைப் பிடிக்கும் செயலிலே அசுரருடன் பெரும் போர் புரிந்துள்ளன. 14

தானவர்க ளோர்சிலவர் தம்முணல் குறித்தே
வானிமிரு மோதையென வந்துதமை எற்றப்
பூநுனையி வாள்சுரிகை போரயில்கள் கொண்டே
மீனமொடு வெஞ்சினம் விளைத்தமர் புரிந்தார்.

அசுரர்கள் சிலர் தம்மினத்தை முன்பு உண்டமையை இப்பொழுது குறித்து எண்ணிக் கொண்டு மீன்கள் வானத்தில் நிமிர்ந்து எழுகின்ற சூறாவளிக் காற்றைப்போல் வந்து அசுரர்களை வாலினால் சுழற்றி அடிப்ப அதுவேளை மிருதுவான கூர்மை கொண்ட வாளினை, சுழல் வாளினை, வலியுடைய போர்ப்படையான வேல்களினை அசுரர் கைகளில் எடுத்துக்கொண்டே மீன்களோடு கொடிய கோபத்தினைக் கொண்டு போர் புரிந்தார்கள். 15

சீர்த்திகொள் இலங்கைகடல் சென்றிடலும் அங்கண்
ஆர்த்திபெறு மங்கையர்கள் அங்கையவை பற்றி
ஈர்த்தபிறர் இல்லுற இசைந்துகரம் பற்றுந்
தூர்த்தரை நிகர்த்தன சுறாமகர மீனம்.

சிறப்புக் கொண்ட இலங்கை கடலுட் சென்றிடலும். அவ்விடத்து கூட மூழ்கிய வலிமைபெற்ற அசுரப் பெண்களினுடைய அழகிய கைகளைப் பற்றி சுறா மீன்கள் பிடித்து இழுத்தன. இது எதுபோலென்றால் பிறனுடைய மனைவியை தாம் அடைய விரும்பி அவளுடைய கையை எட்டிப் பிடிக்கும் தூர்த்தனைப் போன்றது. 16

மீனொருகை பற்றியிட வேறொரு கரத்தைத்
தானவர் வலித்தொரு தடக்கைகொ டிசிப்ப
மானனைய கண்ணியர் வருந்திடுதல் ஒர்ஐந்
தானபுலன் ஈர்ப்பவுள் அழுங்குவது போலும்.

ஒரு பெண்ணின் கையொன்றினை மீன் பற்றியிழுக்க அவளது மற்றக் கரத்தை அசுரர்கள் தங்கள் விசாலித்த கையால் வலிமையுடன் பிடித்து இழுப்ப மானையொத்த பார்வையினையுடைய அப்பெண்கள் இரண்டு பக்கத்து இழுப்பாலும் வருந்திக் கொண்டிருத்தல் ஐந்து புலன்களும் உயிரினை பலபாட்டாலும் இழுப்ப உள்ளே உயிர் துயருற்று அழுங்கும் தன்மை போலும் 17

திண்டிறல் வலம்படு திருக்கைசுற மீனம்
மண்டிய திமிங்கிலம் வருந்தகுவர் சூழல்
கண்டுமிசை யெற்றிடுத லுங்கடிது வாளால்
துண்டமுற வேயவை துணிந்தெழுநர் சில்லோர்.

திண்மையான வலிகொண்ட திருக்கை, சுறு, மீனை விழுங்கும் திமிங்கிலம் அங்கு வரும் அசுரர் கூட்டத்தைக் கண்டு மேலாகத் தூக்கி எறிதலும் விரைவுடன் கையில் உள்ள வாளினால் அம் மீன்களை வெட்டி துண்டாகத் துணித்து விட்டு மேலெழுவர் சில அசுரர். 18

கட்டழல் விழிச்சுறவு காரவுணர் தம்மை
அட்டுணல் குறித்துவர அன்னவர்கள் நீவித்
தொட்டனர் பிடித்தகடு தூரும்வகை பேழ்வாய்
இட்டனர் மிசைந்தனர் எழுந்தனர்கள் சில்லோர்.

நெருப்புப் பொறிகள் கக்கும் கண்ணுடைய சுறு மீன்கள் கரிய மேனியரான அசுரரைப் பிடித்து விழுங்கும் குறிப்புடன் வருதலும் அவ்வசுரர் சுறுவை கையால் தடவித் தொட்டு பிடித்து தங்கள் வயிறு நிறையும்படி அகன்ற வாயில் இட்டு கடித்து உண்டுகொண்டு நீர்மேல் எழுகின்றார்கள். 19

ஏற்றபுனல் ஊடுதெரி வின்றியெம ரென்றே
வேற்றொரு மடந்தையர் வியன்கையது பற்றிப்
போற்றியெழ அங்கவர் புறத்தவர்க ளாக
மாற்றினர் இசைந்துசிலர் வாழ்க்கைமனம் வைத்தார்.

ஆழ்ந்து கொண்ட நீரிலே தெளிந்து அறியமுடியாதபடி எமது மனைவிதான் இவள் என்று வேறொரு பெண்ணின் அழகிய கையைப் பிடித்து பாதுகாப்பாக மேலெழ அப்போது அப்பெண் வேறொருவரின் மனைவியாக இருப்ப வேறு வழியில்லாமல் இருவரும் மனம் மாற்றி இசைவுகொண்டு அப்படிச் சில அசுரர்கள் புதுத் தம்பதிகளாக வாழ மனம் கொண்டனர். 20

இல்லிவ ரெனப் பிறரை ஏந்தியெழ அன்னோர்
புல்லுதனி அன்பர்புடை போகவொரு சில்லோர்
அல்லலுறு வார்தமை யடைந்தொரு கன்னி
மெல்லவயல் போந்துழி மெலிந்துழலு வார்போல்.

இவள் எனது மனைவிதான் என பிறன் ஒருவனின் மனைவியைத் தூக்கிக் கொண்டு சில அசுரர் மேலெழுந்தபோது அதுவேளை அப்பெண்ணின் கண வன் எழுந்துவரக்கண்டு அப்பெண் அவனுடன் போகும் மனைவியின் நிலை கண்டு தூக்கி வந்தவர்கவலைகொள்கின்றனர் எதுபோலெனில் தன்னை மணஞ் செயும்படி அணைந்த ஒருபெண் அதனைவிடுத்து மெல்ல அயலானொருவனை மணம் செய்து போன நேரம் மெலிந்து வாட்டமுறுவார் போன்று. 21

தீமைபுரி மால்களிறு திண்புரவி யாவும்
ஏமரு சுறுத்தொகுதி ஈர்த்துவிரைந் தேகித்
தோமறு பிணமகரந் துய்ப்பவுத வுற்ற
காமர்கெழு பெண்மயல் கடக்கவெளி தன்றே.

தீமை செய்யும் பெரிய யானை வலியுடைய குதிரை எல்லாவற்றையும இன்புறுகின்ற ஆண் சுறு மீன்கள் இழுத்துக் கொண்டு விரைந்து சென்று தமது குற்றமற்ற பெண் சுறு உண்ணும்படி கொடுக்கின்றன. இதை நோக்கினுல் அழகு விளங்கும் பெண்கள் மேலுள்ள மயக்கத்தினை யார்தான் நீக்கமுடியும்? 22

மாற்றறு சுறுச்சில மடப்பிடிகை பற்றி
எற்றபெண் வழிச்செல எதிர்த்ததனை நோக்கி
வேற்றொர்பெடை ஆயதென வேர்வுறுகை கையர்க்
காற்றுமுப காரவியல் பாகியதை யன்றே.

மாறிலாத சுறுமீகைள் சிலபெண் யானையின் துதிக்கையை வாயால் கவ்வி தனக்கு ஏற்ற பெண் சுறுவினிடத்து அந்த யானையை இழுத்துச் செல்ல அப்பெண் சுறு அது கண்டு இதேது என் கணவன் வேறொரு பெண் சுறுவைக் கொண்டுவந்துள்ள னன் என்று கோபிப்பதைப் பார்த்தால் வஞ்சனை உடையார்க்குச் செய்யும் உபகார மாகிய செயல் போன்றது. 23

சிந்துவதன் மீதிலெழு சில்லவுண ராயோர்
கந்தன்முரு கேசன்விடு காளைசெயல் காணு
நந்தமையும் நின்றிடின் நலிந்திடுவன் யாங்கள்
உய்ந்திடுதும் என்றுகடி தோடியயல் போனர்.

சமுத்திரத்தின் மேல் எழுகின்ற சில அசுரராயுள்ளோர்கள் கந்தமுருகேசப் பெருமான் விடுத்த தூதுவர் வீரவாகு தேவரின் செயல் கண்டு நம்மையும் நாம் அங்கு நின்றிடின் கொன்றிடுவான் போலும்; ஆகவே நாம் நில்லாது தப்பிப் பிழை த்திடுவோம் என்று அப்பால் ஓடிப்போனர்கள். 24

பீடுசெறி தங்கணவ ரைப்பிரிகி லாமே
கூடும்வழி ஆழ்ந்தசில கோற்றொடிமின் னார்கள்
ஆடைபுன லூடுபுக அல்குல்தம கையால்
மூடியெழு வார்முலை முகத்தின்முகம் வைத்தே.

பெருமை பொருந்திய தமது கணவன்மாரைப் பிரிய முடியாதபடி அவரைப் பற்றியவகையால் ஆழ்ந்துபோன அழகிய வளையல்கள் அணிந்த பெண்கள் அணிந்த சேலையானது நீரினுள் அவிழ்ந்துவிட அதனுல் தமது கையால் அல்குலை மூடிக்கொண்டு நாணத்துடன் முலையின் மீது முகம் வைத்துக் கொண்டு மேலெழுந்தார்கள். 25

சேண்டொடர் இலங்கைகடல் சென்றுழிய தன்பால்
ஆண்டசில மாதர்கள் அரத்தவுடை கொண்டார்
மீண்டெழலும் நீர்பட வெளிப்படுவ தல்குல்
காண்டகைய செம்மதி களங்கமடைந் தென்ன.

வானத்தைத் தொடும் இலங்கை கடலில் அமிழ்ந்திச் சென்ற நேரத்தில் அத னுடன் ஆழ்ந்துபோன சில பெண்கள் சிவந்த உடை உடுத்திருந்தார்கள் திரும்பி நீர் மேல் எழும் நேரத்தில் அவர் மேனி மேல் நீர் படுதலும் நீரால் ஆடை நனைந்து அல்குல் வெளிப்பட்டுக் காணப்படுவது எதுபோல் என்றால் பார்க்கக் கூடிய சிவந்த சந்திரன் பார்க்கத் தெளிவிலாது களங்கமடைந்தது போன்று. 26

காரவுணர் மாதர்சிலர் காமர்கடல் வீழ்வார்
நீரமெழ வேயுடை நெகிழ்ந்தொருவி யேக
கூரல்முக மல்லுருவு முற்றுறம றைத்தே
தேரையென ஒண்புனல் செறிந்துதிரி வுற்றார்.

கருமையான அசுரப் பெண்கள் சிலர் அழகிய கடலில் வீழ்வார்களுக்கு நீர் மேல் எழும் நேரத்தில் உடுத்திய சேலை நெகிழ்ந்து நீங்கி கழன்றுவிட புன்முறுவல் தோன்றும் முகம் கறுத்த உருவம் யாவையும் முற்றாக நீரில் மறைத்துக் கொண்டு தேரை எனும்படி சமுத்திர நீரில் தெத்தித் திரிவாராயினர். 27

ஆசுறு மரைத்துகில் அகன்றிட எழுந்தே
தேசுறு மடந்தைய ரில்ஓர்சிலவர் சேண்போய்
மாசறு புயற்குழுவை வல்லேகரம் பற்றித்
தூசினியல் பானடுவு சுற்றியுல வுற்றார்.

குற்றம் நிறைந்த அரையில் அணிந்த ஆடை அகன்று கழன்றிடவும் எழுந்து கொண்ட அழகிய உருவுடைய பெண்களில் சிலர் வானத்தில் சென்று மாசில்லாத முகில் கூட்டத்தை விரைவாகக் கையாற் பிடித்து தமது மேனி மேல் ஆடையின் இயல்பாய் அமைய சுற்றி உலாவி நின்றார்கள். 28

ஆகத்திருவிருத்தம் 117.

இலங்கை வீழ் படலம் முற்றிற்று.

---

963

# அதிவீரன் வதைப் படலம்

அன்னதொர் பான்மைக ளாக இலங்கை
முன்னுறு வார்கடல் ஆழ்ந்தது மூழ்க
இந்நகர் போற்றி இருந்திடு கின்ற
மின்னுனை வேல்அதி வீரன் உணர்ந்தான்.

அவ்வாறாகிய பான்மைகளாக இலங்கை முன்னிருந்து ஆர்க்கும் பெரிய கடலோடு ஆழ்ந்து மூழ்கிப் போதலும் இந்த இலங்கை மலையைக் காவல் பூண்டு இருந்திடுகின்ற மின்னுகின்ற கூரிய வேலை உடைய அதிவீரன் என்பவன் அதனைக் கண்டான். 1

தனது புரங்கடல் சாருதல் காணா
நனிதுயர் எய்தினன் நாணும் அடைந்தான்
சினவி யுயிர்த்தழல் சிந்த நகைத்தான்
அனையவன் இன்னத கத்திடை கொண்டான்.

தனது இலங்கைபுரம் கடலில் ஆழ்ந்ததைக் கண்டு மிகவும் துயர் அடைந்தான், வெட்கமும் அடைந்தான், சினந்து பெருமூச்சு விட்டு நெருப்புச் சிதறிடச் சிரித்தான். அவ்வாறு கோபங் கொண்ட அதிவீரன் இத்தன்மையாக மனதில் நினைந்து கொண்டான். 2

சுந்தர மேவரு சூரபன் மாவோ
அந்தமில் தம்பிய ரோவனை யார்தம்
மைந்தர்க ளோமதி யேன் அவ ரல்லால்
இந்த வியற்கையை யார்புரி கிற்பார்.

இவ்வாறாக குதித்தபோதே இலங்கை கடலில் ஆழ்ந்துபோகும்படி செய்யவல்லவர் அழகு விளங்கும் சூரபன்மனோ அல்லது முடிவில்லாத வலியுடைய அவன் தம்பிமாரோ, அவர்களுடைய பிள்ளைகளோ, நான் தெரியமாட்டேன். அவர்கள் அல்லாமல் வேறு யார் இப்படியான செயலைச் செய்யவல்லவர்கள்? 3

ஆயவர் என்னினும் ஆங்கது செய்தற்
கேயதோ ரேதுவும் இன்றுதம் மூர்க்குத்
தீயது செய்கலர் சிந்தைய தன்றால்
மாயையும் ஈது மதிக்கிலள் போலும்.

அவ்வாறு அவர்கள் செய்தார்கள் என்றாலும் ஆங்கு அப்படித் தம் மூர்க்குச் செய்வதற்கு வேண்டிய ஏதும் ஒரு காரணமும் இன்று இல்லை. தமது ஊர்க்குத் தாம் தீமை செய்யமாட்டார்கள், இது உண்மையான காரியமாக எண்ணமுடியாது. தாயான மாயவளும் இதனை எண்ணமாட்டாள் போலும். 4

மூவரும் இச்செயல் முன்னலர் பின்னர்த்
தேவர்கள் யாரிது செய்திட வல்லார்
ஏவரும் நஞ்சிறை எய்தினர் வேள்விக்
காவலன் ஆருயிர் காத்து மறைந்தான்.

பிரம்மா விஷ்ணு உருத்திரனை மூவரும் இச்செயலை நினைக்கமாட்டார்கள். பின்னர் தேவர்களில் யார் ஒருவர் இதனைச் செய்திட வலியுடையவர் ஒருவரும் இல்லை எல்லாரும் நமது சிறையில் அடைந்து கொண்டார்கள் ய சங்கட்கு அதிபதி யான இந்திரன் உயிரினைப் பேணிக் காத்து மறைந்துகொண்டான். 5

மாதிர மேலவர் வானிடை வைப்பின்
மேதகும் விண்ணவர் விஞ்சையர் சித்தர்
ஆதியர் நம்மிறை ஆணையின் நீங்கார்
ஈது புரிந்திட எண்ணுவர் கொல்லோ.

திக்கில் வாழும் மேலோரும் வானத்தில் விளங்கும் ஏனைய வைப்பிடங்களில் வாழு மேலான விண்ணவர்கள், விஞ்சையர்கள், சித்தர்கள் ஆதியாகச் சொல்லப் பெறும கணங்கள் யாவும் எமது ஆணையான கடமைகளின் நின்றும் நீங்கமுடியாது. ஆனமையின் இதைச் செய்திட எண்ணுவர் கொல்லோ. 6

தவ்வற ஈண்டமர் தானவர் ஆற்ற
மெய்வலி மாயைகள் மேவின ரேனுந்
தெவ்வடு சூர்முதல் திண்படை யஞ்சி
இவ்வியல் தன்னை இழைக்கலர் போலும்.

சிதைவு இலாது இவ்விடத்து அமர்ந்து கொண்ட அசுரர்கள் மிகவும் உண்மையான வலி உடைய மாயைகளை பொருந்தி உள்ளரேனும் பகைமை எதனையும் அழிக்கவல்ல சூரபன்மனது படைக்குப் பயந்து இந்த இயல்பான முறையில் இதை செய்துகொள்ள மாட்டார் போலும். 7

ஆதலின் அன்னவர் ஆற்றலர் என்னின்
ஈதொரு செய்கை இழைத்தனர் யாரோ
தாதை அகன்றுழி தானவ ரோடுந்
காதலின் இந்நகர் காத்தது நன்றால்.

ஆனதன்மையில் இவர்கள் யாரும் இதைச் செய்யமாட்டார்கள் என்றால் பின்னால் இதைச் செய்தனர் யாரோ? எனது தந்தை இவ்விடம் விட்டு அகன்றுபோன நேரத்து இங்குள்ள அசுரரோடு நான் இலங்கையைக் காத்து நின்ற விதம் நன்றாயிருக்கின்றது, 8

காய மொடுங்கு கனற்சிர மூடு
போயது வல்லை புறஞ்செல நோற்று
மாயை பெரும்படை வன்மைகள் வேதன்
ஈயமுன் வாங்கிய என்செயல் நன்றால்.

உடல் வெந்து சாம்பராகி ஒடுங்கும்படியான நெருப்பின் மேலாக நான் போய் அதனுள் இருந்து நெருப்பு எனை புறத்து சூழும்படி தவம் புரிந்து அதனுல் மாய வல்லபங்களையும் பெரிய படைக்கலங்களையும் வலிமைகளையும் பிரமதேவர் வரமாகத் தந்திட நான் பெற்றுக்கொண்ட எனது செயல் மிகவும் நன்று போலும். இவ்வரங்கள், படைகள் வாங்கியும் ஏது பிரயோசனம்? 9

தந்தை யுருது தணந்துழி ஆங்கோர்
மைந்தன் இருந்துதன் மாநக ரோடும்
அந்தி லகன்கடல் ஆழ்ந்தனன் என்றுல்
நந்தமர் என்னை நகைப்பர்கள் அன்றே.

தந்தையார் இல்லாது நீங்கிப்போன நேரத்து அந்த இலங்கையில் ஓர் மகன் இருந்து காத்து தனது பெரிய நகரோடும் முடிவிலாத பெருங் கடலில் ஆழ்ந்துபோனுன் என்றுல் எனது குலத்தவரான ஏனை அசுரர்கள் என்னை இகழ்ந்து சிரிப்பார்கள் அல்லவோ? 10

மன்னவன் ஈது மதித்திடின் மற்றென்
றன்னை அடும்பெறு தாதையும் அற்றே
பின்னுளர் எள்ளுவர் பெற்றிஇ தாமேல்
என்னியல் நன்றென எண்ணி இனைந்தான்.

சூரபன்மனும் இதனை அறிந்து கொண்டால் என்னைக் கொன்றுபோடுவான், அவன் அல்ல; என்னைப் பெற்ற தந்தையுமே அவ்விதம் சொன்றிடுவர், மற்றையோர் என்னை சீ சீ வெட்கம் என இகழுவர். இதுவே நிலையாயின் எனது இயல்பு நன்றுயிருக்கும் என எண்ணி அதிவீரன் வருந்தினுன். 11

இனைந்ததி வீர னெனுந்திறல் மைந்தன்
கனைந்திடு கின்ற கடற்கிடை யாழ்வோன்
அனந்தர மூழ்வினை ஆற்றலின் அன்னுன்
மனந்தனில் ஈதொரு தன்மை மதித்தான்.

இவ்வாறு எண்ணி வருத்தமுற்ற அதிவீரன் என்னும் திறமையுடைய யாளிமுகன் மகன்; இரைந்து ஓசை கொள்ளும் கடலின் இடையாக ஆழ்ந்துபோகின்றவன் மேல்படுகின்ற ஊழ்வினையின் வலியால் அவன் தனது மனத்திலே ஈதொரு தன்மையாக எண்ணிக்கொண்டான். 12

ஒல்லொலி சேரு வரிக்கடல் மீதாய்ச்
செல்லுவன் யாரிது செய்தனர் என்றே
வல்லையில் ஓர்குவன் மற்றவர் தம்மைக்
கொல்லுவன் மெய்ப்படு சோரி குடிப்பன்.

ஒல்லென இரையும் ஒலி சேர்ந்த உவர்க்கடல் மேலாக நான் எழுந்து செல்லுவேன். யார் இதனைச் செய்தனர் என்று விரைவுடன் அறிவேன். மற்று அவரை நான் கொல்லுவேன். அவர் உடலில் உள்ள இரத்தத்தைக் குடிப்பேன். 13

என்றதி வீரன் இரும்படை யாவும்
ஒன்றற வாரி உருத்த னிகத்துள்
நின்றுளர் தங்களை நேடுபு கொண்டே
வன்றிரை வேலையின் மீமிசை வந்தான்.

என்று கூறி அதிவீரன் தனது பெரும் படை யாவற்றையும் ஒன்றும் மிச்சமில்லாதபடி கூட்டி வாரி எடுத்துக்கொண்டு கோபத்துடன் தனது சேனைகளில் நீரின் மேல் மிதந்துள்ளாரை பார்த்து தேடி அழைத்துக்கொண்டு வலிமையான திரைகளை உடைய கடல்மேல் வந்தான், (வேறு) 14

விடலைதிரு முன்னமதி வீரன்அனி கங்கள்
புடையில்வர நீரின்மிசை பொள்ளென எழுந்தான்
அடுதொழில் இயற்றியிடும் ஆதிதனை யெய்தக்
கொடியவிடம் வார்கடல் குலாய்நிமிர்வ தேபோல்.

வீரவாகுதேவர் முன்பாக அதிவீரன் என்னும் அசுரன் சேனைகள் பக்கராக சூழ்ந்துவர கடல் நீரின் மேலாக விரைவுடன் எழுந்தான். அது எதுபோல் இருந்ததெனில் சங்காரத் தொழிலை இயற்றிடுகின்ற ஆதியான உருத்திரமூர்த்தியை அடைந்து கொள்ள கொடிய நஞ்சானது ஒலி செயும் கடல் மேலாக குலாவி நிமிர்ந்து எழுவதே போன்று 15

விழுந்திடு இலங்கைதனில் மேவும் அதிவீரன்
எழுந்துதன தானையொ டிருங்கட லுளங்கிக்
கொழுந்துமிசை சென்றனைய கோலமொடு நின்ற
செழுந்திறல்கொள் மொய்ம்புடைய செம்மல்நிலை கண்டான்.

கடலில் சாய்ந்து விழுந்திடுகின்ற இலங்கையில் இருந்த அதிவீரன் மேல் எழுந்து தனது சேனையுடன் இருண்ட பெருங்கடலில் உள் இருந்த நெருப்பின் சுடர் கொழுந்துமேற் சென்றதை ஒத்த கோலமுடன் நின்ற செழுமையான திறலுடைத் தோள் கொண்ட வீரவாகுதேவர் நிற்கும் நிலையைக் கண்டான், 16

கண்டனன் வெகுண்டிதழ் கறித்துநகை செய்யா
அண்டர்குழு வானிவனெர் ஆண்டகைநம் மூதூர்
தெண்டிரையில் ஆழும்வகை செய்தும்இவண் நின்றான்
எண்டிசை தொழுந்தகுவர் ஆணையினி தென்றான்.

அதிவீரன் கண்டவுடன் கோபத்தால் சொண்டைக் கடித்து சிரித்து; ஓகோ தேவர் கூட்டத்தில் உள்ள இந்த ஒரு வீரனு நமது இலங்கையைக் கடலில் ஆழும்படி செய்தும் அச்சமிலாது இவ்விடம் நின்றான். எல்லாத் திக்கில் உள்ள உலகத்தவர்களும் வணங்கிடும் அசுரரின் ஆணை மிகு இனிதாக இருக்கிறது என்றான். 17

என்றுமொழி யாவிரைவில் யாளிமுகன் மைந்தன்
கொன்றிவன தாருயிர் குடிப்பனென்ன உன்னிச்
சென்றிடலும் ஆழ்ந்தவர் செயற்கையது காண்பான்
நின்றதொரு பேரறிஞன் நீர்மையது கண்டான்.

என்று மொழிந்து மிகுவிரைவுடன் யாளிமுகன் மைந்தன் அதிவீரன்; இங்கு நிற்கும் வீரனைக் கொன்று உயிர் குடிப்பேன் என எண்ணி வீரவாகுதேவர் முன்பாக சென்றிடலும் அதுவேளை கடலில் ஆழ்ந்து போகின்ற இலங்கையில் உள்ள அசுரர்களின் செயல்களைக் காணும்படி நின்றிட்ட பேர்அறிஞரான வீரவாகு தேவர் அதிவீரன் வந்துள்ள செயலின் தன்மையைக் கண்டார். 18

ஆனபொழு தத்தினில் அவன்புடையில் வந்த
தானவர்கள் சூழ்ந்தனர் சமர்த்தொழி லியற்ற
மானவிற லோன்றனது வாளுறை கழித்தே
ஊனொடுயிர் சிந்தியிட ஒல்லையடல் செய்தான்.

அவ்வாறான பொழுதில் அதிவீரன் பக்கராக வந்த அசுரர்கள் யாவரும் வீர வாகுதேவரை வளைந்து சூழ்ந்துகொண்டு போர்த் தொழிலைச் செய்ய அது நேரத்து மானமுடைய வீரவாகுதேவர் தனது வாளை உறையில் நின்றும் நீக்கி எடுத்து ஊனோடு அசுரரது உயிரும் சிந்திடும்படி விரைவுடன் யாரையும் வெட்டி வீழ்த்தி 19
னார்.

அற்றன சிரத்தொகுதி அற்றன கரங்கள்
அற்றன புயத்தொகுதி அற்றன பதங்கள்
அற்றன பெரும்புறமும் அற்றவுடன் முற்றும்
அற்றனர்கள் யாருமுயிர் அற்றதவர் பூசல்.

இவ்வாறு வீரவாகு தேவர் வெட்டிவிட தொகுதியாக தலைகள் அறுந்து வீழ்ந்தன, கைகள் அறுந்து வீழ்ந்தன, தோள்கள் அறுந்து வீழ்ந்தன, கால்கள் அறுந்து வீழ்ந்தன, பெரு முதுகுகளும் அழிந்தன, தங்கள் உடல் முழுவதும் அழியப் பெற்
றார்கள், எல்லாரும் உயிர் அற்றார்கள். அந்த அசுரருடைய போரே அழிந்தது. 20

பங்கிசெறி செந்தலைகள் பாய்குருதி நீர்மேல்
எங்கணும் மிதப்பன இருங்கடலி னூடே
செங்கொடி படர்ந்திடு செழும்பவள வைப்பில்
அங்கமல மானவை அலர்ந்திடுதல் போலும்.

மயிர் செறிந்த சிவந்த தலைகள்; பாய்ந்து செல்லும் இரத்த நீர் மேல் எங்க ணும் மிதந்திருப்பன எப்படி விளங்குவன என்றால் பெரிய கடலின் இடத்தாக செங் கொடிகளாய கிளைவிட்டு படர்ந்திருக்கின்ற பவளச் செடிகளின் இருப்பிடத்து அழகிய 21
தாமரைப் பூக்கள் யாவும்பூத்திருப்பது போன்றது.

அற்றமகல் வீரன்அவு ணப்படை துணிப்பச்
செற்றிய பிணத்தொகை திரைப்புணரி தூர்த்து
மற்றுமிசை போந்துமணி யாலுமொரி லங்கைப்
பொற்றைய தியற்றியது போன்றுளது மாதோ.

குற்றம் அகன்ற வீரவாகுதேவர் அசுரப்படையை வெட்ட அதனால் குவிகின்ற பிணத்தொகை திரை உடைய கடலையும் தூர்த்து மூடி இன்னமும் மேல் சென்று சிவந்த இரத்தினத்தினாலும் ஓர் இலங்கையைச் செய்து வைத்துள்ளனர் எனும்படி 22
யாயது.

தன்படை விளிந்துசல திக்கடலுள் வீழ
முன்பன் அதி வீரன் முனி யாவதனை நோக்கி
என்புடையி னோரையெறிந் தாய்கடிதின் நின்னைத்
தின்பனது காண்டியென வேசெருமு யன்றான்.

தனது படையானது அழிந்து இறந்து உப்பு நீர்க் கடலுள் வீழ்தலும் முன் னின்ற அதிவீரன் கோபத்தால் அதனைப் பார்த்து; வீரனே எனது பக்கரான சேனை யை நீ வெட்டி வீழ்த்தினாய், விரைவுடன் இப்போதே உன்னை நான் தின்பேன்; அதனை இப்பொழுது காண்பாயாக என்றான். 23

சொல்லும்அதி வீரன்வரு தோற்றமது காணா
வல்லைவரு கென்றுதிறல் வள்ளலும் அழைப்ப
எல்லையத னிற்செருவின் ஏற்றிவனை இன்னே
கொல்லுகென அங்கணொரு குந்தம தெறிந்தான்.

இப்படிச் சொன்ன அதிவீரன் வருகின்ற கோலத்தை வீரவாகுதேவர் கண்டு விரைவுடன் நீ வா, என்று வள்ளலான வீரவாகுதேவரும் அழைத்திட்ட எல்லையில் அதிவீரன் வீரவாகுதேவருடன் போர் செய்திட ஏற்றுக்கொண்டு இதோ இவனைக் கொல் என்று கூறி அங்கு ஓர் வேற்படையை எறிந்தான். 24

உய்த்ததொரு கூரயிலு ரத்திலுறு முன்னர்
மத்தகய நேர்விடலை மற்றது தெரிந்தே
கைத்தல மிருந்திடு கனற்புரையும் வாளால்
அத்துணை இரண்டுதுணி யாய்விழ எறிந்தான்.

வேற்படையை அதிவீரன் விடுத்தபோது அந்தக் கூரிய வேலும் தனது நெஞ் சில் பாயு முன்னராக; மதயானையை வலியான செயலில் ஒத்திருக்கும் வீரவாகுதேவர் அதனைத் தெரிந்து; தமது கைத்தலத்து இருந்திடுகின்ற நெருப்பை ஒத்த வாளினால் அந்நிலையில் அதிவீரனுடைய வேற்படை இரண்டு துண்டாகும்படி வெட்டினார். 25

கண்டமுற ஞாங்கரது கண்டுதிறன் மைந்தன்
தண்டம்விரைந் தொன்றொரு தடக்கைகொ டெடுத்தே
மண்டமர்செ யுன்னுயிரை வாங்குமிதெ தென்னா
அண்டர்புகழ் காளைதன தாகமுற விட்டான்.

வேலானது அழிந்துபோக; அதிவீரன் அதனைக் கண்டு பருத்த தனது கையா லே ஓர் தண்டாயுதத்தை விரைவாக எடுத்து நெருங்கிய போரைச் செய்கின்ற உன் னுடைய உயிரை இத்தண்டாயுதம் வாங்கும் என்று கூறி தேவர் புகழும் வீரவாகு தேவர் மேனியில் இலக்காகச் சென்று பட தண்டாயுதத்தை வீசினான். 26

விட்ட காலையத் தண்டினை வெலற்கருந் திறலோன்
அட்டி டான்தனி வாளினால் ஏற்றனன் அகலம்
பட்டு மற்றது நுண்டுக ளாகஅப் பதகன்
மட்டி லாதோர் விம்மிதம் எய்தினன் மறுகி.

தண்டாயுதத்தை அதிவீரன் விடுத்திட்ட காலையில் அத்தண்டாயுதத்தை வெல்ல முடியாத வலிமை உடைய வீரவாகுதேவர் வாளால் அழிவு செய்யாது தனது நெஞ்சிலே தண்டாயுதத்தை ஏற்றார். அத்தண்டாயுதம் நெஞ்சில் பட்டு நுண் ணிய துகளாகிப் போதலும் அப் பாதகனான அதிவீரன் அதுகண்டு அளவிட முடியா ததொரு ஆச்சரியம் அடைந்து சோர்வுற்றான். 27

வேறெர் முத்தலைப் படையது கொண்டதி வீரன்
மாறி லாவிறல் மொய்ம்பினன் தன்மணி மார்பின்
ஊறு செய்திறம் ஓச்சலுங் கண்டுநம் முரவோன்
சீறி யாங்கது பற்றினன் செங்கையால் இறுத்தான்.

வேறொரு மூன்று சுடருடைய படை ஒன்றை அதிவீரன் எடுத்துக்கொண்டு மாறுபாடிலாத வலிமை உடைய வீரவாகு தேவருடைய அழகிய நெஞ்சில் ஊறுபடுத்தும்படி செலுத்திவிடுதலும் அதனைக் கண்டு எங்கள் வீரவாகுதேவர் சீறி அந்தப்படையையும் தமது செங்கையால் பிடித்து முரித்தெறிந்தார். 28

இறுத்த காலையில் இலங்கையில் யாளிமா முகன்சேய்
செறுத்து மற்றிவன் தனைஅடல் அரிதெனச் சிந்தை
குறித்து மற்றொரு நாந்தகம் ஏந்தினன் குறுகி
வெறித்த கொண்டலுட் கொட்புறு மின்னென விதிர்த்தான்.

முறித்த நேரத்தில் இலங்கையைக் காத்த யாளிமுகன் மகன் அதிவீரன் கோபமடைந்து மற்று இந்த வீரவாகுதேவனை வெல்லல் அரிது என மனதில் எண்ணி வேறொரு வாளை தனது கையில் எடுத்து ஏந்திச் சென்று முழங்குகின்ற கறுத்த மேகத்தில் பளிச்செனும் மின்னல் போன்று வாளைச் சுழற்றினன். 9

கறங்கி னிற்பெரு வட்டணை புரிந்துதன் கரமேல்
நிறங்கொள் வாளினை இடம்வலந் திரித்தனன் நெறியே
பிறங்கும் ஆர்கலித் தெண்டிரை அலைதரப் பெரிது
மறங்கொள் நாந்தக மீனுகண் டலமரும் வகைபோல்.

காற்றடி போன்று பெருவட்டணையாக வந்து தனது கைமேல் பிடித்த ஒளிகொண்ட வாளினை இடமாகவும் வலமாகவும் மாறி மாறிச் சுழற்றித் திரித்தான். இச்செயல் எதுபோல இருந்ததென்றால் பெருகுகின்ற இரைச்சலுடைய கடல் அலைகள் காற்றால் அலைபட்டு மோதிட; அதுவேளை அங்கிருக்கும் கொடுமை கொண்ட வாள்மீன்கள் நிலைபெறாது அலைந்து அலமரும் வகைபோல. 30

ஏதி யிங்கிது நான்முகன் தந்துள தெவர்க்கும்
பேத கஞ்செயல் அரியதால் அன்னது பிடித்தேன்
சாதி திண்ணநீ வருகென மிகைமொழி சாற்றிக்
கோதில் வீரன்முன் அணுகலும் அனையவன் கூறும்.

அதிவீரன் சொல்வான்; இந்த வாளை இங்கு பிரமதேவர் தந்துள்ளது எவர்க்கும் இதனை அழிக்க அரிதாகும் அதனைக் கையில் பிடித்தேன், இதனை சாதனையான திண்ணமாகக் கொண்டு நீ போர் செய வருவாயாக என தேவையற்ற மிகுந்துள்ள வார்த்தைகளைப் பேசி குற்றமில்லாத வீரவாகுதேவர் முன்பாகச் சேர்தலும் வீரவாகுதேவர் இதனைச் சொல்வர். 31

நன்று நன்றுநின் ஞற்றலும் ஆண்மையும் நம்மை
வென்றி யேயெனின் யாவரும் மேலுனை வியப்பார்
நின்று நீசில மொழிவதென் கடிது நேருதியால்
வென்றி வீருருந் தமைப்புகழ் இற்பரோ வென்றான்.

நல்லது, நல்லது உனது செயல்களும் ஆண்மையும் நம்மை நீ வென்றுகொள்வாய் எனின்; மேலாக எல்லாரும் அதிவீரனே! உன்னை வியந்து கொள்வார்கள். இங்கு நின்று நீ சில வார்த்தைகளைப் பேசி ஆவதென்ன? விரைவுடன் போர்செய்ய வருவாயாக, வெற்றி அடையவிருக்கும் வீரரும் தம்மைப் புகழ்வரோ என்றார். 32

என்ன ஒன்னலன் கிடைத்தனன் வீரனும் எதிர்ந்தான்
அன்ன பான்மையர் வாளம ராடினர் அகல்வான்
மின்னு மாமுகில் தோன்றியே எதிரெதிர் விரிந்து
பின்ன ருள்புகுந் துடனுடன் செறிந்தபெற் றிமைபோல்.

என்று வீரவாகு தேவர் வரலும் பகைவனை அதிவீரனும் நேரிட்டு வந்தான்; வீரவாகு தேவரும் எதிர்த்தார். அன்னதன்மையாக இருவரும் வாட்போர் செய்தார்கள்; எப்படியெனில் அகன்ற வானில் மின்னல் கொண்ட பெரிய முகில் தோன்றி மாறி மாறி அதனுள் நின்றும் மின்னல் விரிந்து பின்னர் உட்புகுந்து உடன் செறிந்து விடும் தன்மை போல. முகில்கள் தோன்றி மின்னி மறையும் தன்மை போல இருவரும் வேகமுடன் மின்னும் வாளைச் சுழற்றி வீசிப் போர் செய்தனர் என்க. 33

சென்னி நாடுவர் களத்தினை நாடுவர் செவிதாள்
கன்ன நாடுவர் புயங்களை நாடுவர் கரங்கள்
உன்னி நாடுவர் உரத்தினை நாடுவர் உகளப்
பொன்னின் வார்கழல் நாடுவர் வாளமர் புரிவார்.

தலையை இலக்காக வீசிவெட்ட நாடுவர், கழுத்திற்கு இலக்கு வைப்பார்கள், காது, கால் கன்னங்களை இலக்காக நாடுவார்கள், தோளினை இலக்காக நாடுவர், கைகளைக் குறித்து நாடுவார்கள், நெஞ்சினை இலக்காகக் கொள்வார்கள், இணையாக உள்ள பொற்சிலம்பணிந்த பாதங்களை நாடுவார்களாகி இவ்வண்ணம் வாட்போர் செய்வார்கள். 34

இணங்கு நீரவர் இருவரும் இனையன உறுப்பில்
அணங்கு செய்திடும் மரபின லாயிடை உய்ப்பார்
நுணங்கு விஞ்சையின் வன்மையான் நொய்தின்மாற் றிடுவார்
மணங்கொள் செந்நிற வாள்கொடே வட்டணை வருவார்.

வாட்போரில் ஈடுபட்டுள்ள இரு வீரரும் இவ்வாறான உறுப்புகள் யாவையும் வெட்டி வீழ்த்தும் நோக்கமாக அவ்விடத்து வாளை வீசுவார்; வீசியதை வாட்போர் வித்தையின் நுட்பங்களால் விரைவுடன் தடுப்பார்கள். மணங்கொண்ட சிவந்த நிறமுடைய தமது வாளை சுழற்றியவாறு வட்டணையாக வருவார்கள். 35

போத மின்னதில் எம்பிரான் தூதுவன் பொருவான்
ஏதி கொண்டுளான் தன்னையான் வலிந்திடல் இயல்போ
ஆத லாலிவன் படைமுறை வெல்வதே அறனென்
றேதி சேருளங் கொண்டனன் இடைதெரிந் துற்றான்.

இவ்வாறாகிய வேளையில் எமது முருகப் பிரான் தூதுவரான வீரவாகு தேவர் நினைப்பார்; என்னிடம் போர்செயும்படி வாளெடுத்து வீசி வருவானை நான் வேறு வகையால் வலிந்து கொலை புரிதல் முறையோ? அல்லவே. ஆகையால் யான் அந்த அதிவீரனுடைய படைமுறையான வாட்போரால் வெல்வதே அறம் என்று தருமத்தின் சார்பான அறிவினால் உள்ளத்து எண்ணியருளினார் வீரவாகுதேவர். 36

இடை புகுந்ததி வீரன தடிகளோ ரிரண்டும்
முடியும் ஆகமுந் தோள்களும் ஆங்கொரு முறையே
சுடர்பி றங்கிய வாளினல் ஆண்டகை துணித்துக்
கடிது வீட்டினன் நடுவன்வந் தவனுயிர் கவர்ந்தான்.

இவ்வாருக நினைந்தருளி அதிவீரனிடையாகப் புகுந்து அவனுடைய கால்கள் இரண்டையும், முடியையும், உடலையும், தோள்களையும் அங்கு ஒரே முறையில் விரைவாக வீரவாகுதேவர் வெட்டி வீழ்த்தினர்; இயமன் வந்து அவனுடைய உயிரை எடுத்துக் கொண்டு போயினன். 37

ஆகத் திருவிருத்தம் 154

அதிவீரன் வதைப் படலம் முற்றிற்று.

---

# மகேந்திரஞ் செல் படலம்

வீர வாகுநின் றவ்வதி வீரனை வீட்டித்
தாரை வாளுறை செலுத்தியே வெஞ்சமர் தணித்து
நேரில் வீரமா மகேந்திரம் போவது நினைந்தே
ஏரு லாவரும் இலங்கையின் எல்லைநீத் தெழுந்தான்.

வீரவாகு தேவர் அங்கு இலங்கையில் நின்று அதிவீரனை வெட்டி வீழ்த்தி விட்டுத் தனது ஒளியுடைய வாளை உறையில் செலுத்திக்கொண்டு கொடிய போரினை தவிர்ந்துகொண்டு தனக்கு நிகரில்லாத வீரமகேந்திரபுரம் போவதற்கு நினைவு கொண்டு அழகுவிளங்குகின்ற இலங்கை நகரின் எல்லையைக் கடந்து போயினர். 1

எழுந்து வான்வழிச் சேறலும் ஆர்கலி யிடையே
விழுந்து கீழுறும் இலங்கைமீண் டெழுந்தது விரைவிற்
கழிந்த தொல்பர நீங்கிய காலையிற் கடலூ
டழுந்து இன்றபொன் தோணிமீச் சென்றிடு மதுபோல்.

வீரவாகு தேவர் வானின்வழியாக மீண்டும் எழுந்து செல்லலும் கடலிடத்தாக ஆழ்ந்து கீழ்ச்சென்ற இலங்கை மீண்டெழுந்தது எப்படியெனில் பார மிகுதியால் கடலின் இடத்து ஆழ்ந்துபோன பொன்தோணியானது அப்பாரம் நீங்கலும் மேல் எழுந்து வரும் தன்மையைப்போன்று இலங்கையும் மெதுவாக மேல்எழுந்தது. 2

வார்த்த யங்கிய கழலவன் வான்வழிக் கொளலும்
ஈர்த்த தெண்கடல் நீத்தமேல் எழுதரும் இலங்கை
சேர்த்த நான்முகன் உறங்குழிச் சிந்துவூ டழுந்திப்
பேர்த்து ஞாலம்விட் டெழுதரு மேருவிற் பிறழும்.

வீரக்கழல் விளங்கும் வீரவாகுதேவர் வானவழியாகச் செல்லலும் பெருகுகின்ற தெள்ளிய நீரையுடைய கடல்மேல் எழுகின்ற இலங்கை சிறப்புடைய பிரமதேவர் நித்திரை செய்கின்ற காலத்தில் கடலினூடு ஆழ்ந்துபோய் மீண்டும் பூமிமேல் எழுகின்ற மேருமலையின் தன்மையை ஒத்துவிளங்கும். 3

**எள்ளு நீரரைப் பற்பகல் ஆற்றலின் இலங்கை**
**கொள்ளை வெம்பவ மாசிருள் அடைந்தது குறைதீர்**
**வள்ளல் தாள்பட நீத்தது பவந்துகள் மாற்றத்**
**தெள்ளு நீர்க்கடல் படிந்தெழுந் தாலெனத் திகழும்.**

யாவராலும் இகழப்படுகின்ற தன்மையுடைய அசுரரைப் பல நாட்களாக இலங்கை தனதிடத்து வைத்திருந்ததலல் ஏராளமான பாவப்பழியான கொடிய இருளை அடைந்துகொண்டது; இப்பால் குறைதீர்ந்த வள்ளலான வீரவாகுதேவரின் பாதம் படிதலாலே அந்த பழியான இருட்பாவத்தை நீக்கிக்கொண்டது. அந்தப் பாவத்தால் தோய்ந்த குறை நீங்கிடும்படியாகத் தெள்ளிய நீரையுடைய கடலில் படிந்து மூழ்கி புனிதமாகி எழுந்து கொண்டதுபோன்று இலங்கை திகழ்ந்து விளங்கியது. 4

**கந்த ரந்தவழ் தெண்புனற் கருங்கடல் நடுவட்**
**சுந்த ரஞ்செறி பொன்சுடர் இலங்கைதோன் றியது**
**முந்து காலையில் எம்பிரான் அருள்வழி முராரி**
**உந்தி நின்றெழு பிரமன்மு தண்டமொத் துளதால்,**

மேகங்கள் தவழ்ந்துடன் படிந்திருக்கும் தெள்ளிய நீரையுடைய கரிய கடல் நடுவணக சுந்தரமும் அழகும் செறிந்த பொன்னொளி பரந்த இலங்கை தோன்றி நிற்பது முன்னொரு காலத்து எம்பிரானுடைய அருளின் பிரகாரம் விஷ்ணு மூர்த்தியினுடைய உந்திச் சுழியின் நின்றும் எழுந்துதோன்றும் பிரமனையும் முதிய அண்டங்களையும் போன்றிருந்தது. 5

**இன்ன தாகிய இலங்கைமா புரத்தைநீத் தெழுந்து**
**பின்னு மாயிரம் யோசனை வானிடைப் பெயர்ந்து**
**பொன்னு லாவுறு வாகையம் புயத்தவன் புலவோர்**
**ஒன்ன லானுறை மகேந்திர வரைப்பின்முன் னுற்றான்.**

இன்ன நிலைகளையுடைய இலங்கைமாபுரத்தைவிட்டு எழுந்து பின்னரும் ஆயிரம் யோசனைவானிடத்து உயரப்போய் வீர இலக்குமி உலாவிடும் தோளுடைய வீரவாகு தேவர்; தேவர்கள் பகைவனான சூரபன்மன் வாழும் வீரமகேந்திரபுர எல்லையில் முன்புற வந்தருளினார். 6

**நெற்றி நாட்டத்து நந்திதன் கணத்தவன் நேமிப்**
**பொற்றை யாமெனச் சூழ்ந்துயர் மகேந்திரப் புரிசைச்**
**சுற்று ஞாயிலும் வாயில்க டொறுந்தொறும் தோன்றுங்**
**கற்றை மாமணிச் சிகரியும் நுனித்துமுன் கண்டான்.**

நெற்றிக் கண்ணுடைய நந்தியெம் பெருமான் கணத்தவராகிய வீரவாகு தேவர் சக்கரவாள மலைபோன்று சூழ்ந்து உயர்ந்து விளங்கும் மகேந்திரபுரத்தைச் சுற்றி விளங்கும் மதிலும் அதன் வாயில்களிலே தோன்றுகிற ஒளிக்கிரணங்கள் வீசிடுகின்ற இரத்தினகோபுரங்களையும் கூர்ந்து முன்னாகக் கண்டுகொண்டார். 7

சேர லாரமர் மகேந்திர நகர்வட திசையில்
வாரி வாய்தலுட் கோபுரத் தெற்றியின் மாடே
கோர னேயதி கோரனே எனப்படுங் கொடிய
வீரர் தானையோ டிருந்தனர் காவல்கொள் வினையால்.

பகை அசுரர் அமர்ந்திருக்கின்ற மகேந்திரபுரத்து வடதிசையின் சமுத்திரவாய் தலின் உள்ளாக கோபுர சித்திரகூடத்தின் பக்கராக கோரன் அதிகோரன் எனப் படும் கொடிய அசுரவீரர்கள் இருவர் சேனைகளுடன் இருந்தார்கள், நகரைக் காவல் கொள்கின்ற செயலை மேற்கொண்டவராய். 8

கரிக ளாயிரம் வெள்ளமே தேருமக் கணிதம்
பரிக ளாங்கதற் கிருதொகை யத்தொகை பதாதி
உரிய வப்பெருந் தானையம் பெருங்கடல் உலவா
வீரவி மேவர இருந்தனர் காத்திடும் வீரர்.

இவர்கள் யானைப்படை ஆயிரம் வெள்ளம்; தேர்களும் அப்படியே ஆயிரம் வெள்ளம்; குதிரைகள் அதற்கு இரு தொகைப்பட்ட இரண்டாயிரம் வெள்ளம்; காலாட்படைவீரரும் இரண்டாயிரம் வெள்ளமெனும் கணக்கில் தங்கட்கு என்றும் உரியதான அந்தப் பெரிய சேனையான கடல் ஒருக்காலமும் குறைவுபடாததாய் நெருங்கிச் சூழ்ந்திருப்ப அங்கு இருந்தார்கள் காவல்கொள்கின்ற அசுரவீரனனகோர னும் அதிகோரன் என்பவனும். 9

பகுதி கொண்டிடு தானையஞ் சூழலாம் பரவைத்
தொகுதி கண்டனன் விம்மிதங் கொண்டனன் துன்னார்
மிகுதி கொண்டுறை காவலுங் கண்டனன் வியனூர்
புகுதி கொண்டிடும் உணர்வினன் இனையன புகல்வான்.

அணிவகுப்புடன் பகுதிகளாகக்கொண்டு இருக்கின்ற சேனையின் சூழ்வாகிய தொகுதியைக் கண்டார் வீரவாகு தேவர்; ஆச்சரியம்கொண்டார்; பகைவர்கள் மிகுதியான அக்கறையுடன் காவலிருக்கின்றதையும் கண்டார்; மேலாகிய பெருமை யுடைய ஊரில் உள்ளே புகவேண்டுமென்ற உணர்வுகொண்டவராய் இதனை வீரவாகு தேவர் சொல்கின்றார். 10

ஈண்டு செல்லினித் தானைசூழ்த் தமர்செயும் யானும்
மூண்டு நேரினும் முடிப்பவோர் பகலெலா முடியும்
மாண்ட தென்னினும் உலவுமோ மாநக ரிடத்து
மீண்டும் வந்திடுங் கரிபரி பதாதிதேர் வெள்ளம்.

இவ்வழியாக நான் போகில் என்னை இந்த சேனை தடுத்துச் சூழ்ந்து போர் செய்யும். யானும் இவருடன் எதிர்த்துப் போரிடின் இவர்களை முடிவு செய்ய ஒரு நாள்பொழுது ஒழிந்துபோயிடும். இந்த சேனைகள் இறந்து ஒழிந்துபோனாலும், இது குறைவாகுமோ இல்லை பெரிய நகரிடத்திருக்கும் யானை, குதிரை, தேர், காலாள் எனும் வெள்ளங்கள் இங்கு வந்திடும். 11

வந்த வந்ததோர் தானவப் படையொடே மலைவுற்
றெந்தை கந்தவேள் அருளினால் யானொரு வேனுஞ்
சிந்தி நிற்பனேல் இந்நகர்த் தானைகள் சிதைய
அந்த மில்பகல் சென்றிடும் அளியரோ அவுணர்.

வந்த வந்த ஒவ்வொரு அசுரப்படையுடன் போர்செய்து எந்தை பெருமானாகிய கந்தக்கடவுளின் அருளினால் யான் ஒருவேனும் தனியாக நின்று எதிர்த்து இப்படைகளை அழித்து நிற்பேன் என்றாலும் இந்த நகரத்திருக்கும் சேனைகள் தொலைவாகிப்போக முடிவிலாத பல நாட்கள் செல்லும் இந்த அசுரர் என்ன இலேசானவர்களோ இல்லையே. 12

எல்லை யில்பகல் செல்லினுஞ் செல்லுக இனைய
மல்லன் மாநகர் அவுணர்மாப் பெருங்கடல் வறப்ப
ஒல்லு நீர்மையால் யான் அடல் செய்வனேல் உருத்துத்
தொல்லை மைந்தரைத் துணைவரை உய்க்குவன் சூரன்.

அளவு இல்லாத பல நாட்கள் செல்லினும் செல்லட்டும் என்று இத்தகைய வலிமையான பெரிய நகரத்துள்ள அசுரரான பெருங்கடல் வற்றி அழிந்துபோம் படி இயலக்கூடிய முறையால் யான் கொன்றழிப்பேன் எனின் இதனை அறிந்து வெகுண்டு சூரனானவன் உடன் தனது முதியரான மக்களை தம்பிமாரை என்னுடன் போர்செய விடுப்பான். 13

உய்த்த மைந்தர்கள் சூழ்ச்சியின் துணைவர்கள் ஒழிந்தோர்
அத்தி றத்துளோர் யாரையும் வெலற்கரி தயில்வேற்
கைத்த லத்தவன் வலிகொடே பற்பகல் காறும்
இத்த லைச்சமர் ஆற்றியே முடிக்குவன் எனினும்.

அவ்வாறு செலுத்திவிடுகின்ற மக்களை சூரனுடைய சூழ்ச்சிகளுக்கு துணையாய் இருக்கின்ற மந்திரிகளை மற்றைய சேனாதிபதிகளை ஆகிய அத்திறத்தவர்களுடன் ஒரு கால் யான் கூறிய வேலைக் கையில் ஏந்திய முருகப்பிரான் அருளாய வலியால் பல நாட்கள்வரையும் இந்த நிலையில் போர் செய்து முடிப்பேன் என்றாலும் வெல்வது அரிது 14

ஏவ ரும்வெலற் கரியசூர் பின்னவர்வந் தெதிர்க்கும்
ஓவில் வெஞ்சமர் பற்பகல் ஆற்றியான் உறினும்
வீவ தில்லையால் அங்கவன் மேலைநாள் தவத்தால்
தேவ தேவன்முன் அருளிய வரங்களின் சீரால்.

எவரும் வெல்வதற்கு அரியவனான சூரபன்மன் பின்னாக வந்து என்னை எதிர்ப்பான். அவனுடன் ஒய்விலாது கொடிய போரினை பல நாட்கள் யான் செய்திருப்பதேயாகினும் அவன் இறக்கமாட்டான். காரணம் முன்னாளில் அவன் செய்துள்ள தவத்திற்கு தேவதேவனான சிவபிரான் முன்னர் அவனுக்கு அருள் புரிந்த வரங்களின் சீரால் 15

அன்ன வன்றனை மாலயன் றனக்கும்வெல் லரிதால்
இன்னு மாங்கவன் ஆணைக்கும் வெருவியே இருந்தார்
பின்னை யாரவன் தன்னைவென் றிடுவர்கள் பெருநாள்
துன்னி யான்சமர் ஆற்றினுந் தொலைகிலன் சிறிதும்.

அந்த சூரனை விஷ்ணுமூர்த்தி பிரமனுக்கும் வெல்வது அரிதாகும் இன்னமுமே இவர்கள் இச்சூரபன்மனுடைய ஆணைக்கு அஞ்சியே இருக்கின்றனர். பின்னர் யார் தான் அவன் தன்னை வென்றிடக் கூடியவர்கள். பெருநாட்கள்வரையான் அவ னுடன் நேரிட்டு போர் செய்தாலும் சிறிதேனும் அவன் தொலையமாட்டான். 16

தொலைந்து போகிலன் சூரமர் இயற்றிடில் துன்னிக்
கலந்த யான்விறல் இன்றிமீண் டேகுதல் கடனே
மலைந்து நிற்கவே வேண்டுமா லாயினும் வறிது
மலைந்த லைப்படுஞ் சுரர்சிறை அகன்றிட வற்றே.

சூரனோடு யான் போர்செய்தபோது அவன் தொலைந்துபோகாதபொழுது அவனுடன் நேரிட்டு கலந்து போர்செய்த யான் வெற்றியில்லாமல் திரும்பிப் போதல் கடனுமோ ? போகமுடியாது நான் அவனுடன் நெடிது நாட்களாகப் போர்புரிந்தபடி நிற்கவே வேண்டுமாகவிருந்தால் வீணே சிறையில் அகப்பட்டுத் 17
துயரம் தலைப்பட்ட தேவர் சிறை அகன்றுபோதல் முடியுமோ.

மற்றிந் நீர்மையிற் பற்பக லவனொடு மலைந்து
வெற்றி கொண்டிலன் இன்னுமென் றமரினை வீட்டி
ஒற்றின் நீர்மையை உணர்த்துதல் ஒல்லுமோ உலவா
தெற்றை வைகலும் அமர்செய வேண்டுமால் எனக்கே.

மற்று இந்தத் தன்மையாக நான் சூரனுடன் பலநாட்கள் போர் செய்து இன்னும் வெற்றிகொள்ளவில்லை என்று சூரனுடன் போரினை நிறுத்திவிட்டுத் தூதுவனாக வந்த தன்மைகளை அவனுடன் பேசுதல் பொருந்துமோ ? அது பொருந் தாது யான் எக்காலமும் ஓய்வின்றி போர்செய்யவேண்டும். எனக்கு இதுதான் 18
நிலைமையாகும்.

போத நாயகன் பரம்பொருள் நாயகன் பொருவில்
வேத நாயகன் சிவனருள் நாயகன் விண்ணோர்க்
காதி நாயகன் அறுமுக நாயகன் அமலச்
சோதி நாயகன் அன்றியார் சூரனைத் தொலைப்பார்.

ஞானங்கட்கு நாயகன் பரம்பொருளான நாயகன் நிகரில்லாதவேதங்கட்கு நாய கன், சிவபிரான் தந்தருளிய அருள்நிறைந்த நாயகன் தேவர்கட்கு எல்லாம் ஆதி யான நாயகன் ஆறுமுகமுடைய நாயகன் நின்மலமான சோதியாகும் நாயகன் ; இவை அனைத்துமாய்ச் சிறந்த முருப்கபிரான் அன்றி வேறுயார் சூரனைத்தொலைப் 19
பார்கள்.

இம்பர் சூரொடு பொருதுநின் றிடுவனோ என்னின்
நம்பி ரான்அறு மாமுகன் பின்னரே நண்ணி
வெம்பு சூரனை வேலினல் தடிந்துவெஞ் சிறையில்
உம்பர் யாரையும் மீட்டிட வேண்டுமேல் ஒருநாள்.

இவ்விடத்துச் சூரனோடு போர்செய்து நின்றிடுவனே என்னின் எமது பெருமானாகிய ஆறுமுகன் பின்னரே வந்து கொடிய கோபமுடைய சூரனை வேலினால் சங்கரித்து தேவர்கள் யாரையும் சிறையில் நின்றும் ஒரு நாளைக்கு நீக்கிடவேண்டுமே. 20

ஆத லால்அம ராற்றுதல் முறையதோ அஃதான்
றீது நம்பெரு மான்றன தருளுமன் றிதனைத்
தூதர் செய்கட னுங்கொலோ அமர்பெருத் தொடர்பாற்
போத லேகடன் என்றனன் பொருவில்சீர் அறிஞன்.

ஆதலால் நான் போர் செய்தல் முறையதோ? அதுதான் தீதாகும்; நம் பெருமானுடைய கட்டளையும் அது வல்லவே; இப்படிப் போர்செய்தல் தூதுவருடைய கடனுமாமோ; ஆதலால் போர்நேர்ந்துகொள்ளாத நிலையினால் நான் நகரிலுள்ளே போதல்தான் எனது கடனாகும் என்றார், தனக்கு நிகரில்லாத அறிஞனாகிய வீரவாகு தேவர். வேறு 21

இப்பால் வாய்தலின் எல்லை நீங்கிய
துப்பார் தானைகள் துற்று நின்றவால்
அப்பால் எய்தரி தாம ருங்குபோய்
வைப்பார் கீழ்த்திசை வாயில் நண்ணுவேன்.

இந்தப் பக்கராகிய வாய்தலில் அளவுகடந்த மிக்க வலியால் ஓங்கும் சேனைகள் நிற்கின்ற தன்மையைப் பார்த்தால் அப்பக்கராக நான் போதல் அரிதாகும்; இதன் மருங்காக யான் சென்று சிறப்புடன் விளங்கும் கிழக்குத் திசைவாயிலைச் சேர்வேன். 22

என்னு உன்னி இயன்ற வுத்தரப்
பொன்னார் வேலி புகாது பாங்கர்போய்க்
கொன்னார் கின்ற குணக்கு வாய்தலின்
முன்னு ஏகினன் மொய்ம்பின் வீரனே.

என்று வீரவாகுதேவர் நினைந்து சிறப்புடன் அமைந்த பொன்னார்ந்த வடதிசை மதில் வாயிலால் செல்லாது பக்கராகச்சென்று மிக உயர்ச்சி பொருந்தி விளங்கிய கிழக்குவாய்தலின் முன்னைச் சென்றருளினார் மிக்க வலியுடைய வீரவாகு தேவர். 23

மேதிக் கண்ணன் வீர பானுவென்
றூதிக் கத்தவு ணர்க்கு நாயகர்
ஏதிக் கையர் இரண்டு வீரரும்
ஆதிக் கனதன் வாயில் போற்றினார்.

அங்கு எருமைக் கண்ணன், வீரசூரியன் என்னும் பெயருடைய இருவர்கள்; மிக்க ஆதிக்கமுடைய அசுரர்க்கு தலைவரான சேனாதிபதிகள்; வாளினை கையில் ஏந்தியவராகிய இருவரும் பெரும் திசையாகிய அந்த தங்கட்கு உரிய கிழக்கு வாயிலில் காவல் செய்து இருந்தார்கள். 24

திருவுந் தும்வட திக்கு வாய்தலின்
விரவுந் தானையின் வெள்ளம் மெய்த்தொகை
பரவுஞ் சூரர் பயிற்று பல்பவத்
துருவஞ் சூழ்ந்தென ஒத்து நின்றவே.

இலக்குமிகரம் விளங்கிய வடக்குத் திக்கு வாய்தலின் பொருந்திய சேனைகளின் தொகையான வெள்ளங்கள் உண்மையாகி அப்படியே இங்கும் பரவி இருந்தன. இந்த அசுரர் யாவரும் செய்துவரும் பாவங்களே சேனையின் வடிவாய்ச் சூழ்ந்து நிற்கின்றன எனும்படி நின்றன. 25

வண்டார் செற்றிய வாகை மொய்ம்பினன்
கண்டான் அன்ன கடிக்கொள் காவலும்
தண்டா துற்றிடு தானை நீத்தமும்
அண்டா அற்புத நீரன் ஆயினன்.

வண்டுகள் மொய்க்கின்ற மாலையணிந்த வெற்றித் தோளுடைய வீரவாகுதேவர் அந்த வகையான மிக்க அரண் கொண்ட காவலையும் குறைவின்றி நெருங்கி இருக்கும் சேனையான கடலையும் கண்டார், அளவிட முடியாத அற்புத நிலையை அடைந்துகொண்டார். 26

அண்டங் குற்றவ ளப்பில் சேனையை
காண்டும் மிவ்வுழி காவல் போற்றியே
சேண்டுன் றும்புவி செற்றும் ஆதலால்
ஈண்டுஞ் செல்லரி தென்று முன்னினன்.

அவ்விடத்து உள்ள அளவு கடந்த சேனையை யான் காண்பேன். இவ்விடத்து இருந்து காவலினைப்புரிந்து கொண்டு வானஉலகையும் பூமியையும் கூடவேணுமென்றால் அழிவு செய்திடும் ஆதலால் இவ்விடத்தும் செல்லரிதாகும் என நினைந்தருளினார். 27

நின்றிப் பாற்படல் நீர்மை அன்றரோ
தென்றிக் கின்வழீ சென்று நாடுவன்
என்றுட்கொண்டவண் நீங்கி ஏகினன்
குன்றின் தொன்மிடல் கொண்ட தோளினன்.

நான் இவ்விடத்து இதைப் பார்த்து நிற்பது பொருத்தமன்று, தெற்குத் திசையின் வழியாகச் சென்று பார்ப்பேன் என்று தனது மனதில் எண்ணிக்கொண்டு அவ்விடத்து நின்றும் நீங்கிச் சென்றருளினன் மலையினைப் போன்று மிக முதுமையான வலி கொண்ட தோளினை உடைய வீரவாகுதேவர். 28

ஆகத் திருவிருத்தம் 182

மகேந்திரஞ் செல் படலம் முற்றிற்று.

---

# கயமுகன் வதைப் படலம்

ஏகா நிற்புழி ஏந்தல் கீழ்த்திசை
மாகா வூற்கொள் மதங்க மாமுகன்
மீகான் ஒப்ப வியன்க லத்தினுக்
காகா யத்தின் அமர்ந்து போற்றுவான்.

இவ்வாறு வீரவாகுதேவர் தென்திசையை நோக்கிச் சென்ற நேரத்து, கிழக்குத் திக்கில் பெருங் காவல் கொள்கின்ற மதயானை முகமுடைய கயமுகன் என்னும் அசுரன் பெரிய கப்பலுக்கு பாய்மரம் மேல் நின்று திசை காட்டும் மீகாமனைப் போன்று கிழக்குத் திசையில் ஆகாயத்தின் அமர்ந்திருந்து காவல் செய்பவன். 1

நூற்றுப் பத்து நுவன்ற தோன்முகன்
மூற்றைக் கையினன் மொய்ம்பி ராயிரன்
சீற்றத் துப்புறு தீய சிந்தையான்
கூற்றத் துக்கொரு கூற்ற மேயனான்.

இவன் ஆயிரம் எனச் சொல்லப்பெற்ற யானையின் முகங்களையுடையவன், மும்மடங்கான ஆயிரம் துதிக்கையும் இரண்டாயிரம் கைகளுமான மூவாயிரம் கைகளை உடையவன் வலிகொண்ட தோள்கள் இரண்டாயிரமும் உடையவன், கோபத்தால் நிறையப்பெற்ற தீமையான சிந்தையை உடையவன், இயமனுக்கு ஒரு எமனை ஒத்து விளங்குபவன். 2

பொன்னார் ஏம புரத்து வைகலும்
மன்னாய் வாழ்பவன் மாறு கொண்டுதன்
முன்னா வெய்தி முனிந்து போர்செய
ஒன்னார் இன்றி உளங்கு றைந்துளான்.

பொன்னார்ந்து விளங்குகின்ற ஏமபுரம் என்னும் சூரபன்மனின் வீரமகேந்திர புரத்து கிழக்குத் திசையில் உள்ள காவல் நகரத்திற்கு தலைவனாகி வாழ்பவன். இவன் இவ்வளவு நாளும் தனக்கு முன்பாக மாறுபட்டு வந்து போர் செய்வதற்கு பகைவர் ஒருவரும் இல்லாமையால் இதனாலே உள்ளம் கவலைப்பட்டுக்கொண்டு இருப்பவன் 3

கருமே கங்கள் கறித்து வாரியுண்
டுருமே ரோடு மூரற்ற ஓச்சுவான்
பெருமே தக்க பவஞ்செய் பெற்றியான்
செருமேல் கொண்டிடு சிந்தை பெற்றுளான்

கறுத்த மேகங்களை கையால் வாரிப் பிடித்து வாயில் இட்டு கடித்துச் சப்பி அதன் நீரை உண்டபின் அவைகள் இடியேற்றுடன் குமுறும்படி வீசுவான்; பெரிதான கொடிய பாவங்களைச் செய்யும் தன்மையுடையவன், எந்நேரமுமே போரை மேல் கொண்டிட்ட சிந்தனையைப் பெற்றுக்கொண்டவன், அவன் எண்ணமெல்லாம் யாருடனும் போர் புரிவதேயாகும். 4

மஞ்சார் வேழம் வனத்தில் வல்லுளி
எஞ்சா வெவ்வரி யாளி வல்லியம்
அஞ்சா ராயிர மங்கை கொண்டுணுச்
செஞ்சோ ரிப்புனல் சிந்தும் வாயினுன்.

கருமை கொண்டு மேகம் போன்ற பெரிய யானைகளை காட்டில் உள்ள பன்றி வலி குறையாத கொடிய சிங்கம், யாளி, புலி ஆகியமிருகங் களை கருமை விளங்கும் தனது ஆயிரம் அழகிய கைகளிலே பிடித்துக் கொண்டு உண்டு அவைகளின் இரத்தம் கடை வாயால் வடியும்படி உள்ளவன். 5

காசைப் போது கடுத்தமெய்யர்தென்
ஞசைக் காலரொ ராயிரத் தர்தம்
பாசத் தோடு பயின்று சேர்ந்தென
வீசித் தூங்கும் வியன்று திக்கையான்.

காயாம் பூப்போன்ற கரிய மேனியை உடையவர் தென் திசைக்கு காவலாய் இருப்பவரான இயமர் ஓராயிரம் பேர் தமது பாசங்களோடு வீசிப் பயின்று கொண்டுவந்துள்ளனர் எனும்படியாக வீசிக்கொண்டபடி தூங்குகின்ற பெரிய துதிக்கையை 5
உடையவன்.

வாணுள் அஃகினன் மாயும் எல்லையான்
ஏணுல் அத்திசை ஏகும் வீரனைக்
காணு நின்று கனன்று சாலவுஞ்
சேணுன் இன்னன செப்பி ஏகுவான்.

தனது வாழும் நாள் குறைவுபட்டு மாயப்போகும் எல்லையை அடைந்துளானுய் பெருமை நிலவுகின்ற அத்திக்கால் செல்லுகின்ற வீரவாகுதேவரைக் கண்டு நின்று மிகவும் கோபித்து. மிகத் தூரத்து நின்றே இவற்றைச் சொல்லியபடி வரு 7
வான்.

மிக்கார் காவல் விலங்கி நீயிவட்
புக்காய் மாயை புகன் றுளாய்கொலோ
அக்கால் தானுமெம் மாணை நீங்கியே
எக்கா லத்தினும் ஏக வல்லதோ.

மிகுதி கொண்ட காவலை நீங்கி நீ இவ்விடத்து புகுந்துள்ளாய், மாயை செய்துள்ளாய் போலும்; அந்தக் காற்றுத் தானும் எனது ஆணையைக் கடந்து எங்காலத் 8
தினும் இங்கு வர வல்லமை உடையதோ?

வறியா ராகி மயங்கும் வானவச்
சிறியார் வைகிய சீரில் ஊரெனக்
குறியா வந்தனை கோதில் இந்நகர்
அறியா யோநம தாணை ஆற்றலே.

வறுமையை அடைந்து வாழ வழியின்றி மயக்கம் கொள்ளும் சிறியவர்களாகிய தேவர்கள் இருக்கும் சீரில்லாத ஊர் என நீ இதனைக் குறித்து வந்துள்ளாய் போலும் குறைவு ஏதும் இலாத எமது நகரின் பெருமையையும், எமது காவலின் வலியின சிறப்பையும் நீ அறியாயோ? 9

மூண்டே குற்றனன் மொய்சி னத்தினேன்
மாண்டே போயினை வல்லை நீயினி
மீண்டே போந்திறம் இல்லை மேலுனக்
கீண்டே மாயவி ழைத்த எல்லையே.

போர் புரியும்படியாக யான் கோபம் மூண்டு வந்துள்ளேன், மொய்த்தெழும் கொடிய கோபமுடையேன். நீ இப்போது விரைவாக மாண்டுபோனாய் என எண்ணிக் கொள். நீ இனி மீண்டு போகும் நிலை இல்லை, இவ்விடத்து இன்றுடனே நீ இறந்து போகும் நாள் வந்து சேர்ந்துகொண்டது. 10

சூராள் கின்றதொர் தொல்லை மாநகர்
சேரா நின்றனை சீறு கேசரி
பேரா எல்லையொர் பீடின் மான்பிணை
ஆராய் தற்குவ ருங்கொல் ஆற்றலால்.

சூரபன்மன் அரசாளுகின்ற மிக முந்தியதான பெரு நகரத்தை நீ வந்து அடைந்து கொண்டாய். இதைப் பார்த்தால் சீறுகின்ற சிங்கம் போகாது இருக்கின்ற இடத்திலே ஓர் பெருமை இல்லாத பெண் மான், சிங்கம் இருக்கின்றதோ இல்லையோ என்று ஆராய்ந்து பார்ப்பதற்கு வரமுடியுமா? 11

தொடுநே மிக்கடல் துண்ணெ னக்கடந்
திடைசேர் கின்ற இலங்கை நீங்கியே
கடிதே இந்நகர் காண உன்னியே
அடைவாய் தேவர்க ணத்து ளாரைநீ.

தொடுத்து நிலையுற்றிருக்கின்ற பெரும் சமுத்திரக் கடலை விரைவுடன் கடந்து இடையில் உள்ள இலங்கை நகரையும் நீங்கியே மிக விரைவுடன் இந்த நகரைக் காண நினைந்து நீ இவ்விடம் வந்து கொண்டாய்; நீ தேவர் கூட்டத்தில் யார் எனச் சொல்? 12

திருத்தங் கண்ணகல் தேவர் தம்முளும்
விருத்தன் போலும் மிகத்து ணிந்துநீ
ஒருத்தன் போந்தனை ஒன்றோர் வாளொடே
வரத்தென் இவ்விடை மாயை கற்றுளாய்.

திருந்திய இமையாத அகன்ற கண்ணினை உடைய தேவர்கள் தம்முளும் நீ தேர்ச்சி அடைந்துள்ளான் போலும். மிகவும் துணிந்து கொண்டு இவ்விடத்து நீ ஒருவனாகத் தனித்து ஒரு வாளோடு ஏன் வந்துள்ளாய்? நீ மாயைகள் கற்றுளாய் போலும். 13

ஆலா லத்தை அயின்ற நம்பனோ
மாலா னேவன் சத்தில் அண்ணலோ
பாலார் தந்தி படைத்த கள்வனோ
மேலார் இங்குனை விட்ட தன்மையார்.

நஞ்சை உண்டருளிய சிவபிரானோ அல்லது நாராயணக் கடவுளோ அல்லது தாமரையில் இருக்கும் தலைவனான பிரமதேவனோ அல்லது பால் போலும் வெள்ளை நிறமுடைய ஐராவத யானையை வாகனமாக உடைய இந்திரன் என்னும் கள்வனா மேலாக யார் உனை இங்கு போகும்படி விட்டவர்? 14

சுற்றா நின்றனை சூழ இந்நகர்
ஒற்றாய் வந்தனை போலும் உன்றனை
மற்றார் உய்த்தனர் வந்த தென்கொலோ
விற்றாய் நின்னுயிர் எங்கண் உய்திநீ.

இந்த நகரத்தை நீ சூழ்ந்து சுற்றியவாறு நின்றாய். உன்னைப் பார்த்தால் நீ தூதாய் வந்தனை போலும். உன்னை யார் இங்கு போகும்படி செலுத்தியவர். என்ன காரணமாக இங்கு வந்தாய்? உன் உயிர் அழிந்தாய், எங்கே நீ உய்யப் போகின்றாய்? 15

சிறையிற் பட்டுழல் தேவர் செய்கையை
அறிகுற் றிந்திரன் ஆளை யாகியே
நெறியிற் போக நினைந்து ளாய்கொலாங்
குறுகுற் றாயிது வுங்கு றிப்பதோ.

எமது சிறையிலே அடைபட்டு உழன்று வருந்துகின்ற தேவர்களுடைய செய்கையை அறிந்து கொள்வதற்காக இந்திரனுடைய ஆளாக வந்த நீ முறையாக இப்படி மெதுவாகப் போய்விடலாம் என்று வந்துள்ளாய் போலும். இப்படிச் செய்யவும் உனக்கு எண்ணமோ? 16

விண்டோ யுங்கனல் மேவும் எல்லையின்
மண்டோய் பூளை மருத்தன் உய்த்தெனப்
பண்டே நொய்யை படுந்தி றத்திவட்
கொண்டே வந்தது கொல்லும் வல்வினை.

வானளவு வளர்ந்து சுடர்விட்டெரிகின்ற நெருப்பினிடத்து எல்லையில்; மண்ணில் இருந்த ஓர் பூளையை காற்று தள்ளிவிட்டதற்கொப்ப முன்னம் தொட்டே வலியிலாத நொய்யவனான உன்னை முடிவாக்கும் நிலையில் இங்கு கொண்டு வந்தது உன்னைக் கொல்கின்ற கொடிய வினை. 17

முன்னங் நம்பணி முற்று மாற்றியே
கின்னங் கொண்டு கரந்த கீழ்த்திசை
மன்னன் பாலுறு வாருள் அன்றுநீ
இன்னும் மஞ்சலை என்னை யெண்ணலாய்.

முன்னம் எமது ஏவல் தொண்டுகள் முழுவதையும் புரிந்து துயரம் கொண்டு ஒளித்தோடிய கிழக்குத் திக்கு அரசனுன இந்திரன் பாலாக இருக்கும் தேவர்களுள் நீ ஒருவன் அன்று. நீ இன்னமும் அஞ்சாதிருக்கிருய், உன் முன்ஞல் வருகின்ற வீர 18
னை என்னை யார் என எண்ணுகின்ருயில்லை.

கொல்லா நிற்பதொர் கூற்ற மேயெனச்
செல்லா நின்றிடு திண்ணி யேன்முனம்
நில்லாய் எங்கடா நீங்கு வாயெனு
ஒல்லான் ஓதி உரப்பி யேகினுன்.

உன்னைக் கொல்லும்படி நிற்கின்ற இயமன் எனும்படி வந்துகொண்டிருக்கும் திண்மை உடையேன் முன்னம் நீ நிற்பாய், எங்கடா தப்பிப் போவாய்? என்று பகை 19
வனுன கயமுகன் கூறி உரப்பிக்கொண்டு வந்தான்.

வன்ருள் கொண்ட மதக்க யாசுரன்
சென்ருன் இன்னன செப்பி இம்மொழி
நன்ருல் என்று நகைத்து நோக்கியே
நின்ருன் வாகை நெடும்பு யத்தினுன்.

வலிமை உடைய கால் கொண்ட மதம் நிறையும் கயமுகாசுரன் இதைப் போன்ற வார்த்தைகளைப் பேசிச் சென்ருன். அதைக் கேட்டருளிய வெற்றி பொருந்திய நெடும் தோள் கொண்ட வீரவாகுதேவர்; ஓகோ உனது வார்த்தை நன்ருயிருக் 20
கின்றது எனச் சிரித்து கயமுகனை நோக்கியபடியே நின்ருர்.

ஓவா திவ்வகை யோதி முன்வருந்
தீவா யோன்எதிர் சென்று வல்லையிற்
சாவா யென்னிடை சார்ந்து ளாய்கொலாம்
வாவா என்றனன் வாகை மொம்பினுன்.

ஓயாது கொடுமொழிகளை இப்படியே பேசி முன்னுல் வரும் தீமை கொண்ட வாயினை உடைய கயமுகன் முன்பு சென்று; நீ கெதியாகச் சாகப்போகின்ருய் அதனுல் என் முன்னுக நீ வந்துள்ளாய் போலும். சரி வா, வா என்ருர் வெற்றித் தோள் 21
கொண்ட வீரவாகுதேவர்.

வானோர் அஞ்ச வருங்க யாசுரன்
தானோர் குன்று தணைப்ப றித்திடா
ஊனே டுன்னுயி ருண்ணு மீதெனு
வானேன் மைந்தன்முன் ஞர்த்து வீசினுன்.

தேவர்கள் அஞ்சிட வேகமுடன் வரும் கயமுகாசுரன் தான் ஓர் மலையைப் பிடுங்கி இதோ இம்மலை உனது ஊனோடு உயிரையும் உண்ணும் என்று பரம்பொருளான சிவபிரான் மைந்தரான வீரவாகுதேவர் மேல் ஆரவாரமுடன் வீசினுன். 22

விண்டோய் மேனி வியன்க யாசுரன்
கொண்டோர் கையில் விடுத்த குன்றது
வண்டோ லம்புரி மாலை மொய்ம்பினுன்
திண்தோண் மீமிசை செவ்வ னுற்றதே.

விண்ணெலாம் நிறைவுறும் மேனி கொண்ட பெரிய உருவுடைய கயமுகா சூரன் தனது கையொன்றால் பிடித்து வீசிய மலையானது; வண்டுகள் ஓலமிட்டு மொய்க்கின்ற மாலையணிந்த தோளினை உடைய வீரவாகுதேவரது திண்மையான தோள்மீது செப்பமாக வந்து படுதலுற்றது. 23

வேழத் தோன்முகன் விட்ட பூதரம்
பாழித் தோள்மிசை பட்ட காலையில்
வாழிப் பூதியின் வட்டு விண்டெனப்
பூழித் தாகி உடைந்து போயதே.

யானை முகமுடைய கயமுகாசூரன் விடுத்த அம்மலை வீரவாகுதேவரின் அகன்ற தோள் மீது பட்ட நேரத்தில் பருத்து நின்ற சாம்பலாலான உருண்டை உடைந்து போவது போன்று புழுதியாகி உடைந்து போயது. 24

பொடியுங் காலெதிர் புக்க தீயவன்
மிடல்கொண் டுற்றிடு வீரன் ஆற்றல்கண்
டுடலுந் திண்சின முற்று ராயிரம்
படருங் குன்று பறித்தன் மேயினன்.

தனது மலை பொடியாகிப் போன காலையில் எதிர்புகுந்த தீய கயமுகாசூரன் தைரியம் கொண்டு விளங்கி நின்ற வீரவாகுதேவரின் ஆற்றலைக் கண்டு தனது மேனி முழுவதும் கொடும் கோபமடைந்து வளர்ந்தோங்கும் ஆயிரம் மலைகளைப் பிடுங்கத் தொடங்கினன். 25

பறியா நின்ற பகட்டு மாமுகன்
நெறிவீழ் கின்ற நெடுங்கை சுற்றினன்
இறைசேர் மேரு இருந்த கோடெலாங்
கறைசேர் காலவர் கட்டெ ழுந்தபோல்.

ஆயிரம் மலைகளை பிடுங்கி எடுத்துக்கொண்ட யானை முகமுடைய கயமுகாசூரன் முறையாகத் தூங்குகின்ற ஆயிரம் துதிக்கையில் அம்மலைகளைச் சுற்றினன். தலைமை பொருந்திய மேருமலை இடத்து இருந்த முடிகளை எல்லாம் கருமை சேர்ந்த காலன்கள் பற்றித் தூக்கியவாறு போன்று அவன் செயல் விளங்கியது. 26

பத்தாம் நூறு படுத்த வேலையுள்
மத்தா குற்றன வாசு கித்தொகை
மொய்த்தார் வன்றலை முன்பு சூழ்ந்தெனக்
கைத்தா மால்வரைக் காட்சி மிக்கவே.

இன்னமும் இவைகள் ஆயிரம் என்னும் கடலின் இடத்தாக மத்தாக அமைந்த மந்திர மலை ஆயிரத்தினை; ஆயிரம் வாசுகிகள் வலியை உடைய தலையை மேலாக வைத்து சூழ்ந்து நின்றதெனும்படி கயமுகாசூரனுடைய துதிக்கையில் இருந்த இம்மலைகள் காட்சி தந்திருக்கின்றது. 27

துண்ணென் றேகயா சூரன் நூறுபத்
தெண்ணுந் தொல்கிரி யாவும் எம்பிரான்
கண்ணின் றோன்விடு காமர் காளைமேல்
விண்ணங் கான்றென ஆர்த்து வீசினன்,

இடிபுரென்று கயமுகாசுரன் ஆயிரம் என்னும் எண்ணுடைய பெரிய மலை யாவ ற்றையும் எமது சிவபிரானின் கண்ணில் நின்று தோன்றியருளிய முருகப்பிரான் தூதாக விடுத்த அழகிய வீரவாகுதேவர் மேல் வானம் இடித்தது எனும்படி உரக்க சத்தமிட்டு வீசினான். 28

பாடார் பல்கிரி பற்றி வீசலும்
ஈடார் வெம்புலி யாளி கேசரி
கோடார் தந்திகள் கோடி கோடிகள்
வீடா ஆர்ப்பொடு விம்மி வீழ்பவே.

பெருமை பொருந்திய பல மலைகளைப் பிடித்து வீசலும் அதிலிருந்த ஈடில்லாத கொடுமையுடைய புலி, யாளி, சிங்கம், கொம்பரினையுடைய யானைகள் கோடி கோடிகளாகத் தவறி பெரும் குறையாத சத்தமுடன் கதறி வீழ்வன. 29

கேடாய் மன்னர் கிடப்ப ஆங்கவர்
வீடா ஆக்கமி சைந்து ளாரெனப்
பாடா வண்டு பராரை மால்வரை
ஊடார் தேன்கள் உகுப்ப உண்டவே.

அரசர் கேடாய்க் கிடப்ப அந்த அரசருடைய அழிவிலாச் செல்வத்தை அனு பவித்து இருப்போர் போன்று இசை பாடும் வண்டுகள் மலைகளிலிருந்த பெரு மரங் களிலுள்ள தேன்கள் சிதறுண்ண அவற்றை உண்டன. 30

வேரு கும்பல வெற்பி டந்தொறும்
ஊறு நின்றுல வுற்ற வான்புனல்
மாறு மல்கவிழ் வுற்று வல்லைபேர்
ஆறு இக்கட லென்ன ஆர்த்ததே.

வேறுயிருக்கின்ற பல மலைகளினிடந்தோறும் ஊறிநின்று உலாவிய வானநீர் இப்பொழுது மலைகள் கவிழ்க்கப்பெற்றமையின் கவிழ்வுற்று அவை யாவும் ஒன்றாகி விரைவுடன் பெரிய ஆறாகி, பின்னரும் பெருகி கடலெனும்படி ஆர்த்தது, 31

வரைவீழ் பூம்புனல் மாந திக்கணே
இரையா மாக்க ளியாவும் வீழ்தலாற்
திரைசேர் வாரிகள் சென்று சேணெழீஇ
விரைவால் வெய்யவன் வெப்பம் நீக்குமே,

மலையினின்றும் வீழ்கின்ற மிருதுவான நல்ல நீர் பொருந்திய இப்பெரிய ஆற் றின் கண்ணே மலையினின்றும் விரைந்து தவறி வீழ்ந்த மிருகங்கள் யாவும் கதறிக் கொண்டு வீழ்தலால் அவைகள் ஆற்றுடன் சென்று சமுத்திரத்தில் மிதந்து வானெ ழுந்து விரைவுடனாக சூரியனுடைய வெப்பத்தை நீக்கும். 32

பேசுஞ் சீரிவை பெற்ற வெற்பெலாம்
ஈசன் தூதுவன் முன்ன ரெய்தின
பாசஞ் சுற்றிய பம்ப ரத்தொகை
வீசுங் காலை சுழன்று வீழ்வபோல்,

சொல்லப்பெறும் சீரிவை யாவும் பெற்றுக்கொண்ட இந்த மலைகளெல்லாம் கய முகனால் வீசப்பட்டு முருகப்பிரானின் தூதுவர் வீரவாகுதேவர் முன்பாக அடைந்தன. இது எதுபோலெனில் பாசக்கயிறு சுற்றிய பம்பரத் தொகைகள் சுழற்றி வீசப்பட்ட பொழுது பம்பரங்கள் சுழன்று வீழ்வதைப்போன்று இருந்தன. 33

வேறு

சுடர்ப்பெ ருங்கதிர் ஆதவன் துண்ணெனக் கரப்ப
அடுக்கல் ஆயிரம் இன்னவா றொருதலை யாகக்
கடற்பு குங்கண மூகிலென வருதலுங் கண்டான்
தடக்கை வேலுடை அண்ணல்தாள் முன்னினன் தமியோன்.

பிரகாசமுடைய பெருங் கிரணங்களையுடைய சூரியதேவனும் திடீரென மறைய மலைகள் ஆயிரமும் இன்னவாறு ஒருதலையாக கடலிலே செல்கின்ற இருள்மேகம் போன்று வருதலும்; அதனை வீரவாகுதேவர் கண்டார். உடனாக அவர் அழகிய திருக் கரத்திடத்தாக வேலினை உடைய அண்ணலான முருகப்பிரான் திருமலரடிகளைத் தியா னித்தருளி ர். தனியனாக அவ்விடத்து நின்றருளிய வீரவாகுதேவர். 34

நிற்கு மெல்லையின் வெங்கொலைத் தொழின்முறை நிரம்பக்
கற்கும் வெய்யவன் விடுத்திடும் ஆயிரங் கிரியும்
பற்கன் மால்வரை காப்பவன் தன்மிசை பழிதீர்
அற்கன் மேல்வரும் எழிலிகள் என அடைந் தனவே.

முருகப் பெருமானைத் தியானித்து நிற்கின்ற எல்லையில் கொடிய கொலைத் தொழிலை நிரம்பக் கற்றுக்கொண்ட கொடியவனான கயமுகாசுரன் விடுத்திட்ட ஆயி ரம் மலையும் சிவபிரானது பெரிய திருக்கைலாச மலையைக் காக்கின்ற நந்தி கணத் தவராகிய வீரவாகுதேவரை அடைந்தன. 35

வேறு

மறுவரை யாத திங்கள் வார்சடைக் கடவுள் நல்க
அறுவரை அனையாய் பெற்றோன் அருளினால் ஐயன் நிற்ப
உறுவரை பத்து நூறும் ஒருங்குமா யுற்று மற்றோர்
சிறுவரை தன்னில் யாவுஞ் சிதறியே உடைந்த வன்றே.

மறு விளங்காத இளப்பிறையணிந்த வார்ந்த சடையுடைய சிவபிரான் தமது நெற்றிக் கண்ணினின்றும் தோற்றுவித்துத் தந்தருளவும் ஆறு கார்த்திகைப் பெண் களை தம்மை வளர்த்தெடுக்கும் தாயாகப் பெற்றுக்கொண்ட முருகப்பிரான் அரு ளால் வீரவாகுதேவர் நிற்ப கயமுகன் எறிந்துவிடலால் வருகின்ற ஆயிரம் மலைக ளும் ஒருங்கே வந்து வீரவாகுதேவர் மீது பட்டு ஒரு சிறிது நேரத்தில் மலை யாவும் சிதறுண்டு உடைந்துபோயது. 36

தெளிதரு வீரன் தன்மேற் செறிந்திடும் அடுக்கல் யாவும்
விளிவொடு மாய்ந்த வன்றி விளைத்தில வேறங் கொன்றும்
வளநனி சுருங்கி வானம் வறந்தநாள் வெளிற்றுக் கொண்மூக்
கிளர்வன பயனின் றாகிக் கேடுபட் டுடையு மாபோல்.

முருகனையே சிந்தித்துத் தெளிகின்ற வீரவாகுதேவர் மேல் சென்று படுகின்ற மலைகள் யாவும் அழிந்து மாய்ந்து போனதே அன்றி அங்கு வேறொரு தீங்கையும் செய்திலை. இது எதுபோலும் என்றால் வளம் மிகவும் சுருங்கி வானம் வரட்சி அடைந்த நாளில் மழை பெய்யுமாறு வெள்ளை மேகங்கள் எழுந்து வருவனவாகியும் ஏது ஒரு பயனும் இல்லாமல் அந்த மேகங்கள் வீணே கேடுபட்டு அழிந்துபோதல் போன்றிருந்தது. 37

மட்பகை வினைஞ ராஞேர் வனைதரு கலங்கள் முற்றுந்
திட்பமொ டமர்ந்த கற்றூண் சேர்ந்துழிச் சிதறு மாபோல்
கொட்புறு புழைக்கை வெய்யோன் குறித்தெறி பிறங்கல் யாவும்
ஒப்பம தடைந்த வீரன் மிசைபட உடைந்த அன்றே.

மண் பாத்திரம் செய்யும் குயவராஞேர் உண்டுபண்ணுகின்ற பாத்திரங்கள் முழுவதும் திடமுடன் நாட்டப்பட்டிருக்கும் கல் தூண் மேல் மோதுண்டால் சிதறி அவைகள் உடைந்துபோதல் போன்று நீண்ட துதிக்கையை உடையவனை கொடிய கயமுகாசூரன் குறிப்பாக வீரவாகுதேவர் மேல் எறிந்த மலைகள் யாவும் மேன்மையை அடைந்துகொண்ட வீரவாகுதேவர் மேல் படுதலும் உடைந்துபோயின. 38

விறல்கெழு புயத்தி னுன்மேல் விடுத்திடு கிரிகள் யாவும்
வறிதுபட் டிடலுங் காணு மால்கரி முகத்தன் நின்றான்
அறநெறி யொருவி மொய்ம்பால் ஆற்றிய வெறுக்கை யாவும்
பிறர்கொள வுகுத்தி யாதும் ஊதியம் பெறுகி லார்போல்.

வலிமை கொண்ட தோளுடைய வீரவாகுதேவர் மேல் விடுத்திட்ட மலைகள் யாவும் வீணுகி அழிந்துபோதலும் அதனைக் கண்டு பெரிய மதம் பொழியும் யானை முகமுடைய கயமுகாசூரன் நின்றான். இது எதுபோலாயிற்று என்றால் தரும நெறியைக் கைவிட்டு தனது வல்லபத்தினுல் சம்பாதித்துக் கொண்ட பொருள்கள் யாவற்றையும் பிறர் அபகரித்துக் கொள்ள அதைக் கொடுத்துவிட்டு ஏதுமொரு பிரயோசனம் அடையாதார் போன்று அங்கு கயமுகன் நின்றான். 39

கண்டுவிம் மிதத்த ணுகிக் கயாசுரன் முனிந்தோர் தண்டந்
திண்டிறன் மொய்ம்பன் தன்மேற் செலுத்தலும் அதனைக் காணு
ஒண்டழல் புரையும் ஒள்வாள் உறைகழித் தொல்லை வீழத்
துண்டம தாக்கி யன்னேன் எதிருறத் துன்ன லுற்றான்.

கயமுகன் இதைக் கண்டு விம்மிதங் கொண்டு கோபமடைந்து ஓர் தண்டாயுதத்தைக் கையில் எடுத்து ஏந்தி வலிமை உடைய வீரவாகுதேவர் மேல் வீசுதலும் அதனை வீரவாகுதேவர் கண்ணுற்று கூரிய நெருப்புச் சுடரின் ஒளிபோன்ற தனது வாளை உறையில் நின்றும் நீக்கி அவ்வாளால் அத்தண்டாயுதம் உடன் வீழும்படி துண்டாக வெட்டி அக்கயமுகன் முன்பாக நெருங்கி எதிர்ந்து சென்றார் வீரவாகு தேவர். 40

மத்தவெங் கயமாந் தீயோன் வாகையந் தடந்தோள் அண்ணல்
மெய்த்தனி ஆற்றல் காணு விழுத்தகு பனைக்கை யோச்சிப்
பத்துநூ றன சாலப் பழுமரம் பறியா ஏந்தி
உய்த்திட ஒருதன் வாளால் ஒய்யெனச் சிந்தி ஆர்த்தான்,

மதம் பொழியும் கொடிய யானையின் நிலை போன்று வெறி கொண்ட தீய கயமுகாசூரன் வெற்றி மாலைகள் அணியப்பெற்ற வீரவாகுதேவரின் உண்மையாகி அழிவின்றி விளங்கும் தனியாய ஆற்றலைக் கண்டு தனது பெரிய கைகளை நீட்டி ஆயிரம் பெரு ஆலமரங்களைப் பிடுங்கி எடுத்து ஏந்தி அவைகளைச் செலுத்தியிட வீரவாகுதேவர் தனது ஒரு வாளினால் விரைவுடன் அவற்றை வெட்டிச் சிதறி ஆர வாரம் செய்தார். 41

காயெரி கலுழும் வெங்கட் கயாசுரன் விடுவான் பின்னுஞ்
சேயுயர் வரைபல் வேறு தெரிந்தனன் பறிக்கும் எல்லை
நாயகன் தூதன் காணு நாந்தகங் கொடுபோய் அன்னான்
ஆயிர மாகி யுள்ள புழைக்கையும் அறுத்தான் அன்றே.

கோபத்தால் சுட்டு எரிக்க வல்ல நெருப்பைக் சக்கிடும் கொடிய கண்களை உடைய கயமுகாசூரன் பின்னரும் வீரவாகுதேவர் மேல் வீசும்படியாக மிக உயர்ந்த மலைகள் பலவற்றை வேறு வேறாகத் தெரிந்து பிடுங்கும் நேரத்தில் எங்கள் ஆன்ம நாயகரான முருகப்பிரானின் தூதுவர் வீரவாகுதேவர் கண்டு தனது வாளைக் கொண்டு சென்று கயமுகாசூரனுடைய ஆயிரமாய் இருக்கின்ற துதிக் கைகளையும் அறுத்தருளினர். 42

அறுத்தலுங் கவன்று தீயோன் ஆயிரத் திரட்டி கையுஞ்
செறித்திவன் தன்னைப் பற்றித் திற்றியாக் கொள்வ னென்றே
குறித்தனன் வளைப்ப வாளாற் கொம்மென ஆற்றல் வீரன்
தறித்தனன் ஒருசார் வந்த ஆயிரந் தடக்கை முற்றும்.

அறுத்தலும் அதுகண்டு தீயவனான கயமுகாசூரன் தனது இரண்டாயிரம் கையினையும் நீட்டி இவனைப் பிடித்து உணவாக யான் உண்பேன் என்று குறிப்புடன் கைகளால் வீரவாகுதேவரைச் சுற்றி வளைத்தலும்; அதுகண்டு வீரவாகுதேவர் வாளினால் உடனாக ஒருசாராக வந்த ஆயிரம் விசாலித்த கைகளை முற்றாக வெட்டி வீழ்த்தினர். 43

செற்றமால் கரியின் பேரோன் திண்கையா யிரமும் வீட்ட
மற்றையா யிரங்கை யாலும் வாகையஞ் செம்மல் மார்பின்
எற்றினான் எற்றும் எல்லை எல்லையில் வெகுளி யெய்தி
அற்றுவீழ்ந் திடவே வாளால் அவையெலாம் அடுதல் செய்தான்.

கோபமுடைய மதயானையின் பேருடைய கயமுகாசூரனின் திண்மையான கைகள் ஆயிரமும் வெட்டிவிட மற்ற ஆயிரங் கையாலும் வீரத் தோள் கொண்ட வீரவாகுதேவரின் நெஞ்சிலே அடித்தான். அடித்த நேரத்து வீரவாகுதேவர் எல்லை யிலாத கோபங் கொண்டு அடித்த அவன் கை யாவும் அறுந்து வீழ்ந்திடும்படி வாளால் அவை யாவற்றையும் வெட்டினார். 44

கொலைகெழு தறுகண் நால்வாய்க் குஞ்சர முகத்து வெய்யோன்
நிலைகெழு பாணி முற்றும் நீங்கி யீரைந்து நூற்றுத்
தலைகெழு நிலைமைத் தாகித் தூண்கிளை பலவு மல்கி
அலைகெழு வீழ்போய் உற்ற ஆலமே போல நின்றான்.

கொலை கொண்ட கொடுமையான கண்ணினையும் அகன்ற பெரிய வாயினையும் உடைய யானை முகமுடைய கொடிய கயமுகாசுரனின் நிலை கொண்ட மூவாயிரம் கைகளும் அறுந்து வீழ்ந்து ஆயிரம் தலைகள் மட்டுமே தோன்றுகின்ற நிலையாகி குளிர்மை வாய்ந்து விளங்கும் கிளைகள், கொம்புகள். விழுதுகள் யாவும் நீக்கப்பட்டு தனித்துள்ள ஓர் ஆலமரம் போன்று நின்முன். 45

பாணிகள் இழந்து நின்ற பகட்டுடை வதனத் தீயோன்
நாணினன் இவனை அட்டு நம்முயிர் துறத்தும் என்னு
மாணறு மனத்திற் கொண்டு மற்றெழின் முன்னித் தோளால்
தாணுவின் கயிலை காப்போன் தடம்புயந் தாக்கி ஆர்த்தான்.

தனது கைகளை இழந்து நின்ற யானை முகமுடைய கயமுகாசூரன் பெரும் நாணம் அடைந்தான். இந்த வீரவாகுதேவனைக் கொன்ற பிற்பாடு எனது உயிரை நான் நீக்குவேன் என்று மாண்பு அற்ற தனது மனதில் எண்ணி மற்போர் செய்ய எண்ணி தனது தோளினுலே சோதியான சிவபிரானின் கைலாய மலையைக் காவல் கொள்கினற நந்தி கணத்தவரான வீரவாகுதேவரின் அகன்ற தோளில் தாக்கி ஆரவாரம் செய்தான். 46

ஐயன தொற்றன் காணு ஆற்றலின் றுகி முற்றுங்
கையினை இழந்து நின்முன் கடுங்கதிர் வாளின் வெம்போர்
செய்யலன் இனியான் என்னுச் சிந்தைசெய் துறைவா ளோச்சி
ஒய்யென அவன்றன் மார்பின் உதைத்தனன் ஒருதன் தாளால்,

இதனை எமது ஐயனுடைய தூதுவர் கண்டு தனது வலிமை முழுதும் இன்றுகி கையையுமே இழந்து நின்முன் கயமுகன். ஆதலினல் அவனுடன் கடுமையான கூருடைய வாட்போரினைச் செய்யேன் இனிமேல் யான் என்று சிந்தை செய்து தனது உறையில் வாளைச் செருகி விரைவாகக் கயமுகாசூரனின் நெஞ்சிலே தமது திருப்பாதத்தால் உதைத்தருளினர். 47

உதைத்திடு கின்ற காலை ஒல்லென அரற்றி வீழ்ந்து
மதத்தினை யுறுக போல மால்கரி முகத்து வெய்யோன்
பதைத்தனன் ஆவி சிந்திப் பட்டனன் பகிர்ந்த மார்பிற்
குதித்திடு சோரி நீத்தங் குரைகடற் போய தன்றே.

உதைத்திடுகின்ற நேரத்தில் உடனே கதறிக்கொண்டு வீழ்ந்து மதம் கொண்ட மத்தகத்தினையுடைய யானை முகமுடைய கொடிய கயமுகாசூரன் பதைபதைத்து துடித்து உயிர் நீங்கி இறந்தொழிந்தான். பிளவுகொண்ட அவனது நெஞ்சில் நின்றும் வெளியே சீறி எழுந்த இரத்தம் கடலாகிப் பெருகி சமுத்திரத்திடத்திற் சென்று சேர்ந்துகொண்டது. 48

அவ்வியல் கண்டு பல்லோர் அவுணர்கள் நமரே ஈண்டு
தெவ்வியல் முறையின் நின்று செருவினை இழைப்பார் போலும்
இவ்விவர் ஆடற் கேது என்கொலோ அறிதும் என்றே
கவ்வையின் நெறிக டோறுங் காண்பது கருதிப் போந்தார்.

அந்த இயல்பினைக் கண்டு பல அசுரர்கள் எண்ணுவார்கள்; ஓகோ, யாரோ எமது ஆட்கள்தான் இவ்விடத்து பகை கொண்டு போர் புரிகின்றனர். இவர்கள் போர் செய்தற்கு காரணம் எதுவாக இருந்தது என்று நாம் அறிவோம் என மன தில் அறிய ஆவல் கொண்டு அங்குள்ள குறுகிப் போகக்கூடிய பாதைகளால் ஓடி வந்தனர். 49

சென்றிடல் வீரன் காணாத் தீயரென் செய்கை நோக்கிற்
கன்றிவெஞ் சினமேற் கொண்டு கடுஞ்சமர் இழைப்பர் யானும்
நின்றமர் புரிதல் வேண்டும் நிலைமையீ தென்றால் அம்மா
இன்றொடு முடியுங் கொல்லோ இயற்றினும் இவர்போ ரென்றான்.

இவ்வாறு இவர்கள் வருகின்ற தன்மையை வீரவாகுதேவர் கண்ணுற்று தீயவ ரான அசுரர் எனது செய்கையைத் தெரிந்து கொண்டால் மனம் கன்றி, கோபித்து கடும் போர் செய்வார்கள். யானும் நின்று பின்னர் போர் புரிதல் வேண்டும். இதுவே நிலைமை என்றால் அம்மவோ நான் போர் செய்தாலும் இன்றோடு முடியு மோ இவர்களுடைய போர்? 50

ஆரணந் தனக்குங் காணா ஆதியங் கடவுள் சொற்ற
பேரருண் மறந்தே இன்னே பீடிலார் தம்மோ டேற்றுப்
போரினை யிழைத்து நிற்றல் புல்லிது புலமைத் தன்றால்
சூருறை மூதூர் தன்னில் துன்னுவன் கடிதின் என்றான்.

வேதங்கட்கும் காணொணாத ஆதியான முருகப்பிரான் சொல்லியருளிய பேரருள் திறத்தினை நான் மறந்தே இப்போது இங்கிருக்கும் பெருமை இல்லாத இவர்களோடு போர் ஏற்று போரினைச் செய்து நிற்றல் சிறுமையான காரியமாகும். அறிவுடைய செயலுமல்ல. ஆனமையால் இனி யான் சூரபன்மன் வாழ்கின்ற ஊரினில் செல்வேன் அதிவிரைவாக என்றார் வீரவாகுதேவர். 51

எப்பெரு வாயில் சார வேகினும் அங்கண் எல்லாங்
கைப்படை அவுணர் வெள்ளங் காவல்கொண் டுற்ற ஆற்றால்
தப்பினன் சேறல் ஒல்லா தமியன்இப் படிவத் தோடு
மெய்ப்பதி இதற்குச் செல்வன் வேற்றுரு வெய்தி யென்றான்.

எந்தப் பெரிய வாயில் ஊடாக நான் செல்வதற்குச் சென்றாலும் அங்கங்கு எல்லாம் கைகளில் படைகளை ஏந்தியபடி பல அசுரர் வெள்ளங்கள் காவல் கொண்டு இருந்தன. ஆகையால் அவர்களைத் தாண்டி தனியேனான யான் இந்த வடிவத்தோடு தப்பிச்செல்லல் முடியாது. அழிவிலாத இந்த ஊர்க்கு வேறான ஒரு வடிவத்தை எடுத்துக்கொண்டு செல்வேன் என எண்ணினார் வீரவாகுதேவர். 52

கூற்றினை உறழும் வைவேற் குமரவேள் அருளால் ஈண்டோர்
வேற்றுரு வதனைக் கொண்டு வெய்யராம் அவுண வீரர்
போற்றுமிக் குணபால் வாய்தல் பொள்ளெனக் கடந்து பின்னர்
மாற்றலன் ஊரிற் செல்வன் என்றனன் வாகை மொய்ம்பன்.

இயமனையும் அழிக்கும் கூரிய வேலைக் கையில் ஏந்திய குமரக் கடவுளின் அரு ளாலே யான் இவ்விடத்து என்னை ஒருவருக்கும் தெரியாதபடி வேறு வடிவத்தைக் கொண்டு கொடியவரான அசுர வீரர் காவல் கொள்கின்ற இந்தக் கிழக்குப் புறமாக உள்ளவாய்தலை விரைவாகக் கடந்து சென்று; பின்னர் பகைவனான சூரபன்மனது ஊரில் செல்வேன் என்று எண்ணினார் வீரவாகுதேவர். 53

நொய்யதோர் அணுவின் ஆற்ற நுணுகியும் மேன்மை தன்னில்
பொய்யில்சீர் பெருமைத் தாயும் பூரண மாகி வைகுஞ்
செய்யதோர் குமரன் பொற்றுள் சிந்தைசெய் தன்பிற் போற்றி
ஒய்யென அருளின் நீரால் ஓரணு வுருவங் கொண்டான்.

நொய்தாகிய ஓர் அணுவினும் பார்க்க நுணுகிச் சிறுத்தும்; மேன்மையான நிலையில் பொய்யில்லாத சீருடைய பெருமை உடையதாகியும் பூரணமாய் குறைவிலா நிறைவாய் இருந்தருளுகின்ற செம்மை வாய்ந்த குமரப் பெருமானின் பொன்னூர்ந்த திருவடிகளைத் தியானித்து அன்பிற் போற்றுதல் புரிந்து அக்கணமே உடனுகச் சுரந் தெழுந்த அருளின் நீரால் ஓர் அணுவடிவம் கொண்டார் வீரவாகுதேவர். 54

நுணுகுதன் னுணர்வே போல நோக்கருந் திறத்தால் தானோர்
அணுவுருக் கொண்டு வீரன் அடுகளம் அதனை நீங்கி
இணையறு குமரற் போற்றி எழுந்துவிண் படர்ந்து மூதூர்க்
குணதிசை வாய்தல் நின்ற கோபுர மிசைக்கண் உற்றுன்.

நோக்கரிதான நுணுகிய தனது உணர்வு போன்று தோன்றிடாத அணுவடிவத்தை வீரவாகுதேவர் எடுத்துக்கொண்டு கயமுகனைக் கொலை செய்த களத்தை விடுத்து நீங்கி இணையிலாத ஆறு முகமுடைய பெருமானைப் போற்றுதல் புரிந்து எழுந்து வானத்தில் சென்று வீரமகேந்திர மூதூரில் கிழக்குப் புறமாக நின்ற கோபுரத்தின் மேல் சென்று தங்கினர். 55

ஆகத் திருவிருத்தம் 287

கயமுகன் வதைப் படலம் முற்றிற்று.

# நகர்புகு படலம்

அண்டம் யாவையும் எழுவகை உயிர்த்தொகை யனைத்தும்
பிண்ட மாம்பொருள் முழுவதும் நல்கியெம் பெருமான்
பண்டு பாரித்த திறமென மகேந்திரப் பதியின்
மண்டு தொல்வளம் நோக்கியே இன்னன மதிப்பான்.

அண்டங்கள் யாவற்றையும் தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம், என்னும் எழுவகையான உயிர் வர்க்கங்களையும், கருவாகிய பொருள் முழுவதும் எம்பெருமான் படைத்தருளி முன்னர் தாங்கி நின்ற திறத்தைப் போன்று வீரமகேந்திரபுரத்து நெருங்கி விளங்குகின்ற மிக முற்பட்ட வளங்கள் செல்வங்கள் யாவற்றையும் வீரவாகுதேவர்நோக்கியே இத்தன்மையாக மனதில்மதிப்பார். 1

எந்தை முன்னரே சூரபன் மாவினுக் கீந்த
முந்தும் அண்டங்கள் அலமரும் உவரிகள் முழுதும்
வந்து மொய்த்தன போலுமால் வரைபுரை காட்சிக்
கந்து பற்றியே ஈர்த்திடும் எல்லைநீர் கரிகள்.

எந்தை சிவபிரான் முன்னரே சூரபன்மனுக்குக் கொடுத்த மிக முந்திய அண்டங்களில் அலைவீசி உலாவும் கருமை கொண்ட கடல் முழுவதும் வந்து வீரமகேந்திர புரத்தை மொய்த்திருப்பன போன்றது மலைகளை ஒத்த பெரும் தோற்றம் கொண்டனவாய் கட்டுத் தறிகளிலே கட்டப்பட்டு தறிமுறிய இழுத்து நிற்கின்ற யானைகள். யானைகளின் தோற்றம் உவர்கடல் மொய்த்திருப்பது போன்றது. 2

இயலும் ஐம்பெரு நிறத்தின் அண் டங்களின் இருந்த
புயலி னம்பல ஓர்வழித் தொக்கன பொருவ
மயிலி ருஞ்சரம் முயலொடு யூகமற் றெழிலைப்
பயில்ப ரித்தொகை அளப்பில வயின்றொறும் பரவும்.

இயல்புடன் பொருந்தும் ஐந்து பெருநிறத்தினையுடைய அண்டங்களில் இருந்த முகில் இனங்கள் ஒருவழித் திரண்டு கூடியுள்ளன போன்றிருப்பன மயில் வேகம், பெரு அம்பு வேகம், முயலோடு குரங்கு வேகம் முதலிய வேகமுடைய போர்ப் பயிற்சிகளை உடைய குதிரைக் கூட்டங்கள் ஆங்காங்கு அளவு கடந்து பரவியவாறு காணப்படும் தன்மை. 3

அண்டம் ஆயிரத் தெட்டினுள் மேதகும் அடல்மாத்
தண்ட மால்கரி யாயின தடம்பெருந் தேர்கள்
உண்ட ரும்பொரு ளியாவுமீண் டிருந்தன இவற்றைக்
கண்டு தேர்ந்தனர் அல்லரோ அகிலமுங் கண்டோர்.

அண்டங்கள் ஆயிரத்தெட்டினுள்ளும் மேன்மையுடன் விளங்கும் வலியுடைய குதிரைப் படைகள், மத யானைகள், பெருந் தேர்கள் ஆகிய எண்ணற்ற பெரும் பொருள்கள் யாவும் இவ்விடத்து இருந்தன. இவை யாவையும் கண்டு தேர்ந்துகொண் டனர் அல்லவோ, அகில உலகமும் கண்டுகொண்டவராவார்கள். 4

இணையில் இவ்விடைத் தானையின் வெள்ளமோர் இலக்கம்
நணுகும் என்றனன் அந்தணன் நாற்பெரும் படையுங்
கணித மில்லன இருந்தன வெள்ளிகண் ணிலன்போல்
உணர்வி லன்கொலாங் கனகனுங் கேட்டசொல் லுரைத்தான்.

இணையற்று விளங்கும் இந்த இடத்து உள்ள சேனை வெள்ளங்களின் கணக்கின் தொகை ஓரிலக்கம் வரை இருக்கும் என்றனர் வியாழதேவன். ஆனால் இங்கே யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நான்கு விதமான பெரும் படைகளும் கணக்கில் லாதன இருந்தன. அசுரகுருவாகிய சுக்கிரன் கண்ணில்லாத தன்மை போல் பொன் னவன் என்னும் வியாழனும் உணர்வில்லாதவன் ஆயினனோ? இவன் யாரிடம் கேட் டதைச் சொன்னனேயொழிய உணர்ந்து சொன்னனல்ல. 5

உரையின் மிக்கசூர் பெற்றஅண் டந்தொறும் உளவாம்
வரையின் மிக்கதேர் கடல்களின் மிக்ககை மாக்கள்
திரையின் மிக்கவாம் பரித்தொகை ஆயிடைச் செறிந்த
பரவை நுண்மணல் தன்னினும் மிக்கன பதாதி.

பலராலும் புகழ்ந்துரைப்பதிலே மிகுஞ் சிறப்பினையுடைய சூரபன்மன் பெற்ற அண்டங்கள் தொறும் உளவாகிய மலைகளின் கணக்கில் மேம்பட்டனவாய் தேர்கள் உள்ளன. கடல்களின் மிகுந்தனவாய் யானைகள் உள்ளன, திரைகளின் மிக்கன குதி ரையின் தொகைகள், அந்த அண்டங்களிலெல்லாம் செறிந்த கடலிடத்துள்ள நுண் ணிய மணல் தன்னிலும் மிக்கவாயுள்ளன !இங்குள்ள காலாள் வீரர்கள். 6

மண்கொள் ஆயிரத் தெட்டெனும் அண்டத்தின் வளனும்
எண்கொள் எண்பதி னாயிரம் யோசனை யெல்லைக்
கண்கொள் பான்மையில் ஈண்டிய தற்புதங் கறைதோய்
புண்கொள் வேலுடைச் சூர்தவத் தடங்கிய போலாம்.

இப்பூமியின் தொடர்பாயுள்ள ஆயிரத்தெட்டு அண்டங்களின் செல்வ வளங்களும், எண்ணப்பட்ட எண்பதினுயிரம் யோசனை எல்லையில் கண்ணுல் பார்க்கக்கூடிய அளவில் ஒருங்கே நெருங்கியிருப்பது அற்புதம். இது இரத்தம் தோய்ந்த தசைகளை குற்றியதினுல் கறை கொண்ட வேலுடைய சூரபன்மனுடைய தவத்தினுல் இவைகள் இப்படி ஒழுங்காக அடங்கியுள்ளனவோ? 7

உரைசெய் ஆயிரத் தெட்டெனும் அண்டத்தின் உளவாங்
கரையில் சீரெலாந் தொகுத்தனன் ஈண்டவை கண்டாந்
தருமம் மெய்யளி கண்டிலம் அவற்றையுந் தந்து
சுரர்கள் தம்முடன் சிறையிலிட் டான்கொலோ சூரன்.

சிறந்து சொல்லப்படும் ஆயிரத்தெட்டெனும் அண்டங்களில் உளவாகிய கரையிலாத சிறப்புகள் எல்லாவற்றையும் சூரபன்மன் தொகுத்து இங்கு வைத்திருக்கின்ருன். அவற்றை இங்கு நான் கண்டேன். எல்லாமிருந்தாலும் தருமத்தையும் உண்மையான அன்பையும் கண்டிலேன். அவற்றையும் சூரபன்மன் ஒருகால் கொண்டு வந்து தேவர்கள் தம்முடன் சிறையிலிட்டானே அறியமாட்டேன். 8

அரண்ட ருங்கழற் சூரன்வாழ் மகேந்திரம் அதனில்
திரண்ட பல்லியத் துழனியேழ் கடலினுந் தெழிப்ப
முரண்டி றத்தவை இயம்புவார் அளவையார் மொழிவார்
இரண்டு பத்துநா றியோசனை யுண்டவர் இடங்கள்.

அசுரர்க்கு அபயந் தரும் வீரக் கழல் அணிந்த சூரபன்மன் வாழும் வீரமகேந்திரபுரமதனில் திரண்டு எழுகின்ற வாத்தியங்களினுடைய ஓசை ஏழ்கடல் ஓசையிலும் பார்க்க மிகுந்து கேட்பன. இவைகள் முழக்கஞ் செய்யும் தன்மையினை உடையவர்களின் அளவை யார் சொல்வார்? இரண்டாயிரம் யோசனை அகலத்து அவர்களிடங்களுண்டு. 9

கரிகள் சேவகம் ஒருபதி னுயிரங் கடுந்தேர்
விரியும் நீளிடை ஒருபதி னுயிரம் விசயப்
பரியின் எல்லையோர் இருபதி னுயிரம் பையத்
துருவின் இன்னமும் உண்டுகொல் யோசனைத் தொகையே.

யானைகள் தங்கி இருக்கும் இடங்கள் பதினுயிரம் யோசனையாகும். கடும் வேகமுடன் செல்லும் தேர்கள் பரந்திருக்கும் நீண்ட இடங்கள் பதினுயிரம் யோசனை. வெற்றிக் குதிரைகள் தங்கிடம் இருபதினுயிரம் யோசனை. இன்னமும் உண்டோ நாம் ஆராய்ந்து பார்த்தால் கூடிய யோசனைத் தொகைகள். 10

இவுளி வாயினும் மால்கரிக் கரத்தினும் இழிந்து
திவளும் நீர்மைசேர் விலாழியுந் தானமுஞ் செறிந்து
குவளை யுண்கணர் நீத்தசாந் தணிமலர் கொண்டே
உவள கந்தரும் அகழிசென் றகன்கடல் உறுமால்.

குதிரை வாயினும் மதயானையின் துதிக்கையாலும் வடிந்து விளங்கும் நீர்த்தன்மையாக விளங்கிடும் வாய்நீரும் மதநீரும் கூடி பெருகிச் சென்று நீலோற்பல மலர் அணிந்த கண்களை உடைய பெண்கள் அணிந்து கழித்த சந்தனக் குழம்பை அழகிய பூக்களுடன் சேர்த்துக்கொண்டு வீரநகர வாயில் புறத்திற்கு அப்பாலுள்ள அகழியினைச் சேர்ந்து அகன்ற கடலில் சேர்ந்துகொள்ளும். 11

வளமை மேதகும் இப்பெரு மகேந்திரம் வகுத்தன்
முளரி அண்ணலிங் கொருவனுன் முடிந்திட வற்ரூ
ஒளிறு வாட்படை அவுணர்கோ னுடையவண் டத்தின்
அளவினுன்முகர் யாரும்வந் திழைத்தன ராமால்.

வளத்தில் மேம்பட்டு விளங்கும் இந்தப் பெரிய வீரமகேந்திரபுரத்தை வகுத்தல் தாமரை மலரில் இருக்கும் ஒரு பிரமதேவனுல் முடியும் தன்மையோ? இவற்றையெல்லாம் ஒளிர்கின்ற வாட்படையை உடைய சூரபன்மனுடைய அண்டங்களினை வகுத்துள்ள அளவுகடந்த பிரமதேவர்கள் யாவரும் வந்து கூடி வகுத்ததேயாகும், 12

புரந்த ரன்றன துலகமும் ஒழிந்த புத்தேளிர்
இருந்த வானமும் எண்டிசை நகரமும் யாவும்
வருந்தி இந்நகர் சமைத்திட முன்னரே வண்கை
திருந்த வேகொலாம் படைத்தனர் திசைமுகத் தலைவர்.

இந்திரனுடைய உலகமும் இவை நீங்கிய தேவர்கள் இருந்த வான உலகங்களும் எட்டுத் திக்கு நகரங்களும் மற்றும் யாவற்றையும்; வருத்தப்பட்டு இந்த நகரை உண்டாக்குவதற்கு முன்பாக கைபடிந்து பயிற்சியாகி திருந்திக் கொள்வதற்காகவோ பிரமதேவர் அந்த உலகுகளைச் செய்து மாதிரி பார்த்தனர். 13

பொன்பு லப்படு துறக்கம்வான் மாதிரம் புவிகீழ்
துன்பில் போகமார் உலகென்பர் தொடுகடற் பெருமை
முன்பு காண்கிலர் கோட்டகம் புகழ்தரு முறைபோல்
இன்பம் யாவையும் உளநகர் ஈதுபோ லியாதோ.

பொன் தோன்றும் சொர்க்க உலகம், வான உலகம், திக்குள்ள உலகம், பூமியின் கீழும் இருக்கும் உலகுகளை துன்பம் இல்லாதபடி போகங்களை அநுபவித்ததற்கு ஏற்ற இடமாகும் என சொல்வார்கள். இவர்களது வார்த்தை எப்படியிருக்குமென்ருல் தொடுத்து விளங்குகின்ற கடலினின் பெருமையைக் காணுதவர் ஓர் குளத்தை கண்டு இது எவ்வளவு பெருமையுடையது என்று குளத்தினைப் புகழ்ந்துபேசும் தன்மைபோன்றதாய்த்தான் இருக்கும். ஆகவே இன்பம் எல்லாவற்றையும் அநுபவிப்பதற்கு ஏற்ற ஒரு நகர் இதுபோல் வேறு யாது? 14

கறைப டைத்ததாட் கரிபரி அவுணர்தேர்க் கணங்கள்
அறைப டைத்திவண் ஈண்டிய அண்டங்க ளனைத்தும்
முறைக டற்றொகை முழுவதுஞ் சூர்கொணர்ந் தொருங்கே
சிறைப டுத்திய போலும்வே றென்றிலை செப்ப.

கறைகொண்ட காலினையுடைய யானை, குதிரை, அசுரர்கள் தேர்கள் ஆனவை எல்லாம் இங்கு வந்து வரிசைக்கிரமமாக இவ்விடம் சூழ்ந்துகொண்டன. இது எதுபோலென்ருல் அண்டங்கள் அனைத்தில் உள்ளும் முறையாகப் பொருந்திய கடலின் தொகைகள் முழுவதையும் சூரபன்மன் கொண்டுவந்து சிறைப்படுத்தியுள்ளான் என்று சொல்வதே அன்றி யான் இந்தச் சேனையின் நிலையைக் கண்டு சொல்வதற்கு வேறென்றில்லை. 15

ஐய பூழியும் ஆரகில் ஆவியும் ஆற்ற
நொய்ய வாகிய அணுக்களும் நுழைவரி தென்னிற்
செய்ய இந்நகர் ஆவணம் எங்கணுஞ் செறிந்த
வெய்ய தேர்கரி அவுணர்தம் பெருமையார் விரிப்பார்.

மிக நுண்ணிய புழுதியும், சந்தனப் புகையும் மிகவும் நொய்யதான அணுக்களுமே நுழைவரிது செம்மையுடைய இந்த நகரத்தின் வீதிகள் எங்கணும் செறிந்த கொடிய தேர்கள். யானைகள் அசுரர்களின் கூட்டத்தில் என்றால் இந்த அசுரரின் பெருமையை யார்தான் எடுத்து விரித்துப் பேச முடியும்? 16

அள்ளல் வேலைசூழ் மகேந்திர புரிக்கிணை யாகத்
தெள்ளி தாவொரு நகருமின் றுளதெனச் செப்ப
எள்ள லின்றிய அண்டமோ ராயிரத் தெட்டின்
உள்ள சீரெலாம் ஈதுபோல் ஒருபுரத் துளதோ.

சேறு நிரம்பிய சமுத்திரம் சூழ்ந்த மகேந்திரபுரத்திற்கிணையாக தெளிவுபடுத்திச் சொல்வதற்கு ஒரு நகரும் இல்லை. ஏனென்றால் அப்படித் தெளிவுபடுத்திச் சொல்வதற்கு குறைவிலாத அண்டங்கள் ஆயிரத்தெட்டினுள்ளும் உள்ள சிறப்புக்கள் எல்லாம் வேறு எங்காகுதல் ஓரிடத்தில் இதைப்போல் உளவோ இல்லையே. 17

கழிந்த சீர்த்திகொள் இந்நகர் தன்னிடைக் கனல
வழிந்து தொல்லுரு மாழையின் மணிநிழ லாகி
இழிந்து ளான்பெறு திருவெனப் பயன்பெரு தெவர்க்கும்
ஒழிந்த வேலைகள் தம்புகழ் கொள்வதிவ் வுவரி.

சிறந்த சீர்த்திகளைக் கொண்ட இந்நகரத்திடத்து சூழநின்ற கடலானது தனது உருவத்தை முற்றிலுமே மறைத்து நகரத்தின் பொன்னினதும் இரத்தினத்தினதும் நிழலால் அவற்றின் நிறமுடையதாகி இழிந்த குணமுடைய ஒருவன் பெற்றுள்ள ஒருவர்க்கும் பிரயோசனப்படாத செல்வமெனும்படியாக மற்றும் பொன் சமுத்திரம். இரத்தின சமுத்திரங்களின் புகழ்களை காட்சி மாத்திரையாக மட்டும் வைத்திருக்கின்றது. 18

ஏற்கும் நேமிசூழ் மகேந்திர வெறுக்கை இவ்வுலகோர்
ஆர்க்கும் ஓர்பயன் பெற்றில துயிர்ப்பலி அருந்துங்
கார்க்கு ழாம்புரை அலகைசூழ் காளிமந் திரத்திற்
சீர்க்கொள் கற்பகம் பிறர்க்குத வாதமர் செயல்போல்.

நகரத்தின் அமைப்பிற்கு ஏற்றபடியே சமுத்திரம் சூழ்ந்துகொண்டு விளங்கும் வீரமகேந்திரபுரத்தின் செல்வம் இந்த உலகத்துள்ளார் ஆர்க்கும் ஓர் பயனும் பெறும்படி இலாது போய்விட்டது. அது எதுபோலென்றால் உயிர்களின் பலியை அருந்துகின்ற கறுத்த உருவுடைய பேய்கள் சூழ்ந்த காளியின் மந்திரக் கட்டளையால் சிறப்புற்ற கற்பக விருட்சத்தின் பொருள்கள் பிறர்க்குதவாதபடி போவது போன்று. 19

மறக்கொ டுந்தொழில் இரவியம் பகையழல் மடுப்பத்
துறக்க மாண்டது பட்டிமை யாகுமத் தொல்லூர்
சிறக்கும் இந்நகர் நோக்கியே தன்னலந் தேய்ந்து
பொறுக்க ரும்பெரு நாண்சுடக் கரிந்தது போலாம்.

கொலை புரியும் கொடுந் தொழிலையுடைய சூரியனின் பகைவனை பானுகோபன் நெருப்புக் கொழுத்தி எரிப்ப சொர்க்க உலகம் மாண்டது என்பது பொய்யாகும் ஏனெனில் நான் நினைக்கின்றேன்; அந்த முதிய தேவ உலகமானது சிறந்து விளங்கும் இந்த நகரத்தைப் பார்த்து தனது நலமெல்லாம் தேய்ந்து அழிந்துபோம்படி பொறுக்கமுடியாத பொருமை தன்னைச் சுட்டெரிக்க அதனுலே சொர்க்க உலகம் எரிந்து சாம்பராகி இருக்கவேண்டும். 0

அழுக்காறு என்பது பொல்லாத நெருப்பு இதைத் தவிர்ப்பது எழ்வளவு ஓர் பிரதான கடமையாகும் என்னும் உண்மை இப்பாடல் கருத்திலிருந்து பெற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கின்றது;

துங்க மிக்கசூர் படைத்திடும் அண்டமாத் தொகையுட்
செங்க திர்த்தொகை ஆங்கவன் பணியினுற் சென்று
பொங்கு தண்சுடர் நடாத்திநின் றென்னவிப் புரியில்
எங்கு முற்றன செழுமணிச் சிகரம் எண்ணிலவே.

மேன்மை மிக்க சூரபன்மன் பெற்றுக்கொண்ட அண்டங்கள் என்னும் தொகைகளிலே விளங்கி பிரகாசிக்கின்ற சிவந்த கிரணமுடைய சூரியர்களின் தொகை முழுவதும் சூரபன்மனின் கட்டளைப் பிரகாரம் சென்று பொங்கி ஒளிர்கின்ற குளிர்ந்த கிரணங்களைப் பரப்பி நின்றன எனும்படி இந்த வீரமகேந்திரபுரத்து எங்கும் அழகிய இரத்தினத்தின் சிகரகோபுரங்கள் அளவு கடந்து காணப்படுவன, 21

மாணி லைப்படும் எழுவகை உலகின் வைப்பென்ன
வேணி லைப்பெருஞ் சிகரிகள் செறிந்தன யாண்டுங்
கோணி லைக்கதிர் உடுப்பிறர் பதங்களிற் குழுமி
நீணி லைத்தலம் பலவுள மாடங்கள் நிரந்த.

மாண்புடன் நிலைபெற்றிருக்கும் ஏழு வகையான உலகுகளின் வைப்பென்னும்படி ஏழு வகையான அடுக்கு நிலையுடைய கோபுரங்கள் செறிந்திருக்கின்றன எவ்விடத்தும். கிரகங்கள், நிலையான சூரியர், நட்சத்திரங்கள் இன்னும் ஏனையோருடைய பதங்களை சென்று கூடும்படியான உயர்ந்த நிலையான அடுக்கு மாளிகைகளை உள்ள இடங்கள் பல நிரையாக இங்கு உள. 22

நூறி யோசனை சேண்படு நீட்சியும் நுவலும்
ஆறி யோசனைப் பரவையும் பெற்றஆ வணங்கள்
ஏறு தேர்பரி களிறுதா னவர்படை ஈண்டிச்
சேற லாயிடை அருமையால் விசும்பினுஞ் செல்லும்.

நூறு யோசனை தூரமாக உள்ள நீளமும் சொல்லப்படும் ஆறு யோசனை அகலமும் பெற்ற வீதிகளில் ஏறிச் செல்லும் தேர், குதிரை, யானை, அசுரரான படைகள் அவ்வீதிகளால் நெருங்கிச் செல்வது மிகு அருமையாக உள்ளமையால் அப்படைகள் வான மார்க்கமாக விசும்பினும் செல்லும். 23

அடல்மி குத்திடு தானவர் அகலிரு விசும்பிற்
கடிதி னிற்செல மத்திகை காட்டுமா றெப்ப
நெடுமு கிற்கணந் தழுவுசூ ளிகைமிசை நிறுவுங்
கொடிகள் எற்றிடப் போவன இரவிகொய் யுளைமா.

வலிமை மிதந்கு அசுரர் அகன்ற பெரிய ஆகாயத்தில் விரைவாகச் செலும்படி சூரியதேவனுடைய தேரிற் பூட்டிய குதிரைகளைச் சவுக்கினுல் காண்பித்து நிற்பதை ஒத்து நெடிய முகில் கூட்டங்கள் உராய்ஞ்சும் சூளிகைகள் மேலாக நாட்டப்பெற்ற கொடிகள் அசைந்து நின்று முட்டிட அதுகண்டு சூரியதேவனுடைய அழகிய தேரில் பூட்டிய குதிரைகள் வேகமாகச் செல்வன, 24

மேலு லாவிய படிகமா ளிகைசில மின்னூர்
மாலை தாழ்குழற் கிடுமகி லாவியான் மறைவ
சீல நீங்கிய அவுணர்தஞ் சீர்த்திகள் அனைத்தும்
மேல வேயவர் பவத்தினுள் ஒடுங்குமா றென்ன.

மேலே உயர்ந்து நிலவி விளங்கும் சில கண்ணுடி மாளிகைகள், சில பெண்கள் தமது மாலை சூட்டிய கூந்தலுக்கு இடுகின்ற அகிற் புகையால் மறைந்துபோகின்றன. இது எதுபோல் இருப்பதென்ருல் சீல ஒழுக்கம் நீங்கிக்கொண்ட அசுரர்களுடைய சிறப்புக்கள் யாவும் ஒரே தன்மையாக அவர்களுடைய பாவச் செய்கைகளில் ஒடுங்குவது போன்ற காட்சி உடையதாயுள்ளது. 25

அணிகு லாயகோ மேதகம் மரகதம் ஆரம்
துணியும் நீலம்வச் சிரம்வயி டூரியந் துப்பு
நணிப பங்கயம் புருடரா கம்மெனும் நவமா
மணிக ளாற்செய்து மிளிர்வன வரம்பில்பொன் மாடம்.

அழகு நிலவும் கோமேதகம், மரகதம். ஆரம் சிறந்த நீலம் வச்சிரம், வைடூரியம், பவளம் சிறந்த பதுமம், புருடராகம் என்னும் ஒன்பது வகையான இரத்தினங்களாற் செய்யப்பட்டு மிளிர்வனவாகிய பொன்னினுற் செய்யப்பெற்ற அளவு கடந்த பொன் மாடங்கள் இங்கு காணப்பெறுவன. 26

இயல்ப டைந்தவெண் படிகத்தின் இயன்றமா ளிகைமேற்
புயல்ப டைத்திடு களிமயில் வதிந்திடப் புடையே
கயல்ப டைத்தகண் ணியர்புரி அகிற்புகை கலப்ப
முயல்ப டைத்திடு மதியினைச் சூழ்தரு முகில்போல்.

இயல்புடன் அமையப்பெற்ற வெண்ணிறமுடைய படிகத்தினுல் செய்யப்பெற்ற மாளிகை மேலாக பிரகாசமுடைய பொன்னினுலான தலத்தின் மீதாக மேகம் போன்று விளங்கும் அழகினையுடைய; களிப்புடன் நடமாடும் மயில் தங்கியிருப்ப அதன் மருங்கு கயல்மீனைப் போன்ற கண்ணுடைய பெண்கள் இடுகின்ற அகில்புகை கலந்து செல்வது எப்படி இருந்ததெனில் முயல் கறை உடைய சந்திரனைச் சூழ்கின்ற முகிலினங்களைப் போன்ற காட்சியைத் தருகின்றது. 27

வளனி யன்றிடு செம்மணிப் பளிங்குமா ளிகைமேல்
ஒளிறு பொற்றலத் தரிவையர் வடிமிசைந் துறுதல்
வெளிய சேயன பங்கயப் பொருட்டின்மீ மிசையே
அளியினங்கள்தேன் மாந்தியே வைகுமா றனைய.

வளம் நிறைந்துள்ள சிவந்த இரத்தினத்தினுலான மாளிகை மேலாகவும் பளிங்கு மாளிகை மேலாகவும் பிரகாசமுடைய பொன்னின் தலத்தில் பெண்கள் மதுவாகிய கள்ளைச் சுவைத்து உண்டுகொண்டு இருத்தல் எப்படிக் காணப் பெறுவது எனில் வெள்ளை நிறமுடையதும் சிவந்த நிறமுடையதுமான தாமரைப் பூக்களின் மொட்டின் மேலே வண்டினங்கள் தேனுண்டு இருப்பதை ஒத்து விளங்குவன. 28

தூய்ய வாலரி புனற்கிறை மண்ணியே தொகுப்பச்
செய்ய தீயவன் ஊன்களோ டவைபதஞ் செய்ய
மையன் மாதரோ டவுணர்கள் அரம்பையர் வழங்க
நெய்யளா வுண்டி உண்குவர் மறுசிகை நீக்கி.

தூய்மை பொருந்திய அரிசியை நீர்க்கிறைவனை வருணன் கழுவித் சுத்தம் செய்து அதனைத் தொகுத்து வைப்ப செந்நிறமுடைய அக்கினி ஊனோடு அவற்றையெல்லாம் பதம் உடையதாக வேகச் செய்ய; சமையல் செய்யப்பெற்ற இவற்றையெல்லாம் தேவப்பெண்கள் தாதிகளாக எடுத்துப் பரிமாற; ஆவலுடைய அசுரப் பெண்களுடன் அசுரர்கள் இனிதே நெய்யுடன் சேர்த்து அளாவிய உணவினை உண்பார்கள் அதனில் உள்ள சுவையற்ற பகுதிகளை நீக்கி. 29

துப்பு றுத்தன குஞ்சியங் காளையர் தொகையுஞ்
செப்பு றுத்துசி றடிமினர் பண்ணையுஞ் செறிந்து
மெய்ப்பு றத்தியல் காட்சியுங் கலவியும் வெறுப்பும்
எப்பு றத்தினும் நிகழ்வன மதனுலகிதுவே.

பவளம் போன்று சிவந்த சடையுடைய அசுர இளைஞர்கள் கூட்டமும், செம்பஞ்சு தீட்டிய சிவந்த பாதங்களையுடைய அழகிய பெண்கள் கூட்டமும் கூடி அகம், புறம் என்னும் இயல்பின் அமைய அன்பினால் இயைந்து கலந்து மகிழும் காட்சியும், வெறுப்பும் எந்தப் புறம் நோக்கினாலும் நிகழ்ந்துகொண்டிருப்பன, இதுதான் மன்மதனுடைய இன்ப உலகமாக இருக்கின்றது. 30

பூணும் ஆரமுங் கலாபமும் இழைகளும் பொன்செய்
நாணும் ஒற்றராற் பரத்தையர் பாற்பட நல்கிப்
பேணி மற்றவர் விலக்கின நயந்தன பிறவும்
மாணு மைந்தர்கள் தேறுவான் ஆறுபார்த் தயர்வார்.

அணியப்பெறும் மாலைகளும் மணிக் கோவைகளும் ஆபரணங்களும் பொன்னினால் செய்த தாலிகளும் (பொட்டு) ஆகிய அணிகலங்களைத் தூதுவர்பால் கொடுத்து தமது காதல் பரத்தைப் பெண்களிடம் சேர்க்கும்படி விடுத்து; அத்தூதுவர் அப்பெண்கள் பால் கொடுத்தபோது அப்பெண்கள் பேணி ஏற்ற பொருளையும் விலக்கியவற்றையுமான வரலாற்றினைத் தெரிந்துகொள்ளவேண்டி மாட்சிமையுடைய அசுர மைந்தர்கள் வழிபார்த்த வண்ணம் அயர்ந்திருக்கிறார்கள், 31

துன்று தானவர் தெரியலின் மாதர்பூந் தொடையின்
மன்றல் மாளிகைச் சோலையின் இலஞ்சியின் மலரிற்
குன்ற மால்கரித் தண்டத்தில் யாழ்முரல் குழுவிற்
சென்று சென்றென துணர்வுபோல் அளிகளுந் திரியும்.

நெருங்கி வருகின்ற அசுரர்களின் பூமாலைகளில் பெண்கள் அணிந்த பூமாலைகளில், வாசனை கமழும் மாளிகைகளின் சோலைகளில், இலஞ்சி மரத்தின் மலரில் மலை போன்ற பெரிய யானையின் மதநீரில் யாழ் ஓசை கேட்கப்படும் கூட்டத்தில் வண்டுகள் சென்று சென்று எனது உணர்வு எப்படி மாறி மாறித் திரியுமோ அவ்வண்ணமே திரிந்துகொண்டிருக்கின்றன. 32

மாறி லாதசூர் ஆணையால் வந்திடும் வசந்தன்
ஊறு தெண்கடல் அளவியே தண்டலை யுலவி
வீறு மாளிகை நூழையின் இடந்தொறும் மெல்லத்
தேறல் வாய்மடுத் தோரென அசைந்துசென் றிடுமால்.

மாறுதல் இலாத சூரனுடைய ஆணையின்படி வருகின்ற வசந்தனை காற்று இங்கு வருமுன்பு அமுதம் ஊறும் தெள்ளிய கடலில் அளாவி, பின்னர் பூஞ்சோலை யில் உலாவி குளிர்ச்சியையும் வாசனையையும் சேர்த்துக் கொண்டு பெருமை உடைய மாளிகைகளின் விதிகளின் இடந்தோறும் மெதுவாக, கள்ளினை உண்டார் அசைந்தசைந்து செல்வது போன்று சென்றுகொண்டிருக்கின்றது. 33

மாட மீதமர் மடந்தையர் தம்முரு வனப்புக்
கூட வேபுனைந் தணிநிழற் காண்பது குறித்துப்
பாடு சேர்கரம் நீட்டியே பகலவற் பற்றி
ஆடி நீர்மையின் நோக்கியே அந்தரத் தெறிவார்.

மாடங்கள் மீதிருக்கின்ற பெண்கள் தமது உருவங்களின் வனப்பினை அழகு விளங்கும்படி செய்திட்டு தமது அலங்காரம் செய்யப்பெற்ற உருவத்தின் சிறப்பினை கண்ணாடியில் பார்த்துத் தெளியவேண்டி எண்ணி அப்படியொரு நல்ல கண்ணாடியாக சூரியதேவனை நினைந்து தமது பெருமை பொருந்திய கையினை நீட்டிச் சூரியனைப் பிடித்து கண்ணாடியாக தமது அழகை அவனில் பார்த்தபின்பு மீண்டும் அவனை வானில் எறிவார்கள். 34

வன்ன மாடமேல் ஆடவர் பரத்தமை மகளிர்
உன்னி யூடியே பங்கியீர்த் தடிகளால் உதைப்பப்
பொன்னின் நாணறத் தமதுகை எழிலியுட் போக்கி
மின்னு வாங்கியே ஆர்த்தனர் குஞ்சியை வீக்கி.

வன்மை பொருந்திய மாடமேல் ஆண்கள் பரத்தைப் பெண்கள் மேல் ஏதோ நினைந்து வெறுப்புக் கொண்டு மயிரில் பிடித்து இழுத்து காலால் உதைப்ப அதுவேளை அவர்கள் அணிந்த பொன்னினாலாய தாலி அறுந்துபோக தமது கையினை மேகத்தி னிடத்து நீட்டி அதனுள் இருந்த மின்னலை வாங்கி எடுத்து ஏந்தி உருப்போட்டு சத்தமிடுவார்கள் தங்கள் அவிழ்ந்த கூந்தலை முடிந்தபடியே. 35

முழங்கு வானதி தோய்ந்தசின் மாளிகை முகட்டின்
அழுங்கல் என்பதை உணர்கிலா மாதரார் அகல்வான்
வழங்கு கோளுடன் உருமினைப் பற்றியம் மனையுங்
கழங்கு மாயெறிந் தாடுவர் அலமரக் கண்கள்.

முழக்கத்துடன் செல்கின்ற ஆகாய கங்கை வரையும் உயர்ந்துள்ள சில மாளி கைமேல் நிலத்தில்; அழுகை என்பதை ஒரு காலமும் உணராத பெண்கள் அகன்ற வானத்தில் விளங்கும் கிரகங்களுடன் இடியினையும் பிடித்து அவைகளை அம்மனை கழங் காட்டல் என்னும் தமது விளையாட்டில் பாவிக்கப்படும் பொருள்களாக வீசி ஆடுவார் கள் தமது கண்கள் அலமரும்படியாக. 36

ஈண்டை மாளிகை மங்கையர் தஞ்சிறுர் இரங்க
ஆண்டு மற்றவர் ஆடுவான் பற்றியா தவன்தேர்
பூண்ட மான்தொகை கொடுத்தலும் ஆங்கவன் போந்து
வேண்டி நின்றிட வாங்கியே உதவுவார் மெல்ல.

இங்குள்ள மாளிகைமேல் இருக்கும் மங்கையர் தமது சிறு குழந்தைகள் அழுத போது அந்தக் குழந்தைகளை அழுகை தீர்ந்துகொள்ளும்படியாக அவ்விடத்து அக் குழந்தைகள் விளையாடும் பொருட்டு சூரியதேவனுடைய தேரைப் பிடித்து அதில் பூட்டப்பட்ட குதிரைகளை தமது பிள்ளைகளுக்கு விளையாட்டுப் பொருளாகக் கொடுத்தலும் அதுவேளை சூரியதேவன் வந்து தனது குதிரைகளைத் திருப்பித் தரும்படி வேண்டி நிற்றலும் அப்பெண்கள் மெதுவாக குதிரைகளைக் குழந்தைகள் கையில் இருந்து வேண்டிக் கொடுப்பார்கள். 37

நீடு மாளிகை மிசைவரு மாதர்கை நீட்டி
ஈடு சாலுறும் ஏறுடன் மின்பிடித் திசைத்தே
ஆடு கிங்கிணி மாலையாய் மைந்தருக் கணியா
ஓடு கொண்டலைச் சிறுதுகி லாப்புனைந் துகப்பார்.

நீண்ட மாளிகை மேலாக ஏறிவரும் பெண்கள் தமது கைகளை நீட்டி பெருமை பொருந்தும் இடியேற்றுடன் மின்னலையும் பிடித்து இசைத்துக் கோத்து விளையாடல் புரிகின்ற தமது பிள்ளைகளுக்கு கிண்கிணி மாலையாக அணிந்து வானத்து ஓடிச் செல்லும் மேகங்களைத் தமது பிள்ளைகளுக்குச் சிற்றுடையாக உடுத்து அழகுபார்த்து மகிழ்வார்கள். 38

பொங்கு தாமணி மேற்றலத் திரவிபோந் திடலும்
இங்கி தோர்கனி யெனச்சிறுர் அவன்றனை யெட்டி
அங்கை பற்றியே கறித்தழல் உறைப்பவிட் டழுங்கக்
கங்கை வாரிநீர் ஊட்டுவார் கண்டநற் றுயர்.

ஒளி பொங்கி விளங்கும் இரத்தினங்களாலாய மாளிகையின் மேல்தலத்தில் சூரியதேவன் வந்திடலும் இது நல்ல ஓர் பழமென நினைந்து அந்தச் சூரியதேவனை சிறுவர்கள் கையால் எட்டிப் பிடித்து கடித்தபோது வெப்பமானது சுட்டு உறைத்தலும்; பிள்ளைகள் அவதிப்பட்டு அழுதலும் அதைக் கண்ணுற்ற நல்ல தாய்மார்கள் கங்கை நீரை எடுத்துப் பருக்கி பிள்ளைகளின் உறைப்பு நீக்குவார். 39

கண்டு வந்தனை வரும்புகழ் தஞ்சிறுர் கலுழ
விண்டு வந்தனை செய்தெனத் தாழ்ந்தமேல் நிலத்தில்
வண்டு வந்தனைப் படுகதிர்க் கைமலர் வலிந்து
கொண்டு வந்தனை மார்இரங் காவகை கொடுப்பார்.

யாவரும் கண்டு உவந்து புகழ்கின்ற தமது சிறுவர் கூட்டம் அழுது கண்ணீர் பெருக்க அதுவேளை வானமும் தாழ்ந்து வந்தனை செய்தது எனும்படியாக உயர்ந்த மாளிகைமேல் நிலத்தில் வண்டுகள் விரும்பி வந்தனை செய்வதொத்து ஓசைப்படுத்தும் ஒளியுடைய தேவ விருட்சங்களின் மலரினை தமது கையால் பறித்துக்கொண்டு வந்து அப்பிள்ளைகள் இரங்காவகை கொடுப்பார்கள். 40

**அஞ்சி லோதியர் மாளிகை மிசைச்சிலர் அகல்வான்**
**விஞ்சு தேவரை விளித்தலும் மெய்யுறன் மறுப்ப**
**வஞ்சர் வஞ்சரென் றரற்றியவ் வானவர் இசைய**
**நஞ்சி ருருடன் ஆடுதும் என்பர்நண் ணினர்க்கு.**

ஐந்து வகையான கூந்தல் முடிப்புடன் விளங்கும் அழகிய சில பெண்கள் மாளிகை மேல் நின்றார்கள்; அகன்ற வானத்தில் செல்கின்ற மேலாகிய தேவர்களை உடலுறவு காரணமாக அழைத்தலும் அத்தேவர்கள் அதற்கு இசைவுறாது மறுத்தலும் அப்பெண்கள் அதுவேளை வலிந்து கேட்கவும் மறுக்கும் நீவிர் வஞ்சர்கள், வஞ்சர்கள் என்று ஏசிச் சத்தமிட தேவர்கள் பின்னர் இசைந்து வரலும்; சரி வந்தீர்களா எங்கள் பிள்ளைகளுடன் சிறிதே விளையாடுங்கள் என்பார்கள். 41

**பொருளில் மாளிகைப் படிற்றியர் புணர்வரென் றுண்ணி**
**வரவு மஞ்சுவர் வராமையும் அஞ்சுவர் மடவார்**
**கரவின் மேவுதல் அவுணர்கள் காண்பர்கொ லென்றும்**
**வெருவு கின்றனர் என்செய்வார் விண்ணெறிப் படர்வார்.**

மாளிகைகள் சிறப்புடன் விளங்கினாலும் பெருமை இல்லாதவர் வாழ்தலினாலே பெருமையிலாதவை மீது வாழும் வஞ்சனையுடைய இப்பெண்கள் அங்கு போனால் தம்மை வலிதே புணர்வார்கள் என நினைந்து வருதற்கும் பயப்படுவார்கள். கூப்பிட்ட போது போகாதிருந்தால் இன்னல் விளையும் என்றும் பயப்படுவார்கள் அஃதன்றி அப்பெண்கள் தம்முடன் களவாகக் கூடுதலை அசுரர் கண்டு கொள்வாரோ என்றும் வெருக்கொள்கின்றனர். வான மார்க்கமாகச் செல்லும் தேவர்கள் இந்நிலையில் வேறு என்னதான் செய்வார்கள்? 42

**மேனி லந்தனின் மங்கையர் சிறார்விடா திரங்க**
**ஊன மில்கதிர் தேர்வர அவரையாண் டுய்த்து**
**வான கந்தனிற் சில்லிடை யேகிநம் மகவைப்**
**பானு வந்துநீ தருகென விடுக்குநர் பலரால்.**

மாளிகைகளின் மேல் நிலத்தில் உள்ள பெண்கள் தங்கள் சிறு குழந்தைகள் ஓயாது விடாதபடி அழுதிட அந்நேரம் குறைவிலாத சூரியபகவானுடைய தேர் மேலாக வர அந்தப் பிள்ளைகளை அத்தேர்மேல் விடுத்து இருத்தி சூரியனைப் பார்த்து வானத்தில் சில இடம் மட்டும் இப்பிள்ளைகளைக் கொண்டு சென்று உலாவி அழுகை தீர்ந்த பின்னர்; சூரியனே எம்பிள்ளைகளை எம்மிடம் சேர்ப்பாயாக என தமது பிள்ளைகளை சூரியனுடைய தேரில் விடுப்பார்கள் பல அசுரப்பெண்கள், 43

**கலதி யாகிய அவுணர்தம் மாதர்கால் வருடிச்**
**சிலதி யாரென வணங்கினோர் ஏவல்செய் கிற்பார்**
**சலதி யார்தரும் உலகமேல் தெரிகுறில் தவமே**
**அலதி யாவுள வேண்டியாங் குதவநின் றனவே.**

பேய்போன்ற வடிவுடைய சில அசுரப் பெண்களுடைய காலினைத் தடவி உருவி பணிப்பெண்களெனும்படி சில அழகிய தேவப் பெண்கள் ஏவல் செய்கின்றனர். இதை உற்றுச் சிந்திக்கும்போது கடல் சூழ்ந்து இறையும் உலகத்தில் தவமே அல்லாது வேறு ஏது ஒன்று உளது தமக்கு வேண்டியதை வேண்டியபடி தந்து நிற்பது. 44

ஐந்த வாகிய தருக்களும் மணியுநல் லாவும்
நந்தும் அம்புய நிதியமும் பிறவும்இந் நகரின்
மைந்தர் மாதர்கள் இருந்துழி யிருந்துழி வந்து
சிந்தை தன்னிடை வேண்டியாங் குதவியே திரியும்.

அரிசந்தனம், சந்தானம், கற்பகம், மந்தாரம் பாரியாதம் என்னும் ஐந்து தருக்களும் சிந்தாமணியும் காமதேனுவும் யாவராலும் விரும்பப்படுகின்ற சங்கநிதி, பதுமநிதியும் பிற பொருளும் இந்த வீரமகேந்திரபுர நகரில் வாழும் ஆண்களும் பெண்களும் இருக்கும் இடந்தோறும் வந்து வந்து அவர்கள் மனதில் வேண்டிய யாவற்றையும் கொடுத்துக்கொண்டு திரியும். 45

மீது போகிய மாளிகைக் காப்பினுள் மேவும்
மாதர் வானெறிச் செல்லுவோர் சிலர்தமை வலித்தே
காத லாற்பிடித் தொருசிலர் முறைமுறை கலந்து
போதி ராலென விடுப்பர்பின் அசமுகி போல்வார்.

மேலோங்கி உயர்ந்திருக்கும் மாளிகைகளில் மிக மறைவான இடத்தில் உள்ள அசுரப் பெண்கள் வானமீது செல்வோர் சிலரை ஆசையால் வலியப் பிடித்து இழுத்து வந்து அப்பெண்கள் அவர்களை முறையாக ஒவ்வொருவரும் உடலுறவு வைத்த பின்னரே அவர்களைச் செல்லுமாறு விடுப்பார்கள். இந்நிலையால் இப்பெண்கள் அசமுகியைப் போன்றிருப்பார்கள். 46

வேறு

மேதாவி கொண்டகதிர் வெய்யவனை வெஞ்சூர்
சேய்தான் வலிந்துசிறை செய்திடலின் முன்ன
மேதாமி னங்கொலென எண்ணிஅவன் என்றூழ்
வாதாய னங்கடொறும் வந்துபுக லின்றே.

மேலான ஒளிக்கிரணங்களைப் பரப்புகின்ற சூரியதேவனை கொடிய சூரபன்மன் மகன் பானுகோபன் முன்னர் வலிந்து பிடித்து சிறை செய்துள்ள தன்மையால் இப்படியான அசுரர்களிருக்கும் இடமல்லவோ இது என்ற பயத்தினால் யன்னல்கள் அல்லது வாயில்கள் வழியாகவாதல் அந்த சூரியனுடைய வெயில் வந்து புகுந்து கொள்வதில்லை. 47

தேசுற்ற மாடமுறை சீப்பவரு காலோன்
வாசப்பு னற்கலவை வார்புணரி கொண்கன்
வீசப்பு லர்த்தியிட விண்படரும் வெய்யோன்
ஆசுற்ற தானவர் அமர்ந்தவண் இருந்தார்.

ஒளி மிகுந்த மாடங்களை முறைப்படி கூட்டி துப்புரவு செய்து வருகின்றான் வாயு தேவன். வாசம் நிறைந்த பன்னீரை சந்தனக் குளம்புடன் கலந்து வீசுகின்றான் சமுத்திரங்கட்கு நாயகனான வருணபகவான். இந்த ஈரத்தினை உலர்த்தி விடுகின்றான் வானில் செல்லும் சூரியதேவன். இப்படியாக இவர்கள் பணி செய்தலினாலே குறைவுகள் ஏதும் இலாத இந்த இடத்திலே குற்றமே நிரம்பிய அசுரர் இனிது இருந்தார். 48

பால்கொண்ட தெண்கடல் மிசைப்பதுமை தன்னை
மால்கொண்டு கண்டுயிலும் வண்ணமிது வென்ன
மேல்கொண்ட நுண்பளித மேனிலம தன்கட்
கால்கொண்ட காரெழிலி மின்னினொடு துஞ்சும்.

பால் நிறம் கொண்ட தெள்ளிய நீருடைய கடல்மீது; மகா இலக்குமியை விருப்பம் கொண்டு தனது மார்பில் வைத்து யோக நித்திரை செய்யும் நாராயணக் கடவுளின் தன்மை போன்றது இது என்று சொல்லும்படி உயர்ந்து விளங்குகின்ற நுண்ணிய வெள்ளைப் பளிங்கினாலாய மேல் நிலத்தின் மீது கருக்கொண்ட கறுத்த மேகங்கள் மின்னலுடனாகக் கண்ணயர்ந்துகொண்டிருப்பன. 49

வேறு

குழலின் ஓதையும் எழால்களின் ஓதையுங் குறிக்கும்
வழுவில் கோட்டொடு காகள ஓதையும் மற்றை
முழவின் ஓதையும் பாடுநர் ஓதையும் முடிவில்
விழவின் ஓதையுந் தெண்டிரை ஓதையின் மிகுமால்.

குழல்களின் ஓசையும் எழுவகைத் தந்திரிகளை உடைய யாழ் ஓசையும் குறிப்புடன் ஓசை கொள்ளும் கொம்பு வாத்தியங்களின் ஓசையும் காகளத்தின் ஓசையும் மற்றும் முரசப்பறை முதலியவற்றின் ஓசையும் பாடுவார் ஓசையும் முடிவில்லாத விழாக்களின் ஓசையும் எல்லாம் தெள்ளிய திரையுடைய சமுத்திரத்தின் ஓசையின் மிகுந்து நிற்கும். 50

மதனி ழுக்குறு மைந்தரும் மாதரும் வனமா
மதனி ழுக்கிய வீதியில் வீசும்வண் கலவை
பதனி ழுக்குறச் சேதக மாகுமீன் பலவும்
பதனி ழுக்கிய வாந்தினம் புனைந்தெறி பணிகள்.

அழகிய மன்மதனும் அழகில் தோற்கும்படியான மைந்தர்களும் பெண்களும் கொடிய மதயானையின் மதச்சேறு வழுக்கும்படியான வீதியில் வீசுகின்ற நல்ல கலவைகள் பதம் கெட்டு சேறாகி இருப்ப அதனிடத்து அவர்கள் அணிந்து நீக்கி எறிந்த ஆபரண முத்துமணிகள் அச்சேற்றில் நழுவி விழுந்த வெள்ளிகள் போன்று விளங்குவன. 51

அளப்பில் வேட்கையங் கொருவர்கண் வைத்துமற் றதனை
வெளிப்ப டுக்கிலர் மெலிதலுங் குறிகளே விளம்ப
ஒளிப்ப தென்னுளம் பகரென ஆற்றலா துடைந்து
இளிப்பெ டைக்கிருந் தொருசில மடந்தையர் இளைப்பார்.

அளவு கடந்த விருப்பத்தை அங்கு ஒருவர்பால் வைத்து அதனை வெளிப்படுத்த முடியாமல் ஒருசில பெண்கள் மெலிதலும் அவர்களுடைய குணங்குறிகளே அவர் நிலைமையைக் காண்பிக்க கிளியே உன் உளத்தை வெளிப்படையாகச் சொல் என்று தமது துயரைத் தரிக்க முடியாது மனம் உடைந்து ஓர் பெண் கிளி ஒன்றின்மேல் வைத்து அப்பெண்கள் சொல்லிய வண்ணம் இருப்பார்கள், 53

குருளை மான்பிணித் திளஞ்சிறுர் ஊர்த்திடுங் கொடித்தேர்
உருளை ஒண்பொனை மணித்தலங் கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென் முனிவரும் விழைவார்
பொருளின் ஆசையை நீங்கினர் யாவரே புவியில்.

சிறு குதிரைகளைப் பூட்டி இளஞ் சிறுவர் ஊர்ந்திடுங் கொடிகள் நாட்டிய தேர்களின் உருளைகளாய சில்லுகளில் உள்ள பொன்னை பூமி உராய்ஞ்சி எடுத்துக்கொண்டு விடுகின்றன. இதனைப் பார்க்கும்போது உலகில் உள்ள ஆசை பீடித்த மனிதரை பொன்னுசை உடையவர் என்று ஏனே நாம் வெறுப்பான். முனிவர்களுமே பொன்னை விரும்புவார் என்றுல் இப்பூமியில் பொருளாசையை நீக்கியுள்ளார் எவர் இருக்கின் றனர்? 53

பொன்னுசை பெண்ணுசை மண்ணுசையால் மனித
ரெல்லாம் சின்னுபின்ன மானுரடி. — யோகர் சுவாமிகள்

விழைவு மாற்றிய தவத்தின ரேனுமிவ் வெறுக்கை
மொழியி னேரினும் அவுணரா கத்தவம் முயல்வார்
ஒழியும் ஏனையர் செய்கையை யுரைப்பதென் னுலகிற்
கழிபெ ரும்பகல் நோற்றவ ரேயிது காண்பார்.

எல்லாவித பற்றுக்களையும் நீக்கியுள்ள தவத்தினர்க்கு என்றுலும் இந்த வீர மகேந்திரபுரத்தின் செல்வநிலை பற்றி நான் அவரிடம் எடுத்துக் கூறினுல் அவற்றை அவர்கள் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுதில்தானே அங்குள்ள ஓர் அசுரனுக நான் சென்று பிறக்கவேண்டுமென அவர்கள் தவம் செய்வார்கள். இவர்களல்லாத மற்றையோரின்நிலை பற்றி ஏன் பேச்செடுப்பான். இந்த உலகிலே மிகப்பெரு நாட்களாகத் தவம் புரிந்தோரே இந்த வீரமகேந்திரபுரத்தின் சிறப்புகளைக் காண்பார்கள். 54

குழவி வான்மதிக் கிம்புரி மருப்புடைக் கொண்மூ
விழுமெ னச்சொரி தானநீ ராறுபோ லேகி
மழலை மென்சிறுர் ஆவணத் தாடும்வண் சுண்ணப்
பு்முதி ஈண்டலின் வறப்பவான் கங்கையும் புலர

வானத்து இளம்பிறை போன்ற கொம்பில் கிம்புரி எனும் பூண் ஆபரணம் அணியப்பெற்ற மேகம்போன்ற யானைகள் மழை சொரிவது போன்று சொரிந்த மதநீர் ஆறுபோலச் சென்று மழலை மொழி பயிலும் மிருதுவான சிறு குழந்தைகள் வீதிகளில் வீசி ஆடுகின்ற அழகிய சுண்ணப் புழுதியால் வற்றிப்போவன, இதுவன்றி ஆகாய கங்கையும் புழுதியால் புலர்ந்துபோவது. 55

கங்கை யூண்பய னுகவுந் தூயதெண் கடல்நீர்
அங்கண் மாநகர்ப் பரிசனம் ஆடவும் அணைந்து
துங்க மேனிலை மாளிகை ஆவணஞ் சோலை
எங்கும் வாவியும் பொய்கையும் பிறவுமாய் ஈண்டும்.

இங்கு கங்கைநீர் உண்ணற்கு ஏற்ற நீராகவும் தூய தெள்ளிய கடல் நீரானது அங்குள்ள பரிசன மக்கள் நீராடவும் அங்கு சூரபன்மன் கட்டளையால் வந்து மேன்மைபூண்ட மேல்நிலை மாளிகைகள் வீதிகள், சோலைகள், ஆகிய எங்கும் பெருங் குளங்களும் நீரோடைகளும் பிறவுள்ள நீர்நிலைகளாய் இருக்கின்றன. 56

வில்லி யற்றுவோர் வாட்படை இயற்றுவோர் வேறும்
எல்லை யில்படை உள்ளவும் இயற்றுவோர் இகலான்
மல்லி யற்றுவோர் மாயம தியற்றுவோர் மனுவின்
சொல்லி யற்றுவோர் கண்ணுறு புலந்தொறுந் தொகுமால்.

விற்போரினைப் பயின்று இயற்றுவோரும் வாட்படையைப் பயின்று இயற்றுவோரும் இன்னமும் வேறாக உள்ள பலவகைப்பட்ட படைக்கலங்களின் பயிற்சிகளில் ஈடுபட்டு இயற்றி நிற்போரும் இகல் பேசி மல்யுத்தம் புரிவோரும் மந்திர சொற்களைச் செபிப்போரும் ஆகியவர் பார்த்த பார்த்த இடமெல்லாம் காணப்படுவர். 57

நாடி மேலெழத் தசையிலா துலறியே நரையாய்க்
கோடு பற்றிமூத் தசைந்திடு வோரையுங் கூற்றால்
வீடுவோரையும் பிணியுழப் போரையும் மிடியால்
வாடு வோரையுங் கண்டிலம் இதுதவ வலியே.

நாடி மெலெழும்படி தசையும் இல்லாது வாடி, நரையாகி, மூத்து, தண்டூன்றித் தள்ளாடு நடை கொண்ட கிழமைப் பருவம் உடையோரையும் இயமன் உயிரைப் பற்ற அதனல் இறப்போரையும் நோயால் வருத்தமுறுவோரையும் வறுமையால் வாடுவோரையும் எங்காகிலுமே இங்கு கண்டிலம், இதுதான் தவத்தின் வலி என்பது. 58

கன்னல் மாண்பயன் வாலளை செய்கடுந் தேறல்
துன்னு தீயபால் அளக்கர்தம் பேருருச் சுருக்கி
மன்னன் ஆணையால் இந்நகர் மனைதொறும் மருவிப்
பன்னெ டுங்குள ளாகியே தனித்தனி பயில்வ.

கரும்பினது சிறந்த பயனான சாறும் வெள்ளை நிறமுடைய தயிர், செம்மையான இனிய தேன், விளங்கும் தித்திப்புடைய பால் ஆகிய சமுத்திரங்கள் தங்கள் பெரிய வடிவைச் சுருக்கி சூரபன்மன் ஆணைப் பிரகாரம் இந்த நகரத்துள்ள மனைகள் தோறும் பொருந்தி பல நெடிய குளங்களாகி தனித்தனியே விளங்கிக்கொண்டிருப்பன. 59

அட்ட தேறலும் அடாதமை தேறலும் அருந்திப்
பட்டு வார்துகில் கீறியே தம்மொடு பறைந்து
விட்ட நாணினர் ஒருசில மடந்தையர் வியன்கை
கொட்டி யாவரும் விழைவுறக் குரவையாட் டயர்வார்.

காய்ச்சிய கள்ளையும் காய்ச்சிடாத கள்ளையும் ஒருங்கே குடித்து வெறி மிகுந்து பட்டுடைய அழகிய துகில்களைக் கிழித்து தம்பாட்டில் பேசி நாணினையும் விடுத்து ஒரு சில பெண்கள் பலரும் கைகொட்டி தாளம் போட்டு ஆசை பெருகும்படி வெறியாட்டாகிய குரவையை ஆடுவார்கள். 60

திலக வாணுதல் மாதரா டவர்சிறு வரையின்
அலகி லாமுறை புனைதலின் அணிந்தணிந் தகற்றும்
இலகு பூண்டுகின் மாலைகந் தம்பிற ஈண்டி
உலகில் விண்ணக ரெனச்சிறந் தாவண முறுமே.

திலகம் இட்ட அழகிய நெற்றியினையுடைய சில பெண்களும் ஆண்களும் சிறு பொழுதில் அடிக்கடி தமது மேனிகளில் புதிது புதிதான ஆடை ஆபரணங்களை அணிதலில் அவர்கள் அணியுந்தோறும் பழையதெனக் கழற்றி நீக்கிய பிரகாசமுடைய ஆபரணம், ஆடை, மாலைகள், வாசனைப் பூச்சுகள் எல்லாம் வீதிகளில் நிரம்பி இந்த நகரம் தேவ உலகம் எனச் சிறந்து விளங்குவது. 61

கொய்த லர்ந்தபூ நித்தில மணியுடன் கொழித்துப்
பொய்த லாடுவார் முற்றிலால் எற்றுபொற் பூழி
எய்த லானதிந் நகரள வோகடல் இகந்து
நெய்த லங்கரைக் கானலை அடைந்துமேல் நிமிரும்.

கொய்து அலர்ந்த பூக்களை முத்து மணிகளுடன் கொழித்து தோழிகளுடன் விளையாடும் சிறுமியர் சிறிய சுளகுகளால் எற்றிவிடுகின்ற புழுதி வந்து சேர்கின்றது இந்த நகரளவிலோ இல்லை; கடலையுங் கடந்து அப்பால் சென்று கடற்கரையில் உள்ள நெய்தல் நிலத்தின் கானலை அடைந்து மேலும் அப்புழுதி மேலெழுந்து நிமிர்ந்து போவது. 62

சுந்த ரங்கெழு செய்யவண் மலர்களால் தொடுத்த
கந்து கங்களைச் சிறுவர்கள் கரங்களின் ஏந்தி
அந்த ரம்புக எறிதலும் ஆங்ஙன மேகி
வந்து வீழுமால் இருகதிர் வழுக்கிவீழ் வனபோல்.

சுந்தரம் மிக்க செம்மையான வெண்மலர்களால் தொடுத்த பூம்பந்துகளை சிறு பிள்ளைகள் தங்கள் கைகளில் ஏந்தி வானத்தில் செல்ல எறிதலும் அவைகள் அப்படியே சென்று திரும்பி வந்து நிலமேல் விழுகின்றன எதுபோலும் என்றால் சந்திர சூரியரான இரு ஒளியுடையோர் வழுக்கி விழுதல் போன்று. 63

கழக மீதுமுன் போந்திட முதுகணக் காயர்
குழகு மென்சிறர் தனித்தனி வந்தனர் குறுகிப்
பழகு கற்பினூல் பயின்றனர் மாலையிற் பட்ட
அழகு சேர்மதிப் பின்னெழு கணங்கள் மொய்த் தனையார்.

தம்மிடம் பயிலும் மாணவர் கூட்டத்திற்கு முன்னாக முதிய உபாத்தியாயர்கள் சென்றிட பின்னால் அவரிடம் பயிலுகின்ற மென்மை விளங்கும் சிறுவர்கள் தனித் தனி அவரை அணைந்து தமக்கு கற்பிக்கப்பட்ட நூலை ஓதியவாறு வந்தனர். இவர்கள் வருகை எப்படி இருப்பதோ என்றால் மாலைக் காலத்தில் தோன்றுகின்ற அழகு சேர்ந்த இளம்பிறையின் பின்னெழுந்து தோன்றுகின்ற நட்சத்திரங்களின் தன்மையை இருப்பது 64

கள்ளின் ஆற்றலாற் களிப்பவர் தேறலைக் கரத்திற்
கிள்ளை ஆணினுக் கூட்டியே காமநோய் கிளர்த்தி
உள்ள மோடிய சேவலும் இரங்க ஓதிமத்துப்
புள்ளின் மென்பெடை மீமிசை கலந்திடப் புணர்ப்பார்.

கள்ளினுடைய வெறியின் வலிமையால் வெறியேறிக் கொண்டு மகிழ்வுறும் சிலர் கள்ளை தமது கையிலிருக்கின்ற ஆண் கிளிக்கு ஊட்டி அதற்கு காம நோயினை உண்டுபண்ணி அதன் விளையாலே தனக்கு உரிமையான பெண் அன்னத்தின் மீது

உள்ளம் கொண்டுஆசைப்பட்ட அன்னச் சேவலும் இதைக் கண்டு கவலையுற; அன்னப் பட்சியின் பேட்டோடு அந்தக் காமவெறி கொண்ட ஆண் கிளி கலந்து புணருமாறு செய்வார்கள். 65

உரத்தின் முன்னரே வெளவிவந் தீட்டிய வும்பர்
சிரத்தின் மாமுடித் திருமணி பறித்தொரு சிலவர்
அரத்த மேயதம் பங்கியிற் பஞ்சிகள் அழுத்தும்
பரத்தை மாரடிப் பாதுகைக் கணிபெறப் பதிப்பார்.

தங்களது உடல் வலியால் தேவருடன் போரிட்டு அவர்களிடமிருந்த பொன் முடியில் நின்றும் பறித்து எடுத்துக்கொண்டு வந்து இங்கு சேர்த்துவிட்ட இரத்தினங்களை ஒரு சில அசுரர் சிவந்த தம்முடைய மயிர் கொண்ட தலையில் தங்கள் பாதங்களை அழுத்தி வைக்கின்ற பரத்தைப் பெண்களின் பாதுகைகளுக்கு அழகு விளங்க பதித்து வைப்பார்கள். 66

வலியால் தேவருடன் போரிட்டு பறித்து எடுத்து வந்த இரத்தினத்தை தமது காம இச்சைக்கு இடங்கொடுக்கவேண்டி தலையாலே காலில் வணங்கிட காலால் தலையில் இடறிவிட்டு பின்னர் இடங்கொடுக்கின்ற வேசைப் பெண்கள் அணிகின்ற பாதுகைக்கு அணிபொருளாக வைக்கின்றான் ஒரு அசுரன். இதுவும் இது போன்ற கருத்துக்களே தோன்றும் பாடல்கள் யாவும் அசுரர்களுடைய குணங்களை எடுத்துச் சொல்வதேயாகும், வாழ்க்கையில்சிலர் வஞ்சித்தும் களவாண்டும் வேறுவகையாலும் பொருளைப் பெற்றாலும் உலகில் அவைகள் ஓர் நன்னெறிக்கேனும் உதவாது புன்னெறிக்கே உதவப்படுமாறு காண்க.

தேவி மார்பலர் வருந்தவும் அனையர்பாற் சேரார்
ஆவி போவது நினைகில ராகியே அயலார்
பாவை மார்தமை வெஃகியே பட்டிமை நெறியான்
மேவு வார் சிலர் காண்பதே இதுவுமென் விழியே.

தனக்கென உற்ற பல மனைவியர் தம்மைப் பிரிந்தமையால் வருந்தவும் அவர்பால் சேராது அதனால் அவர்கள் உயிர்க்கே தீங்கு நேரினும் அதை உணராதவராய் பிறன் ஒருவனுடைய மனைவியை விரும்பி களவாக மறைவாக சில அசுரர் போகின்றார்கள். ஐயையோ, இவற்றையுமா என்னுடைய கண் காண்பது?

உலகில் தீங்குகள் எல்லாவற்றிலும் மிகவும் மோசமானது பிறனுடைய மனைவியை விரும்பிச் சேருதல். இந்தத் தோஷத்திற்கு பரிகாரம் இல்லை எனலாம்; ஆகவே இங்கு இதனை என் விழி காண்பதோ எனக் கூறுகின்றார்.

இப்புராணத்து ஆசிரியர் உலகில் தருமத்தை உணர்த்தலே தமது பெருந்தொண்டாக எடுத்துக்கொண்டவர். அசுரக் குணம் ஒருபோதும் தருமத்தை அனுசரியாது. அடக்குமுறை, இரக்கமின்மை, அன்பின்மை, காம வெறி, களவு, கற்பிலாமை இவைகள் யாவும் அசுரத் தன்மையின் குணங்களாம். இவைகள் வேரோடு அழிந்தாலன்றி ஒருவர்க்கு உண்மை நெறி புலப்படாது. ஆகவே இப்பாடல்களில் இவைகளை எடுத்துக் கூறும் தன்மைகள் தருமத்தின்பொருட்டாக என அறிக. 67

நெருக்கு பூண்முலை இயக்கர்தம் மங்கையர் நெஞ்சம்
உருக்கு மேருடை அமரர்தம் மங்கையர் உளத்தின்
இரக்கம் நீங்கிய அவுணர்தம் மங்கையர் ஏனை
அரக்கர் மங்கையர் கணிகைமங் கையர்களாய் அமர்வர்.

நெருக்குகின்ற பூண் அணிந்த முலையினை உடைய இயக்கருடைய பெண்கள் நெஞ்சை உருக்கும்படியான அழகுடைய தேவப் பெண்கள், உள்ளத்திலே இரக்கம் என்பது நீங்கிய அசுரருடைய பெண்கள், இன்னமும் வேறு இராட்சதப் பெண்கள் ஆனவர்கள் கணிகைப் பெண்களாக; ஒருவனுக்கு என்பதான வாழ்வு இலாதவர்களாக அங்கு பலரின் காம இச்சை தீர்ப்பதற்காகவேண்டி இருப்பார்கள். 68

கந்த மானபல் களபமுஞ் சுண்ணமுங் கமழும்
பந்து மாலையுஞ் சிவிறிநீ ரொடுபரத் தையர்கள்
மைந்த ரோடெறிந் தாடல்யா ருளத்தையும் மயக்கும்
இந்த வீதிகொல் லுருவுகொண் டநங்கன்வீற் றிருத்தல்.

வாசனை கலந்துள்ள பல சாந்து வகைகளும், பொற்சுண்ணமும் கமழ்கின்ற பூக்களாகிய பந்து மாலைகளையும் நீர் வீசும் சிவிறிகளையும் கையிலே எடுத்துக்கொண்டு பரத்தைப் பெண்கள் ஆண்களோடு எறிந்து நீரைத் தெளித்து விளையாடல் புரிகின்ற தன்மையைப் பார்த்தால் யாருடையஉள்ளத்தையும் மயக்கும். இந்த ஒரு வீதியா அருபியான மன்மதன் தனது உருவுகொண்டு இருக்கின்ற இடமாகும். 69

பொன்னின் அன்னமும் பதுமரா கம்புரை புறவுஞ்
செந்ந லங்கிளர் மஞ்ஞையுஞ் சாரிகைத் திறனும்
பன்னி றங்கெழு புள்ளினம் இனையன பலவும்
இன்ன தொன் னகர் மங்கையர் கரந்தொறும் இருப்ப.

பொன்னினாலான அன்னமும், பதுமராகத்தினாலாகிய புறவும் சிவந்த இரத்தின ஒளியுடைய மயிலும், நாகணவாய்ப் பட்சியின் திறம்பாடுகளும் பல நிறமுடைய பட்சிகளும்; இவையொத்த விநோதமான பல பறவைகளும் இந்த மிக முதுமையான நகரத்துள்ள பெண்கள் கைகள் தோறும் இருப்பன. 70

பண்டு வேட்டவர் பின்முறைப் பாவையர் பரிவிற்
கண்டு பின்வரை மங்கையர் கானம தியற்றிக்
கொண்ட இல்வழிப் பரத்தையர் கணிகையர் குழாத்துள்
வண்டு பூவுறு தன்மைசென் றுடவர் மணப்பார்.

இங்கு திருமணம் தானும் ஒரு நிலையாகவில்லை; எப்படியெனில் முன்னொருகால் திருமணம் செய்த பெண்கள் பின்னால் திருமணம் செய்த பெண்கள் வழியில், தெருவில் கண்டு அன்பாகி பின்னர் மணம் செய்த பெண்கள் பாடல் கேட்ட வழி காதல் கொண்ட பரத்தைப் பெண்கள், தாசிப் பெண்கள் ஆகிய இப்படியாக உள்ள தம்முடைய பெண்கள் கூட்டத்தில்; வண்டுகள் பல பூவில் தேன் உண்பது போல் ஆடவர்கள் சென்று உடலுறவு கொண்டு அடிக்கடி இன்புறுவர். 71

தக்க மெல்லடிப் பரிபுரம் முழவுறத் தனமா
மிக்க தாளங்கள் ஒத்தமென் புள்ளிசை விரவ
இக்கு வேளவை காணிய பூந்துகில் எழினி
பக்க நீக்கியே மைந்தரோ டாடுவர் பலரே.

தகுதியுடைய மிருதுவான காலில் அணிந்த சிலம்போசைக்கேற்ப முழக்கம் செய்யும் முரசப்பறையின் ஓசைகளுடன் மிகுதியையுடைய தாளங்களை ஒத்திருக்கும் மென்மையான பறவை ஓசை போன்ற மிருதுவான வாத்தியங்கள் சிறப்புடன் ஓசை செய்ய கரும்பு வில்லுடைய மன்மதனும் கண்டு மகிழும்படி பூப்போலும் மெல்லிய துகிலினாலாய திரையைப் பக்கராக நீக்கி ஆடவருடன் கூடி பல பெண்கள் மேடைகளில் நடனமாடுவர்கள், 72

பாட்ட மைந்திடு காளையர் அணிநலம் பாரா
வேட்டு மங்கையர் ஒருசிலர் தமதுமெய் விளர்ப்பக்
கூட்ட முன்னியே பன்னிறக் கலவையுங் குழைத்துத்
தீட்டு வாரவர் உருவினை வியன்கிழி திருத்தி.

பெருமைகளுடன் பொருந்தி வனப்புடன் அமைந்து நிற்கின்ற இளைஞருடைய அழகிய நலத்தைக் கண்டு இச்சையால் காதல் கொண்டு ஒரு சில பெண்கள் தமது மேனி காமநோயால் விளர்ப்புக் கொள்ளும்படி அந்த ஆடவருடன் கூடுதலை விரும்பி பல நிறங்களையுடைய கலவைகளையும் குழைத்து நல்லதோர் வஸ்திரத்தைப் பக்குவப்படுத்தி அதனிலே தாம் ஆசைகொண்ட இளைஞனுடைய உருவைச் சித்திரமாக எழுதுவார்கள். 73

சுற்று விட்டலர் தாருடை வயவர்தொல் லுருவிற்
பற்று விட்டுடன் உளத்தையும் விட்டுமென் பார்ப்பைப்
பெற்று விட்டிலாப் பெடைமயில் தழீஇத்துயர் பேசி
ஒற்று விட்டனர் ஒருசிலர் ஆறுபார்த் துழல்வார்.

நாற்புறமும் பரந்து மலர்கின்றமையால் சிறந்து விளங்கிய பூமாலைகளை அணிந்த தோளுடைய வீரர்பால் பற்றுக்கொண்டு தமது உளத்தையும் அவர்பால் பறிகொடுத்து தனது பொரித்த சிறுகுஞ்சைப் பிரிந்திருக்கமுடியாத மயிலைத் தழுவி அதனுடன் தன் காதல் துயரைப் பேசி அம் மயிலைக் காதலர் பால் தூதாக விடுத்து அம் மயில் தூது சென்று மீளும் வழியை நோக்கி அலைந்து கொண்டவாறு சில பெண்கள் இருக்கின்றார்கள். 74

அகன்ற கொண்கரை நனவின்எக் காலமும் அகத்தில்
புகன்று மட்டித்த வெம்முலைச் சாந்தொடும் புலர்வார்
பகன்றை போல்முரல் சிலம்படிப் பாவையர் பல்லோர்
முகந்த னில்கரு மணிகளிற் சொரிதர முத்தம்.

தம்மை விட்டுப் பிரிந்துபோன கணவரை தமது எண்ணத்திலே எக்காலமும் கொண்டு அவர் நாமமே சொல்லி அதனாலே பொங்குகின்ற கொங்கைகள் மீது அணிந்த சாந்தும் ஈரம் புலர அன்றில் பட்சியின் இனிய ஓசைபோல் ஒலிக்கின்ற சிலம்பணிந்த பாதமுடைய பெண்கள் பலர் பிரிவின் துயரால்தங்கள் முகந்தனிலே கண்ணீர் முத்துப்போல் சொரிந்திட அழுது புலம்பி வாடுகின்றார். 75

மங்கை மார்சிலர் ஆடவர் தம்மொடு மாடத்
துங்க மேனிலத் திடைப்படு சேக்கையில் துன்னி
வெங்கண் மெல்லிதழ் வேறுபட் டணிமுகம் வியர்ப்பக்
கங்குல் ஒண்பகல் உணர்கிலர் விழைவொடு கலப்பார்.

சில மங்கையர்கள் ஆடவர்களோடும் மாடத்தில் உயர்ந்த மேல் நிலத்தில் சிறந்து விளங்கிடுகின்ற மலர்ப்பாயலில் கணவன்மாரின் அரவணைப்பில் பொருந்தி கொடிய கண்களும் இதழ்களும் சிவந்தும் வெளுத்தும் வேறுபட்டு அழகிய முகம் வேர்க்க இராப்பகல் என்பதையே உணராதபடி உடலுறவான இன்பம் கொண்டிருக்கின்றனர். 76

மறிகொள் சோரிநீர் பலியுடனேக்கிநாண் மலர்தூய்
இறைகொள் இல்லிடைத் தெய்வதம் வழிபடல் இயற்றிப்
பறைகள் தங்கஅக் கடவுளை ஆற்றுறப் படுத்தி
வெறிய யர்ந்துநின் ருடுவர் அளப்பிலர் மின்னர்.

ஆட்டுக்கடாவை வெட்டி பெறப்பட்ட இரத்த நீருடன் பலியிட்டு மஞ்சள் அரிசி அன்றலர்ந்த பூ இவைகளைச் சொரிந்து தமது குலதெய்வத்தைத் தமது இல்லத்திலே பேணி வழிபடல் புரிந்து பறைகள் முழங்க அக்கடவுளை வரும்படி செய்து அளவுகடந்த பெண்கள் வெறியாடல் விழாக் கொண்டாடி நிற்பார்கள். 77

அலங்கல் வேல்விழி மாதரும் மைந்தரும் அமர்ந்த
பொலங்கொள் மாடமேல் ஆடுறு பெருங்கொடி பொலிவ
மலங்கு சூழ்தரு தெண்டிரைப் புணரியில் வைகுங்
கலங்கள் மேவிய கூம்பெனக் காட்டிய அன்றே.

மாலையணிந்த கூரிய வேல் போலும் கண்களையுடைய பெண்களும் ஆண்களும் அமர்ந்திருக்கும் அழகிய பொன் மாடங்களின் உச்சியில் நாட்டப்பெற்று ஆடிக்கொண்டிருக்கும் பெருங் கொடிகள் பொலிந்துகொண்டிருக்கும் தன்மையானது சுருக்கள் சூழ்ந்து விளங்கும் தெள்ளிய நீருடைய கடலில் இருக்கின்ற கப்பல்களின் பாய்மரம் போன்று காண்பித்துக்கொண்டு நிற்பன. 78

புரசை வெங்கரி புரவிதேர் பொருபடைத் தலைவர்
பரிச னங்களா தோரணர் வாதுவர் பரவ
முரச மேமுதல் இயமெலாம் முன்னரே முழங்க
அரச வேழமா எண்ணில கோயில்வந் தடைவ.

உப்பரிகைகளை உடைய கொடிய யானைகள், குதிரைகள், தேர்கள், போர் புரியும் சேனாதிபதிகள் இன்னும் பரிசனராகிய தோரணர், வாதுவர் ஆகிய சேவகர் வணக்க மரியாதைகள் செலுத்தவும் முரசப்பறை முதலிய வாத்தியம் முன்னராக முழக்கம் செய்யவும் அணிவகுப்பு மரியாதைகளுடன் பட்டத்து யானைகள் எண்ணில்லாதன அரண்மனையை நோக்கி வந்துகொண்டிருக்கின்றன. 79

கள்ளு றைத்திடு மாலையம் பங்கியர் கமஞ்சூல்
வள்ளு றைப்புயன் மேனியர் ஒருசிலர் வார்வில்
ஒள்ளு றைப்படை பிறவினிற் கவரிதூங் குறுத்துத்
தள்ளு தற்கரும் வயமுர சறையமுன் சார்வார்.

தேன் சொரிகின்ற மலர் மாலை சூடிய குடுமிகளை உடையவர்; சூல் கொண்டு கருமையுடன் விளங்கும் நிலைகொண்ட மேகம் போன்ற கறுத்த மேனியை உடையவரான ஒருசிலர் தமது வார் பூட்டிய வில்லில்; கைகளில் ஏந்திய பிற படைகளில்; கவரி மான் மயிரை குஞ்சமாக தூங்கப்பண்ணி அணி அணியாக நீக்கற்கரிய வெற்றி தருகின்ற வீரமுரசு கொட்டி முழங்க முன்னுகை வந்துகொண்டிருக்கிறார்கள். 80

அறுகு வெம்புலி வலியுடை மடங்கல்மான் ஆமாச்
சிறுகு கண்ணுடைக் கரிமரை இரலையித் திறத்திற்
குறுகு மாக்களைப் படுத்தமற் றூன்வகைக் குவால்கள்
மறுகு ளார்பெறப் பண்டிகொண் டளப்பிலோர் வருவார்.

கொலை புரியும் கொடிய புலி, வலியுடைய சிங்கம் மான், காட்டுப் பசு, சிறிய கண்ணுடைய யானை, மரை, கலைமான் முதலிய இத்திறத்தனவாக உள்ள மிருகங்களைக் கொலை செய்த ஊன்களாகும் வகை வகையான இறைச்சிகளை வீதியில் வாழ்வார் பெறும்பொருட்டு பெரு வண்டிகளில் எடுத்துக் கொண்டு அளவில்லாத பலர் வருகின்றனர். 81

மஞ்சு லாவரு சிகரியுஞ் சூளிகை வரைப்பும்
விஞ்சு மேனில அடுக்கமுஞ் சோலையும் வெற்புஞ்
சஞ்ச ரீகமார் ஓடையும் வாவியுந் தடமும்
எஞ்சல் இல்லதோர் மாடங்கள் எங்கணு முளவே.

மேகங்கள் உலாவி வரும் கோபுரங்களும் சூளிகைகளின் வரிசைகளும் உயர்ந்து விளங்கிய மேல்நிலை மாட அடுக்கங்களும் சோலையும் செய்குன்றும் நீர் விளையாடல் புரியும் நீர் ஓடைகளும் குளங்களும் நீர்த்தேக்கமும் குறைவு ஏதும் இல்லாத மாடங்கள் எங்கணும் இவை இருப்பன. 82

எற்றி முன்செலும் முரசினர் கம்மியர் எல்லில்
பற்று தீபிகைச் சுடரினர் மாலைதாழ் படையர்
ஒற்றை முக்குடை இருபுடைக் கவரியர் உலப்பில்
கொற்ற வீரர்ஈண் டளப்பிலோர் வந்தனர் குலவி.

முரசப் பறையை அடித்து முழக்கி முன்செலும் மேளகாரரும் கம்மியர்களும் பகலில் எரிகின்ற தீவர்த்தியைப் பிடித்தோரும் மாலை தாழ்கின்ற படைகளை உடையவர்களும், ஒற்றைக் குடை, முக்குடை, சாமரைகளை உடையவருமாய் அளவுகடந்த அரச வீரர்கள் கூட்டமாக வந்துள்ளனர் குலாவி மகிழ்ந்தவாறு. 83

மண்ப டைத்திடு தவமெனும் மகேந்திர மலிசேர்
எண்ப டைத்தகண் ணிரண்டினர் காணுதல் எளிதோ
விண்ப டைத்தவற் காயினும் அமையுமோ மிகவுங்
கண்ப டைத்தவர்க் கன்றியே கண்டிட லாமோ.

இப்பூமி செய்திட்ட தவமெனும்படியான மகேந்திரபுரத்தின் சிறப்பியல்புகளை மிக பெருமை சேர்ந்ததென்று எண்ணப்பட்ட இரண்டு கண்ணுடையவர் காணுதல் எளிதானதோ? இல்லை; அல்லது ஆயிரங் கண்ணுடைய தேவ உலக அதிபதி இந்திரன் பார்வைக்கும் அமையுமோ இல்லை அளவில்லா மிக்க கண்கொண்டவர்க்கன்றியே இது புலப்படமுடியுமோ. 84

வரம்பில் கட்புலங் கொண்டவ ரேனுமற் றிவ்வூர்
விரும்பி இத்திரு நோக்கினும் அளத்தல்மே வருமோ
வரும்பு யற்குழு வைகலும் பருகினு மதனுற்
பெரும்பு னற்கட லானது முடிவுபெற் றிடுமோ.

அளவுகடந்த கண்ணைக் கொண்டவரேனும் மற்றும் இந்த செல்வத்தை விரும்பிப் பார்த்தாலுமே அளவிட்டுக் கொள்ள வருமோ முடியாது. பெரும் சமுத்திரத்தை முகிற் கூட்டமெல்லாம் நித்தலும் வந்து படிந்து பருகினுலும் கடலை முடிவாக்க முடியுமோ ஆகாது அதேபோன்று வீரமகேந்திரபுரத்தின் செல்வ வளத்தை எவரொருவராலும் பார்த்து அளவிடமுடியாதே. 85

கழியும் இந்நகர் ஆக்கமோ கரையிலா இவற்றுள்
விழிகள் எண்ணில பெற்றுளார் தாங்கண்ட வெறுக்கை
மொழிவர் என்னினும் நாவதொன் றுன்முடிந் திடுமோ
அழிவில் ஆயிர கோடிநாப் பெறுவரேல் அறைவார்.

அழியும் நிலை கொண்ட இந்த நகரின் செல்வமோ கரையிலாதது. இவைகளை கண்கள் எண்ணில்லாதனவற்றைப் பெற்றுக்கொண்டோர் தாங்களாசக் கண்ட இந்தச் செல்வத்தை இன்னொருவர்க்கு எடுத்துக்கூற முற்பட்டார் என்றுலும் அவர் ஒரு நாவால் சொல்ல முடியுமோ முடியாது. அழிவில்லாத ஆயிரங் கோடி நாக்குகளை அவர் பெறுவரேல் ஒருவாறு சொல்லிமுடிப்பார்.

எண்ணற்ற கண்கொண்டு கண்டசெல்வத்தின் சிறப்புகள் பற்றி ஒரு நாவால் சொல்லமுடியாது. அதற்கும் கண்கள்போல எண்ணற்ற நா வேண்டும். 86

வாழ்வின் மேதகு மகேந்திரப் பெருமித வளத்தைத்
தாழ்விலா நெறி கண்டனர் தாலுஎண் ணிலவால்
சூழ்வின் நாடியே பகரினும் மெய்யெலாந் துதையக்
கேள்வி மூலங்கள் இல்லவர் எங்ஙனங் கேட்பார்.

வாழ்வில் மேம்பட்டது எனப்பட்ட வீரமகேந்திரபுரத்தின் பெருமிதமான செல்வ வளத்தை தாழ்விலாத வகையால் பல கண் கொண்டு கண்டுகொண்டவர் நாக்குகள் எண்ணற்ற வகைகளால் நிரம்பட நாடிச் சொன்னுலும் தனது மேனி எங்கும் நெருங்கும்படியான பல காதுகள் இல்லாதவர் எப்படிக் கேட்பார்? 87

ஆயி ரம்பதி னுயிரங் கோடிநா அளவில்
ஆயி ரம்விழி ஆயிரம் ஆயிரஞ் செவிகள்
ஆயி ரம்புந்தி கொண்டுளார்க் கல்லதிவ் வகன்சீர்
ஆயி ரம்யுகங் கண்டுதேர்ந் துரைப்பினும் அடங்கா.

ஆயிரம் பதினுயிரம் கோடி நாக்குகளும் அளவிலாத ஆயிரம் கண்கள், ஆயிரம் காதுகளுடன் ஆயிரம் மனம் கொண்டுள்ளார்களுக்கு அல்லாமல் இந்த வீரமகேந்திர புரத்தின் பெருகிய சீரினை ஆயிரம் யுகங்களாகக் கண்டு தேர்ந்து சொன்னுலும் ஒருவர்க்கு அது முடிவுருது 48

பொய்த்தல் இன்றியே இந்நகர்த் திருவைஐம் புலத்துத்
துய்த்தல் முன்னியே விழைந்துகொல் நோற்றிடுந் தொடர்பால்
பத்து நாறுடன் ஆயிரம் கோடியாப் பகரும்
இத்தொ கைச்சிரங் கொண்டனர் ஈண்டுளார் எவரும்.

எக்காலமும் அழிவிலாதபடி இருக்கின்ற இந்த நகரத்தின் சிறந்த வளத்தை அடைந்து அனுபவித்து இன்புறவேண்டுமென நினைந்து விருப்பங் கொண்டு தவம் புரிந்த காரணத்தால் போலும் இங்குள்ளார் எல்லார்க்கும் பத்துத் தலை நூறு தலை, ஆயிரம். கோடி எனக் கணக்குடைய இத்தனை பெரும் தலைகளைக் கொண்டுள்ளார் போலும். 49

முன்ன வர்க்குமுன் னுகிய அறுமுக முதல்வன்
தன்ன ருட்டிறத் தொல்லையில் பேருருச் சமைந்தே
இந்ந கர்த்திரு யாவையுங் காண்குவன் இன்னே
ஒன்ன லர்க்கெனைக் காட்டுதல் தகாதென ஒழிந்தேன்.

முன்னவர்க்கும் முன்னுகியவராய் ஏகனுய் ஆறுமுகமுடைய ஒருவனுகிய எமது முதல்வனின் இனிய நல்லருளினைக் கொண்டு விரைவாக நான் ஓர் பெரிய வடிவத்தை எடுத்து இந்த நகரத்தின் செல்வ வளங்கள் யாவற்றையும் பார்ப்பேன். ஆனுல் அப்படிச் செய்தலாலே என்னைப் பகைவர்க்குக் காட்டிக் கொடுத்தல் தகாதென அதை விடுத்தேன். 90

இனைத்த வாகிய பெருவளம் எல்லையின் றிவற்றை
மனத்தில் நாடினும் பற்பகல் செல்லுமால் மனக்கு
நுனித்து நன்றுநன் ருய்ந்திவை முழுவதும் நோக்க
நினைத்து ளேன்எனின் இங்கிது பொழுதினில் நிரம்பா.

யான் சொல்லிய வண்ணம் காணப்பெறும் பெருவளங்கள் எல்லையில்லாதிருக்கின்றன. இவற்றை மனத்தில் எண்ணி நினைப்பதென்றாலும் பல நாட்கள் சென்று விடுமே. மனதால் இவைகளை நல்ல நுட்பமாக ஆராய்ந்து முழுவதையும் பார்ப்பதற்கு நான் நினைந்துகொண்டேனெனின் இன்றைய பொழுதில் இது முடியாது. 91

அம்பு யாசனன் தெளிகிலா அருமறை முதலைக்
கும்ப மாமுனிக் குதவியே மெய்யருள் கொடுத்த
வெம்பி ரான்பணி புரிகிலா திந்நகர் இருஞ்சீர்
நம்பி நாடியே தெரிந்துபா ணிப்பது நலனே.

பிரமதேவரும் தெளிந்துகொள்ள முடியாத வேத முதலானபிரணவப் பொருளை குடத்தில் அவதரித்த அகத்திய முனிவருக்கு உபதேசித்து அழிவிலாத உண்மை அருளினைக் கொடுத்த எமது பெருமான் எனக்கு இட்ட பணியைச் செய்யாது இந்த பெரிய நகரின் சிறப்புக்களை எல்லாம் யான் வேடிக்கை பார்த்து நிற்பது தருமமாகுமோ? 92

என்று முன்னியே அறுமுகன் தூதுவன் இமயக்
குன்றம் அன்னகீழ்த் திசைமுதற் கோபுரக் குடுமி
நின்று மாநகர் வளஞ்சில நோக்கியே நெடுஞ்சீர்
துன்று சூருறை திருநகர் அடைவது துணிந்தான்.

என்று இன்னவாறு ஆறுமுகமுடைய எம்பிரான் தூதுவர் வீரவாகுதேவர் நினைந்து மலை போன்ற பெரிய கிழக்குத் திசைக் கோபுரத்தின் உச்சி நின்று கொண்டு பெருநகரான வீரமகேந்திரபுரத்தின் சில வளங்களை நோக்கி; நெடுகவே சிறந்தோங்கும் சீர் நிறைந்த சூரபன்மன் வாழ்கின்ற அரண்மனை நகரைச் சென்று அடைவதற்குத் துணிந்தார். 93

வனைந்த மாளிகை ஒளியினில் இடைப்படு மறுகில்
கனைந்து செற்றியே பரிசனம் பரவுதல் காணா
நினைந்த சூழ்ச்சியான் கீழ்த்திசைச் சிகரியை நீங்கி
நனந்த லைப்பட நகரத்து விண்ணிடை நடந்தான்.

சித்திரங்கள் வனப்புடன் செய்யப்பெற்று விளக்கமுறும் ஒளியிலே திகழுகின்ற வீதிகளிலே பரிசனரான அசுரர் கனைத்துக்கொண்டு உக்கிரத்தோடும் காவல் கொள்வதைக் கண்ணுற்று தமது மனதிலே வீரவாகுதேவர் நினைந்துகொண்ட சூழ்ச்சியால் கிழக்குத் திசைக் கோபுரத்தை நீங்கி அரண்மனை நகரைச் சென்றடையுமாறு வான மார்க்கமாகச் சென்றருளினர். 94

வான மாநெறி நீங்கியே மறைகளின் துணிபாம்
ஞான நாயக அறுமுகன் அருள்கொடு நடந்து
தூநி லாவுமிழ் எயிறுடைச் சூர்முதற் சுதனும்
பானு கோபன துறையுளை எய்தினன் பார்த்தான்.

வான மார்க்கமாக செல்லலை நீங்கி வேதங்களின் துணிபாகிய ஞானங்கட்கெல்லாம் நாயகரான ஆறுமுகப் பிரானின் அருளே துணையாகக் கொண்டு சென்று; தூய நிலாவொளி வீசும் பற்களையுடைய சூரபன்மனது மூத்த குமாரனை பானுகோபனுடைய அரண்மனையை அடைந்து அதன் சிறப்பினைப் பார்த்தருளினர். 95

பாய்ந்து செஞ்சுடர்ப் பரிதியைப் பற்றினோன் உறையுள்
ஏந்தல் காணுறீஇ விம்மிதப் பட்டவண் இகந்து
காந்து கண்ணுடை அங்கிமா முகன்நகர் கடந்து
சேந்த மெய்யுடை ஆடகன் உறையுளுந் தீர்ந்தான்.

வானத்தில் பாய்ந்து செவ்வொளி கொண்ட கிரணங்களை உடைய சூரியதேவனைப் பிடித்துக்கொண்ட வலியுடைய பானுகோபனது இருப்பிடமான அரண்மனையை வீரவாகுதேவர் கண்ணுற்று விம்மிதப்பட்டு அவ்விடம் விடுத்து நீங்கி, காந்துகின்ற கண்ணுடைய அக்கினிமுகாசூரன் இருப்பிடமாகிய அரண்மனை நகரையுங் கடந்து சென்று சிவந்த மேனியைக் கொண்ட இரணியன் என்பானுடைய இருப்பிடத்தையும் கடந்து சென்றார். 96

உச்சி யையிரண் டிருபது கரதல முடைய
வச்சி ரப்பெரு மொய்பினேன் மாளிகை வரைப்பும்
அச்செ னத்தணந் தேகிமூ வாயிரர் ஆகும்
எச்சம் எய்திய மைந்தர்தம் இருக்கையும் இகந்தான்.

பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் உடைய வச்சிரவாகு என்னும் வலிமையான அசுரனுடைய மாளிகையின் எல்லையும் விரைவுடன் ஒழுங்காகக் கடந்து சென்று அப்பால் சூரபன்மனுடைய கொடுமைகளின் மிச்சம் இது என்னும்படியான அவனது சக்களத்தி மக்களான மூவாயிரம் பிள்ளைகளின் இருப்பிட எல்லையையும் கடந்து சென்றார் வீரவாகுதேவர். 97

உரிய மந்திரத் துணைவரில் தலைமைபெற் றுறையுந்
தருும கோபன்றன் கடிமனைச் சிகரமேல் தங்கிச்
சுரரும் வாசவன் மதலையும் அவுணர்கள் சுற்றப்
பரிவு கொண்டமர் சிறைக்களம் நாடியே பார்த்தான்.

இப்பாலும் அந்தர நெறியால் சென்று சூரபன்மனுடைய உரிமை மந்திரிகளான துணைவரில் தலைமை பெற்றுள்ளவனாய் இருக்கின்ற; தருமகோபன் என்பானுடைய மிகு காவல் கொள்ளப்பெறும் மாளிகையின் கோபுர சிகரத்தின் மேல் வீரவாகுதேவர் தங்கியிருந்துகொண்டு தேவர்களும் இந்திரன் மைந்தனை சயந்தனும்; அசுரர்கள் சுற்றிக் காவல் கொள்ள மிக்க துயரத்துடன் இருக்கின்ற சிறைக்களம் எங்கிருக்கின்றது என நாடிப் பார்த்தார்.

இது முன்பு இந்திரனுக்குக் கொடுத்த வாக்கின்படி என்க. 98

கறைய டித்தொகை பிரிதலும் கயமுனி கவர்ந்து
மறையி டத்தினில் வேட்டுவர் உய்ப்பவை குவபோல்
பொறையு டைத்துயர் இந்திரன் போந்தபின் புல்லார்
சிறையி லுற்றவர் செய்கையிற் சிறிதுரை செய்வாம்.

உரல் போலும் காலுடைய யானைக் கூட்டம் பிரிந்துபோய் விடலும் அங்கு கூட்டத்துடன் போய்விட முடியாதபடி தனித்துக்கொண்ட ஓர் யானைக் குட்டியை வேடுவர் கவர்ந்து பிடித்து வந்து மறைவான ஓர் இடத்தில் வைத்திட அந்த யானைக் குட்டி கிலேசத்துடன் இருந்ததைப் போன்று தரிக்கொணாத துயரச் சுமையால் இந்திரன் ஒளித்தோடிய பின்னர் மிக அற்பராகிய அசுரர் சிறையில் அவதியுறும் தேவர் செயலில் சிறிதளவை இங்கு சொல்வோம். 99

ஆகத் திருவிருத்தம் 336

நகர் புகு படலம் முற்றிற்று.

---

1015

# சயந்தன் புலம்புறு படலம்

பரஞ்சுடர் நெடுங்கணை படுத்த பாயலில்
வருஞ்சசி அனையதோர் வானு தற்சசி
தருஞ்சிறு குமரனுஞ் சயந்தன் அவ்விடை
அருஞ்சிறை இருந்தனன் அமரர் தம்மொடும்.

சிவபிரானுடைய அம்பாகிய நாராயணக் கடவுள் யோகநித்திரை செய்கின்ற பள்ளியாகிய பாற்கடலில் முன்னர் தோன்றிய சந்திரதேவனையொத்த அழகுடைய நெற்றி கொண்ட இந்திராணி பெற்ற குமரனாகிய சயந்தன் அங்கு வீரமகேந்திரபுரத்தில் கொடிய சிறையில் தன்னுடன் சிறையாகிய தேவர்தம்முடன் இருந்தான். 1

வாலிதாம் அமரர்சூழ் வைப்பில் இந்திரன்
கோலமா கியதனிக் குமரன் வைகுதல்
மேலைநாள் அமுதெழும் வேலை தன்னிடை
நீலமார் முகிலுறை நீர்மை போலுமே.

மிக்க ஒளியுடைய மேனி உடையவரும் யாவர்க்கும் நல்லோருமாகிய தேவர் சூழும் கூட்டத்திடையில் இந்திரனின் கோலம் பெற்ற நீல நிறமுடைய தனி மைந்தனாகிய சயந்தன் இருத்தல்; முன்னாளில் அமுதம் எழுந்த பாற்கடலிடத்து நீல நிறமுடைய ஓர் முகில் படிந்திருக்கும் காட்சி போன்றது. 2

மழைபுரை அவுணர்சூழ் வைப்பில் வாலொளி
தழுவிய அமரருட் சயந்தன் மேயினன் ழி
கழிதரு பணிபல கவரச் சோர்தரும்
முழுமதி அதனிடை முயலுற் றென்னவே.

மேகத்தை ஒத்த கறுத்த அசுரர் சூழ்ந்த வைப்பிடத்தில் பிரகாசமுடைய ஒளி விளங்கும் வடிவுடைய தேவர்களுடன் சயந்தன் தங்கியிருக்கின்றான்; எப்படி போலும் எனில் கருமை நிறமுடைய கொடிய பல பாம்புகள் சுற்றிக் கௌவ அதனால் சோர்கின்ற பூரண சந்திரனிடத்து முயல் தங்கித் தோன்றுகின்ற தன்மை போன்றது. 3

வென்றிவில் லியற்றிய விஞ்சை நீர்மையால்
கன்றிய கரமெனக் காவற் சாலையில்
பொன்றிகழ் வல்லிகள் பூண்டு பற்பகல்
தன்றுணைத் தாள்களில் தழும்பு சேர்ந்துளான்.

வெற்றி தரும் வில்லைப் பயின்று உபயோகித்து வரும் வித்தையால் கன்றி வடுப்பட்ட கையினைப் போன்று காவற் சாலையில் தனது கால்மீது பொன் திகழும் விலங்குகள் பூட்டப்பெற்று பல நாள் அதனுடன் சேர்ந்திருந்தமையால் அக்கால்களில் தழும்புகள் சேர்ந்துள்ளான் சயந்தன். 4

இயற்படு மானமும் இகலும் நாணமும்
அயற்பட வெம்பழி அனலஞ் சுற்றிட
உயிர்ப்பெனும் ஓதைநின் றுயிர லைத்திடத்
துயர்ப்பெரும் பரவையூ டழுந்திச் சோருவான்.

ஒருவனுக்கு இயல்பாக உள்ள மானமும் பகைநிலையும் வெட்கமும் இவையாவும் இவர்கட்கு இல்லாது போகவும்; கொடிய அசுரரிடம் சிறைப்படுதலாலே பெரும் பழி என்னும் வெப்பியார நெருப்புச் சுற்றிக் கொள்ள; கவலை மிகுதியினாலே தோனறுகின்ற பெருமூச்சு என்னும் காற்று நின்று உயிரை அலைவு செய்திட; துயரம் என்னும் பெருங்கடலில் மூழ்கி அழுந்திச் சோருவான் சயந்தன். 5

ஆண்டருஞ் சிறையினால் வீடும் அல்லதேல்
எண்டரு முகம்பல இடருண் மூழ்கலின்
மண்டுதொல் பழியற வலிது துஞ்சுமால்
உண்டநல் லமுதினால் அவையொ ழிந்துளான்.

சகிக்க முடியாத சிறையில் அனுபவிக்கப்பெறும் துயரால் இறந்திருப்பான், அல்லதேல் எத்தனையோ பல யுகங்களாக இடரினில் மூழ்கலால் தனக்குப் பெருகுகின்ற பழியறும்படி வலிதே தற்கொலை செய்திருப்பான். ஆனால் அமுதம் உண்ட நல்மையால் மரணம் என்பதில்லாத நிலையால் இறக்கவோ தற்கொலை புரியவோ இயலாது போயினான் சயந்தன். 6

தணிப்பரும் வெஞ்சினத் தகுவர் மன்னவன்
பணிப்படு சிறைக்களம் பட்டுத் தம்முடல்
துணிப்புறு வோரெனத் துயர்கொண் டோர்கணங்
கணிப்பரு முகங்களாக் கழித்து வைகுவான்.

யாவராலும் தணிக்க முடியாத கொடிய மூர்க்கமான கோபமுடைய அசுரர் மன்னன் சூரபன்மனின் ஏவலினால் அடைத்து வைக்கப்பட்டுள்ள சிறையில் அகப்பட்டு தமது உடல் துண்டாக வெட்டப்படுவோர் துடிதுடிப்பது போன்று துயர் கொண்டு ஒவ்வொரு கணமும் கணக்கிட முடியாத பல யுகம் போன்று நேரத்தைக் கழித்துக் கொண்டிருப்பான் சயந்தன. 7

தேவியல் மரகதந் தெளித்துத் தீட்டிய
ஓவிய உருவமா சுண்ட தன்மையான்
ஆவியம் புனலரு தமருங் காவியம்
பூவியல் மென்றொடை புலர்ந்த தேயனான்.

தெய்வீகம் பொருந்திய மரகதப் பச்சையைத் தெளிவு செய்து அதனால் எழுதப்பட்ட சித்திர உருவம் அழுக்கேறியது போன்று தனது ஒளி விளங்கும் உடலமும் பல காலமாகத் தூய்மை செய்யாத தன்மையால் அழுக்கேறிய மேனிகொண்டான், இன்னும் பூவிற்கு உயிர்போன்று விளங்கும் நீர் இலாது இருக்கும் நீலோற்பல மலரினால் ஆக்கப்பட்ட மெல்லிய ஓர் பூமாலை வாடிச் சோர்ந்திருக்கும் தன்மையையும் ஒத்தான் சயந்தன். 8

வியனுகம் நூறுடன் மிக்க வெட்டினுள்
இயலுறு சிறுவரை எனினுந் துஞ்சுமேல்
மயல்சிறி தகலுமால் மரபின் வைகலுந்
துயில்கிலன் ஆதலால் அருத துன்பினன்.

மேலாகச் சொல்லப்பெறும் நூற்றெட்டு யுகங்களில் இயல்புடன் கூடிய சிறு பொழுதென்றாலும் நித்திரை செய்வனேல் அவனுடைய கவலையை சோகத்தைச் சிறிது மறந்திருப்பான். ஆனால் தேவர்க்குரிய மரபால் நித்திரை என்பதிலாதவனை படியால் ஒருகாலமும் இல்லாமல் போகாத துன்பத்தை உடையவனாயினன் சயந்தன். 9

நெஞ்சழி துன்பிடை நீட வைகலில்
துஞ்சலன் வலிதுயிர் துறப்பு மாற்றலன்
எஞ்சுமோ ரிறைவரை இமையுங் கூடலன்
விஞ்சிய தவந்துயர் விளைக்கு மாங்கொலோ.

நெஞ்சம் அழியும்படியான துன்பக் கவலை எந்நாளும் பெருகிட நாள்தோறும் நித்திரையும் இல்லாது போயிட உயிரையும் தற்கொலை செய்ய முடியாமல் போயிட எங்காகிலுமோர் இறைப்பொழுது கண்ணையும் இமைக்காமல் பாயினன். சயந்தன் இப்படியாக மனம் உடைந்து கவலை மேலிட்டு தூக்கம் இன்றி இமையும் கூடாமல் இருக்கப் பெறுகின்ற நிலையால் இது சயந்தனுக்கு தவமாகின்றது. இந்தத் தவமானது பின்னர் துயரையும் விளக்குமோ; இல்லையே.

இவ்வாறு சிறைப்பட்டு அல்லற்பட்டு சோம்பல் இன்றி துயிலை அறவே இல்லாமல் இருக்கும் தவத்தினால் போலும் எமது பெருமானைக் கனவில் காணப்போகின்றான் சயந்தன். ஆகவே விஞ்சிய தவம் துயர் விளைக்குமோ என்றார் ஆசிரியர் என்க. 10

இலங்கிய மரகதத் தியன்று பொன்குலாய்
நலங்கிளர் தன்வனப் பிழந்து நாடொறுஞ்
சலங்கெழும் அவுணர்கள் தமைக்கண் டஞ்சியே
கலங்கினன் உய்வகை யாதுங் காண்கிலான்.

பிரகாசம் கொண்டு இலங்குகின்ற மரகதப் பச்சையால் இயற்றப்பட்டு பொன் சேர்ந்து விளங்குவது போன்ற நலம் கொண்ட தனது வனப்பு இழந்து நாள்தோறும் சஞ்சலமே செய்கின்ற அசுரரைக் கண்டு பயந்து கலங்கி அதனால் உய்யும் வகை எதுவுமே எக்காலமும் சயந்தன் அறியமுடியாதபடி இருக்கின்றான். 11

சுந்தர மரகதத் தனது தொல்லுரு
வெந்துயர் உழத்தலின் வெய்து யிர்ப்பென
வந்தெழு புகைபட மறைந்து கட்புனல்
சிந்திட உடனுடன் நிகழத் தோன்றுமால்.

மிக்க சுந்தரமான அழகுடைய மரகதத்தின் பசுமை கொண்ட தனது பழைய உருவம்; கொடுந்துயரை தான் அனுபவித்தலால் ஓயாது விடுகின்ற பெருமூச்சாக வந்து படுகின்ற புகைபட்டு மறைந்து; கவலையால் அழுதபோது வந்து மேனியில் படும் கண்ணீரால் அடிக்கடி அவன் மாசுபட்ட மேனி உடனுடன் தோன்றி விளங்கும். 12

முழுதுறு தன்றுயர் முன்னி முன்னியே
இழுதையர் அவுணரும் இரங்க ஏங்குரு
அழுதிடுங் காப்பினோர் அச்சஞ் செய்தலும்
பழுதுகொல் என்றுவாய் பொத்தும் பாணியால்.

நீக்க முடியாதபடி முழுவதுமாய்ச் சூழ்ந்து கொண்ட தனது துயரை எண்ணி எண்ணி பேய் போன்ற அசுரரமே இரக்கம் கொள்ள அழுவான் அப்போது சில காவல் அசுரர் அடே சத்தம் போடாதே என பயமுறுத்தலும் அது கேட்டு சயந்தன் அழுதலும் பழுதாமோ என எண்ணி கையினால் தனது வாயைப் பொத்துவான். 13

இந்திரன் சசியோடும் இருந்த சூழல்போய்த்
தந்தனர் பற்றினர் தமரை னச்சிலர்
முந்துறு காவலோர் மொழிந்த பொய்யுரை
அந்தம தடையுமுன் அயர்ந்து வீழுமே.

அப்போது சில அசுரர் சயந்தனை இன்னும் துயருற வைத்து தாம் மகிழவேண்டி இந்திரன் இந்திராணியோடும் இருந்த இருப்பிடமே போய்ச் சில அசுரர் அவர்களைப் பிடித்துக் கொண்டு இங்கு வந்துள்ளார்கள் என்ற பொய் வார்த்தை சொல்லி முடிக்கு முன்பே துக்கத்தால் சோர்ந்து விழுவான் சயந்தன். 14

ஐந்தரு நீழலை நினைக்கும் ஆய்மலர்
தந்தமென் பள்ளியை உன்னும் தானெனப்
புந்திகொள் மங்கையர் புணர்ப்பை யுட்கொளும்
இந்திரப் பெருவளம் எண்ணிச் சோருமே.

சிறையில் இருக்கும்போது தேவ விருட்சங்களான ஐந்து மரங்களின் இன்ப நீழலிலே இருந்த இன்பத்தை எண்ணுவான். அழகிய பூக்கள் பரப்பிய பஞ்சணை மெத்தையான படுக்கையை நினைப்பான். அதனில் தன்னைப்போல் தன மீது அன்புகொண்ட காதற் கன்னியை அணைத்து முத்தமிட்டு உடலுறவால் இன்புற்றிருந்த நிலையை உள்ளத்து நினைப்பான் உண்ண உலாவ உடுப்ப அணைய எவ்வாற்றாலும் ஓங்கிய இந்திர செல்வத்தை நினைப்பான். ஐயோ இத்தனையும் விடுத்து இங்கு அடைபட்டேனே என எண்ணிச் சோருவான். 15

தன்னிணை இல்லதோர் தருவின் நீழலுள்
நன்னலந் துய்த்தியாம் நாளும் இன்புறும்
பொன்னகர் பூழியாய்ப் போங்கொ லோவெனு
உன்னிடுந் தொன்மைபோல் உறுவ தென்றெனும்.

ஐயய்யோ தனக்கு நிகரில்லாது விளங்குவதோர் தேவதருவின் நீழலில் அமர்ந்து வேண்டியதெல்லாம் பெற்று நல்ல நலமான போகங்களை அனுபவித்து நாளும் நாம் இன்புற்றிருந்த தேவ உலகமானது எரிந்து சாம்பராகிப்போமோ என்று எண்ணுவான். இனிமேல் எப்போதுதான் பழமை போன்று தேவ உலகம் வளமுடன் விளங்குமோ எனவும் சொல்வான். 16

ஈண்டையில் அவுணர்கோன் ஏவத் தானைகள்
சேண்டொடர் துறக்கமேற் செல்ல நாடியே
காண்டகு தம்முருக் கரந்து போயினர்
யாண்டைய ரோவெமை ஈன்று ளாரெனும்.

ஈண்டிருக்கின்ற அசுரர்க்கரசன் சூரபன்மன் ஏவிவிட அசுரச்சேனைகள் மிக உயர்வில் விளங்கும் சொர்க்க உலகில் செல்லலும் அதுகண்டு கலங்கிப் பயந்து காணக் கூடிய தமது உ வையும் மறைத்துக்கொண்டு ஒளித்து ஓடினரே. என்னைப் பெற்ற தாய் தந்தையர் அவர் எங்குதான் சென்றிருப்பாரோ என ஏங்குவான். 17

ஏயின துறக்கநா டிழிந்து தொல்லைநாள்
தாயொடு பயந்துள தந்தை பாரகம்
போயினன் எனச்சிலர் புகலக் கேட்டனன்
ஆயிடைப் புகுந்தன அறிகி லேனெனும்.

தான் அரசாண்டிருந்த சொர்க்க உலக நட்டை விடுத்து நீங்கி முன்னுள்ளே எனது தாயான இந்திராணியோடு தந்தையான இந்திரதேவன் பூமியின் இடததாக சென்றுள்ளான் எனச் சில தேவர் என்னிடம் வந்து சொல்லக் கேட டுளேன். ஆனல் தந்தை தாயர் போன இடத்து அங்கு என்ன நேர்ந்ததோ அதை நான் அறிய மாட்டேன் எனத் துயருறுவான். 18

அண்டர்கள் ஒருசிலர் அயர்வு கூறவுட்
கொண்டனர் ஏகினர் குறுகி எந்தையைக்
கண்டன ரேகொலோ கரந்துளார் கொலோ
விண்டன ரேகொலோ வினைவெ னேவெனும்.

தேவர்கள் ஒரு சிலர் தங்களது துயரத்தைச் சென்று எனது தந்தையிடம் சொல்லவேண்டுமென்று அங்கு போயினர். அவ்வண்ணம் சென்றோர்கள் எனது தந்தையைக் கண்டுகொண்டனரோ; அவர்கள் தநதையைக் காண முடியாதபடி ஒளித்துள்ளனரோ? அழிந்தார்களோ என்னதான் விளைந்ததோ அறியேன் என்பான். 19

சீகரம் மிக்கசூர் செயிர்த்துச் செய்திடும்
ஆகுல முழுவதும் அறைய அம்மையோர்
பாகம துடையநம் பரமன் மால்வரைக்
கேகின னேகொலோ எந்தை யென்றிடும்.

செல்வ மிடுக்கால் கோபம் மிக்க சூரபன்மன் கோபத்துடன் எங்கட்கு செய்திடும் துயரங்கள் முழுவதையும் சொல்லி முறையிட அம்மையாரைப் பாகத்து வைத்தருளிய எங்கள் பரமனின் பெரிய திருக்கைலாய மலைக்கு எங்கள் தந்தையார் போயினரோ அறியேன் எனவும் சயந்தன் சொல்வான். 20

பொருந்தலர் கண்ணுருப் பொருட்டுத் தம்முருக்
கரந்தன ரோவழீஇக் குரவர் கள்வர்பால்
பொருந்தின ரேகொலோ புவனம் எங்குமாய்த்
திரிந்தன ரேகொலோ தெளிகி லேனெனும்,

எங்கள் பகைவரான அசுரர் காணுெ வகையாக எம்து தாய் தந்தையர் தமது உருவை மறைத்துக் கொண்டனராய்ச் சென்று ஓர் இடத்தில் தப்பி இருந்தாரோ? அல்லது அவர்கள் கள்வரான அசுரரிடத்து அகப்பட்டுக் கொண்டனரோ? அல்லது ஒளித்திருப்பதற்கு வசதியான இடம் தேடி மாறி மாறி உலகெங்குமாக எனது தாய் தந்தையர் அலைந்துள்ளனரோ? இதனை நான் இன்னமும் தெளிய முடியாதிருக்கின்றேன் என்றான் சயந்தன். 21

மாண்கிளர் சூரபன் மாவின் ஏவலால்
ஏண்கிளர் அவுணர்கள் யாயைத் தந்தையை
நாண்கொடு பிணித்திவண் நல்கப் போயினர்
காண்கில ரேகொலோ கரந்த வாறெனும்.

இன்னமும் மாட்சிமை சிறந்துள்ள சூரபன்மனின் ஏவலால் கொடுமை நிலை கொண்ட அசுரர்கள் எனது தாயைத் தந்தையை கண்டுபிடித்து கயிற்றால் கட்டி சிறைப்படுத்தி கொண்டுவரப் போயினர்கள் ஐயையோ எனது தந்தை தாயை ஒளித்திருக்கும் வரலாற்றை காணமல் போயிருப்பாரோ அசுரர்கள் என்பான். 22

அன்புடை யம்மனை அத்தன் ஈங்கிவர்
வன்புடை அவுணர்கள் வரவு காண்பரேல்
துன்புடை மனத்தராய் துளங்கி ஏங்கியே
என்படு வார்கொலோ அறிகி லேனெனும்.

எனக்கு அன்புடைய அம்மாவும் அப்பனும் இங்குள்ள வன்கண்ணரான அசுரர் வரக் கண்டுகொண்டால் உடனுகத் துன்பம் கொண்ட மனத்தராய் நடுங்கி ஏங்கியே என்னபாடு படுவாரோ நான் அதை அறியமாட்டேன் என்பான். 23

பொன்னகர் கரிந்ததும் புதல்வ னுகுமென்
றன்னையிம் முதுநகர்த் தந்து தானவர்
துன்னருஞ் சிறையிடு துயருங் கேட்டபின்
என்னினைந் திரங்குமோ ஈன்ற தாயெனும்.

பொன்னகரான எமது உலகம் எரிந்து சாம்பராகினதும் மைந்தனுன என்னை இப்பெரிய நகரில் கொண்டு வந்து அசுரர்கள் நீக்கிட முடியாத சிறையில் அடைத்து வைத்து துன்புறுத்தியதும் நான் படும் அல்லலையும் ஆகிய கொடுமைகளை என் தாய் கேட்டுக்கொண்டால் அவள் என்னபாடு படுவாளோ என்னைப் பெற்றெடுத்த தாய் என்பான். 24

பன்னெடு மாயைகள் பயின்ற தானவர்
அன்னையொ டத்தனை ஆய்ந்து பற்றியென்
முன்னுறக் காண்டகு முறையின் உய்ப்பினும்
என்னுயிர் பின்னரும் இருக்குங் கொல்லெனும்.

பல பெரிய மாயைகளைப் பயின்றுகொண்ட அசுரர்கள் சென்று என்னுடைய தாயை தந்தையை ஆராய்ந்து தேடிப் பற்றிப் பிடித்துக்கொண்டு வந்து எனது முன்னுக நான் காணக்கூடிய முறையில் வைத்தால் அவரை அந்நிலையில் யான் கண்ட பின்பும்; எனது உயிர் பின்னரும் இந்த உடலில் இருக்குமோ எனவும் சொல்லுவான். 25

ஆற்றருஞ் சேல்லலுள் அழுத்தும் பான்மையான்
மேற்றிகழ் பரஞ்சுடர் விமலற் போற்றியே
நோற்றனர் முத்தியின் நுழைகுற் றார்கொலோ
பேற்றினர் இருந்தசொற் பிறந்த தில்லெனும்.

எனது தாய் தந்தையர் தாங்கிடமுடியாத துன்பத்துள் தாம் அழுந்திவரும் நிலையால் எப்பொருட்கும் மேலாகித் திகழ்கின்ற பரஞ்சுடரான முதல்வனை சிவனை நினைந்து போற்றித் தவம்செய்து முத்தியை அடைந்துகொண்டார்களோ! ஏனென்றால் எனது தாய் தந்தையர் உயிருடன் இருக்கிறார்கள் என்பதை நான் அறியக்கூடிய சொல் கேட்கவில்லையே என்பான். 26

தீங்கதிர்ப் பகையொடு செருமு யன்றநாள்
தாங்கியெற் கொண்டுழித் தந்தம் இற்றிட
ஆங்கனம் வீழ்ந்ததால் அதற்கு மேற்பட
யாங்குசென் றதுகொலோ யானை என்றிடும்.

தீய வெப்பம்தரும் சுடருடைய சூரியன் பகைவன் பானுகோபனுடன் அன்றுபோர் புரிந்தஞான்று என்னை சுமந்துகொண்டு போராடிய நான்கு தந்தமுடைய ஐராவதம் தனது நான்கு கொம்புகளும் முரிந்துபோய்விட அங்கு வீழ்ந்ததே. அதற்குப் பின்னால் அந்த யானை எங்குபோயதோ அல்லது என்னவானதோ அறிகிலேன் என்பான் சயந்தன். 27

பிறப்புறு வைகலைத் தொட்டுப் பின்னரே
இறப்புறு நாள்வரை யாவர்க் காயினும்
உறப்படு துய்ப்பெலாம் ஊழின் ஊற்றமால்
வெறுப்பதென் அவுணரை வினையி னேனெனும்.

பிறந்தநாட் தொடக்கமாக பின்னர் இறப்பு வரும்வரையும் யாருக்கென்றாலும் அனுபவிக்கவேண்டிய நிலைகள்யாவும் ஊழியனுடைய வலியின் தொடர்பாகும். ஆகவே நாம் அநுபவிக்க வேண்டியது எமக்கு ஊழின் பிரகாரம் அமைய அசுரர் எமைவருத்தினார் என்பதை நினைந்து இத்துயருக்கு நாமே காரணம் என்று நினைப்பதன்றி வினையினேன் அசுரரை என் வெறுப்பான் என்பான் சயந்தன். 28

தாவறு தொன்னகர் விளியத் தந்தைதாய்
ஆவியொ டிரிந்திட அளிய னோர்மகன்
வீவருஞ் சிறைப்பட மேலை நாட்புரி
தீவினை யாவதோ தெளிகி லேனெனும்.

குறைவிலாத முதிய எமது நகரம் அழிந்திட, தந்தைதாய் உயிரோடு ஒளித்தோட, எளியனான ஒரு புதல்வன் யான் தனித்துக்கொண்டு நீக்கிடமுடியாத சிறையில் பட்டு அவதியுற முன்நாளில் செய்துகொண்ட தீவினையாதாமோ அதனைத் தெளிந்துகொள்ள மாட்டேன் என்பான். 29

துப்புறழ் சடையினான் சூரற் கீறிலா
அப்பெரு வரத்தினை அளித்த லாலவன்
மெய்ப்பட விளிகிலன் வீடுஞ் செய்கிலன்
எப்பொழு திச்சிறை தீரும் என்றிடும்.

பவளம்போலும் சடையுடைய சிவபிரான் சூரபன்மனுக்கு முடிவிலாத ஆயுள் கொண்ட பெருவரத்தினை அழிவுருதவண்ணம் கொடுத்தருள்னமையால் உண்மையாக சூரபன்மன் அழிந்திடான். அல்லது முத்தியிலும் சென்றிடான். இதுவே நிலையானல் எந்நாளிலோ எனது சிறை நீங்கிடும் என்பான். 30

மட்டறு வெறுக்கையும் நகரும் வாழ்க்கையும்
விட்டனர் கடந்தனர் மேலை யோரென
உட்டெளிந் தகன்றிலன் உவர்பி ணிந்திடப்
பட்டன னேகொலோ பாவி யேனெனும்.

மட்டிட முடியாத செல்வமும் அரச நகரும் இன்ப வாழ்க்கையும் எங்கட்கு துன்பமாகும் என முன்னே தாய்தந்தையர் உள்ளத்தால் நாடி யாவற்றையும் விடுத்து நீங்கி ஒடிப்போயினர்கள். அவர்களைப்போன்று யானும் அன்று என் உள்ளத்திலே இதை உணர்ந்துகொண்டு ஓடிப்போகாது இருந்து அதனல் இந்த அசுரர் என்னைச் சிறைப்படுத்த கிடந்துபாடுபடுகிறேனே பாவியேன் என்பான். 31

மாற்றலன் இவ்வுயிர் வசையு ருவகை
போற்றலன் சூரவர்பாற் புகுந்த புண்கணைத்
தேற்றலன் தமியனுந் தெளிகி லன்சிறை
ஆற்றலன் ஆற்ற லனைய கோவெனும்.

எனது உயிரை மாய்க்கமுடியாமல் போனேன். எங்கட்கு தோல்வியால் வசை நேர்ந்துகொள்ளாதபடி காத்திடாமல் போனேன். எனது தாய் தந்தையர்பால் நேர்ந்த துயரத்தை அறியாதிருக்கின்றேன். நானும் என்செய்வது என தெளிகின்றேன் இலை. ஐய்யோ இந்தத் துன்பத்தை தாங்கமாட்டேன், சகிக்கமாட்டேன் என புலம்பி அழுவான், 32

துறந்ததோ பேரறந் தொலையுந் தீம்பவஞ்
சிறந்ததோ மாதவப் பயனுந் தேய்ந்ததோ
குறைந்ததோ நன்னெறி கூடிற் றேகலி
இறந்தோ மறைசிவன் இல்லை யோவெனும்.

பெரிய தருமமானது தனது நிலைகெட்டு நீங்கியதோ. எல்லாவற்றையும் தொலை செய்கின்ற தீயதான பாவம் சிறந்து பெருகிக்கொண்டதோ. தவம் என்பதன் பயனுன நன்மைகளும் தீய்ந்துபோனதோ. நல்லொழுக்கங்கள் குறைவாகிக் கொண்டனவோ கலி என்னும் துயரம் கூடிக்கொண்டதோ. வேதங்கள்யாவும் அழிந்தனவோ. அநாதிமல முத்த சித்துருவாகிய சிவனும் இல்லையோ என்பான் சயந்தன். 33

கூடலர் வருத்தலிற் குரவர் தங்களைத்
தேடினர் விரைவுடன் சென்ற தேவர்போல்
ஓடினர் புகாவகை ஒழிந்து ளோரையும்
வீடருஞ் சிறையிடை வீட்டி னேனெனும்.

பகைவரான அசுரர் எம்மை வருத்தம் செய்தலினலே தாங்கமுடியாத சில தேவர்கள் எங்கள் தாய்தந்தையரைக் காணவேண்டும் எனப் போயினர்கள். அவ்வாறு விரைவாகச்சென்ற தேவரைப்போல் இன்னும் சில தேவர் ஓடிப்போக இருந்தார்கள். அப்படிப்போக இருந்தவரையும் போகமுடியாதபடி நான் தடுத்துவைத்து அதனலே அந்த தேவரையெல்லாம் என்னுடன் நீங்கிடமுடியாத சிறைக்களத்து சேர்த்து வைத்தனே என கவலையுடன் சொல்வான். 34

அந்தியின் மறைமொழி அயர்த்து வைகினன்
சந்தியில் வினைகளுந் தழலும் ஓம்பலன்
எந்தையை வழிபடும் இயல்பு நீங்கினன்
முந்தையின் உணர்ச்சியும் முடிந்து ளேனெனும்.

மாலைக்காலத்தில் ஓதவேண்டிய வேத சுலோகங்களை மறந்து இருந்தேன். காலையில் செய்யப்படவேண்டிய கருமங்களும் அக்கினி காரியங்களும் செய்யாது விடுத்தேன். எந்தை ஈசன் சிவனை வழிபடுகின்ற இயல்பையும் நீங்கிக்கொண்டேன். முன்னே நான் கொண்டிட்ட நல் உணர்ச்சிகள் யாவுமே இல்லாது முடியப்பெற்றேன் என்பான், 35

மெய்யுயிர் அகன்றிட விளிகி லேன்எனின்
எய்யுறும் அலக்கண்நீத் தினிது மேவலன்
வையுறு நெடும்புரி வடிவம் வெந்தெனப்
பொய்யுடல் சுமந்தனன் புலம்புற் றேனெனும்.

எனது உடலில் இருக்கும் உயிர் அகன்றுபோயிட இறந்துபோகின்றேன் இல்லையன்றால்; என்னைக் களைக்கச் செய்கின்ற துயர அல்லல்களை நீக்கி இனிதுடன் வாழ்கின்றேன் இல்லையென்றால்; வைக்கோலினால் செய்யப்பெற்ற நெடிய சண்டாளப் பாவை வெந்துபோனது போன்று கவலையாலே எனது பொய்யான உடலைச் சுமந்தே புலம்பி அழுதுகொண்டேன் என்றான்.

புலம்பி அழுவதே இவ்வுடலத்துடன் நான் பொருந்திய வாழ்க்கை ஆயதே அன்றி பெறுதற்கரிய பிறவியைப் பெற்று வேறு பயன் அடைந்திலேன் என்றான் சயந்தன். 36

சொல்லுவ தென்பிற தொல்லை வைகலின்
மெல்லென ஆற்றிய வினையின் பான்மையால்
அல்லுறழ் மிடற்றின்எம் மடிக ளேயெமக்
கெல்லையில் இத்துயர் இயற்றி னானெனும்.

நான் வேறு என்னத்தை இனிச் சொல்வேனோ? முன்னாளில் நான் மெல்லெனச் செய்துகொண்ட தீவினையின் பயனாகஎமக்கு நஞ்சை அடைத்த கண்டமுடைய எங்கள் சிவபிரானே துயருறும் வண்ணம் எல்லையில்லாத இந்தத் துயரைச் செய்துகொண்டிருக்கின்றார் என்பான் சயந்தன்.

"நல்வினையும் தீவினையும் எல்லாம் முன்னே ஆனாய்"
என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரக் கருத்து இப்பாடலுடன் நோக்குக. 37

ஆவியும் உலகமும் அனைத்து மாகியும்
ஓவியுங் கருணையின் உருக்கொண் டாடல்செய்
தேவர்கள் தேவனுஞ் சிவன்மற் றல்லதை
ஏவரென் குறையுணர்ந் திரங்கு வாரெனும்.

உயிர்களும் உலகமும் அனைத்துமாய் நிறைந்து விளங்கியும் கருணையபலே தம்மையும் உணரும்படியான அருள் நிறைந்த திருமேனியுடன் ஆடலினைப் புரிந்தருளுகின்ற தேவர்கள் தேவனை சிவன் அல்லாது வேறு யார்தான் என் குறையை உணர்ந்து இரங்கி அருள் செய்வார் என்பான். 38

பெறலருந் திருவெலாம் பிழைத்துக் சூருயிர்
அறுவதும் அவுணர்கள் அவிந்து மாய்வதுஞ்
சிறையிது கழிவதுந் தீர்கி லாவசை
இறுவதும் ஒருபகல் எய்து மோவெனும்.

பெறுதற்கரிய அத்துணைச் சிறப்பு வாய்ந்த செல்வமெல்லாம் அழிந்திட சூரன் உயிர் அற்று இறந்திடுதலும் அசுரர் வேரோடு மாய்ந்து ஒழிவதும் எங்களுடைய இந்தச் சிறை நீங்கிப் போதலும் எங்கட்கு நேர்ந்துள்ள தீராத வசை தீர்ந்து போதலுமான ஒரு நாளும் வந்துசேருமோ என்பான். 39

நூலுடர் கேள்வியோர் நுணங்கு சிந்தைசேர்
கூறுடை மதிமுடிக் குழகன் தன்னருட்
பேறுடை யேனெனிற் பெருந்து யர்க்கடல்
ஏறுவன் வினையினேற் கில்லை கொல்லெனும்.

நூல்களை நன்கு கற்றுணர்ந்து கொண்ட பெரியோர்களின் தெளிந்த சிந்தை யினை சேர்கின்ற கூறுகிய இளம்பிறையை முடிகொண்ட சிவனின் அருளாயபேற்றை யான் உடையேன் என்றால் என்னை அடைந்திட்ட இந்தப் பெரிய இடரான துயர்க் கடலைக் கடந்து கரை சேர்வேன். அப்படியாக சிவன் அருளை அடைகின்ற பேறு வினையினேனுக்கு இல்லைப்போலும் என்பான். 40

இத்திறம் அளப்பில எண்ணி யெண்ணியே
மெய்துயர் உறந்துவெய் துயிர்த்து விம்மியே
அத்தலை சுற்றியே அமரர் யாவருந்
தத்தமில் இரங்குறச் சயந்தன் வைகினன்.

இத்திறமாக அளவற்ற திறங்களைச் சயந்தன் எண்ணி எண்ணியே நீங்கிடாத நித்தியமான துயரை அனுபவித்து பெருமூச்சு விட்டு விம்மி அழுது துன்புற; அந்நிலையில் அவனைச் சூழ்ந்திருக்கும் தேவர்கள் யாரும் தாங்கள் தாங்கள் துயரப்பட்டு அழுதிட சயந்தன் சிறைச்சாலையில் இருந்தான். 41

கண்டகன் உதாவகன் கராளன் மாபலன்
தண்டகன் இசங்கனே சங்க னதியா
எண்டகும் அவுணர்கள் எண்ணி லோர்குழீஇக்
கொண்டனர் சிறைக்களங் குறுகி ஓம்பினர்.

கண்டகன், உதாவகன், கராளன், மாபலன், சண்டகன், இசங்கன், சங்கன் என்னும் பெயர்களுடைய சிறைச்சாலை அதிபராக எண்ணப்பட்ட அசுரர்கள் எண்ணற்றவர்கள் கூடிக் கொண்டாராய் சிறைச்சாலையை சென்று அடைந்து காத்து நின்றார்கள் 42

ஆயதோர் காப்பினோர் அறுமு கத்தனி
நாயகன் தூதுவன் நணுகு மப்பகல்
ஏயுறு சயந்தனை இமைப்பி லாரொடு
காயெரி யாமெனக் கனன்று சுற்றினர்.

அவ்வாறு சொல்லப்பெற்ற காவற்கார அசுரர்கள் ஆறு முகமுடைய ஏகனுகிய எம்பிரான் தூதுவர் செல்கின்ற அன்றைய பகற் பொழுதில் சிறையில் அடைபட்டுள்ள சயந்தனை, இமையாத கண்ணுடைய தேவர்களை வளைந்து பற்றி கொடிய நெருப்புச் சூழ்வது போன்று கொடும் கோபத்துடன் நெருங்கிச் சுற்றினுர்கள். 43

வேறு

மன்ன தங்கோன் தன்பணி நில்லா மகவேந்தும்
மின்ன டானும் யாண்டுறு கின்றுர் விரைவாகிச்
சொன்னல் உய்வீர் அல்லதும் மாவி தொலைவிப்போம்
முன்ன ளேபோல் எண்ணலிர் உண்மை மொழிகென்றுர்.

சுற்றிய அசுரகாவலர் சயந்தனை தேவர்களை நோக்கி; நீங்கள் இப்போது மேலான அரசனுன எங்கள் சூரபன்மன் பணியில் நில்லாது தப்பி ஓடிய இந்திரனும் இந்திராணியும் எங்கு இருக்கின்றுர்கள் என்று விரைவாகச் சொன்னல் உய்வீர்கள். அல்லாது போனல் உங்கள் உயிரைத் தொலைவிப்போம். முந்திய நாட்கள் போல இன்றும் தப்பலாமென எணணுதீர்கள். உண்மையைச் சொல்லுங்கள் என்று அதிகாரத்துடன் சொன்னுர்கள். 44

என்னுங் காலைக் கேட்ட சயந்தன் எம்மாயும்
மன்னும் வானின் றேடின கண்டாம் மற்றன்னேர்
பின்னங் குற்ற தன்மையும் ஓராம் பிணிநோயுள்
துன்னுந் தீயேம் யாவ துரைத்துஞ் சூழ்ந்தென்றுன்.

என்று அசுர சிறை அதிபர்கள் சொன்னகாலையில் அதுகேட்ட சயந்தன் அவர்களை நோக்கி எமது தாயும் தந்தையான அரசனும் வான உலகில் நின்றும் ஓடினுர்கள். அதைக் கண்டோம். ஆனுல் அவர்கள் பின்னராக எங்குற்றனர் என்ற தன்மையும் உணரமாட்டோம். இங்கு சிறையில் அடைபட்டுக் கிடக்கும் தீயோங்கள் எதைத் தான் இங்கு நாம் அறிந்து சொல்வோம் என்றுர்கள். 45

விண்டோய் மன்னன் முன்னெருநாள்மெல் லியல்தன்னைக்
கொண்டே போனுன் இன்னுழி யென்று குறிக்கொள்ளேங்
கண்டோம் அல்லங் கேட்டிலம் உள்ளங் கழிவெய்தப்
புண்டோய் கின்றேம் என்சொல்வ தென்றுர் புலவோர்கள்.

வானத்தில் விளங்கும் தேவ உலக மன்னன் இந்திரன் முன்னெருநாள் இந்திராணியை அழைத்துக்கொண்டு ஓடிப்போனதைக் கண்டோமேயொழிய அவன் எவ்விடம் ஓடிப்போனுன் என்பதை அறியமாட்டோம். அப்படியாக அவன் ஒழித்திருக்கும் இடத்தைக் கண்டோமும் அல்லம். அல்லது இங்குதான் இருக்கின்றுன் என நாங்கள் கேட்டறிந்தோமும் அல்ல. எமது உள்ளம் துயரினுல் நிலைகெட்டு வருந்திட இச்சிறையில் அடைபட்டிருக்கின்றேம் நாங்கள் என்னதான் வேறு சொல்வோம் என்றுர் அங்கிருந்த தேவர்கள். 46

சொற்றுர் இவ்வா றன்னது போழ்தில் துணிவெய்தி
உற்றுர் போலும் இங்கிவர் எல்லாம் உளமொன்றி
எற்றுல் உண்மை ஓதுவர் இன்னே றெனவெண்ணுச்
செற்று ராகுங் காவலர் துன்பஞ் செய்கின்றுர்.

சயந்தனும் தேவர்களும் இன்னவாறு சொன்னார்கள். அந்த வேளையில் அது கேட்ட அசுரர்கள் ஓகோ இவர்கள் நாம் கேட்டதற்கு எல்லாருமாக இப்படிச் சொல் வதென உன்னம் ஒருமைப்பட்டு துணிவு கொண்டார்கள் போலும். ஆகவே இவர்கள் எந்த வகையால் உண்மை சொல்வார்கள் என்று எண்ணி மிகும் பகைமை உடையவ ரான அசுர காவலர்கள் தேவர்கட்கும் சயந்தனுக்கும் துன்பஞ் செய்கின்றனர். 47

வென்னஞ் சென்னக் காயெரி யென்ன மிகுதீஞ்சொல்
முன்னஞ் சொற்றே வைவர் தெழிப்பர் முரணோடுங்
கன்னஞ் செல்லத் தோமரம் உய்ப்பர் கடைகிற்பார்
சின்னஞ் செய்வார் போலுடன் முற்றுஞ் சேதிப்பார்.

அசுரகாவலர் கொடிய நஞ்சு எனும்படியாகவும் சுடுகின்ற நெருப்பு எனும்படியாக வும் சகிக்கமுடியாத கொடிய வார்த்தைகளை சொல்லிய வண்ணம் ஏசிடுவார் கள் உரப்புவார்கள் மிக்க உரனுடன் காதுகளில் தோமரத்தால் குற்றிக் குடைவார்கள். உடலை சின்னஞ் செய்வது போன்று முழு உடலையும் துண்டு துண்டாக வெட்டுவார் கள், 48

கண்டந் துண்டஞ் செய்திடும் அங்கம் கடிதொன்றிப்
பிண்டந் தன்னிற் கூட வெகுண்டே பேராற்றல்
கொண்டங் கையால் வாள்கொடு மார்பங் குடைகிற்பார்
தண்டந் தன்னான் மோதுவர் அன்னோர் தலைகீற.

வாளால் வெட்டி விடும் உடல் துணிகள் யாவும் விரைவுடன் பிண்டமாகிய உடலில் மீண்டும் பொருந்தித் தோன்றுதலும் அதுகண்டு வெகுண்டு பெரும் ஆற்றல் கொண்டு தமது வாளால் தேவர்களின் நெஞ்சைக் குடைவார்கள். அத்தேவர்கள் தலை சிதறும்படியாகத் தண்டாயுதத்தால் உச்சிமீது மோதி அடிப்பார்கள். 49

இத்தன் மைத்தாக் காவலர் யாரும் எண்ணில்லா
மெய்த்துன் பத்தைச் செய்திட மைந்தன் விண்ணோர்தங்
கொத்துந் தானும் ஆற்றல ழிகிக் குலைவெய்தி
நித்தன் றன்னை உன்னி அரற்று நிற்கின்றான்.

இத்தன்மையாக உண்மையாகவே அசுரகாவலர் யாரும் எண்ணில்லாத கொடிய துயரத்தை சயந்தனுக்கும் தேவர்கட்கும் செய்திட அதுவேளை சயந்தனும் தேவர்கள் கூட்டமும் அதைத் தாங்கிட முடியாது நொந்து உள்ளம் குலைந்து சோர்ந்து. நித்தி யப் பொருளாய் நிறைகின்ற சிவபிரானை நினைந்து அழுது புலம்பியவாறு நிற்கின் றான். 50

சீற்றத் துப்போர் பல்படை கொண்டே செறுபோழ்து
மாற்றத் துன்பம் பட்டத லான்மெய் யழிவாகி
ஈற்றுத் தன்மை சேர்ந்திலன் விண்ணோர் இறைமைந்தன்
கூற்றிற் பட்டுச் செல்லல் உழக்குங் கொடியோர்போல்.

அசுரகாவலர் கோபத்துடன் போர் புரிவதற்கு ஏற்ற பல படைகளையும் கையில் ஏந்தி சயந்தனைக் குற்றியும் வெட்டியும் மோதியும் தண்டித்தபோது சயந்தன் அந்த அந்த நேரத்து நிகழ்ச்சிகளுக்கேற்ற துன்பத்தைப் பெற்றதே ஒழிய அதனால் இறந்து முடிவாகிப்போகும் நிலையைச் சேர்ந்திலன். இது எதுபோலென்றால் இயம உலகில் சேரும் கொடியவர்கள் அங்கு அவனால் துயரப்படுத்தப்படும்போது அங்கு தாங்கொணாதபடி நிகழ்த்தப்படும் தண்டனைகளை உடலம் அழிவுறாதபடி இருந்து பெற்றுக் அனுபவிப்பார் போன்று.

இயம உலகில் சேர்கின்றபோது ஒவ்வொரு உயிருக்கும் அழிவிலாத உடம்பு ஒன்று கொடுக்கப்படும். அந்த உடம்பிற்கு எப்படி வெட்டினாலும் குற்றினாலும் நெரித்தாலும் இறவாது. அவர்கள் இந்த தண்டனைகளைப் பெற்றாலும் தண்டனையால் வருந்துவார்களே ஒழிய இறவார்கள். இதனைப்போன்று சயந்தனும் தேவர்களும் தங்கட்கு இழைக்கப்படும் கொடும் அல்லல்களை பெற்றுத் துயருற்றாரன்றி அதனால் இறப்பை அடைந்தாரல்லர். 51

நெஞ்சினில் வாலறி வெய்தினர் ஐம்புல நெறிநின்றும்
எஞ்சிய மேல்வினை பெற்றில தேயென இறும்வண்ணம்
தஞ்செயல் வெய்யோர் செய்யவும் மைந்தன் தமரோடும்
துஞ்சிலன் ஊறும் பெற்றிலன் உற்றான் துயரென்றே.

தங்களது நெஞ்சிலே மேலாம் பேரறிவினைப் பெற்றுக்கொண்ட பெரியோர்கள் ஐம்புலன்களின் வழிநின்றும் பெறுகின்ற எச்சமாகும் செயல்களின் வினைகளை அடைந்து கொள்ளாத தன்மை போன்று. தேவர்களும் சயந்தனும் இறந்துபோகும் அளவிற்கு கொடிய அசுரகாவலர் தங்களது கொடும் செயல்களைச் செய்யவும் சயந்தன தனது சுற்றமாகிய தேவர்களுடன் இறந்திடான்; அல்லது காயம் ஒன்றுதல் அடைந்திலன். ஆனால் இந்த தண்டனைகள் நிகழ்த்தப்படும் வேளைகளில் துன்பம் மட்டும் தான் பெற்றுக்கொண்டான். 52

மாடே சூழ்வார் தம்மொடு மைந்தன் சிறைபுக்கான்
காடே போனான் இந்திரன் ஏனோர் கவலுற்றார்
பாடே விண்ணோர் தம்பதம் முக்கட் பரன்நல்கும்
வீடே அல்லால் துன்பறும் ஆக்கம் வேறுண்டோ.

தேவ உலகில் தனது பக்கரில் சூழ்ந்துகொண்டு இன்புற்றிருந்த தேவர்கள் தம்முடன் சயந்தன் சிறையில் அடைபட்டான். அரசனான இந்திரன் காட்டில் ஓடி ஒளித்துக்கொண்டான். மற்று தேவ உலகில் வாழ்ந்த எவர்கள்தானும் கவலை அடைந்தார்கள். இப்படியாக எக்காலமும் இன்பம் தரும் உலகம் இதுதான் என எண்ணப்பட்ட தேவ உலகம் பாடாகிக் கெட்டு துயர்பட்டு அழிந்தது என்றால் அப்போது கெடாத, அழிவிலாத இன்பமுடைய பொருள் ஏதேனும் உண்டோ என்றால் அது தான் முக்கண் மூர்த்தியான சிவபிரான் எமக்குத் தந்தருளுகின்ற முத்தியான பேரானந்தம் என்னும் செல்வமே எழிய துன்பம் நீங்குதற்கு உரிய வழியான பொருள் வேறொன்றும் இல்லை.

உலகில் உள்ள எந்த இன்பமும் எந்த ஒரு இறப்பும் அதற்கேற்ற துயரத்துடன் முடியும் ஆதலால் துயரில்லாத ஒரு நிலை உண்டெனில் அது கேடும் ஆக்கமும் கெட்ட திருவான முத்தி இன்பம் என்க. 53

அந்தா வாளந் தோமரம் எஃகம் அடுதண்டம்
முந்தா வுற்ற பல்படை யாவும் முரிவெய்தச்
செந்தார் மார்பிற் காவலர் கையுந் திறலெஞ்ச
நொந்தார் இன்னு செய்வது நீத்தார் நுவல்கின்றார்.

இவ்வாறு தேவர்கட்கு அடித்து, குற்றி வெட்டித் துயர் புரிதலாலே தாங்கள் கையில் பிடித்த கூரிய வாள், தோமரம், வேல், கொலைத் தண்டாயுதம் மிக முதிய பல படைகள் யாவும் முரிந்து போய்விட சிவந்த பூமாலையை நெஞ்சில் அணிந்த காவலரான அசுரர் அடித்தலாலும் குற்றுதலாலும் தமது கையும் வலி கெட்டு நோவடைய தண்டித்த தாங்களே இப்பொழுது நோவடைந்து அதனால் தேவர்கட்கும் சயந்தனுக்கும் இன்னாத கொடும் செயல்களைச் செய்வதை அவர்கள் நீக்கினார்களாய் இதனைச் சொல்கின்றார். 54

வீவார் பின்னாள் அல்லது வேறோர் வினையத்தால்
சாவார் எஞ்சார் பேரமிர் துண்டார் தவமிக்கார்
நோவார் நாமிங் காற்றிய பாலான் நோய்நொந்தும்
ஆவா யாதுஞ் சொற்றிலர் என்றற் புதமுற்றார்.

இந்தச் சயந்தனும் தேவர்களும் பின்னாளில் எல்லாரும் இறப்பது போல் இறப்பவர் அல்ல. அன்றி வேறொரு செயலால் சாவார்களும் அல்ல. அல்லது எதனாலும் கெடார். ஏனென்றால் பெறற்கரிய அமிர்தம் உண்டார்கள். தவம் மிக்கு உடையவர்கள். ஆனால் நாம் இங்கு இவர்கட்கு செய்துள்ள தண்டங்களால் நோதலை அடைந்தார்கள் என்றாலுமே; ஐயையோ! ஒரு வார்த்தையும் சொன்னார்கள் இல்லையே என அற்புதங் கொண்டார்கள். 55

இன்னோர் யாரும் மைந்தனை வானோர் இனமோடு
மெய்ந்நோ வாகும் பாங்கின் அலைத்த வினையாலே
கைந்நோ வெய்தி வன்மையும் நீங்கிக் கவலுற்றார்
முன்னோர் தம்பாற் செய்த துடன்சூழ் முறையேபோல்.

இந்த அசுரகாவலர் யாவரும் சயந்தனை தேவர் இனத்துடன் இவ்வண்ணமாக அவர்களது மேனி நோவுறும் வண்ணம் வருத்திய அச்செய்கையாலே அசுரகாவலர் யாரும் தம்து கைகள் நோவடைந்து வலிமையும் நீங்கி பெருங் கவலை அடைந்தார்கள். இது எதுபோலென்றால் முன்னொருவர்க்குச் செய்த துன்பமாவது தமக்கு உடன் சூழ்ந்துகொள்ளும் தன்மை போன்றது. 56

வேறு

அத்தகைய காவல் அவுணர் அவர்க் கணித்தாய்
மொய்த் தொருசார் ஈண்டி முறைநீங் கலர்காப்ப
எய்த்த அமரருடன் இந்திரன்சேய் பண்ணவருள்
உத்தமனுங் கண்ணுதலை உன்னிப் புலம்புறுவான்.

அத்தகையதாய காவல் அசுரர்க்கு அயலிலே மொய்த்துக்கொண்டு வேறும் அசுரர் ஒருபுறமாக முறைமுறையாக நீங்கிடாது காத்திட அடி வாங்கி உதை வாங்கி சோர்ந்திட்ட தேவர் தங்களுடன் இந்திரனுடைய மகன் சயந்தன் கடவுளர்களிலே மிக உத்தமராகிய நெற்றிக் கண்ணுடைய சிவபிரானை நினைந்து புலம்புறுவான். 57

வந்திப்பவர் பவங்கள் மாற்றுவோய் எத்தேவர்
சிந்தைக்கும் எட்டாச் சிவனே செழுஞ்சுடரே
இந்தப் பிறவி இடருழப்பச் செய்தனையோ
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரே.

தேவரீரை வந்தனை செய்வாருடைய பாவங்களை மாற்றுவோனே! எத்தகைய தான பெருநிலை கொண்ட தேவர்களது சிந்தைக்கும் எட்டொணாத சிவனே, செழுஞ் சோதியே! எனக்கு தரப்பட்ட இந்தப் பிறவியை இடர் அனுபவிக்கும்படி செய்து விட்டனையே. யாவராலும் வந்தனை செய்திட்ட உன்னுடைய திருவருட் செயலின் தன்மையை யாரே கடந்துவிட்டாரே. 58

கைந்நாகத் துக்குங் கயவாய்க்கும் நாரைக்கும்
பைந்நாகத் துக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னுகிய வுயிர்க்கும் பேரருள்முன் செய்தனையால்
என்னு யகனே எமக்கேன் அருளாயே.

நீண்ட துதிக்கையை உடைய யானைக்கும் கருக்குருவிக்கும் நாரைக்கும் படமுடைய பாம்புக்கும் நூலால் பந்தரிட்ட சிலந்திக்கும் ஆகிய; தேவ கதியிலும் மனித கதியிலும் பிறப்பட்ட இந்த உயிர்களுக்கெல்லாம் மேலான அருளை நீர் செய்துள்ளீர். அப்படியான கருணையுடைய எனது நாயகனே; எமக்கு ஏன் இரங்கி அருள் செய்யாதிருக்கின்றாய்? 59

கங்கை முடித்தாய் கறைமிடற்றாய் கண்ணுதலாய்
திங்கள் புனைந்தாய் சிவனே சிவனேயென்
றிங்கு நினதடியேம் எல்லேங் களும் அரற்றல்
நங்க ளுயிர்க்குயிராம் நாயகநீ கேட்டிலேயோ.

உலகை அழிக்க வந்த கங்கையை முடி சூடினாய். உலகை அழிக்க வந்த நஞ்சை உண்டாய். சாபத்தால் அழிவு பெறும் சந்திரனைக் காத்தருள பிறையாக சூடினாய். அவ்வாறாகிய உன்னையே நினைந்து நினைந்து இங்கு உனது அடியோம் எல்லோரும் அழுது புலம்பலை எங்களது உயிர்க்குயிராகிய நாயகனே நீ கேட்கவில்லையோ? 60

பாசங்கொண் டாவி பலவும் பிணிப்போனும்
நேசங்கொண் டாங்கதனை நீக்கியருள் செய்வோனும்
ஈசன் சிவனென் றியம்புமறை நீயிழைத்த
ஆசொன்றும் இத்தீமை ஆர்தவிர்க்க வல்லாரே.

பாசத்தைக் கொண்டு உயிர்கள் பலவற்றையும் கட்டி வைப்போனும் அப்பாச பந்தங்களால் உயிர்கள் அவதியுற்று அல்லற்படுங்கால் அந்த உயிர்கள் மீது அன்பு இரக்கங் கொண்டு அந்த பாசபந்தங்களை நீக்கி மேலான இன்ப நிலையை அருள் செய்பவனும் ஈசன் ஒருவனுமே சிவனே என்று வேதங்கள் எடுத்து இயம்பும். அவ்வாறிருப்ப நீ இப்போது எமக்குச் செய்து வைத்த குற்றமே பெரிதுடைய இத்தீமையை உன்னையன்றி வேறு யார் தவிர்க்க முடியும்.

''வைச்சே இடர்களை வாய்திப்பிய மூர்த்தி'' எனும் சுந்தர்மூர்த்தி சுவாமிகள் வாக்கும் இப்பாடலுடன் ஒப்பக் காண்க. 61

நாரா யணனும்அந்த நான்முகனும் நாடரிய
பேராதி யான பெருமான் உயிர்க்கெலாம்
ஆராயின் நீயன்றி யாரே துணையாவார்
வாராய் தமியேன் உயிரளிக்க வாராயே.

உலகைக் காத்தருள்கின்ற நாராயணக் கடவுளும் அந்த பிரமதேவனும் நாடி இன்னும் அறிதற்கரிய எல்லா உயிர்க்கும் ஆதியாகிய பெருமான் நீயேயன்றி வேறு யார்தான் துணையாவார்கள். ஆகவே எம்பிரானே தேவரீர் எனது உயிரைக் காத்து இரட்சித்தருளும்படி வருவீராக. ஆதியும் அந்தமும் கடந்த நீ ஒருவனே துணையன்றி வேறு யார் எமக்குத் துணை? 62

சீற்றம் விளைத்துமுனந் தேவர் தொகைஅலைப்பான்
கூற்ற மெனவே குறுகுற்ற அந்தகனும்
ஆற்றல் இழப்பஅகல் மார்பில் முத்தலைவேல்
ஏற்றியவன் நீயன்றோ எமக்கேன் இரங்கலையே.

முன்னாளில் கோபங் கொண்டு தேவர் கூட்டத்தையெல்லாம் அலைத்து துயர் செய்யும்படி இயமன் எனும்படியாகித் தோன்றி வந்திட்ட அந்தகாசூரன் என்பானும் தனது வலி கெட்டுப் போம்படி அவன் நெஞ்சிலே கூரிய சூலப் படையால் குத்தி அவன் உடலத்தை ஏந்திச் சென்றவன் நீயல்லவோ. ஆகவே அன்றுள்ள தேவர்க்காக அந்தகனைக் கொன்ற நீ இன்று எமக்கேன் இரங்கி இந்த அசுரனைக் கொல்லாதிருக்கின்றாய்? 63

ஏங்கி அமரர் இரிந்தோட வேதுரந்த
ஓங்கு குரண்டத் துருக்கொண்ட தானவனைத்
தீங்கு பெறத்தடிந்து சின்னமாச் சிறகை
வாங்கி அணிந்தஅருள் இங்கென்பால் வைத்திலையே.

முன்னாளில் தேவர்கள் கண்டமாத்திரத்தே கலங்கி ஏங்கி ஓடும்படி தேவர்களை கலைத்துத் திரிந்த மிகப் பெரிய கொக்கு உருக் கொண்ட அசுரனை அவன் தீங்கடையும்படி கொன்றுமே அந்த அருட்செயலை அனைவரும் அறிய வேண்டி இறந்த அக்கொக்கின் ஓர் சிறகை எடுத்து உமது திருமுடி மீது சூடியருளினீரே, அந்த அருளை இன்று என்பால் நீர் வைக்கவில்லையே. 64

ஞாலத் தினையளித்த நான்முகனும் நின்றவற்றைப்
பாலித் தவனும் பிறரும் பணிந்திரங்க
ஓலக் கடலுள் உலகந் தொலைப்ப வந்த
ஆலத்தை உண்டஅருள் என்பால் அயர்தனையோ.

இப்பூமியை எல்லாம் படைத்த பிரமதேவனும் இப்பூமி தீங்கடையாத வண்ணம் காத்து தாங்கியருள் புரிவோனுமான நாராயணக் கடவுளும் ஏனைய தேவர்களும் யாரும் உம்மை வந்து பணிந்து அபயம் என ஓலமிட, பெரும் இரைச்சல் கொண்ட பாற்கடலில் தோன்றி உலகம் எல்லாவற்றையும் தொலைக்கும்படி வந்த ஆலகாலம் என்னும் நஞ்சை உண்டருளிய கருணையை என்பால் நீ வைத்திலையே.

உலகம் தொலைக்க வந்த நஞ்சை உண்டருளிய நீர் எம்மை வருத்தும் அசுரரின் தீவினையையும் நீர் ஏற்று நீக்கிடாது இருக்கின்றீரே. அதனைப் போலும் நஞ்சை உண்ட அருளை என்பால் வைத்திலையே என்றான் சயந்தன். 65

மோடி தரவந்த முக்க ணுடைக்காளி
ஓடி உலகுயிர்கள் உண்ணும் படியெழலும்
நாடி யவள்வெருவி நாணிச் செருக்ககல
ஆடி யருள்செய்த அருளிங் கணுகாதோ.

மோடியாகிய துர்க்கையிடத்துத் தோன்றிய மூன்று கண்ணுடைய காளியான வள் உலகெல்லாம் ஓடிச் சென்று உயிர்கள் எல்லாவற்றையும் உண்பேன் என்று எழுதலும் அக்காளி தேவரீரின் திருநடனச் செயல் கண்டு அஞ்சிப் பயந்து நாணி தனது கோபச் செருக்ககலும்படி அன்று ஆடியருளி உலகைக் காத்தருளிய அருள் இன்று என்பால் வந்துசேராதோ? 66

பொற்றைக் கயிலைப் புகல்புக்க தேவர்தமைச்
செற்றத் துடனடவே சென்ற சலந்தரனை
ஒற்றைத் திகிரிப் படையால் உடல்பிளந்தே
அற்றைப் பகல்அவரை அஞ்சலென்றாய் நீயன்றே.

பெரிய மலையான திருக்கைலாயத்தைத் தஞ்சமாக அடைந்துகொண்ட தேவர் களை எல்லாம் கோபத்துடன் கொன்றருளும்படி சென்ற சலந்தராசுரன் என்பானை அவன் திருக்கைலாய மலை சென்ற அன்றைய பொழுதிலேயே அவனுடைய உடலத் தை ஒரேயொரு சக்கரப் படையால் பிளந்தருளி அத்தேவர்களை அஞ்சாதே என அருளினாய் நீயல்லவோ. 67

நந்துற்ற கங்கை நதிசெறியுங் காசிதனில்
தந்திக் கொடியோன் தவத்தோர் தமைத்துரந்து
வந்துற் றிடச்சினவி வன்தோ லினையுரிந்த
அந்தக் கருணைக் களியரேம் பற்றிலமோ.

சங்குகள் ஊர்ந்து விளங்கும் கங்கையாறு செறிந்து விளங்கி இருக்கும் காசிதனில் கயாசுரன் என்னும் யானை உருக் கொண்ட கொடியவன் தபோதனரான முனிவர் களைக் கலைத்துச் சென்று கொல்லும்படி அங்கு வந்திடலும் அக்கயாசுரன் மேல் கோபம் கொண்டு அவனுடைய வலிமையான தோலினை உரித்த அந்தக் கருணைக்கு எளியேங்கள் பொருத்தமில்லாதவராயினமோ.

முனிவர்கள் செய்துள்ள தவத்தினால் அவர்களைக் காசியில் கொல்லும்படி வந்த கயாசுரனைக் கொன்றீர். ஆனால் எளியோங்கள் தவம் இல்லாதோம் என்றமையா லோ இவ்வண்ணம் முனிவர்பால் வைத்த கருணை எம்மிடம் காட்டப்படவில்லை. 68

ஈரஞ்சு சென்னி இருபான் புயங்கொண்டோர்
ஓரஞ் சரக்கர் உலகலைப்ப அன்னவரை
வீரஞ்செய் தட்ட விமல எமைஅவுணர்
கோரஞ்செய் கின்ற கொடுந்தொழிலுட் கொள்ளாயோ.

பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் கொண்டதோர் ஐந்து இராக்க தர்கள் தமது வலியால் உலகம் எல்லாவற்றையும் அலைத்து உயிர்களை வருத்த அந்த இராக்கதர்களை எல்லாரின் வலியையும் உமது வலியால் வென்று அழித்துவிட்ட நின்மலப் பொருளான சிவனே, எங்களுக்கு அசுரர்கள் கோரமான துன்பத்தைச் செய் கின்ற கொடும் செயல்களை நீர் உட்கொள்ளமாட்டீரோ? 69

பண்டை மகவான் பரிசுணராத் தக்கனைப்போல்
அண்டர்பிரான் நின்னை அறியாதோர் வேள்விசெயத்
துண்டமது செய்து சுரரையவண் தோள்முரித்தாய்
தண்ட மதனையின்று தானவர்பாற் காட்டாயோ.

முன்னொரு காலத்துள்ள ஓர் இந்திரன் உமது பெருமையை உணராத அந்த தக்கனைப் போன்று; தேவாதி தேவனே நும்மை! அறியாது ஓர் யாகத்தைச் செய்திடலும் அங்கு அந்த இந்திரனைத் துண்டாடி யாகத்தை அழித்து அங்குள்ள தேவர்களைத் தோள் முரித்தாய். அவ்வாறு தேவர்கட்கு அன்று செய்த தண்டனையை இன்று அசுரர் பால் செய்து காட்டீரோ? 70

சிந்தப் புரங்கொடிய தீயவுணர் மூவகைத்தாம்
அந்தப் புரங்கள் அடல்செய்தாய் எம்பெருமான்
சந்தப் புரங்கொண்ட தானவரோ டொன்றுகும்
இந்தப் புரமும் எரிக்குதவ ஒண்ணுதோ.

உலகினைச் சிந்திடும்படியான கொடுமை கொண்ட தீய அசுரர்கள் மூன்று வகையாக வைத்திருந்த இரும்பு, வெள்ளி பொன் என்னும் அந்தப்புரங்களை அழிவு செய்தாய். எம்பெருமானே அப்படியான அதே வலி கொண்ட அப்புரங்களில் வாழ்ந்த அசுரர்களில் ஒன்றுகின்ற இந்த சூரபன்மனுடைய வீரமகேந்திரபுரத்தையும் நெருப்பிற்கு இரையாகக் கொடுக்கக்கூடாதோ: 71

அன்பான வருக் கருளுதியாற் பத்திநெறி
என்பால் இலையால் இறையும் எவனளித்தி
நன்பால் மதிமிலைச்சு நாயகனே நல்லருள்கூர்
உன்பால் மிகநொந்தே ஓதியதென் பேதைமையே.

பெருமானே தேவரீரிடத்து உண்மை அன்பாய் இருப்பார்க்கு நீர் அருள் புரிவீர். ஆனல் எளியேனிடத்து இறையளவேனும் பத்தியாகிய மார்க்கம் இல்லை. ஆகவே எப்படி எமக்கு அருள் செய்வீர். நன்மை விளங்கிய இளம்பிறையை அணிந்த நாயகனே! எல்லார்க்குமே நல்லருளினைத் தந்தருளும் தேவரீர் பால் மிகவும் நொந்து நான் இப்பொழுது ஓதிய வார்த்தைகள் யாவும் எனது அறியாமையைக் காட்டுகின்றதே அன்றி வேறில்லை. 72

ஆனலுந் தீயேன் அழுங்க அருள்கொடுநீ
தானக நண்ணித் தலையளிசெய் தாண்டாயேல்
ஆனத இத்துயரம் ஆறுமே ஆறியக்கால்
மேனள் எனயான் துறக்கவளன் வேண்டிலனே.

இப்படியாக நான் துயருற்று வருந்திட அதனைத் தேவரீர் உணர்ந்து கொண்டு அருள் நிறைவுடன் தேவரீரே தானக( என்னிடப் எழுந்தருளி வந்து மேலான இத் துயரம் நீக்கி அன்புடன் எம்மை நல்நிலையில் மீண்டும் வைத்து ஆண்டருளினீரேல் ஒருக்காலும் தணிக்கமுடியாத எமது துயரம் ஆறும். அப்படி எமது துயரம் தணிந்தால் முன்னைப்போல நான் தேவ உலக செல்வத்தை ஒருபோதும் விரும்பேன், 73

வென்றி அரக்கரால் மேதகைய தானவரால்
அன்றி முனிவரால் அண்டரால் ஏனையரால்
ஒன்று செயவொன்றுய் உறுதுயரத் தாழ்ந்ததன்றி
என்று மகிழ்வாய் இடரற் றிருந்தனமே.

எங்களது வாழ்க்கை வெற்றி ஈட்டுகின்ற இராக்கதராலும் மேம்பாடுடைய அசுரராலும் இதுவல்லாமல் முனிவராலும் எம்மினத்தவரான தேவராலும் ஏனையோராலும் ஒன்று செய ஒன்றுய் துயரமாக விளைந்து துக்கசாகரத்து எம்மை ஆழ்த்தியதே ஒழிய என்றுதாம் நாம் மகிழ்வாகி இடரில்லாது இருந்தோம்.

போகம் நிரம்பிய தேவ உலக வாழ்வானது இன்பம் போல காணப்பட்டு நின்ருலும் உள்ளும் புறம்புமான பகையால் என்றும் இடர்ப்பட்டதேயன்றி வேறில்லை என்ருன் சயந்தன். இந்த உண்மை எமது வாழ்விலும் நாம் காணலாம். எல்லாம் இன்பமாயது என்று நினைத்த மறு நிமிடமே எதிர்பாராத விதத்தில் தீங்குகள் தலையெடுத்து நிற்பதை அநேகருடைய வாழ்வில் காணலாம்.

இம்படலத்து பெரும்பான்மையும் துயரத்தின் கொடுமையையும் அதை சகிக்க முடியாத நிலையில், மனம் அல்லலுற்று அழுங்கி பல பல எண்ணங்களைக் கொள்ளுதலையும் துயரத்திற்கு ஏதுவையும் கூறி உணர வைக்கும் பகுதிகளாகக் காணப்படுகின்றது. 74

கீற்று மதியுங் கிளர்வெம் பொறியரவும்
ஆற்றி னெடுமிலைந்த ஆதியே நின்னருளால்
ஏற்ற மிகும்அலக்கண் ஏகின் இழிந்தவளம்
போற்று கிலன்நோற்றல் புரிவேன் புரிவேனே.

ஒரு கலையுடன் கூடிய இளம் பிறையையும் படம் விரித்தாடும் புள்ளியுடைய கொடிய பாம்பையும் கங்கை நதியுடன் சேர அணிந்த ஆதியான சிவனே தேவரீரது நல்லருளால் மிகுகின்ற துன்பமான இந்தத் துயரம் போய்விட்டால் அப்பால் இழிவானதாக இருந்து இழிவான நிலைக்கு எமைக் கொணர்ந்து வைத்த இச்செல்வத்தை விரும்பேன் பின்னுல் நான் மேலான தவத்தைச் செய்வேன். செய்வேனே! 75

வாழ்க்கையில் துன்பத்தின் பெருக்கை சகிக்காது வாழ்க்கை வேண்டாம் என வெறுத்தலான நிலையைக் கூறுதல் காண்க

தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கைவெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனுல்
தொண்டேன் சிவனேநின் தொல்பதமே வேண்டுவனே.

குளிர்ந்து தித்திக்கும் தேன் சொரியும் தேவ தருக்களின் நீழல் அமர்ந்து இன்புற்று இருப்பதான வாழ்க்கையை விரும்பி அதனுலே நான் பெரும் துயரம் கொண்டேன். ஆகவே எல்லாராலும் மேலானது எனச் சொல்லப்பெற்ற தேவ பதமும் முடிவில் துயருடையது என கண்டுகொண்டேன். பிறருடைய இன்ப நிலையான பதங்களும் நிலைகள் யாவும் தொலைவுற்றுப் போகக் கண்டனனுல். ஆகவே சிவனே தேவரீரது தொண்டனேன் உம்முடைய மிகப் பழமையான சிவபதத்தையே வேண்டுவேன். 76

சிவலோக நெறியறியச் சிந்தை தந்த —என்னும் அப்பர் தேவாரம் காண்க.

அல்லற் பிறவி அலமலம்விண் ணுடுறைந்து
தொல்லைத் திருநுகருந் துன்பும் அலமலமால்
தில்லைத் திருநடஞ்செய் தேவே இனித்தமியேற்
கொல்லைத் துயர்தீர்த் துனதுபதந் தந்தருளே.

அல்லல் தருகின்ற இப்பிறவி மிகவும் துயரமானது. அதனுடன் தேவ உலகில் சிறந்திருந்து செல்வ போகங்களை அனுபவிப்பது இன்னமுமே துன்பமாகும். ஆகவே தில்லையம்பலத்துக் கூத்தாடியருளுகின்ற தேவனே, சிவனே இனிமேல் தனியேனுன எனக்கு என்னை அடைந்துள்ள கொடிய துயரை மாற்றி தேவரீரது சிவபதத்தைத் தந்தருள்வீராக. 77

ஒன்ருய் இருதிறமாய் ஓரந்தாய் ஐயைந்தாய்
அன்ரு தியின்மீட்டுந் ஐந்தாய் அளப்பிலவாய்
நின்ருய் சிவனேயிந் நீர்மையெலாந் தீங்ககற்றி
நன்ரு விகட்கு நலம்புரிதற் கேயன்ருே.

எல்லார்க்கும் முன்னே தோன்றிய ஒரு பொருளாகவும் சிவம் சக்தி என்னும் இரண்டாகவும் பின்னர் பிரமா, விஷ்ணு, உருத்திரன் மகேசுரன், சதாசிவன் என்னும் ஐந்தாகவும் யின்னர் இருபத்தைந்து மூர்த்தி பேதங்களாகவும் அன்று ஆதியாய் மீண்டும் ஐந்து பொருள்களாய் அளப்பிலாத பொருள்களாய் எல்லாமாய் அல்லவுமாய் நின்ருய் சிவனே. தேவரீர் இப்படி யாவுமாய் நிற்றல் உலகத்து உயிர்கட்கு உற்ற தீங்கினை நீக்கி நன்ருக உயிர்கட்கு எல்லாம் நன்மை புரிதற்கேயல்லவோ.

ஈசன் இருபத்தைந்து மூர்த்தி பேதங்கள்;

சந்திரசேகரர், உமாமகேசுரர், இடபாருடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப் பிரதர், சகமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாதீனர், தக்கிணமூர்த்தி, இலிங்கோற்பவர். 78

பொன்பொலியுங் கொன்றைப் புரிசடையாய் இவ்வழிசேர்
துன்ப மகற்றித் துறக்கத்துள் தாழாது
பின்பு நனிநோற்றுப் பெறற்கரிதாம் நின்னடிக்கீழ்
இன்பம் ஒருதலையா எய்தவரு ளாய்எனக்கே.

பொன் பொலியும் கொன்றை மலர் அணிந்த புரிபுன் சடையிர் இவ்வழியாக எனக்கு இச்சிறைச்சாலையில் உற்ற துன்பத்தை அகற்றி நீக்கி மீண்டும் நான் தேவ உலகில் போக இன்பங்களில் ஆழ்ந்து போகாது இவ்வுலகில் எஞ்ஞான்றும் பெறுதற்கரிதாகிய தேவரீரது திருவடிக்கீழ் பெருகுகின்ற இன்பத்தை ஒரே தன்மையாய் அடையும்படி எனக்கு அருள் செய்வீராக. 79

வேறு

என்று பற்பல இரங்கியே விடஞ்செறிந் தென்னச்
சென்று சென்றிடர் முடுரு உணர்வெலாஞ் சிதைப்ப
ஒன்றும் ஓர்கிலன் மயங்கினன் உயிர்கரந் துலையப்
பொன்றி ஞர்களின் மறிந்தனன் இந்திரன் புதல்வன்.

என்று இன்னவாறு பற்பல வார்த்தைகளைக் கூறி இரங்கி அழுது நஞ்சு செறிந்தால் ஒப்ப சயந்தனுக்கு உற்ற இடர்கள் அவனை மூடிப் பிடித்து அவனது உணர்வுகளைச் சிதைத்துவிட ஒன்றையும் உணரமுடியாதவனுய் சயந்தன் மயங்கினன். அவனது உயிர் மறைவதாகி உலைந்திடும்படி இறந்தார்களைப் போன்று மயங்கி வீழ்ந்தான் சயந்தன். 80

ஆங்க வன்றனைப் போலவே அமரரும் அழுங்கி
ஏங்கி ஆருயிர் பதைத்திட வீழ்ந்துணர் விழந்தார்
தூங்கு வீழுறு பழுமரஞ் சாய்தலுக் தொடர்ந்து
பாங்கர் சுற்றிய வல்லிகள் தியங்கிவீழ் பரிசின்.

இவ்வாறு சயந்தனைப் போலவே ஏனைய தேவர்களும் வருத்தம் மேலிட்டு அழுது சோர்வுற்று தங்கள் அரிய உயிர் பதைபதைத்திட வீழ்ந்தார்கள். இவ்வாறு சயந்தன் சோர்ந்து வீழவும் மற்றைய தேவரும் மயக்கத்தால் அங்கு வீழவும் காணப்படும் காட்சியை உற்று நினைக்கும்பொழுது தூங்குகின்ற பல விழுதுகளை உடைய ஓர் ஆலமரம் சாய்ந்து வீழ்தலும் அம்மரத்தைத் தொடர்ந்து சுற்றிநின்ற விழுதுகள் தியங்கி விழுந்த பரிசில்போல இருப்பது. 81

ஆகத் திருவிருத்தம் 417

சாந்தன் புலம்புறு படலம் முற்றிற்று.

---

# சயந்தன் கனவுகாண் படலம்

விண்ணு ளார்களுஞ் சயந்தனும் வியன்மகேந் திரத்தின்
உண்ணி லாம்பெருந் துயருடன் மாழ்கிய துணர்ந்தான்
எண்ணி லாவுயிர் தோறுமுற் றின்னருள் புரியும்
அண்ண லார்கும ரேசனும் அறுமுகத் தமலன்.

வான உலகில் வாழ்கின்ற தேவர்களும் சயந்தனும் மேலான திருவுடைய வீர மகேந்திரத்தில் உள்ள சிறைச்சாலையில் தங்கள் உள்ளத்து நிலவுகின்ற பெரும் துயரத்துடன் விழுந்தமையை உணர்ந்தான். அவன் யாரெனில் எண்ணில்லாத உயிர்தோறும் இருந்தருளி அவ்வுயிர்கட்கெல்லாம் தோன்ருத் துணையாகி இனிய அருளினைப் புரிகின்ற எல்லார்க்கும் முதல்வனுய் என்றும் குறைவிலா நிறைவாகிய ஆறு முகமுடைய நின்மலனுன கடவுள். 1

வெஞ்சி றைத்தலை மூழ்கியே அவுணரால் மெலிந்து
நெஞ்ச ழிந்திடும் அவர்தமை அருள்வது நினைந்தான்
தஞ்ச மின்றியே தணித்தயர் சிறுவரைத் தழுவி
அஞ்ச லென்றுபோற் றிடவரும் ஈன்றயாய் அனையான்.

கொடிய சிறையினிடத்து அகப்பட்டு அங்கு அடித்துத் துன்புறுத்தும் அசுரர்களால் நோவுபட்டு துன்புற்று தஞ்சமின்றி தமது உள்ளம் அலைந்து மெலிவுறும் அவரை அருள்புரிய நினைந்தான். அவன் யாரென்றால் தஞ்சம் ஒருவரும் இலாது தனியிடத்து அகப்பட்டு அழுது அயர்கின்ற ஓர் சிறு குழந்தையைச் சென்று தழுவி அழாதே அஞ்சாதே என அருள் புரிகின்ற ஈன்றெடுத்த தாயை ஒப்பான்.

ஒருவனுக்கு ஈன்ற தாயே எந்நிலையிலும் பரிவு கொள்பவள். மகனுக்கு உற்ற துயரம் கண்டு பரிந்து ஆறுதல் தருபவள். ஆனமையால் அந்த உத்தமியின் அன்பு போன்றது எம்பிரானுடைய அன்புமென ஈன்ற தாய் அனையான் எனக் கூறியருளினர்.

'பெற்றிருந்த தாயவளின் நல்லாய் நீயே'' — திருநாவுக்கரசர்
''தாயினும் நல்ல தலைவன்'' — சம்பந்த சுவாமிகள்
''தாயாய் முலையைத் தருவானே'' — மாணிக்கவாசக சுவாமிகள்
''பெற்றிருந்த தாயவளின் நல்லார் போலும்' — யோக சுவாமிகள்

என்னும் இறைவனின் தாயினும் இனிய அருளினைப் பல பெருமக்கள் போற்றியருளல் காண்க. 2

இனிய சீறடிக் குமரனிச் செந்திவந் திமையோர்
வினைகொள் கம்பலை அகற்றுவான் இருந்திடும் விமலன்
தனது ணர்ச்சியின் றுகியே அவசமாஞ் சயந்தன்
கனவின் முன்னுற வந்தனன் அருள்புரி கருத்தால்.

தொண்டர் கண்டு அண்டி மொண்டு உண்டு இன்புற்று இருக்கின்ற இனிய அழகிய திருவடிகளை உடைய குமரக்கடவுள் இந்த திருச்செந்தூரில் தேவர்களின் வினை விளைவுடைய துயரத்தை அகற்றியருள நினைந்து வீற்றிருந்தருள்கின்ற நின்மல சோதியானவர் சிறைச்சாலையில் தனது உணர்ச்சிகள் எதுவும் இல்லாதபடி சோர்ந்து வீழ்ந்த சயந்தனுடைய கனவிலே அவன் முன்பாக வந்தருருளினர் சயந்தனுக்கு அருள் புரிகின்ற கருத்துடையவராய். 3

வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் வீசிகம்
மாறி லாதவேல் அபயமே வலமிடம் வரதம்
ஏறு பங்கயம் மணிமழுத் தண்டுவில் இசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள் அடைந்தான்

வலிமை கொண்ட கோழிக் கொடியும், வச்சிராயுதம், அங்குசம், அம்பு, மாறிலாத அருளுடைய வேல், வலக்கை அபயம், இடக்கை வரதமாகவும். சங்கு, தாமரை இரத்தின மழுவாயுதம், தண்டு, வில், இவைகளை ஏந்திய பன்னிரண்டு கையுடன் ஆறு முகமும் கொண்டு ஒளிக்கும் ஒளியாகி அழகான மேனி நிறைந்த பெருமான் சயந்தனுடைய கனவில் வந்தருளினர்.

பன்னிரு கரத்தில் அபய வரத நிலை கொண்ட இரண்டு திருக்கரம் நீங்கலாக மற்றைய பத்திலும் கொடி, வச்சிராயுதம் அங்குசம், அம்பு, வேல். சங்கு தாமரை, இரத்தினமழு, தண்டு, வில். 4

தந்தை யில்லதோர் பரமனைத் தாதையாவுடைய
கந்தன் ஏகியே அனையதன் னுருவினைக் காட்ட
இந்தி ரன்மகன் உளப்படும் யாக்கையுள் இருந்த
முந்து கண்களாற் கண்டனன் தொழுதனன் மொழிவான்.

தனக்கொரு தந்தையில்லாத பரம்பொருளாகிய சிவபிரானையே தனக்குத் தந்தையாக உடைய முருகப்பிரான் இவ்வாறு சயந்தனுடைய கனவில் போந்தருளிச் சயந்தனுக்கு பேரெழிலுடன் கூடிய தமது அருள் நிறைந்த உருவினை காண்பித்தருள அவ்வேளை இந்திரனுடைய மகன் சயந்தனுடைய உள்ள உடம்பில் இருந்திடுகின்ற கண்ணுக்கும் முற்பட்ட கண்ணுயிருக்கின்ற கண்களால் எம்பிரானுடைய அருட்கோலத்தைக் கண்டான். கை கூப்பித் தொழுதான். மொழிந்தருளுகின்றான். 5

தொண்ட னேன்படும் இடுக்கணை நாடியே தொலைப்பான்
கொண்ட பேரருள் நீர்மையிற் போந்தனை குறிக்கின்
விண்டும் அல்லைஅப் பிரமனும் அல்லைமே லாகும்
அண்டர் நாதனும் அல்லைநீ ஏவர்மற் றருளே.

தொண்டனேன் படுகின்ற வேதனையான துயரைக்கண்டு அதனைக் தீர்த்தருளும் பொருட்டாக திருவுள்ளத்துக் கொண்டருளிய பெரும் அருள் நீர்மையில் வந்துள்ளீர் போலும். உம்மைக் குறித்து நோக்கினால் நீர் விஷ்ணுமூர்த்தியும் அல்லை. அந்தப் பிரமனும் அல்லை. எல்லார்க்கும் மேலாகிய தேவனாகிய சிவனுமல்லை. தேவரீர் யாராகுமோ என்பதைச் சொல்லியருள்வீராக. 6

என்ற காலையில் அறுமுகப் பண்ணவன் யாம் அக்
கொன்றை வேணியின் மிலைச்சிய பரஞ்சுடர் குமரன்
உன்றன் அல்லலும் இரக்கமும் மையலும் உணர்ந்து
சென்ற னம்மெனக் கூறியே பின்னருஞ் செப்பும்.

என்று சயந்தன் மொழிந்த காலையில் ஆறு முகமுடைய கடவுள் சயந்தனை நோக்கியருளி யாம் அந்த கொன்றை மாலையைச் சடையில் அணிந்தருளிய பரஞ்சுடரான சிவத்தின் திருக்குமரன். உன்னுடைய அல்லலும் அழுகையும் மயக்கமும் உணர்ந்து இங்கு வந்தனம் என்று கூறியருளிப் பின்னரும் மொழிந்தருளுவார். 7

நுந்தை தன்குறை நுங்குறை யாவையும் நுவன்று
வந்து நம்தமை வேண்டலும் வரம்பில்சே னையோடும்
இந்த ஞாலத்தின் எய்தியே கிரவுஞ்சம் என்னும்
அந்த வெற்பையுந் தாரகன் தன்னையும் அட்டாம்.

உனது தந்தை இந்திரன் தனது குறைகள் உனது குறைகள் யாவையும் விண்ணப்பித்து வந்து எம்மை வேண்டியருளலும் யாம் அளவு காண்பரிய சேனைகளுடன் இந்த உலகில் வந்தருளி; கிரவுஞ்சம் என்னும் அந்த மாய மலையையும் தாரகாசுரனையும் அழிவு செய்தோம். 8

அனைய வன்றனை அட்டபின் செந்திவந் தமர்ந்தாம்
வனச மீமிசை இருந்திடு பிரமனும் மாலும்
உனது தாதையும் அமரரும் நம்வயின் உறைந்தார்
இனையல் வாழிகேள் நுங்கையும் மேருவின் இருந்தாள்.

அவ்வாறாக தாரகனை அழித்த பின் திருச்செந்தூரில் வந்து அமர்ந்தருளினோம். அவ்விடத்து தாமரை மீது இருந்திடுகின்ற பிரமதேவனும் நாராயணக் கடவுளும் உனது தந்தையான இந்திரனும் தேவர்களும் எனதுடனாக அங்கு இருக்கின்றனர். மனதில் ஏதும் கவலையுறாதே. நீ வாழ்வாயாக. உன் அன்புடைய நற்றாயும் மேரு மலையில் இருந்தாள். 9

வீர வாகுவாந் தூதனை யாமிவண் விடுத்தேஞ்
சூரன் மைந்தன் அங் கொருவனைப் பலரொடுந் தொலையா
நேரி லாதஇக் கடிநகர் அழித்து நீறாக்கிப்
பாரின் மாலையின் மீண்டிடப் புரிதுமிப் பகலின்.

யாம் இப்போது வீரவாகு என்னும் தூதனை இந்த இடத்து விடுத்தோம். அவன் தூதாக இங்கு வந்து சூரபன்மனின் மகன் ஒருவனை பல அசுரருடன் தொலைத்துவிட்டு; தனக்கு நேரிலாதபடி விளங்கிடுகின்ற இந்த பெருங் காவலுடைய நகரத்தை அழித்து நீறாக்கிவிட்டு மீண்டும் திருச்செந்தூரிடத்து இன்று மாலையில் வந்திடும் படி செய்விப்போம் என்பதை அறிவாய். 10

செல்லும் இப்பகல் கழிந்தபின் நாளையே செந்தி
மல்ல லம்பதி நீங்கிஇந் நகர்க்கயல் வைகிச்
சொல்லும் ஐந்திரு வைகலின் அவுணர்தந் தொகையும்
அல்லல் ஆற்றிய சூரனும் முடிந்திட அடுதும்.

இன்று செல்கின்ற இப்பகற்பொழுது கழிந்துவிட்ட பிற்பாடு நாளைக் காலையிலே யாம் திருச்செந்தூர் என்னும் அழகிய மேலான பதியை விடுத்து நீங்கி எழுந்தருளிவந்து இந்த நகருக்கயலே வைகியருளி சொல்லப்பெறும்பத்து நாட்களில் அசுரர் தொகையையும் உங்கட்கு அல்லல் செய்திட்ட சூரபன்மனையும் முடிவாயிட அழிப்போம். 11

அட்ட பின்னரே நின்னைவா னவருடன் அவுணன்
இட்ட வெஞ்சிறை நீங்கிநுந் திருவெலாம் ஈதும்
விட்டி டிங்குன தாகுலம் என்றனன் வினைதீர்ந்
துட்டெ ளிந்தவர் போதத்தின் உணர்வுமாய் உறைவோன்.

இவர்களை அழிவு செய்த பின்னரே உன்னை தேவருடன் சூரன் இட்டு வைத்த கொடிய சிறையை நீக்கி; உமது இழந்துபோன திரு எல்லாவற்றையும் கொடுத்தருள்வோம். இங்கு உனது கவலைகள் யாவற்றையும் விட்டிடுவாயாக என்று அருள் செய்தார் யார் எனில் உலகில் வினைகள் யாவினின்றும் நீங்கப்பெற்று உள்ளத் தெளிவு கொண்ட பெரியோர்களின் ஞானத்தின் உணர்வாகி உறைகின்ற பகவான்.

தீமைக்ளாய வினைகளைக் களைந்து தன்மைதரு அருள் நெறியே நாடுகின்ற பெரியோர்களின் உணர்வாகி நிற்போன் என்பதனை ''அறிவால் அறிந்து இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே'' என அருணகிரியார் வாக்காலுணர்க. 12

ஐயன் ஈங்கிவை உரைத்தவை கேட்டலும் அகத்துள்
மையல் மாசிருள் அகன்றன புகுந்தன மகிழ்ச்சி
மெய்யு ரோமங்கள் சிலிர்த்தன உகுத்தன விழிநீர்
சைய மேயென நிமிர்ந்தன சயந்தன தடந்தோள்

எங்கள் ஐயன் இங்கு இவற்றை உரைத்தருளியிட அதனைச் சயந்தன் கேட்டலும் சயந்தனுடைய உள்ளத்துள் கொண்ட மயக்கமான கொடிய இருள் அகன்றது. அது வன்றி மகிழ்ச்சி வந்து புகுந்துகொண்டது. மேனியில் உள்ள உரோமங்கள் சிலிர்த்தன. கண்களினின்றும் கண்ணீர் பெருகியது. பெரும் மலைபோன்ற சயந்தனுடைய விசாலித்த தோள்கள் நிமிர்ந்தன. 13

பற்றி ஞல்வரும் அமிர்தினை எளிதுறப் படைத்துத்
துற்று ளோரெனத் தண்ணெனத் தனதுமெய் சுருதி
கற்ற கற்றன பாடினுன் ஆடினுன் களித்தான்
மற்ற வன்பெறும் உவகையின் பெருமையார் வகுப்பார்.

தான் விரும்புகின்ற அமிர்தத்தை இலேசாகக் கிடைக்கப்பெற்று அதனை உண்டு கொண்டோரென தனது உடலம் குளிரப்பெற்று மகிழ்ந்து கொண்டு வேதங்கள் யாதைதான் கற்றிருந்தானோ அவைகளைப் பாடினுன், ஆடினுன், பெரும் களிப்புற்ருன். மற்று இப்பொழுது சயந்தன் பெற்றுக்கொண்ட உவகையின் பெருமையை யார்தான் எடுத்தோத முடியும்.

காண்பரிய ஆனந்தக் கடலாகிய பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள் களுமாய் தித்தித்திருக்கும் அமுதினைக் கண்டான். கனவில் கண்டதைக் கண்ணுரப் பருகினுன், ஆடினுன், பாடினுன். அவன் உற்ற இன்பநிலையை ஆர் எடுத்து ஓதிட முடியும். 14

வேறு

நிகழ்ந்திடு மறவியை நீங்கி இவ்வகை
மகிழ்ந்திடும் இந்திரன் மதலை எம்பிரான்
திகழ்ந்திடு பதமலர் சென்றி றைஞ்சியே
புகழ்ந்தனன் இனையன புகல்வ தாயினுன்.

தனக்கு அசுரரால் இழைக்கப்பட்ட துயரத்தை நீங்கி; இவ்வகை மகிழ்ந்திடுகின்ற இந்திரன் குமரன் சயந்தன் எம்பிரானுடைய திழந்திடுகின்ற பாதமலர் முன்பு சென்று வணங்கியருளிப் புகழ்ந்து நின்று இவற்றைச் சொல்வதாயினுன். 15

நொய்யசீர் அடியரேம் நோவு மாற்றியே
ஐயநீ வலிதுவந் தளித்தி யானுரை
செய்வதும் உண்டுகொல் சிறிது நின்கணே
கையடை புகுந்தனங் காத்தி யாலென்ருன்.

மிகவும் நொய்துளோமாகிய சீருடைய அடியவர்களின் நோவை நீக்கியருளி ஐயனே தேவரீர் வலியவே எழுந்தருளி வந்து காத்தருளினீர். அவ்வாறு அடியோமை அன்பால் ஆர்த்து ஆளாக்கிக் கொண்டருளிய கருணையுடைய உமக்கு நாம் ஏதேனும் எடுத்து உரை செய்வதும் உண்டோ. இலேயே. பெருமானே! அடியேங்கள் சிறிது தேவரீரிடத்து அடைக்கலமாகப் புகுந்தோம் காத்தருள்வீராக என்ருன். 16

சயந்தன்மற் றிவ்வகை சாற்ற யாரினும்
உயர்ந்திடு பரஞ்சுடர் ஒருவன் கேட்குறு
அயர்ந்தநுங் குறையற அளித்தும் திண்ணமென்
றியைந்திட மேலுமொன் றிசைத்தல் மேயினன்.

சயந்தன் இவ்வகை கூறியருளலும் அவ்வேளை யாரினும் உயர்ந்திட்ட ஒரு பொருளாகும் பரஞ்சுடர் ஒளியான முருகப்பிரான் கேட்டருளி; சயந்தனே கேள் வேதனையுற்ற உங்கள் குறைகள் யாவும் நீங்கிட நாம் காத்தருள்வோம்! இது திண்ணம் என்று நீவிர் நினைந்து கொள்வதற்காக இன்னமும் ஒன்று கூறியருள்வோம் என எம் பிரான் இசைத்தருள்கின்றார். 17

இந்நகர் குறுகயாம் ஏய தூதுவன்
நின்னையுஞ் சுரரையும் நேர்ந்து கண்ணுறீஇ
நன்னயங் கூறியே நடப்ப உய்க்குதும்
அன்னதுங் காண்கென அருளிப் போயினன்.

இந்த நகரை அடையும்படி நாம் செலுத்திய தூதுவன் உன்னையும் தேவரையும் நேராக வந்து கண்டு நல்ல நயமான தேறுதல் வார்த்தையைக் கூறியருளிச் செல்ல நாம் விடுப்போம். அதையும் நீங்கள் யாரும் காணுங்கள் என அருள் செய்து சயந்தன் கனவில் நின்றும் மறைந்தருளிப் போயினர். 18

படைப்புரு தயர்ந்திடு பங்க யன்கனு
அடுத்துனக் கருள்செய ஆறெ டைவரை
விடுத்துமென் றேகிய விமலன் போலவே
இடர்படு சயந்தன்முன் இவைசொற் றேகினன்.

முன்னொருநாள் தனது படைப்புத் தொழில் கைகூட முடியாதபடி அயர்ந்து போன பிரமதேவனுடைய கனவில் தோன்றி பிரமனே! உன்னுடைய படைப்புத் தொழில் கைகூடும்படி உன்னை அடுத்து உனக்கு அருள் புரிந்திட பதினொரு உருத்திரரை விடுப்போம் என பிரமன் கனவில் கூறியருளி மறைந்திட்ட சிவபிரானைப் போன்றுதான் இங்கு இடர்ப்பட்ட சயந்தன் முன்பாக இவைகளைச் சொல்லி மறைந் தருளினர் எமது ஆறுமுகப்பிரான்.

உலக பந்தங்களில் அல்லலுறும் உயிர் அந்த பந்தமான அசுரப்பிடியால் வருத்தமுற்றுக் கலங்கும்போது ஈசன் தனது அருள் மூலமாகத் தான் உய்யக் கொள்பவன். இறை உணர்ச்சி இன்றி பிரமன் படைத்தான். படைத்தவை கைகூடவில்லை. கலங்கினன். கலங்கிய பிரமன் கனவில் தோன்றி பதினொரு உருத்திரரை உன்பால் அனுப்பி உன் செயல் கைகூடும்படு அருள்வோம் என அருள் புரிந்தார் சிவன். அதன் பிரகாரம் பிரமன் தன்பாட்டில் தேறுதல் அடைந்தான். இதே போல் அசுரர் சிறையில் அவதியுற்றார்கள் சயந்தன் முதல் தேவர்கள். அவர்கள் கனவில் காண்பதற்கு இனிய ஆறுமுகமுடைய கோலத்துடன் தோன்றி அருள் வடிவான வீரவாகுதேவனை உன்பால் அடையச் செய்து தேறுதல் கூறித் தேற்றி வைக்கின்றேன் என்றார். வீரவாகுதேவர் அறிவு சொரூபமாயவர். எப்போதாகுதல் ஒருவனுக்கு நித்தியப் பொருளாய ஈசன் உணர்வு தோன்றுவதுதான் அவன் இப்பிறவியில் பெறக்கூடிய மேலான பேறு ஆகும் என்பது இப்பாடலால் புலனாகின்றது

அறிவுடையர் எல்லாம் உடையர் எனவே
செறிவு பெறச் சொன்னார் தெளி.—யோகசுவாமிகள் வாக்காலும் உணர்க. 19

ஏகிய காலையின் இறந்து முன்னரே
போகிய புலனெலாம் பொறியில் தோன்றலும்
ஆகிய கனவினை அகன்று பைப்பய
நாகர்கோன் திருமகன் நனவின் நண்ணினான்.

எம்பிரான் மறைந்தருளிய பிற்பாடு முன்னரே துக்க மிகுதியால் மங்கிப்போன புலன்களெல்லாம் அறிவினிடையாகத் தோன்றலும் தான் கொண்ட கனவு நிலையைச் சயந்தன் நீங்கி மெல்ல மெல்ல தேவர்க்கு அரசனான இந்திரன் மகன் சயந்தன் நனவான உலக நிலையில் சேர்ந்தான்.

எல்லார்க்கும் கனவுநிலை, அறியும் பொறிகளில் புலன்கள் ஒடுங்கிய பின்னர் ஏற்படும். அதே போல சயந்தனுக்கும் கனவு நிலையாவது மயக்கத்தால் தோன்றுதலும் அந்நிலையில் எம்பிரானைத் தரிசித்து அருள் பெற்ற பின்னர் கனவு நிலை நீங்கி விழிப்புணர்ச்சி கூடிக்கொண்டான். 20

வேறு

தந்தி நஞ்சந் தலைக்கொளச் சாய்ந்தவர்
மந்தி ரத்தவர் வாய்மைவந் துற்றுழிச்
சிந்தை மையலைத் தீர்ந்தெழு மாறுபோல்
இந்தி ரன்தன் மதலை எழுந்தனன்.

நாகபாம்பினது நஞ்சானது ஒருவனின் தலையில் சென்று தாக்கலும் அதனால் மயங்கி வீழ்ந்தவன் மந்திரவாதியினுடைய மந்திர சத்தி வந்து சேர்ந்துள்ளபோது மனமயக்கம் தீர்ந்து எழுதல் போன்று இந்திரனுடைய மைந்தன் சயந்தன் எழுந்தனன். 21

நனவு தன்னிடை நண்ணிய சீர்மகன்
கனவின் எல்லையிற் கண்டன யாவையும்
நினைவு தோன்றினன் நெஞ்சங் குளிர்ந்துநம்
வினையெ லாமிவண் வீடிய வோவென்றான்.

விழித்தெழுந்து சுயமான நனவு நிலையில் சேர்ந்துகொண்ட சீருடைய இந்திரன் மைந்தனான சயந்தன் தனது கனவின்போது தான் கண்ட அற்புத நிலை யாவையும் நினைவிலே தோன்றக் கொண்டனன். தனது நெஞ்சமானது குளிர்ந்து எனது வினை எலலாம் இவ்விடத்து நீங்கி அழிந்துபோனதோ என்றான். 22

கவலை தூங்கிக் கடுந்துயர் நீரதாய்
அவல மாகிய ஆழியில் ஆழ்ந்துளான்
சிவகு மாரன் திருவருள் உன்னியே
உவகை யென்னும் ஒலிகடல் மூழ்கினான்.

சயந்தன் மேன்மேலும் பெருகி நின்ற கவலையால் தூங்கப்பெற்று கடும் துயரமாகிய சமுத்திரத்தில் ஆழ்ந்துபோனவன் இப்பொழுது சிவகுமாரனுடைய திருவருட் பேற்றை நினைந்து ஆனந்தம் என்னும் ஒலியுடைய கடலில் மூழ்கியவனானான்.

துன்பமான கடலில் ஆழ்ந்துபோன சயந்தனுக்கு அதே துக்க சாகரம் சிவகுமாரனின் திருவருட் கடாட்சத்தால் இன்பசாகரமாக மாறியது. 3

அனைய காலை அயர்ந்திடு வானுளோர்
கனவு தோறுங் கடிதுசென் றிந்திரன்
நனைய னுக்குமுன் சாற்றிய வாறுசொற்
றினைய லீரென ஏகினன் எம்பிரான்.

அவ்வாறாகிய காலையில் முன்னர் சயந்தனைப் போன்று துயரத்தால் அயர்ந்து போன தேவர்களின் கனவு தோறும் எங்கள் கடவுள் கடிது சென்றருளி, இந்திரன் மைந்தன் சயந்தனுக்கு கூறியருளிய அந்தவாறே கூறியருளி தேவர்களே! வருந்தாதீர் என அபயம் கொடுத்தருளி நீங்கினார் எம்பெருமான். 24

அம்மென் கொன்றை அணிமுடிக் கொண்டவன்
செம்ம லேகலுந் தேவர்க ளுவொரீஇ
விம்மி தத்தின் விழித்தெழூஉத் தேயிரீஇத்
தம்மி லோர்ந்து தவமகிழ் வெய்தினார்

அழகிய மிருதுவான கொன்றை மலரை மாலையாக தமது சடைமீது அணிந்து கொண்ட எமது சிவபிரான் திருக்குமாரர் தேவர்சுட்கு அருள் செய்து மறைந்துபோதலும் தேவர்கள் யாரும் கனவின் நீங்கி விம்மிதத்துடன் விழித்தெழுந்து தாம் கண்டுகொண்ட ஆறு முகமும் பன்னிரண்டு கையுமுடைய அற்புதக் கோலத்தை நினைந்தவாறு இருந்துகொண்டு என்றும் காணாத இக்காட்சி கனவில் காணும் பேறு பெற்றது இதுகாறும் நாம் செய்துள்ள தவமே என மகிழ்ந்தருளினார். 25

சில்லை வெம்மொழித் தீயவர் கேட்பரேல்
அல்லல் செய்வரென் றஞ்சிக் கனாத்திறம்
மல்லன் மைந்தன் மருங்குறு வார்சிலர்
மெல்ல அங்கவன் கேட்க விளம்பினார்.

அற்ப மனத்துடன் கொடுமொழி பேசுகின்ற தீயவரான அசுரர் தாங்கள் பேசுவதைக் கேட்பரேல் தமக்கு மீண்டும் துயரம் செய்வார்கள் என்ற அச்சத்தால் கனவின் அற்புதத் திறத்தை பருத்த தோள் கொண்ட இந்திரன் மைந்தனான சயந்தனுடைய பக்கரில் நின்ற சில தேவர் மெல்ல சயந்தன் அறியும்படி கூறியருளினார். 26

வேறு

அண்டர்கள் மொழிதரும் அற்பு தத்தையுட்
கொண்டனன் அங்கவை குமரன் முன்முனங்
கண்டது போன்றிடக் களித்துப் பாரெல்லாம்
உண்டவ னுமென உடலம் விம்மினான்.

தேவர்கள் மெதுவாக மொழிந்தருளிய அற்புத வார்த்தையைக் கேட்டு உளத்தில் கொண்ட சயந்தன்; அவர்கள் கூறியது யாவும் தான் முன்னர் கண்டதுபோன்றிருத்தலும் பெருமகிழ்வாகிப் பூரித்து இப்பூமியெல்லாம் உண்டவரான விஷ்ணுமூர்த்தி கொண்ட பருமனான வடிவம் போன்று தனது உடலம் விம்மினான் 27

அறுமுக முடையதோர் ஆதி நாயகன்
இறைதரும் உலகெலாம் நீங்கல் இன்றியே
உறைவதுங் கருணைசெய் திறனும் உன்னியே
மறைமுறை அவனடி வழுத்தி வைகினன்.

ஆறு முகங் கொண்டு விளங்கும் ஒருவனாகிய ஆதிநாயகனே மேன்மை பூண்ட உலகமெல்லாம் நீங்கல் இன்றி உறைந்தருளுவதும் தன் அடியார்க்கு அருள் புரியும் கருணையின் திறனும் நினைந்து வேதமுறையாக அவனது திருவடிகளைத் தோத்திரம் செய்திருந்தான் சயந்தன். 28

சயந்தன் கனவுகாண் படலம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 445.

---

## வீரவாகு சயந்தனைத் தேற்று படலம்

இத்திறம் அமரரொ டிந்தி ரன்மகன்
அத்தலை இருத்தலும் அனையர் யாவரும்
மொய்திடு சிறையக முன்கண் டானரோ
வித்தக அறிவனும் வீர வாகுவே.

இத்திறமாக தேவருடன் இந்திரன் மைந்தனான சயந்தன் அத்தலை ஆறுமுகப் பிரானின் திருவருள் பெற்று இருத்தலும்; அங்கு சயந்தனும் தேவரும் இருந்த சிறைக் களம் எங்கிருப்பது என தருமகோபனுடைய மாளிகையின் கோபுர உச்சியில் நின்றும் நாடிப் பார்த்த வித்தக அறிவுடைய வீரவாகுதேவர் தமக்கு முன்னகை அசுரர் யாவரும் மொய்த்து காவல் இருந்த சிறைக்களம் இருப்பதைக் கண்டருளினர். 1

வேறு

மாகண்டம் ஒன்பான் புகழுந் திறல்வாகு அங்கண்
ஆகண்டலன் மைந்தனை விண்ணவ ராயி னோரைக்
காய்கண்ட கராமவு ணத்தொகை காத்தல் கண்டான்
பேய்கண்ட செல்வந் தனைக்காத் திடும்பெற்றி யேபோல்.

ஒன்பது பெருங் கண்டங்கள் கொண்ட உலகம் புகழும் அத்துணைத் திறலு டைய வீரவாகுவேர் அவ்விடத்து இந்திரன மைந்தன் சயந்தனை தேவர்களாயினோரை காய்ந்து துன்புறுத்தும் கொடிய அசுரர் காவல் செய்வதைக் கண்டார். அசுரர்கள் தேவர்களைச் சிறையில் அடைத்துக் காத்திருந்தமை எப்படியெனில் பேயானது தான் கண்ட செல்வத்தைத் தனக்கு ஏதும் பிரயோசனமின்றி காத்திருந்த அப்பெற்றிமை போன்றது. 2

கண்ணோட லின்றித் துயர்வேலியிற் காவல் கொண்ட
எண்ணோர் எனைக்கண் டிலராயுணர் வின்றி மாழ்க
விண்ணோர்கள் காணத் தமியேன் செலவேண்டு மென்றான்
மண்ணோர் அடியால் அளக்குந்தனி மாயன் ஒப்பான்.

தமது கண்ணனது ஒருக்காலும் மூடுதல் இல்லாமல் துயரம் என்னும் வேலி போல் தேவர்களை வைதும் வருத்தியும் காவல் கொண்டிருக்கின்ற பகைவரான அசுரர்; நான் தேவர்கள் பால் செல்வதை காணாது போய் அவர்கள் உணர்ச்சிகள் யாவும் மாண்டிடவும்; ஆனால் அந்த அசுரரின் காவலில் இருக்கும் தேவர் என்னைக் கண்டிடவும் நாம் செல்ல வேண்டும் என்றார் வீரவாகுதேவர். அவர் யாரெனில் இந்த மண்ணுலகை ஒரு அடியாலே அளந்து காட்டிய நாராயணக் கடவுளை ஒத்திருப்பவர். 3

ஓங்கார மூலப் பொருளாய் உயிர்தோறு மென்றும்
நீங்கா தமருங் குமரேசனை நெஞ்சில் உன்னி
யாங்காகுவ தோரவன் மந்திரம் அன்பி னோதித்
தீங்கா மவுணர் செறிகாப்பகஞ் சென்று புக்கான்.

இவ்வாறு கூறியருளிய வீரவாகுதேவர் தாம் நினைந்தவாறே தம்மை ஆக்க வேண்டி; ஓங்காரத்தின் மூலப் பொருளாய் எல்லா உயிர் தோறும் என்றும் நீங்காது அமர்ந்தருளுகின்ற குமரேசனை தமது நெஞ்சத்தில் தியானித்து ; அங்கு அருள் ஆகிய அவனுடைய நாம மந்திரத்தை அன்பினால் ஓதியவண்ணம் தீங்கே விளைவிக்கும் கொள்கை உடைய அசுரர் காவல் கொண்ட சிறைக்களத்தை சென்று சேர்ந்தார். 4

தாமந்தரும் மொய்ம்புடை வீரன் சயந்தன் விண்ணோர்
ஏமந்தரு வன்சிறைச் சூழலுள் ஏக லோடுந்
தூமந்திகழ் மெய்யுடைக் காவலர் துப்பு நீங்கி
மாமந் திரமாம் வலைப்பட்டு மயங்கல் உற்றார்.

நல்ல அழகிய பூமாலையை அணிந்த தோளுடன் விளங்கும் சயந்தனும் தேவர்களும் தங்கள் அல்லலிலும் ஆறுமுகப்பிரானுடைய அருட்காட்சியால் அகமகிழ்ந்து இருக்கும் கொடிய சிறைச்சாலையில் வீரவாகுதேவர் ஏகலோடும்; அப்போது நெருப்பின் புகை போன்று விளங்கும் கரிய மேனி கொண்ட காவல் அசுரர்கள் தமது காவல் நீங்கி எம்பிரானின் பெருமந்திரத்தின் வலையில் பட்டு மயங்கலுற்றார். 5

எண்டா னவரிற் புடைகாப்பவர் யாரும் மையல்
கொண்டார் குயிற்றப் படுமோவியக் கொள்கை மேவத்
தண்டார் அயில்வேற் படைநாயகன் தானை வேந்தைக்
கண்டார் சயந்த னெடுதேவர் கருத லுற்றார்.

எண்ணிக்கை மிகுந்து இறுமாந்தவராய் சிறைச்சாலையைச் சூழ்ந்து காவல் கொண்ட அசுரர் மயங்கி உணர்வற்று யாவரும் எழுதப்படும் சித்திரப்பாவையின் தன்மைபோல இருப்ப; அதுவேளை குளிர்ச்சி வாய்ந்த மலர் மாலை சூடியருளிய வேல் படைக்கு நாயகனின் சேனைத் தலைவனான, வீரவாகு எனும் வேந்தனை, சயந்தனும் தேவர்களும் கண்டு இவ்வணம் கருதலுற்றார்கள்.

அசுரர் காணாததும் தேவர் கண்டு கொண்டதும் ஏககாலத்து நிகழ்ந்தது. இங்கு முருகப்பிரானின் சடாட்சர மந்திரத்தின் அற்புத விளைவால் தீயவர் மயங்கவும் நல்லவர் காணவும் பெற்றனர். 6

ஏமாந் தவுணர் சிறுகாலையின் இன்னல் செய்ய
நாமாண் டனர்போல் அவசத்தின் அணுகு மெல்லை
மாமாண் படைய அருள்செய்தநம் வள்ளல் தூதன்
ஆமாம் இவனென் றகங்கொண்டனர் ஆர்வ முற்றார்.

அசுரர்கள் யாவரும் இறுமாப்புடன் எமக்கு இன்னலான கொடும் தண்டனையைச் சிறுபொழுது செய்து நிற்ப; அதுவேளை நாம் அவர்கள் கொடும் செயலால் இறந்துளோம் போன்ற மயக்கத்தை அடைந்து சோருங்காலை; மீண்டும் நாம் மாண்புடன் உற்சாகமுறுமாறு அருள் செய்த நமது வள்ளலான ஆறுமுகப் பிரானின் தூதன் இவன்தான். இது உண்மையாகும் என தமது உள்ளத்து எண்ணங் கொண்டு வீரவாகுதேவர் வருகையில் மிகு ஆர்வங் கொண்டனர் சயந்தன் முதல் தேவர் யாவரும். 7

அன்னார் அமருங் களஞ்சென் றயிலேந்து நம்பி
நன்னா யகமாந் திருநாமம் நவின்று போற்றிப்
பொன்னா டிறைகூர் திருநீங்கிய புங்க வன்றன்
முன்னா அணுகி இருந்தான் அடல் மொய்ம்பின் மேலோன்.

இவ்வாறு ஆர்வமுடன் அகமகிழ்வுறும் தேவர்கள் அமர்ந்த சிறைக்களத்தில் வீரவாகுதேவர் சென்று; கூரிய வேற்படையை ஏந்தியருளிய எம் தலைவராகும் முருகப்பிரானின் எல்லாவற்றிற்கும நல்ல தலைமையுடைய நாமத்தைக் கூறியருளிப் போற்றுதல் புரிந்து; அப்பால் பொன்னுடான தேவ உலகை அரசாளுகின்ற சிறப்பை அறவே நீங்கிவிட்ட இந்திரதேவன் மகன் சயந்தன் முன்பாகச் சென்று இருந்தனினார் போர் செய்யும் வலியால் யாரினும் மிக மேம்பாடுடைய வீரவாகுதேவர். 8

செறிகின்ற ஞானத் தனிநாயகச் செம்மல் நாமம்
எறிகின்ற வேலை அமுதிற்செவி ஏக லோடும்
மறிகின்ற துன்பிற் சயந்தன் மகிழ்வெய்தி பின்னர்
அறிகின்றி லன்போல் தொழுதின்ன அறைத லுற்றான்.

வீரவாகுதேவர் ஓதியருளிய எங்கும் செறிந்து விளங்குகின்ற ஞானங்கட்கு தனிநாயகரான ஆறுமுகப்பிரானின் திருநாமமானது; திரை எறிகின்ற பாற்கடலில் தோன்றும் அமுதம் போல் சயந்தன் முதல் தேவர்களது செவிகளில் படுதலும் சோர்வடையும் படியான துன்பத்தால் துயருற்ற சயந்தன் இப்பொழுது நாம மந்திரங் கேட்டு மகிழ்வெய்தி; முன்னரே வீரவாகுதேவரைத் தெரியாதவன் போன்று வணங்கி இதனை சொல்லலுற்றான்.

"செறிகின்ற ஞானத்தனி நாயகன்" — தீமையை நீக்கி நன்மை ஆக்கி இரும்பைப் பொன்னாக்கும் வண்ணம் போன்று உடனிருந்து அடைந்தார்க்கு அருள்பவன். 9

தாவம் பிணித்த தெனுங்குஞ்சித் தகுவ ரானோர்
பாவந் தனைச்சூழ் வதுபோலெமைப் பாடு காப்ப
மாவெம் படரில் இருந்தேங்கண் மருங்கின் ஐய
நீவந்த தென்னை இனிதிங்கு நிகழ்த்து கென்றான்.

காட்டுத் தீ பற்றி எரிவது போன்ற சிவந்த சடையினையுடைய அசுரரானோர்; நாம் செய்த பாவமானது எம்மைச் சூழ்ந்து துயருறுத்துவது போன்று எம்மை வருத்தம் புரிந்து காவல் செய்ய; சகிக்கொணாத பெரிய துன்பத்திலிருந்தேங்கலாய எங்கள் பக்கராக ஐயனே! நீ வந்தது என்ன காரணமோ? இதனைச் சொல்வாயாக என்றான் சயந்தன். 10

வேறு

முறையுணர் கேள்வி வீரன் மொழிகுவான் முதல்வன் தந்த
அறுமுக ஐயன் தன்பின் அடுத்துளேன் அவன்தூ தானேன்
விறல்கெழு நந்தி பாலேன் வீரவா கென்பேர் நுங்கள்
சிறைவிடும் பொருட்டுச் சூர்முன் செப்புவான் வந்தேன் என்றான்.

யாவற்றையும் முறையாக உணர்ந்து கொண்ட அறிவுடைய வீரவாகுதேவர் சொல்வார். நானே எப்பொருட்கும் முதல்வரான சிவபிரான தந்தருளிய ஆறுமுகத்து ஐயனின் பின்னால் தோன்றினேன். அவனுடைய தூதுவன் ஆயினேன். வலிமை கொண்ட நந்தி கணத்துள்ளானேன். வீரவாகு என்பது எனது பெயராகும். இப்போது உங்களது சிறையினை விடும்படியாகச் சூரபன்மன் முன்பு சென்று சொல்லும்படி இங்கு வந்தேன் என்றார். 11

என்னலும் அமர ரோடும் இந்திரன் குமரன் கேளாச்
சென்னியில் அமிர்துள் ளூறல் செய்தவத் தயின்ற மேலோர்
அன்னதற் பின்னர் நேமி அமிர்தமும் பெற்றுண டாங்கு
முன்னுறு மகிழ்ச்சி மேலும் முடிவிலா மகிழ்ச்சி வைத்தான்.

என்று கூறியருளலும் அந்நேரத்து தேவர்களுடன் இந்திரகுமாரன் சயந்தன் அது கேட்டு; தமது தலையில் உள்ளே ஊறி இருக்கும் அமிர்தத்தை யோக சாதனையால் உருக்கி உண்டுள்ள பெரியோர்கள் அதன் பின்னாக சமுத்திரத்தில்விளைந்த அமிர்தத்தையும் பெற்று உண்ட தன்மை போன்று; முன்பு சயந்தன் கண்ணுரக் கண்டு கொண்ட கனாக் காட்சியிலும் மேலாக முடிவிலாத மகிழ்ச்சி கொண்டான்.

முன்னுற்ற மகிழ்ச்சி என்பது ஆறுமுகப்பிரானை கனவிலே கண்டது. கனவிலே கண்டது நனவிலும் நேரில் உணரும் பாக்கியம் பெற்றான் என்றமையால் முன்னுறு மகிழ்ச்சி மேலும் முடிவிலா மகிழ்ச்சியைத் தன்னிடத்து பெற்றான் சயந்தன்.

''நனவிலும் நாயேற் கருளினை போற்றி'' — மாணிக்கவாசகர் 12

அந்தர முதல்வன் மைந்தன் அறைகுவான் ஐய துன்பூர்
புந்தியேங் குறைவி னுதற் பொருட்டினுற் போந்தாய் அற்றால்
இந்தவன் சிறையும் நீங்கிற் றிடரெலாம் அகன்றி யாங்கள்
உய்ந்தனம் பவங்கள் தீரும் ஊதியம் படைத்து மென்றான்.

அந்தரத்தில் இருக்கும் தேவ உலக மைந்தனான சயந்தன் சொல்வான். ஐயனே துன்பு அடைகின்ற மனமுடைய வினையேங்களின் குறைகளை நீக்கும் காரணமாக நீர் வந்துள்ளீர். அத்தன்மையால் இந்த கொடிய சிறையும் நீங்கிப்போயது. இதுவன்றி எம் இடரெலாம் அகன்று யாங்கள் உய்ந்தனம். எந்தவிதமான பாவங்களும் தீர்ந்து போகின்ற பெரும் திருவுடைய நிலையையும் இப்போது பெற்றோமென்றான். 13

பூண்டகு தடந்தோள் வீரன் புகலுவான் சூர்மேல் ஒற்று
ஈண்டெனை விடுத்த வேற்கை எம்பிரான் வலிதே நும்மை
ஆண்டிடு கின்றான் முன்னர் ஆக்கமும் பெறுதிர் பின்னும்
வேண்டிய தெய்து கின்றீர் என்றனன் மேலுஞ் சொல்வான்.

அதுகேட்டு பூண்விளங்கும் விசாலித்த தோளுடைய வீரவாகுதேவர் சொல்வார். சயந்தனே! தேவர்களே! கேளுங்கள். என்னை இங்கு சூரபன்மனிடத்து தூதாக விடுத்த வேலைக் கையில் ஏந்திய பெருமான் வலிதே உம்மை எல்லாரையும் ஆட்கொண்டருளுகின்றான். நீவிர் இழந்துபோன முன்னைய செல்வமும் பெறுகின்றீர்கள். பின்னரும் எதை எதை விரும்புகின்றீரோ அதை அதை நீவிர் அடைகின்றீர்கள் என்று கூறி பின்னரும் வீரவாகுதேவர் சொல்வார். 14

உலமெலாங் கடந்த தோளீர் உன்னுதிர் உன்னி யாங்கு
நலமெலாம் வழிபட்டோர்க்கு நல்கிய குமரன் தன்னால்
தலமெலாம் படைத்த தொல்லைச் சதுர்முகன் முதலாம் வானோர்
குலமெலாம் உய்ந்த தென்றால் உமக்கொரு குறையுண் டாமோ.

கல்லிலும் பார்க்க வலிமையால் திரண்டுகொண்ட தோள் உடையோர்களே! நன்றாக இதை உறிதியுடன் மனதில் நினையுங்கள். தன்னை நினைந்து வழிபட்டோர்க்கு அங்கு நலம் எல்லாவற்றையும் கொடுத்தருளுகின்ற குமரப்பெருமானால்; இந்த பூமி எல்லாம் படைத்த மிக முதியவரான பிரமதேவர் முதலாகச் சொல்லப்பெறும் பெரும் தேவர் குலம் எல்லாம் வாழ்வடைந்து கொண்டது என்றால் உமக்கு ஒரு குறை உண்டாமோ. இல்லையே. 15

தேவர்கள் தேவன் வேண்டச் சிறைவிடுத் தயனைக் காத்த
மூவிரு முகத்து வள்ளல் முழுதருள் செய்தா னும்பால்
பாவமும் பழியுந் தீங்கும் பையுளும் பிறவு மெல்லாம்
போவது பொருளோ தோற்றப் புணரியும் பிழைத்தீர் அன்றே.

தேவர்கள் தேவனை சிவபிரான் வேண்டியருளுதலும் அதன்பின் தான் பிரமதேவனைச் சிறை நீக்கி அவனைக் காத்த ஆறு முகமுடைய அருள் வள்ளலான பெருமான் உங்கள் மீது முழு அநுக்கிரகம் செய்துள்ளார். அதனால் உங்களுடைய பாவமும் பொல்லாத பழியும் நீங்கும். இதுவன்றி உங்கள் கவலையும் பிற துயரமும் போவது ஒரு பொருளோ! இல்லையே. மேலும் உமை வருத்திடும் பிறவியான கடலையும் நீங்கிக் கடந்துள்ளீர்போலும்.

பாவமும் பழியும் துயரத்திற்கு ஏதுவானது. ஆகவே பாவமும் பழியும் அவன் அருளால் நீங்கிட மற்று உங்கள் பழிபாலத்தால் விளையும் கவலையும் நீங்குதல் ஒரு பொருளோ இல்லையே என்றார். 16

சீர்செய்த கமலத் தோனைச் சிறைசெய்து விசும்பி னேடும்
பார்செய்த வுயிர்கள் செய்த பரஞ்சுடர் நும்மை யெல்லாஞ்
சூர்செய்த சிறையின் நீக்கத் தொடர்ந்திவண் உற்றான் என்றால்
நீர்செய்த தவத்தை யாரே செய்தனர் நெடிது காலம்,

சீருடன் விளங்கி நிற்கும் தாமரைப் பூவினிலிருக்கும் பிரமதேவனைச் சிறை செய்து அதன்பின் வான உலகிலும் பூமியிலும் பிறந்தருளுகின்ற உயிர்களை படைத் தருளிய முருகப்பிரான் உங்கள் யாவரையும் சூரபன்மன் இட்டு வைத்த சிறையில் நின்றும் நீக்கிட தானே எழுந்தருளி வந்துள்ளார் என்றால் நீங்கள் செய்த தவத்தை யாரோ நெடுங்காலம் வரை செய்துள்ளார்கள்.

யாவர்க்கும் எட்டொணாத சோதியாய் நிறைகின்ற முருகப்பெருமான் இவ்வி டம் உங்கள் சிறை நீக்க நினைந்தருளி வந்தமையால் நீங்கள் பெரும் தவம் செய்துள் ளீர் என்றார். 17

சங்கையில் பவங்கள் ஆற்றுந் தானவர் செறிந்த மூதூர்
இங்கிதின் அறிஞர் செல்லார் எம்பிரான் அருளி னல்யான்
அங்கணம் படர்வோர் என்ன அகமெலிந் துற்றேன் ஈண்டே
உங்களை யெதிர்த லாலே உலப்பிலா உவகை பூத்தேன்.

ஓயாது நீதியற்ற பாவங்களைச் செய்யும் அசுரர் செறிந்து வாழும் இந்த ஊரில் அறிவாளிகள் செல்லமாட்டார்கள். ஆனால் எமது பெருமானின் நல்லருளினால் யானும் சேற்றினில் செல்வோர் போன்று இந்த நகரத்தில் உள்ளம் மெலிவடைய வந்துள் ளேன். அவ்வாறாகிய நேரத்து இங்கு உங்களை காண்பதாலே அழிவிலாத மகிழ்ச்சி கொண்டேன்.

தீய ஒழுக்கம் உடையார்கள் வாழ்கின்ற இடத்தில் ஒருபோதும் அறிவுடைய வர்கள் செல்லமாட்டார்கள். ஏனெனில் அத்தீயவரின் தீமைக்குணங்கள் அறிவுடையா ரிடத்தும் பற்றிக்கொள்ளும். இந்த உண்மை இப்பாடல் மூலம் பெறப்படுகின்றது, 18

என்றலும் மகிழ்ச்சி எய்தி இந்திரன் மதலை யாங்கள்
வன்றளைப் படுமுன் போனர் மற்றெமைப் பயந்தோர் அன்னோர்
அன்றுதொட் டின்று காறும் ஆற்றிய செயலும் அற்றால்
ஒன்றிய பயனும் யாவும் உரைமதி பெரியோ யென்றான்.

என்று இவ்வாறு வீரவாகுதேவர் கூறுதலும் அதுகேட்ட இந்திரன் மைந்தனான சயந்தன் மகிழ்ச்சி கொண்டு வீரவாகுதேவரை நோக்கி நாங்கள் கொடிய இச்சிறை யில் அடைபடுமுன் போயினர் எம்மைப் பெற்றெடுத்த மேலோரான தாய் தந்தை யர். அவர்கள் அன்றுதொட்டு இன்று வரையிலும் செய்துள்ள செயல்களையும் அதனால் விளைந்துள்ள பலாபலன்கள் யாவற்றையும் எமக்கு எடுத்துக் கூறியருள்க பெரியோய் என்றான். 19

வீரனங் கதனைக் கேளா விண்ணவர் கோமான் தொன்னாள்
ஆரணங் குடனே காழி யடைந்ததே எழுவா யாகச்
சீரலை வாயில் அந்நாட் சென்றிடு காறு முள்ள
காரிய நிகழ்ச்சி யெல்லாங் கடிதினிற் கழறி னனே.

வீரவாகுதேவர் அங்கு அதனைக் கேட்டு தேவர்க்கு அரசனான இந்திரன் முன் னாளில் தலைவியான இந்திராணியுடனே சீகாழிப் பதியைச் சென்று அடைந்தது முத லாக; பின்னர் எம்பிரானுடன் திருச்செந்தூரில் அன்று வந்தருளிய நாட்கள் வரையி லும் இந்திரன் இந்திராணிபால் உள்ள காரியங்களின் நிகழ்ச்சிகள் யாவையும் மிக விரைவாக எடுத்துக் கூறியருளினர். 20

மேதகு தடந்தோள் வீரன் விண்ணவர் கோமான் செய்கை
ஓதலுஞ் சயந்தன் கேளா உரைசெய்வான் அன்னை தன்னைத்
தாதையை யடிகள் தன்னைச் சண்முகத் தனிவேற் செங்கை
ஆதியை யெதிர்ந்தால் ஒத்தேன் ஐயநின் மொழிகேட் டென்ருன்.

மேன்மையுடன் விசாலித்த தோளுடைய வீரவாகுதேவர் தேவர்கட்கெல்லாம் அரசனுன இந்திரன் செய்கையினை சிறப்புடன் எடுத்து ஓதுதலும் சயந்தன் அது கேட்டு சொல்வான்; ஐயனே உமது வார்த்தையைக் கேட்டு எனது தாயை எனது தந்தையை எமது அன்புள்ள குருவை ஆறுமுகமுடைய ஆதியான பகவானை எல்லாம் நேரில் நான் கண்டு தரிசித்தவர் போலாயினேன் என்ருன். 21

இறைதரும் அமரர் தம்மோ டிந்திரன் புதல்வன் றன்னை
அறிவரில் அறிவன் கண்ணுற் றறுமுகம் படைத்த அண்ணல்
மறையிடை வதிக்த நுங்கள் வன்சிறை மாற்றும் வைகல்
சிறிதிவண் இருத்தி ரென்று பின்னருஞ் செப்பு கின்ருன்.

யாவர்க்கும் மேலோரான கடவுளர்களுடன் இந்திரன் மைந்தனுன சயந்தனை அறிவாளிகளிலும் அறிவனுன வீரவாகுதேவர் பார்த்தருளி; நீங்கள் யாவரும் கேளுங்கள் ஆறுமுகம் கொண்டருளிய பரம்பொருளான பெருமான் ஒருவருக்கும் தெரிவுருதபடி நீங்கள் இருக்கின்ற இந்தக் கொடிய சிறையை நீக்குதற்கு இன்னும் சிறுநாள் வரை இங்கு இருங்கள் என்று கூறிவிட்டு பின்னரும் எடுத்துச் சொல்வார், 22

தன்னிகர் இன்றி மேலாய்த் தற்பர வொளியா யாரும்
உன்னரும் பரமாய் நின்ற ஒருவனே முகங்க ளாறும்
பன்னிரு புயமுங் கொண்டு பாலகன் போன்று கந்தன்
என்னு மோர்பெயரும் எய்தி யாவருங் காண வந்தான்.

தனக்கு நிகர் இல்லாததாய் தானே தானுன மேலான சோதியாய் யாதொன்ருலும் நினைத்தற்கரிய கருணையுடைய ஒருவனே ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு கைகளும் கொண்டு பாலகன் போன்று கந்தன் என்னும் ஓர் நாமமும் பூண்டு யாவருங் காணும்படி வந்தருளினுன்.

நினைப்பரிய பொருளாய் நிகரிலாததாய் தற்பரமாய் சதாசிவமாய் சோதியாய் யாவர்க்கும் எட்டொணுது நின்ற ஒன்றே பன்னிரு கையும் ஆறு முகமும் கொண்டு யாரும் காணும்படி கருணையால் வந்தது என்ருர் என்க. 23

பங்கய முகங்கள் ஆறும் பன்னிரு புயமுங் கொண்டே
எங்கடம் பெருமான் போந்த ஏதுமற் றென்னை என்னில்
செங்கண்மா லுந்தி பூத்தோன் சிறுமையும் மகவான் துன்பும்
உங்கடஞ் சிறையும் நீக்கி உலகெலாம் அளிப்பக் கண்டாய்.

தாமரையின் வனப்புடைய அழகிய ஆறு திருமுகமும் பன்னிரண்டு புயங்களும் கொண்டு எங்களுடைய பெருமான் வந்தது என்ன காரணமென்றால் சிவந்த கண்ணு டைய விஷ்ணுமூர்த்திக்கும் அவரது உந்தியிலே பூ மலர்வது போன்று தோன்றிய பிர மதேவனுக்கும் உற்ற சிறுமைப்பாட்டையும் இந்திரனுடைய துன்பத்தையும் உங்களு டைய சிறையையும் நீக்கி இந்த உலகம் யாவற்றையும் காத்தருளும் கருணையால் என் பதை அறியுங்கள்.

உலகம் சிறப்புற வேண்டில் பிரமன் படைப்பு விஷ்ணுவின் காத்தல் சூரியன் சந்திரன் தேவர்களது தொண்டுகளும் வேண்டும். ஆகவே இவர்க்குற்ற சிறுமை நீங்கி யருளி உலகெலாம் சேமமுற வாழ வைப்பதற்காக பரமன் வந்தாரென ஓதினர் வீர வாகுதேவர். 24

**சிறுவிதி வேள்வி நண்ணித் தீயவி நுகர்ந்த பாவம்**
**முறைதனில் வீரன் செற்று முற்றவு முடிந்த தில்லை**
**குறைசில இருந்த வாற்றாற் கூடிய துமக்கித் துன்பம்**
**அறுமுகப் பெருமான் அன்றி யாரிது நீக்கற்பாலார்.**

சிறுமையுடைய எண்ணங் கொண்ட தக்கனுடைய யாகத்தில் தீயதான அவிப் பாகத்தை உண்ட பாவம்தனை முறையாக வீரபத்திரக் கடவுள் தண்டித்தபோதும் கூட முற்றாக அது முடியவில்லை அதில் மிச்சமாக சில இருந்தது. அதனால் உமக்கு இந்தத் துன்பம் கூடியது. இந்த உங்களது துயரை ஆறுமுகமுடைய பெருமான் அன்றி வேறு யார் நீக்கிடும் தன்மையாவார். 25

**தாட்கொண்ட கமல மன்ன சண்முகத் தெந்தை வேலாற்**
**காட்கொண்ட கிரியி னோடு தாரகற் கடந்த பூசல்**
**தோட்கொண்ட மதுகை சான்ற சூர்முதல் களைய முன்னம்**
**நாட்கொண்ட தன்மையன்றோ நறைகொண்ட அலங்கள் தோளாய்.**

நீண்ட தண்டில் தோன்றி மலர்ந்த அழகிய தாமரை மலரின் செவ்வி ஒத்த ஆறுமுகமுடைய எந்தை பெருமான் தமது வேலினால் கறுவியம், வஞ்சனை, பொல்லா ங்கு நிறைந்த கிரவுஞ்ச மலையோடும் தாரகாசூரனை சங்காரம் செய்த போரானது; வீரம் பொருந்திய தோளுடைய இறுமாப்பான சூரபன்மனை அவன் கிளையோடும் அழிவு செய்வதற்கு முதலாகச் செய்து கொண்ட நாள் காரியம் போன்றது என்பதனை வாசனை கொண்ட பூமாலை அணிந்த தோளுடைய சயந்தனே அறிவாயாக. 26

தாரகனை முன் கொன்றது அசுரர் கிளை அழிப்பச் செய்த நாட்காரியம்.

**காலுறக் குனித்துப் பூட்டிக் கார்முகத் துய்ப்ப ஓர்செங்**
**கோலினுக் குண்டி யாற்றர் குணிப்பிலா அவுணர் யாரும்**
**மாலினுக் கரிதாம் அண்ணல் மாமகன் கரத்திற் கொண்ட**
**வேலினுக் கிலக்க தில்லை விடுப்பது மிகைய தன்றே.**

எமது பிரபுவான ஆறுமுகப்பிரான் தமது திருப்பாதத்தை ஊன்றி வில்லை வளை த்துப் பூட்டி செலுத்துகின்ற ஓர் அம்பிற்கு இரையாகப் பற்றிக்கொள்ள போதமாட் டார் அளவு காண்பரிய அசுரர் யாரும் என்றால்; நாராயணக் கடவுளும் நாடரிய எம் பெருமான் சிவம் தந்தருளிய பெருமையுடைய திருக்குமாரன் கந்தன் தனது திருக் கரத்தில் கொண்ட வேல்படைக்கலத்திற்கு இலக்காக எவருமே இல்லை; ஆகவே அசுரர் மீது அதனை விடுவது தேவையற்ற மிகையான செயலாகும். 27

வாரிதி ஏழும் எண்ணில் வரைகளும் பிறவுங் கொண்ட
பாருடன் உலகி ரேழும் படைத்தபல் லண்டம் யாவும்
ஓரிறை முன்னம் அட்டே உண்டிடும் ஒருவன் செவ்வேல்
சூரனை அவுண ரோடுந் தொலைப்பதோர் விளையாட் டம்மா

சமுத்திரங்கள் ஏழும் எண்ணற்ற மலைகளும் பிற பொருள்களும் கொண்ட பூமியுடன் பதினன்கு உலகுகளும் படைத்த பல அண்டங்கள் யாவற்றையும் ஓர் இறைப்பொழுதின் முன்பாக அழிவு செய்தே உண்டு விடும் ஏகனாகிய எம்பிரானுடைய வேல். ஆதலால் எம்பிரான் சூரனை அசுரரோடும் தொலைப்பது அவர்க்கு ஓர் திருவிளை யாட்டாகும். 28

சுறுமறி அளக்கர் வைகுஞ் சூரபன் மாவின் மார்பில்
எறிசுடர் எஃகம் வீசி இருபிள வாக்கின் அல்லால்
சிறையுளீர் மீள்கி லாமை தேற்றியும் பொருநர் செய்யும்
அறநெறி தூக்கி ஒற்று அடியனை விடுத்தான் ஐயன்.

சுறு மீன்கள் மலிந்துள்ள சமுத்திரத்தில் இருக்கும் சூரபன்மனுடைய நெஞ்சில் பிரகாசமுடைய வேலை வீசி அவன் உடலை இரண்டு பிளவாக்கினல் அன்றி சிறையுள் இருக்கும் நீங்கள் மீளமாட்டீர் என்பதனை எம்பிரான் தெரிந்து கொண்டும் போர் புரியும் மேலோர் செய்கின்ற தருமநிலையை எமது ஐயன் கடைப்பிடித்துக்கொண்டு அடியேனைத் தூதாக விடுத்தான். 29

ஆளுடை முதல்வன் மாற்றம் அவுணருக் கிறைவன் முன்போய்க்
கேளிதென் றுரைப்பன் அற்றே கிளத்தினும் கடனுக் கொள்ளான்
மீளுவன் புகுந்த தெல்லாம் விளம்புவன் வினவி எங்கோன்
நாளைவந் திவரை யெல்லாம் நாமற முடிப்பன் காண்டி.

எம்மை முற்றிலும் ஆளுடைய முதல்வனான ஆறுமுகப்பிரானின் வார்த்தையை அசுரருக்கு முதல்வனான சூரன் முன்பாகச் சென்று; சூரனே இதைக் கேள் என்று தேவர்கள் சிறையை விடும்படி சொல்வேன். ஆனல் யான் அவ்வண்ணம் கூறினலும் அதனை ஒரு பொருளாகக கொள்ளமாட்டான். நான் திரும்பிச் செல்வேன். நடந்த தெல்லாவற்றையும் எம்பிரானிடம் எடுத்துக் கூறுவேன். அவ்வாறாக அதனை எம்பி ரான் கேட்டருளி நாளை வந்து இவர்களையெல்லாம் அவர்கள் பெயர் கெட்டழிய சங் கரிப்பார். இதனைக் காணுங்கள். 30

நீண்டவன் தனக்கும் எட்டா நெடியதோர் குமரன் செவ்வேல்
ஆண்டிருந் தேயும் உய்த்தே அவுணர்யா வரையுங் கொல்லும்
பாண்டிலந் தேர்மேற் கொண்டு படைபுறங் காத்துச் சூழ
ஈண்டுவந் தடுதல் அன்னற் கிதுவுமோ ராடல் அன்றே.

நீண்ட வடிவுடைய நாராயணக் கடவுளுக்கும் எட்டொணுத நெடிய வடிவுள குமரக் கடவுள் செவ்விய வேலை அங்கு திருச்செந்தூர் இடத்தாக இருந்து செலு த்தியே அசுரர் யாரையும் கொல்லமுடியும். ஆனல் பெரிதான அழகிய தேர்மேல் எழுந்தருளிக்கொண்டு பூதப்படைகளும் மற்றையோரும் புறத்தே காவலாகிச் சூழ்ந்து வர இங்கு வந்து சூரனைச் சங்காரம் செய்தல் எம்பிரானுக்கு இதுவும் ஓர் திருவிளை யாடலாகும் என்பதை; சயந்தனே! அறிவாய். 31

ஈரிரண் டிருமூன் றுகும் இரும்பக லிடையே எங்கோன்
ஆரிருஞ் சமர மூட்டி அவுணர்தம் மணிகந் தன்னைச்
சூரொடு முடித்து நும்மைத் துயர்ச்சிறைத் தொடர்ச்சி நீக்கிப்
பேரிருஞ் சிறப்பு நல்கும் பிறவொன்று நினையல் மன்னோ.

பத்து என்னும் எண்ணிக்கையுடைய நாட்களின் இடையாக எம்பெருமான் பெரியதோர் போரினைச் செய்து முடித்து அசுரரான சேனையை சூரனோடு சேர முடிபு செய்து உமது துயரப்படுகின்ற சிறையின் தொடர்ச்சியை நீக்கி பெரியதோர் அழி விலாத சிறப்பைத் தந்தருளுவார். வேறொன்றும் நீங்கள் நினைக்கவேண்டாம். அமை தியாய் இருங்கள் என்றார். 32

என்றிவை பலவும் வீரன் இமையவர் குழாத்தி னோடுங்
குன்றெறி பகைஞன் மைந்த னுணர்தரக் கூற லோடு
நன்றென உவகை பூத்து நாமவேல் நம்பி யாற்ற
வென்றிபெற் றிடுகவென்று வீற்று வீற் றாசி சொற்றார்.

என்று இவை பலவற்றையும் வீரனான வீரவாகுதேவர் தேவர் கூட்டத்துடன் மேரு மலையை வச்சிராயுதத்தால் வெட்டிப் பகை கொண்ட இந்திரன் மைந்தன் சய ந்தன் உணரும்படி கூறுதலோடும்; அதனைக் கேட்டருளிய சயந்தனும் தேவர்களும் மகிழ்வால் மலர்ச்சி கொண்டு; கூரிய வேற்படையினையுடைய பெருமான் மிகவும் மேலான வெற்றியைப் பெற்றுக்கொள்க என முறைமுறையாக ஆசி கூறினார் கள். 33

எண் டகும் ஆசி கூறி இந்திரன் றனது மைந்தன்
அண்டரொ டங்கை கூப்பி அளியரேந் தன்மை யெல்லாங்
கண்டனை தாதை கேட்பக் கழறுதி இவண்நீ யுள்ளங்
கொண்டது முடிக்கப் போதி குரைகழற் குமர வென்றான்.

பல ஆசி மொழிகளை இந்திரன் மைந்தன் சயந்தன் தேவருடன் கூறி தேவரு டன் தனது கைகளைக் கூப்பித் தொழுது வீரவாகுதேவனே! தேவரீர்! எளியோங்க ளான எம்மையெல்லாம் இக்கோல நிலையில் இங்கு கண்டாய். எமது தந்தை கேட் கும்படியாக எம் தன்மை பற்றிச் சொல்வாய். ஓசையுடைய சிலம்பணிந்த சேவடியுடைய திருக்குமார! நீ நினைந்தது முடிக்க இப்பொழுது போவாயாக என் றான். 34

வயந்திகழ் விடலை அங்கண் மற்றவர் தம்மை நீங்கிக்
கயந்தரு காவ லோர்தங் கருத்தின்மால் அகற்றி யேக
இயந்திர மன்னோர் தேறி இமையவர் குழாத்தி னோடு
சயந்தனைச் சுற்றி முன்போல் தடைமுறை ஓம்ப லுற்றார்.

வெற்றி திகழும் திருவுடைய இளமைப் பருவங் கொண்ட வீரவாகுதேவர் அவ் வாறே அங்கு தேவர் கூட்டத்தை விடுத்து நீங்கி அச்சம் தருகின்ற உருவுடைய காவ லாளிகளின் கருத்தில் உற்ற மயக்கத்தை நீக்கி அப்பால் செல்லலும் அதுவேளை காவல் அசுரர் ஓர் இயந்திரத்தை நிற்பாட்டி வேலை செய்யவைப்பது போன்று; இயந்திரத் தை ஒத்து நன்மை தீமை உணராத அசுரர் தெளிவுகொண்டு தேவர் கூட்டத்துடன் சயந்தனை மறுபடியும் சுற்றி வளைத்து தடைமுறையாகக் காவல் கொண்டனர். 35

வீரவாகு சயந்தனைத் தேற்று படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 480

# அவைபுகு படலம்

மடந்தையொ டிரிந்திடும் வாச வன்மகன்
அடைந்திடு சிறைக்களம் அகன்று வானெறி
நடந்தனன் அவுணர்கோன் நண்ணு கோநகர்
இடந்தரு கிடங்கரை இகந்து போயினன்.

தனது மனைவியுடன் ஓடி ஒளித்துக்கொண்ட இந்திரன் மகன் சயந்தன் அடைந்து கொண்டு துயரப்படுகின்ற சிறைக்களத்தை வீரவாகுதேவர் அகன்று வானத்தில் எழுந்து மேல்நெறி கொண்டு நடந்தருளிச் சென்று அசுரர் தலைவனான சூரபன்மன் இருக்கும் தலைநகரைச் சூழ்ந்து விளங்குகின்ற அகழிக் கிடங்கினைக் கடந்து அப்பால் போயினர். 1

அகழியை நீங்கினன் அயுதந் தன்னினும்
மிகுதிகொள் நாற்படை வெள்ளந் தானைகள்
தகுதியின் முறைமுறை சாரச் சுற்றிய
முகில்தவழ் நெடுமதில் முன்ன ரேகினன்.

அகழிக் கிடங்கைக் கடந்து நீங்கி பதினாயிரம் வெள்ளம் தன்னிலும் மேற்பட்ட நான்குவித படைகளான சேனைகள் தகுதியுடன் முறைமுறை சார்ந்து வளைந்து காவலாக நின்ற; முகில்கள் தவழும்படி உயர்ந்த நெடிய மதில் முன்பு சென்றார் வீரவாகுதேவர். 2

கான்கொடி கங்கைநீர் கரப்ப மாந்தியே
மீன்கதிர் உடுபதி விழுங்கி விட்டிடும்
வான்கெழு கடிமதில் வரைப்பின் முன்னரே
தான்கிளர் கோபுரங் கண்டு சாற்றுவான்.

கோபுரம் மேல் நாட்டிய சிங்கக் கொடிகள் வான கங்கையின் நீர் வற்றும்படி உறிஞ்சி உண்டு ; அப்பாலும் நட்சத்திரங்கள் சூரியர் சந்திரரை விழுங்கி உமிழ்ந்து விட்டு மேலெழுதல் போன்று காவல் மதில் முன்பாக வளர்ந்து அமைந்த கோபுரத்தின் அமைப்பைக் கண்டு வீரவாகு தேவர் சொல்லியருள்வார். 3

குரைகடல் உண்டவன் கொண்ட தண்டினால்
வருபுழை மீமிசை வாய்ப்பத் தாரகன்
பெருவரை நிமிர்ந்திடு பெற்றி போலுமால்
திருநிலை பலவுடைச் சிகரி நின்றதே.

ஒலிக்கின்ற கடலினை உண்டவரான அகத்திய முனிவர் தமது கரத்தில்கொண்ட தண்டினால் கிரவுஞ்ச மலைமீது குற்றிச் செய்யப்பெற்ற துவாரங்களின் மேலாகத் தாரகாசூரன் மலைபோன்று நிமிர்ந்து நின்றால் எப்படி இருக்குமோ அவ்வண்ணமாக சீரிய செல்வநிலைகள் பலவுடைய முடிகள் இந்த கோபுரங்களில் நின்றன. 4

தூணம துறழ்புயச் சூரன் என்பவன்
சேணுறும் அண்டமேற் செல்லச் செய்ததோர்
ஏணிகொ லோவிது என்ன நின்றதால்
நீணிலை பலவுடன் நிமிர்ந்த கோபுரம்.

தூண் போன்ற தோளிணையுடைய சூரபன்மன் என்பவன் தான் மிக உயர்ந்து விளங்கிடும் அண்டங்கள் மீதாகச் செல்வதற்குச் செய்திட்ட ஓர் ஏணியோ இது என்று சொல்லும்படி நீண்ட நிலைகளுடன் நிமிர்ந்து நிற்கும் பல கோபுரங்கள் அங்கு நின்றுகொண்டன.

உயர்ந்த கோபுரங்களில் பல நிலைகள் உடைமையால் அவை ஏணி போன்றிருந்தன. 5

துங்கமொ டிறைபுரி சூரன் கோயிலில்
பொங்குசெம் மணிசெறி பொன்செய் கோபுரம்
எங்கணு முடியுநாள் இவுளி வாய்ப்படும்
அங்கிவிண் காறெழூம் வடிவம் அன்னதே.

மேன்மையுடன் அரசாளுகின்ற சூரபன்மனின் அரண்மனைக் கோவிலில்; பொங்கும் ஒளியுடைய சிவந்த இரத்தினங்கள் பதிக்கப்பெற்று பொன்னால் செய்து விளங்கும் கோபுரங்கள் நிற்கின்ற நிலையைப் பார்த்தால்; உலகமெங்கும் முடிவாகும் காலத்து குதிரை முகமுடைய வடவை என்னும் நெருப்பின் வாயில் தோன்றும் நெருப்புச் சுடரானது வானம் அளவும் உயர்ந்தெழுதல் போன்றிருப்பது. 6

அண்டமங் கெவற்றினும் அமர்ந்து நிற்புறும்
விண்டொடர் வரைகளும் மேரு வானவும்
பண்டிதன் மிசையுறப் பதித்த தொக்குமாற்
கொண்டியல் சிகரியுட் கூட சாலைகள்.

அண்டங்கள் எல்லாவற்றிலும் அமர்ந்து நிற்கின்ற வானத்தில் தொடரும் பெருமலைகளும் மேருமலை ஆனதும் முன்னர் தன் இடத்தாகப் பதித்துள்ளது போன்று இருக்கும் மிக உயர்வு கொண்ட இந்த கோபுர சிகரங்களில் காணப்பெறும் கூட சாலைகள். 7

மெய்ச்சுடர் கெழுமிய வியன்பொற் கோபுரம்
உச்சியில் தொடுத்திட முழங்கு கேதனம்
அச்சுத னுஞ்சிவன் அளவை தீர்முகத்
துச்சிதொ றிருந்தரா ஒலித்தல் போலுமால்.

அழிவில்லா ஒளி பரப்பிடும் அற்புகமான பொற் கோபுரங்களின் உச்சியில் நாட்டப்பெற்று நின்று முழங்கி இரையும் கொடிகள் எவர்க்கும் தலைவரான சிவபிரானுடைய அளவு கடந்த முகங்களின் உச்சிமீது அணியப்பெற்ற பாம்புகள் ஒலித்துக் கொண்டிருத்தல் போன்றது. 8

திசைபடு சிகரியிற் செறிந்த வான்கொடி
மிசைபடும் அண்டமேல் விடாமல் எற்றுவ
பசைபடும் அதளுடைப் பணைய கத்தினில்
இசைபடப் பலகடிப் பெறிதல் போலுமால்.

நான்கு திசை தோறும் மதில்மீது அமைந்த கோபுரங்களில் நாட்டிய வண்ணம் விளங்கும் கொடிகள்; வான மேல் தோன்றுகின்ற அண்டங்கள் மீது விடாது பட்டு அடித்து நிற்பன எதுபோல எனில் பசை தீ றிய தோல் உடைய முரசப் பறையின் மீதில் இசை எழும்படியாக பல கம்புகளால் அடித்தல் போன்றது.

இக்காட்சிகள் யாவையும் சூரபன்மன் அரண்மனை மீதாக விளங்கிட காண்கின்றார் வீரவாகுதேவர். இப்பொழுது அரண்மனை நகரின் மதில்கள், கோபுரங்கள். பல அடுக்கு நிலைகளையுடைய கோபுரங்களின் பண்டிகைகளில் உள்ள கூடசாலைகளின் அமைப்புகள், ஆகிய வனப்புகளை வீரவாகுதேவர் கண்டுகொண்டவையாகப் பேசப்படு கின்றன, 9

விண்ணவர் தாமுறை வியன்ப தந்தொடுந்
திண்ணிலை இடந்தொறுஞ் சிவண வைகினர்
அண்ணலங் கோபுரம் அதனிற் கைவலோன்
பண்ணுறும் ஓவியப் பாவை என்னவே.

தேவர்கள் வாழ்கின்ற மேலான பதங்களைத் தொடுகின்ற மிக திண்மையுடைய மாளிகை இடங்கள் தோறும் பொருந்த வாழ்கின்ற அசுரர்கள் இருக்கும் இயல்பைப் பார்த்தால் மிகவும் சமர்த்தனான ஓர் சிற்பியானவன் கோபுரமதனிற் தனது கையால் செய்துவைத்த சித்திரப்பாவைகளைப் போன்று காணப்படுகின்றது, 10

என்பன பலபல இயம்பி ஈறிலாப்
பொன்புனை தோணியம் புரிசைச் சூழலின்
முன்புறு கோபுர வனப்பு முற்றவும்
நன்பெரு மகிழ்ச்சியான் நம்பி நோக்கினான்.

என்பன பலபலவற்றை வீரவாகுதேவர் கூறி முடிவிலாத பொன்னினால் செய்து அழகுபடுத்தப்பட்டு தோணி போன்ற அலங்கார வனப்புகளை உடைய புரிசைகளின் சுற்று வட்டாரங்களின் முன்னிற்கும் கோபுரத்தின் வனப்புகள் முற்றவும் மிகுகின்ற பெருமகிழ்வால் வீரவாகுதேவர் பார்த்தருளினார்.

கோபுர அமைப்மையும் அதைச் சூழ்நின்ற மதிலின் அழகுகளை மகிழ்வால் வீரவாகுதேவர் பார்த்தார். ஏனெனில் அவைகள் யாவும் மிகு அற்புதமாக இருக்க அதைக் காணாது போக முடியவில்லை. ஆனமையால் நின்று மகிழ்வுடன் பார்த்துக் கொண்டு அப்பால் போகுங்கால். 11

புதவுறு கோபுரப் பொருவில் வாய்தலுள்
மதவலி உக்கிரன் மயூர னாதியோர்
அதிர்தரு நாற்படை அயுதஞ் சுற்றிடக்
கதமொடு காப்பது காலை நோக்கினான்,

மிக உயர்ந்த கோபுரத்தின் வாயில் உள்ளாக மிக வலிமையுடைய உக்கிரன்; மயூரன் ஆதியாகச் சொல்லப்பெறும் சேனைத் தலைவர்கள் அதிரும்படி முழங்கும் நான்கு வகையான பதினாயிரம் வெள்ளம் சேனைகளுடன் மிகும் கடுமையுடன் காவல் கொண்டிருப்பதை இளந்தாரியான மிடுக்குடைய வீரவாகுதேவர் கண்டார். 12

நோக்கிய திறலவன் நொச்சி தாவியே
ஆக்கமொ டமர்தரும் அவுணன் கோயிலுள்
ஊக்கமொ டும்பரான் ஓடி முன்னுறு
மேக்குயர் சூளிகை மிசையிற் போயினன்.

சூரபன்மன் நகரின் முன்புறக் கோபுரத்தில் அசுரர் மிக கவனத்துடன் காப்பதை மிகு திறமைசாலியான வீரவாகுதேவர் கண்டு கொண்டு; மதிலைத் தாவிப் பாய்ந்து பெரும் செல்வத்துடன் இருக்கின்ற சூரபன்மன் அரண்மனை மாளிகை உள்ளே மிகு ஊக்கமாக வான மார்க்கமாக ஓடிச் சென்று; சூரபன்மன் அரண்மனை முன்பிருக்கும் மிகு உயர்வான சூளிகையின் மேற்சென்று சேர்ந்தருளினர். 13

வேறு

சூளிகை மீமிசை துன்னுபு சூரன்
மாளிகை யுள்ளவ ளந்தனை யெல்லாம்
மீளரி தாவிழி யோடுள மேவ
ஆளரி நேர்தரும் ஆண்டகை கண்டான்.

சூளிகையின் மேல் தங்கி இருந்தபடி வீரவாகுதேவர் சூரபன்மன் மாளிகையினில் உள்ள வளங்கள் எல்லாவற்றையும் பார்த்த கண் வேறு வழி நோக்காதிருக்கும் ஆர்வத்துடன் உளம் பொருந்த; தனியனை இராசசிங்கத்தைப் போன்ற வீரவாகு தேவர் கண்டார்.
14

கண்டதொ ரண்ணல் கடுந்திறல் வெஞ்சூர்
திண்டிறல் வாளரி சென்னிகொள் பீடத்
தெண்டகும் ஆணை இயற்றிய செம்பொன்
மண்டபம் வைகுறும் வண்மை தெரிந்தான்.

இவ்வாறு கண்டுகொண்ட ஒரு தலைவரான வீரவாகுதேவர்; கடுமையுடன் திண்மையான வலியுடைய சூரபன்மன்; ஒளிகொண்ட கண்ணுடைய சிங்கங்களின் சிரமிலே பொருத்தப்பெற்ற இரத்தினபீடத்தின் மீது எண்ணத் தகுந்த ஆணையை உலகிற்கு இடுகின்ற செம்பொன் மண்டபத்தில் வீற்றிருக்கும் அலங்காரத்தைக் கண்டார். 15

அருந்தவ வேள்வி அயர்ந்தரன் ஈயும்
பெருந்திரு மிக்கன பெற்றுல கெல்லாந்
திருந்தடி வந்தனை செய்திட வெஞ்சூர்
இருந்திடு கின்ற இயற்கை இசைப்பாம்.

அருமையான தவத்துடன் கூடிய யாகத்தைப் புரிந்து அதனால் சிவபிரான் கொடுத்தருள்கின்ற பெருமை பொருந்திய செல்வம் மிகுந்து; இந்த உலகில் உள்ளார்

கள் எல்லாம் சிறப்பாக வந்து திவ்வியமான பாதங்களை வழிபாடு செய்திட கொடிய சூரபன்மன் அரசு வீற்றிருக்கும் சிறப்பைச் சொல்வாம்.

வீரவாகுதேவர் சூரனுடைய அரண்மனையில் அவனைக் காணும்போது அவன் இருக்கும் சிறப்புச் சொல்லப்பெறுகின்றது. 16

ஐயிரு நூறெனும் யோசனை யான்றே
மொய்யொளி மாழையின் முற்றவு மாகித்
துய்யபன் மாமணி துஞ்சிவில் வீசி
மையறு காட்சிகொள் மண்டபம் ஒன்றின்.

ஆயிரம் யோசனை அகன்று எங்கும் மொய்த்தினிதிருக்கும் ஒளி முற்றிலும் பொன்மயமாகி இடையிடையே தூய பல இரத்தினங்கள் ஒளி வீசிட எதுவுமோர் குறை காணப்பெறாத ஓர் நல்ல மண்டபம் ஒன்றின்.

ஆயிரம் யோசனை நீள அகலமாய் பொன் ஒளி வீசிட இரத்தினங்கள் பதிக்கப் பெற்று அதன் பிரகாசம் நிறைந்த ஓர் மண்டபம் ஒன்றில் சூரன் இருந்தான். 17

மேனகை யோடு திலோத்தமை மெய்யின்
ஊனமில் காமர் உருப்பசி யாதி
வானவர் மங்கையர் வட்டம் அசைத்தே
மேனிமிர் சீகரம் வீசினர் நிற்ப.

மேனகை என்பாளோடு திலோத்தமையும் மேனியில் ஏதும் குறையிலா அழகுடைய ஊர்வசி ஆதியான தேவப் பெண்கள் சூரபன்மனுக்கு ஆலவட்டத்தை அசைத்துக் கொண்டு அவன் மேனிமேல் குளிர்ச்சி தோன்ற வீசி நிற்பவும். 18

சித்திர மாமதி செங்கதிர் பாங்காய்
முத்தணி வேய்ந்து முகட்டிள நீலம்
உய்த்து மணித்தொகை உள்ளம் அழுத்துஞ்
சத்திர மாயின தாங்கினர் நிற்ப.

அழகிய பெரிய சந்திரன் சிவந்த ஒளிக்கிரணம் உடைய சூரியன் பாங்காக இணைந்து முத்துக்களைத் தன்புறத்தே பதித்துக்கொண்டு முடியில் இளம் பசுமைகொண்ட நீல இரத்தினம் வைத்து உட்புறமாக பல இரத்தினங்களை அழுத்தமாகப் பதித்துக் கொண்டு இங்கு குடைபோல் நின்றுன் என்னும் காட்சிப் பொலிவுடைய குடையை அசுரர் தாங்கிப் பிடித்து நிற்பவும். 19

வெள்ளடை பாகு வெளிற்றுறு சுண்ணங்
கொள்ளும் அடைப்பைமென் கோடிகம் வட்டில்
வள்ளுடை வாளிவை தாங்கி மருங்காய்த்
தள்ளரு மொய்ம்புள தானவர் நிற்ப.

வெற்றிலை பாக்கு வெள்ளை நிறமுடைய சுண்ணாம்பு ஆகிய இவற்றைக்கொண்ட அடைப்பையையும், மிருதுவான பூந்தண்டையும், வட்டிலையும் கூரிய ஒளி விளங்கும் உடை வாளினையும் ஆகிய இவற்றை ஏந்தியவாறு நீக்கரிய வலிமையுடைய பல அசுரர் பக்கராக நிற்பவும். 20

வெம்மைகொள் பானுவை வெஞ்சிறை யிட்ட
செம்மலும் ஏனைய சீர்கெழு மைந்தர்
மும்மைகொள் ஆயிர மூவரு மாகத்
தம்முறை யாற்புடை சார்ந்தனர் வைக.

வெப்பினைக் கொண்ட சூரியனைக் கொடிய சிறையில் வைத்த குமாரனான பானு கோபனும் ஏனைய சீருடைய மைந்தரான இரணியன் அக்கினிமுகன் வச்சிரவாகு இவருடன் மூவாயிரம் பிள்ளைகளுமாக தங்கள் தங்கள் தகுதி முறைமைக்கேற்ப அயலிலே சூழ்ந்தபடி இருப்பவும். 21

பாவ முயன்று பழித்திறன் ஆற்றுங்
காவிதி யோர்கரு மங்கள் முடிப்போர்
ஆவதொர் சாரண ராய்படை மள்ளர்
ஏவருஞ் ஞாங்கரின் எங்கணும் நிற்ப.

பாவத்தையே செய்து பழிகளான கருமங்களை செயல்களைச் செய்து முடிப்பதற்கென பிறவி கொண்டு சூரன் ஏவிய அதன்படி கருமம் முடிப்போராய் விளங்கும் சேவகர்களானபடைவீரர் யாவரும் எம்மருங்கும் பக்கராக நிற்பவும்.

இப்பிறவியில் பாவமே செய்து பழிச்செயல் புரிந்தவாறே தமது எக்கருமத்தையும் முடிக்கும் வீரர் இந்தச் சேவகர்கள் என்றார். 22

நாடக நூல்முறை நன்று நினைந்தே
ஆட அரம்பைய ராயுள ரெல்லாஞ்
சேடியர் கின்னரர் சித்தர் இயக்கர்
பாடுற வீணைகள் பண்ணினர் பாட.

நாட்டியத்தை நூல் முறையாக நன்று நினைந்து கொண்டு அதன் பிரகாரம் தேவப் பெண்களாயுள்ளார்கள் எல்லாம் சூரனுடைய சபையில் அவன் முன்பு நடனம் ஆடவும் அந்த நடனத்திற்கு இசைக் குழுவாக கின்னரப் பெண்களும் சித்தருடைய பெண்களும் இயக்கப் பெண்களும் பெருமையுடைய இனிய இசையுடன் வீணைகளை வாசித்துப் பாடவும். 23

ஏகனை ஈசனை எந்தையை யெண்ணு
ராகிய தொல்லவு ணக்குழு வென்ன
வேகும் உளத்தினர் கஞ்சுகர் வெங்கண்
மாகதர் சூரல் பிடித்து வழுத்த.

ஏகனை, ஈசனை எந்தை பெருமானான சிவனை எண்ணாது உலகிற்கு துயரம் புரிந்த முன்னைய அசுரர் கூட்டம் இது என்று நிச்சயித்துச் சொல்லும்படி கோபத்தால் வேகின்ற உள்ளத்தினை உடையராய் போர்வையை உடையராய் கொடிய சிவந்த கண்ணுடைய மாகதர் என்பவர் பிரம்பினைக் கையில் ஏந்தியவாறு சூரனைத் துதி செய்ய. 24

உள்ளிடும் ஆயிர யோசனை யெல்லை
கொள்ளிட மான குலப்பெரு மன்றந்
தள்ளிட வற்ற சனங்கள் மிகுத்தே
எள்ளிட வெள்ளிடம் இன்றென ஈண்ட.

சபையின் உள்வெளியின் பரப்பாகிய ஆயிரம் யோசனையின் எல்லையில் கொள்ளப்பெறறு விளங்கும் தலையாய அச்சபை மனறில் ஒருபுறமாவது தள்ளி நீக்கிடமுடியாதபடி சனங்கள் மிகுந்து எள்ளுப் போட்டாலும் எள் கீழே விழாதபடி அவ்வளவு நெருக்கமாகச் சனங்கள் நெருங்கி நிற்பவும். 25

வச்சிர மெய்வயி டூரியம் ஒண்பல்
உச்சியில் வாலுளை யேயொளிர் முத்தம்
அச்சுறு கண்மணி யாம்அரி மாவின்
மெச்சிர மேந்தும் வியன்தவி சின்கண்.

வச்சிரத்தினுல் அதனின் உடலும் வைடூரியத்தினுல் அதன் கண்ணும் உச்சியில் முத்தினுல் வெண்மையான பிடரி மயிரும் பிரகாசமுடைய பயங்கரமான அதன்கண் சிவந்த இரத்தினத்தினுலும் ஆக்கப்பெற்ற சிங்கங்கள் சிரசில் ஏந்திடப் பொலியும் மேலான சிமமாசனத்தன் மீது. 26

மீயுயர் நீல வியன்கிரி உம்பர்
ஞாயிறு காலையின் நண்ணிய வாபோல்
பாயிருள் கீறிய பன்மணி கொண்ட
சேயபொன் மாமுடி சென்னியின் மின்ன.

மிக உயர்ந்துள்ள நீல நிறம் பொருந்திய பெருமலையின் மேலாக சூரிய பகவான் காலையில் உதயமாகி வரும் காட்சியான அதே தன்மை போன்று பெரும் இருளைக கிழித்து வரும் பிரகாசமுடைய பல மணிகளைக் கொண்ட மிகச் சிறந்துள்ள பொன்முடி சூரபனமனுடைய தலைமீது விளங்கிட. 27

கறுத்தவ ராத்துணை கண்டிரு வெய்யோர்
உறுப்பிடை கவ்வி யொசிந்து தலைப்போய்
முறுக்கிய வாலொடு முன்கலந் தென்ன
மறுத்தவிர் குண்டலம் வார்குழை தூங்க.

இணைந்துள்ள கரிய பாம்பு இரண்டு இரு சூரிய துணையாகிச் சோடி பிரியாது இணைந்துள்ள கரிய பாம்பு இரண்டு இரு சூரியர்களைக் கண்டு வாயால் கவ்வி தமது வாலைச் சுழற்றி முறுக்கி வந்து வாலால் தலையில் கவ்விய வாய்ப்பக்கம் ஊன்றிக் கொள்வது போன்ற காட்சியினை உடைய அழகிய குறைவொன்றும் இலாத குண்டலம் காதணிகளுடன் அணியப்பெற்று விளங்கிட. 28

வீறிய மாமணி வெற்பின் மிசைக்கண்
ஏறிய ஒண்பகல் இந்துவி யற்கை
மாறிய வந்தென மால்வள மாகும்
நீறு செறிந்திடு நெற்றி இலங்க.

பிரகாசம் உடைய நீல மலை மேலாக ஏறிக் கொண்ட அழகிய சூரியன் சந்திரனுடைய இயற்கையாகி மாறி நிற்கும் இயல்பைப் போன்று மிக்க பெரும் செல்வமாகின்ற திருநீறு அணியப்பெற்ற நெற்றி விளங்கிட. 29

விண்டுமிழ் கின்ற வியன்புழை தோறுந்
தண்டுளி வந்தமர் தன்மைய தென்னப்
புண்டரி கம்பொறை போற்றி யுயிர்க்கும்
வண்டர ளத்தொடை மார்பின் வயங்க.

நீல வானம் உமிழ்கின்ற மேலான புழைகள் தோறும் குளிர்மை வாய்ந்த துளிகள் வந்திடுகின்ற தன்மை போன்று நீல நிறமுடையநெஞ்சில் தாமரைகள் பொறையாற்றுது ஈன்றுவிட்ட குளிர்ந்த முத்துமாலைகள் விளங்க. 30

பங்கமில் சந்தொடு பாளிதம் நானங்
குங்குமம் ஏனைய கந்திகள் கூட்டி
அங்கம தன்கன் அணிந்தன அண்டம்
எங்கும் உலாவி இருங்கடி தூங்க.

குற்றமில்லாத சந்தனத்தோடு பச்சைக் கற்பூரம் குங்குமம் ஏனைய வாசனைத் திரவியங்களைக் கூட்டி தனது மேனி முழுவதும் அணிந்துள்ளவைகளின் வாசனைகள் அண்டங்கள் எங்கும் உலாவி பெருவாசனை வீசி மணம் தந்து நின்றிட. 31

வான்றிகழ் நீனிற மாமுகி லின்பால்
தோன்றிய மின்புடை சுற்றிய தென்ன
ஏன்றுள அண்டம் எனைத்தையும் ஆற்றும்
ஆன்றுயர் தோளிடை அங்கதம் மல்க.

வானத்தில் திகழ்கின்ற நீல நிறமுடைய பெரிய முகிலின் பால் தோன்றிய மின்னல் பக்கராகச் சுற்றி வருகின்றது எனும்படியாக; சிறந்து விளங்கும் அண்டம் அனைத்தையும் அரசாளும் பொறுப்பை ஏற்றுத் தாங்குகின்ற மிக உயர்ந்து விளங்குகின்ற தோளிடத்தாக அங்கதம் என்னும் ஆபரணம் விளங்கிடவும். 32

மெய்த்துணை யாமிரு வெம்பணி ஞாலம்
பைத்தலை கொள்வ பரம்பொறை யாற்ரு
தெய்த்தன பூண்கொடி யாப்புறு மாப்போற்
கைத்தல முன்கட கஞ்செறி வெய்த.

உண்மை நீங்கிடாத துணையான இரு பாம்புகள் பூமியைத் தலையில் கொண்டு பாரத்தைத் தாங்கமுடியாது வளைந்து நெளிந்து இரண்டும் பூண்கொண்டு தம்மைக் கட்டிக் கொள்வது போன்று முன் கைத்தலத்து இருக்கின்ற பெரிய காப்புகள் பிரகாசமாக இருப்ப. 33

நீலம தாய நெடுங்கிரி மேல்பால்
வாலிய கங்கை வளைந்திடு மாபோல்
கோல மிடற்றிடை கோவைகொள் முத்தின்
சால்வுறு கண்ட சரங்கள் இமைப்ப.

நீலமாகிய நிறமுடைய பெருமலையின் மேலிடத்தாக அழகிய கங்கை நதியானது வளைந்து சுற்றி நிற்பது போன்று நீல நிறத்தால் விளங்கிடும் சூரனுடைய கழுத்தினிடத்தாக முத்தின் கோவை கோவையாகத் தொடுக்கப்பட்ட அழகிய கண்டசரங்கள் பிரகாசிப்பவும். 34

வீர மடந்தையர் மேதக நாளுஞ்
சீரிய தோளிணை செல்கதி யென்ன
ஏரியல் பன்மணி இட்டணி செய்த
ஆர வடுக்கல்பொன் ஆகம் இலங்க.

வீர இலக்குமிகள் மேன்மையுடன் நாள்தோறும் சிறந்து விளங்கும் சூரபன்மனின் தோள்களைச் சுற்றி உலாவி செல்லும் அந்த நிலைமை போன்று; நல்ல அலங்காரங்களுடன் சிறப்புற அமைய வைத்த முத்தார மாலையானது தோள்களில் விளங்கிட. 35

அந்தியின் வண்ணமும் அத்தொளி யூருஞ்
சுந்தர மாலிடை சுற்றிய வாபோல்
முந்து பராரைகொள் மொய்மணி யாடை
உந்தியின் ஒண்பணி யோடு வயங்க.

மாலைக் காலத்து உள்ள சிவந்த செக்கர் வானத்தின் அழகிய நிறமும்; அதனுடன் வட்டவடிவான ஒளியுடைய பரிவேடமும் சுந்தரமான நீலநிறமுடைய மேனியுடைய நாராயணப்பெருமான் திருவரையில் சூழ்ந்துளது என்பது போன்று, எல்லா ஆடைகளிலும் வனப்புடைய அழகிய பெருமையான செவ்வாடை சூரனது அரையிலே அணியப்பெற்று அதன்மேல் இரத்தின மணிகளால் இழைக்கப்பட்ட பட்டிகை பொருந்தவும். 36

இருபணி பார்முகம் இட்டிட வீட்டி
உருமொடு மின்னும் உலப்பில சுற்றிக்
கருமிட றாடு கலந்தென நுண்ணூல்
குரைகழல் வார்கழல் கொண்டு குலாவ.

இரண்டு பாம்புகள் பூமியின் மீது தங்கள் முகங்கள் படுமாறு வீழ்த்தி அதோடு இடிகளையும் மின்னலையும் அளவு கடந்தவற்றைச் சுற்றிக் கொண்டு அப்பாம்புகள் கறுத்த தங்கள் கழுத்தோடு வந்து பற்றி பிணைந்துள்ளது போன்று; நுண்ணிய இழைகளுடன் கூடியதாய் சத்திக்கும் சிலம்புகள் வீரகெண்டையுடன் கால்களில் அணியப்பெற்று விளங்கிட. 37

மென்மணி மாழையின் வேதன் இயற்றிப்
பன்மணி மீது படுத்திய பல்பூண்
தொன்மணி மெய்புனே சூரபன் மாவோர்
பொன்மணி மாமுகில் போல இருந்தான்.

இவ்வாருன சிறப்புகளுடன்; பிரமதேவர் மிருதுவான அழகிய பொன்னிஞல் உருவம் செய்து அதனிலே பல வகையான இரத்தினங்களைப் பதித்து அழகு படுத்திய பல முதுமையான இரத்தின ஆபரணங்களை தன் மேனி மேல் அணிந்து கொண்டு; ஓர் பெரிய கருமையான முகில் முழுவதும் பொன் ஆபரணம் அணிந்திருப்பது போன்று சூரபன்மன் இருந்தான். 38

இருந்திடு கின்ற இயற்கை விழிக்கோர்
விருந்தமு தாக வியப்பொடு நோக்கிச்
சுரந்திடு மன்பொடு சூளிகை வைகும்
பெருந்திறல் மாமுகில் இங்கிவை பேசும்.

சூரபன்மன் இப்படியாக அரசகொலுவில் இருந்திடுகின்ற இயற்கை வீரவாகு தேவருடைய கண் பார்வைக்கு பெரு விருந்தாக அமைந்திடவும் அதனை வீரவாகு தேவர் பெரும் வியப்புடன் பார்த்துக்கொண்டு சூரன் மீது பெருகுகின்ற அன்பினுலே அம்மவோ இப்படியான தவத்தின் சிறப்பால் இவ்வளவும் பெற்றிருக்கின்ருனே என எண்ணி அந்த சூளிகையில் பெரும் திறலுடைய முகில் போன்று இருக்கும் வீரவாகு தேவர் அவனின் உன்னதமான நிலையைக் கண்டபடி இவற்றைச் சொல்வார். 39

மூவரின் முந்திய முக்கணன் அம்பொற்
சேவடி பேணிய தேவர்கள் தம்முள்
தூவுடை வேலுள சூரபன் மாப்போல்
ஏவர் படைத்தனர் இத்திரு வெல்லாம்.

பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவர்களிலும் மிக முந்தியவரான மூன்று கண்ணுடைய சிவபிரானின் அழகிய பொன்ஞர்ந்த திருவடிகளைப் பேணி வணங்கித் தவஞ் செய்த தேவர்கள் தம்மில் இந்த மாலையணிந்த வேலுடைய சூரபன்மனைப் போல் எவர்தான் இந்த வகையான செல்வத்தைப் பெற்றனர்.

எல்லாத் தேவரும் சிவபிரானைப் பேணி வந்துள்ளார் எனினும் அவ்வாறு பெருமானைப் பேணிய பேற்ருல் எத்தேவர் இவன் பெற்றது போன்ற செல்வம் பெற்ருர்கள். 40

ஓய்ந்து தவம்புரி வோருள் உவன்போல்
மாய்ந்தவர் இல்லை மறத்தொடு நோற்றே
ஆய்ந்திடின் முக்கண்எம் மையனும் இன்னேற்
கீந்தது போற்பிறர்க் கீந்ததும் இன்ருல்

புலன்களை எல்லாம் அடக்கி செயல் யாவும் ஓய்ந்து தவம் புரிந்தோரில் உந்தச் சூரபன்மன் போன்று வைராக்கிய உறுதியோடு தனது உடலையே நெருப்பில் மாய்த்துத் தவம் செய்தோர் வேறு யாரும் இல்லை. நாம் இதை ஆரா

யப் புகுந்தால் மூன்று கண்ணுடைய எமது ஐயனும் இவனுக்கு அருள் கொடுத்தது போன்று பிறர்க்கு அருள் கொடுத்ததும் இல்லை.

இவனைப் போல் கொடுமையான தவம் புரிந்து தனது உயிரையே சிவனுக்காக தியாகம் செய்தவர் ஆருமில்லை. எமது அப்பன் இவ்வளவு பேறும் பெறும்படி இவனுக்கு கொடுத்தது போன்று வேறு யாருக்கும் கொடுக்கவில்லை. 41

பாடுறு வேள்வி பயின்றழல் புக்கும்
பீடுறும் இவ்வளம் ஆயின பெற்று
நீடுறு மாறு நினைந்திலன் வெய்யோன்
வீடுறு கின்ற விதித்திறன் அன்றோ.

வருத்தம் உற்ற யாகத்தைப் புரிந்து நெருப்பில் குதித்து தனது உடலையே அர்ப்பணித்தும் பெருமையுற்ற இந்த வளங்களை எல்லாம் பெற்றும் சூரபன்மன் இந்த செல்வமெல்லாம் நிலையாக நிற்பதற்கு நினைகின்றான் இல்லையே. ஐயையோ இந்த கொடியவன் அழிந்துபோவதற்கு ஓர் நிலையை உண்டாக்கும் வீதியின் விளையாட்டல் லவா இப்படியாக உவனுக்கு ஓர் நற்புத்தியை உண்டாக்காது விடுத்தது. 42

வேறு

மெய்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார்
கச்சோத மென்று கருதிக் குடம்பை தனினுய்த்து மாண்ட கதைபோல்
அச்சோ வெனப்பல் இமையோரை ஈண்டு சிறைவைத்த பாவம் அதனால்
இச்சூர பன்மன் முடிவெய்து நாளை இதனுக்கொர் ஐய மிலையே.

உண்மையில் நெருப்புத் தணல் இருக்கும் ஓர் குறங் கொள்ளியை; தான் எடுத்தால் என்னவரும் என்பதை உணராத ஓர் குருவி இது ஓர் மின்மினிப் பூச்சி எனஎண்ணி அந்த நெருப்பின் குறங்கொள்ளியை தனது கூட்டில் கொண்டு சென்று வைத்துவிட அக் குறங் கொள்ளியின் தணல் மூண்டு; வற்றலான தடி தும்புகளால் ஆகிய கூடும் எரிந்து குருவியும் மாண்ட கதை போல்; ஐயோ, ஐயோ என தேவர் அலறிப் பதைபதைக்க அத்தேவரை இங்கு சிறை வைத்த அந்த பாவம் அதனாலே இந்த சூரபன்மன் நாளை முடிவடைவான், இதற்கும் ஏதும் ஒரு சந்தேகம் இல்லை. 43

மிகையான வீரம் வளமாற்றல் சால மேவுற்று ளோரும் இறையும்
பகையார்க ணேனும் உளராகி வாழ்தல் பழுதன்றி நன்றி படுமோ
மகவானை மங்கை யுடனே துரந்தும் அவர்மைந்த னோடு சுரரை
அகலாமல் ஈண்டு சிறைசெய்த பாவம் அதனால் இழப்பன் அரசே.

மிகையான வீரம், செல்வம், ஆற்றல் ஆகிய அனைத்தையும் சாலவும் சிறப்பாக அடைந்துகொண்டோரும்; கொஞ்சமேனும் பகையை யாரிடத்தாகிலும் உடையவர்களாக இருந்து வாழ்தல், அது பழுதாக முடியுமன்றி நன்மையாக வருமோ? ஆகாது. இந்திரனை அவன் மனைவியுடனே நாட்டை விட்டுத் துரத்தியும் போதாமைக்கு அவர்கள் மைந்தனை சயந்தனை தேவர்களுடன் தப்பமுடியாதபடி இங்கு சிறை வைத்த பாவமதனால் சூரபன்மன் தனது அரச பதவியை இழப்பான். 44

**மன்னுந் திறத்தின் அமர்சூர பன்மன் மாமக்கள் சுற்றம் நகரம்**
**முன்னும் படிக்கும் அரிதான செல்வ முடனுளே ஈறு படுமேல்**
**முன்னென் பவர்க்கு முன்னுகும் ஆறு முகன்நல்கு முத்தி யலதேல்**
**என்னுண்டு நாளும் வினைசெய் துழன்ற இவன் ஆருயிர்க்கு நிலையே.**

விளங்கிடும் பல திறங்களுடனும் சீருடனும் வாழ்கின்ற சூரபன்மன்; தன்னுடைய பெரிய மக்கள். சுற்றத்தோர், நகரம், நினைப்பதற்கும் அரியதான பெருஞ் செல்வம் ஆகிய இவற்றுடன் நாளை முடிவாகி அழிந்துபோவான் எனில்; முன்னவர் எனப்படுவார்க்கு எல்லாம் மூலமுதலான ஆறுமுகப்பிரான் ஈந்தருளுகின்ற முத்தி அல்லாது வேறு அழிவிலாத நிலை எது உண்டு; நாள்தோறும் புன்மையான வினைகளை காரியங்களைச் செய்து உழன்று திரிந்த இந்த சூரனுடைய உயிர்க்கு துணையான நிலை பேறுன பொருள்.

மக்கள் சுற்றம் வளம் வாழ்வு எல்லாம் இவன் பெற்றது போன்றவை நாம் எண்ணியும் பார்க்கமுடியாது. அவ்வண்ணம் சீருடன் வாழ்ந்த இவன் இவையே தனக்கு உறுதியாவது என நினைந்து கொண்டிருந்தான். ஆனுல் இவை அழியப்போகின்றனவே நாளை. ஆனுல் ஆறுமுகமுடைய அப்பன் அழிவிலாத ஓர் விழுமிய பெறற்கரிய பேரானந்தம் கொண்ட இன்பத்தைத் தர இருப்ப அதை உணராது நின்றுன் இந்த சூரபன்மன்மன். ஆதலால் இவனுக்கு அப்பனுடைய அருள் அன்றித் துணையாவது வேறு எது உண்டு என்றுர் வீரவாகுதேவர். 45

**என்றித் திறங்கள் அருளோடு பன்னி எழில்கொண்ட வேர மிசையே**
**துன்றுற்ற வீரன் வளனே டிருந்த சூரன்முன் ஏகுல் துணியாக்**
**குன்றத்தி னின்று மிவரெல்லை போன்று குமரேசன் எந்தை அடிகள்**
**ஒன்றைக் கருத்தினி டைகொண் டெழுந்து நடைகொண் டவைக்கண் உறுவான்.**

என்று இத்தகைய வார்த்தைகளை வீரவாகுதேவர் இரக்கத்துடன் கூறி; மிக்க எழிலுடைய அந்த சூளிகை மீதிருந்து அந்த வளமெல்லாம் நோக்கிய திறலுடைய வீரவாகுதேவர்; பெருஞ் சிறப்புகளுடன் இருந்த சூரன் முன்பு போவதற்கு துணிவு கொண்டு ஓர் மலையினின்றும் இறங்கி வருவாரைப் போன்று சூளிகையினின்றும் கீழ் இறங்கும் நேரம் குமரேசனை எந்தை பெருமானின் திருவடிகளைத் தமது கருத்திலே ஒன்றும்படி தியானித்து எழுந்து, நடந்து சென்று சூரபன்மனது சபையில் சேர்ந்தருளுகின்றுர். 46

வேறு

**நலஞ்செய் சூளிகை நீங்கிவிண் ணெறிக்கொடு நடக்து**
**கலஞ்செய் திண்டிறல் வாகுவாம் பெயருடைக் கடவுள்**
**வலஞ்செய் வாட்படை அவுணர்கோன் மன்னிவீற் றிருக்கும்**
**பொலஞ்செய் இன்றஅத் தாணிமண் டபத்திடைப் போனுன்.**

நலம் எல்வாம் நிறைந்த சூளிகையினை விடுத்து நீங்கிச் சென்று வானத்தில் வழிக்கொண்டு நடந்து உருத்திராக்க மாலையுடன் விளங்கும் திண்மையான தோளுடைய கடவுளான வீரவாகுதேவர் வலிமையுடைய வாளைக் கைக்கொண்ட சூரபன்மன் வீற்றிருக்கும் அழகும் திருவும் நிறைந்த சபா மண்டபத்திடையாகப் போயினுர். 47

எல்லை இல்லதோர் பெருந்திரு நிகழவீற் றிருந்த
மல்ல லங்கழல் இறைவனைக் குறுகிமாற் றலரால்
வெல்ல ருந்திறல் வீரவா குப்பெயர் விடலை
தொல்லை நல்லுருக் காட்டினன் அவைக்கெலாந் தோன்ற.

எல்லை இல்லதோர் பெருஞ் செல்வம் நிகழ வீற்றிருந்த வீரக்கழலை அணிந்து கொண்ட சூரபன்மனிடம் முன்னுகச் சென்று பகைவரால் வெல்லமுடியாத திறலுடைய வீரவாகுதேவர் என்னும் பெயருடைய இளந்தாரிப் பருவமுடைய எமது கடவுள் இப்பொழுது சபையில் உள்ளார் யாரும் தனது உருவைக் காணும்படி தன் வடிவத்தைக் காட்டியருளினர். 48

ஒற்றை மேருவில் உடையதோர் பரம்பொருள் உதவுங்
கொற்ற வேலுடைப் புங்கவன் தூதெனக் கூறி
இற்றை இப்பகல் அவுணர்கோன் கீழியான் எளிவாய்
நிற்றல் எம்பிரான் பெருமையின் இழிபென நினைந்தான்.

தனியான மேனுமலையை வில்லாக உடையதோர் பரம்பொருளான சிவம் தந்தருளிய கொற்றம் மிகுந்த வேலுடைய சுப்பிரமணியக் கடவுளின் தூதன் யான் என யாரும் அறியும்படி கூறிவிட்டு; இற்றைக்கு இப்பகலில் சூரபன்மன் இருப்பிடத்திற்கு கீழே எளிமையுடன் நிற்பது எமது பெருமானின் பெருமைக்கு இழிபாகும் என தமது மனதில் நினைந்தருளினர்.

அரசமண்டபத்து சூரபன்மன் தனக்கென உயர்வாக அமைக்கப்பெற்ற மேடை மீது உள்ள உயர்வான பெரும் அலங்காரமுடைய சிம்மாசனத்து இருப்பான். யார் அவன் முன்பு சென்றாலும் அவன் மேல் இருப்பவும் சென்றோர் கீழுமாகத்தான் நிற்க வேண்டும். செல்பவர் சமமாகத்தானும் நிற்கமுடியாது. அவன்முன்போவதாகில் நடுக்கத்துடனும் அச்சத்துடனும் சென்றே நிற்றல் வேண்டும். அவன் காலடியின் கீழ் நிற்பது போன்ற நினைவு சென்றவர் யாவருக்கும் தோன்றும்படியாகத் தான் சூரனுடைய இருக்கை அமைத்திருந்தது. எனவே வீரவாகுதேவர் அவன் முன்பு கூசாமல் சென்று நின்றபோதும் அவன் வேலிருப்ப தான் கீழிருக்கவேண்டியதாயிற்றே என்ற உணர்வுகொண்டு அங்குற்ற தான் எம்பிரானின் தூதுவன் என்ற நிலையால் தான் அவ்வண்ணம் நிற்பது எம்பிரானுடைய பெருமைக்கு இழிவென நினைந்தருளினர். 49

மாயை தந்திடு திருமகன் மன்னிவீற் றிருக்கும்
மீயு யர்ந்திடும் அரியணைக் கொருபுடை விரைவில்
போயி ருப்பது மேலன்று புன்மையோர் கடனே
ஆய தன்றியும் பாவமென் றுன்னினன் அகத்துள்.

இவ்வாறு நினைந்த வீரவாகுதேவர் மாயை தந்திட்ட சூரபன்மன் சிறந்து வீற்றிருக்கும் மிக உயர்ச்சி வாய்ந்த சிம்மாசனத்தின் ஒருபுடையாக விரைவுடன் சென்று இருப்பதுவும் மேன்மையான காரியமன்று. அது சின்னத்தனமுடையார் கடமையாகும், அதுமட்டும் அல்லாமல் பாவியுடன் சமமாக இருத்தலும் பாவம் என்று தமது உள்ளத்து நினைந்தருளினர். 50

இனைய துன்னியே அறுமுகப் பண்ணவன் இருதாள்
நினையும் எல்லையில் ஆங்கவன் அருளினுல் நிசியில்
தினக ரத்தொகை ஆயிர கோடிசேர்ந் தென்னக்
கனக மாமணித் தவிசொன்று போந்தது கடிதின்.

இவ்வாறு எண்ணி ஆறுமுகமுடைய கடவுளின் திவ்வியமான இருசரண கமல திருவடிகளையும் வீரவாகு தேவர் நினையும் அந்த எல்லையில் அவ்விடத்து ஆறுமுக முடைய அப்பன் அருளால் இராக்காலம் நடுச்சாம இருளிலே சூரியர்களின் கூட்டம் ஆயிரகோடி வந்தது என்னும்படியாக ஒளிவீசுகின்ற பொன்னும், இரத்தினங்களும் சேர்த்து அமைக்கப்பெற்ற ஒரு சிம்மாசனம் அதிவிரைவுடனுக அங்கு வந்தது. 51

நித்தி லப்படு பந்தருஞ் சிவிகையும் நெறியே
முத்த மிழ்க்கொரு தலைவனும் மதலைக்கு முதல்வன்
உய்த்த வாறெனக் குமரவேள் வீரனுக் குதவ
அத்த லைப்பட வந்தது மடங்கலேற் றணையே.

முத்தினுல் முழுவதும் முடித்துச் செய்யப்பெற்ற முத்துப் பந்தரும் சிவிகையும் முறையாக இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழுக்கும் ஒரு தலைவனுன தமது குழந்தையாகும் திருஞானசம்பந்தருக்கு முதல்வரான சிவபிரான் கொடுத்தருளிய அத் தன்மை போன்று தமது தூதுவரான வீரவாகு தேவர் சூரன் முன்பு அமரும்படி இந்த இரத்தின சிம்மாசனத்தை முருகப்பிரான் கொடுத்தருளலும் அந்த சிங்கங்கள் சுமக்கும் சிம்மாசனம் சூரபன்மன் சபையின் அவன் முன்பாகத் திடீரென வந்தருளியது. 52

பன்னி ரண்டெனுங் கோடிவெய் யவரெல்லாம் பரவப்
பொன்னின் மால்வரை திரைக்கடல் அடைந்தவா போல
மின்னு லாவிய பொலன்மணித் தவிசுசேண் விளங்கிப்
மன்னர் மன்னவன் அவைக்களத் தூடுவந் ததுவே.

பன்னிரண்டு கோடி என்னும் கணக்குடைய சூரியர்கள் எல்லாம் சூழ்ந்து வணங்கிவர பொன்மயமான மகாமேரு மலை திரையுடைய பாற்கடலில் வந்துசேர்ந்த தன்மைபோன்று; மின்னல் போன்று ஒளிவீசிடும் அழகிய இரத்தின சிம்மாசனம் அரச ர்க்கரசனுன சூரனின் சபை ஊடாக வந்து சேர்ந்தது. 53

சிவன் மகன்விடு பொலன்மணித் தவிசுசேண் விளங்கிப்
புவன முற்றுறத் தன்சுடர் விடுத்தலிற் பொல்லாப்
பவம னத்தொடு தீமையே வைகலும் பயிற்றும்
அவுணர் மெய்யையுந் தெய்வதப் படிவமாக் கியதால்.

சிவகுமாரன் விடுத்த அழகிய இரத்தின சிம்மாசனம் வானத்தில் விளங்கி இப் புவனங்கள் எங்கும் தனது சுடரொளியைப் பரப்புதலும் அதுவேளை பொல்லாத பாவ மனத்தோடு தீமையே நாள்தோறும் செய்கின்ற அசுரருடைய மேனிகளையும் தெய்வ உடம்பான வடிவாக்கியது.

பாவம் இருள் உடையது. நன்மை அறிவின் பயனுன ஒளியுடையது. ஆகவே பாவமே பயின்றமையால் அசுரர் உடலம் இருள் மயமாகியது. இப்போது சிம்மா சன ஒளி அவர்கள்மீதும் படுதலாலே அவர்களுடைய கறுத்த உடலமும் ஒளியுடைய உடலமாகக் காணப்பட்டது. 54

இவற்றி யற்கையால் வீரவா குப்பெயர் ஏந்தல்
நிவப்பின் மிக்கதோர் பொன்மணித் தவிசின்மேல் நெஞ்சின்
உவப்பும் வீரமும் மேதக இருத்தலும் உற்ற
அவைக்க ளத்தினர் யாவருங் கண்டனர் அதனை

இவ்வாறான முறைகளால் வீரவாகு என்னும் பெயருடைய கடவுள் உவமை கடந்து விளங்கிடும் அழகுடைய பொன்னும் மணியும் வைத்திழைத்த சிம்மாசனமீது நெஞ்சிலே மகிழ்வும் வீரமும் மேம்பட வீற்றிருத்தலும் அப்போது அதனை அங்குள்ள சபையிலிருந்தார் அனைவரும் கண்டனர். 62

நோற்றல் முற்றுறும் வினைஞர்பால் நொய்தின்வந் திறுத்த
ஆற்றல் சால்வளம் போலவே அரியணை அதன்கண்
தோற்று மேலவன் நிலைமையைக் காண்டலுந் துளங்கி
ஏற்ற அற்புதம் எய்தினர் அவைக்களத் திருந்தார்.

தவம் புரிந்து அச்செயல் முடிவாகும்படியான செய்கையுடையார் மாட்டு விரைவின் வந்து பெருகிக் கொண்ட வளம் போன்று விளங்கிடும் சிம்மாசனத்தின் மீதாகத் தோற்றியிருக்கின்ற மேலவரான வீரவாகுதேவர் நிலையைக் காண்டலும் சபையில் இருந்தார் எல்லாரும் நடுக்கம் கொண்டு அதற்கேற்ற அற்புதமெய்தினர்கள். 63

வேறு

வாரிலங் கியகழல் மன்னன் முன்னரே
தாரிலங் கியமணித் தவிசின் உற்றுளான்
வீரனும் போலுமால் வினையம் ஓர்கிலேம்
யாரிவன் கொல்லென இயம்பு வார்சிலர்.

வார் இலங்கிடுகின்ற வீரக்கழலை அணிந்த சூரபன்மன் முன்பாக ஒளி பிரகாசிக்கின்ற இரத்தின சிம்மாசனத்து இருந்தவனான இவனைப் பார்த்தால் வீரன் போலும். இது என்ன காரணம் இப்படி நடப்பதற்கு என்பது அறிகிலோம். இவன் யாராக இருக்கும் என சொல்வார் சிலர். 64

முந்திவட் கண்டிலம் முடிவில் ஆற்றல்சேர்
எந்தைமுன் இதுபொழு திருத்தல் மேயினான்
நந்தமை நீக்கியே நடுவ ணேயிவன்
வந்ததெவ் வாறென வழங்கு வார்சிலர்.

முன்னர் இவனை ஒருபோதும் நாம் காணவில்லை. முடிவில்லாத வலியுடைய எங்கள் சூரபன்மன் முன்பாக இதுபொழுதில் இருந்தான். சரி அப்படியாயின் எங்கள் எல்லாரையும் கடந்து நடுவனாக அங்கு இப்படி எத்தன்மையாகப் போயினான்? எனச் சொல்வார் சிலர், 65

ஒப்பருஞ் சனங்களோ டொன்றி நம்மெலாந்
தப்பினன் புகுந்தனன் தமிய னென்னினும்
இப்பெருந் தவிசிவண் இருந்த தாற்றவும்
அற்புதம் அற்புத மாமென் பார்சிலர்,

அயிலெ யிற்றுடை அவுணர்கள் அணிகலந் தன்னில்
குயிலு டைப்பல மணிகளுங் குமரவேள் உய்த்த
இயலு டைப்பெருந் தவிசொளி பரத்தலின் இரவி
வெயிலி டைப்படு மின்மினி போல்விளங் கிலவே.

வேல்போன்று கடைவாயில் நீண்ட பற்களையுடைய அசுரர்கள் அணிந்துள்ள ஆபரணங்களில் குயிற்றப்பட்டு இருக்கின்ற பல இரத்தினங்களும் குமரப்பெருமான் செலுத்திய அருள் இயல்புடன் நிறைந்த பெரிய சிம்மாசனத்தின் ஒளி பரத்தலாலே அந்த ஆபரண மணிகள் எல்லாம் சூரியன் முன் மின்மினி போன்று ஒளியற்றுப் போயின. 55

செக்கர் வானிற மதிக்கதிர் உடுக்களின் திரட்சி
தொக்க பாயிருள் பலவகை எழிலியின் துளக்கம்
மிக்கெ லாஞ்செறி மாலையின் உம்பர்மேல் வெய்யோன்
புக்க தேயெனத் தொலைத்ததால் அச்சபைப் பொலிவை.

செக்கர் வானில் திகழும் செவ்வொளி நிறம் சந்திரனின் இளம் பிறையின் நிலா நட்சத்திரங்களின் திரட்சி, திரண்ட பெரும் இருட்செறிவு, பலவகையான மேகக் கூட்டத்தின் பிரகாசம் ஆகிய இவை எல்லாம் மிகுந்து காணப்பெறும் மாலைப்பொழுதில்; மீண்டும் வானின்மேலே சூரியன் தோன்றினன் என்னும்படியாக இந்த சிம்மாசனம் அந்தச் சூரனின் சபையின் பொலிவை அடியோடு தொலைத்து விட்டது.

மாலையில் உள்ளவனப்பை மீண்டும் அஸ்தமனமான சூரியன் வந்து கெடுத்துக் கொள்வதுபோன்று சூரபன்மனின் சபையின் பொலிவை எம்பிரானின் அருளால் வந்த சிம்மாசனம் நீக்கியருளியது. 56

திசைமு கத்தனுஞ் செயற்கருந் தவிசொளி செறிந்தே
அசைவ ருந்திறற் சூரபன் மாவெனும் அவுணன்
இசைமை தன்னையும் ஆணைதன் னையும்அவ னியாக்கை
மிசைகொள் பேரணிக் கதிரையும் விழுங்கின விரைவில்.

திக்கிற்கொரு முகமாக நான்கு முகமுடைய பிரமதேவனும் செய்தற்கு அரிய இந்த சிம்மாசனத்தின் ஒளி எங்கும் செறிந்து யாவராலும் அசைக்கமுடியாத நிலை கொண்ட திறலுடைய சூரபன்மனுடைய பெருமையையும் ஆணை தன்னையும் அவனுடைய உடலின் மேல் நிறைவாக அணியப்பெற்ற பெரும் ஆபரணங்களின் ஒளியையும் விரைவுடன் விழுங்கிக்கொண்டது.

உண்மை ஒளி வடிவானது. பாவம் இருள் வடிவானது. ஆகவே இப்போது பாவமே பயின்ற இடத்தில் இறைவன் அருளால் அந்த சிம்மாசனத்தின் அற்புத ஒளி பற்றி பேசுகின்றார். 57

அனைய வான்தவி சவுணன்நேர் இருத்தலும் அதுகண்
டெனது நாயகன் விடுத்தனன் போலுமென் றெண்ணி
மனம கிழ்ச்சியால் அறுமுகப் பிரானடி வழுத்தி
இனைய நாடுவான் இருந்தனன் ஆங்கதன் மிசையே,

அவ்வாறுக உயர்ந்த சிம்மாசனம் அருளால் வந்து சூரபன்மன் நேராக இருத்தலும் அதனை வீரவாகுதேவர் கண்ணுற்றருளி இதனை எனது நாயகன் விடுத்துள்ளான் போலும் என்று நினைந்தருளிக் கொண்டு மனதில் அப்பொழுது எழுகின்ற மகிழ்ச்சியினுல் ஆறுமுகப்பிரான் திருவடிகளை வழுத்தி வணங்கி அருள் நிறைவுடன் அந்த சிம்மாசனத்தின் மீதாக எழுந்தருளிக்கொண்டு தனது கருமத்தை நாடியவராய் இருந்தருளினுர் வீரவாகுதேவர். 58

பெருந்த னிச்சுடர் எறித்திடு பொன்மணிப் பீடத்
திருந்து மேதகு சிறப்பொடு விளங்கிய ஏந்தல்
விரிந்த பல்கதி ருடையதோர் வெய்யவன் நடுவட்
பொருந்தி வைகிய கண்ணுதற் பரமனே போன்றுன்.

பெரிய தனியான சுடரொளி எறித்திடுகின்ற பொன்னும் மணியும் நிறைந்த அந்த சிம்மாசன மீதாக இருந்துகொண்டு மேன்மையான சிறப்புடன் விளங்கிடும் வீரவாகுதேவர் விரிந்து பரக்கின்ற பல கிரணங்களை உடைய சூரியபகவான் நடுவணுகப் பொருந்தி இருந்தருளுகின்ற நெற்றிக் கண்ணுடைய சிவபிரானைப் போன்று விளங்கியருளினுர்.

பரிதிவாழ் ஒளியாய் நின்பாதமே
அல்லால் பற்றுநான் மற்றிலேன் கண்டாய். — மணிவாசகர் 59

மின்னி ருந்தவேல் அவுணர்கோன் எதிருறும் விடலை
முன்னி ருந்தஆ டகன்றனை அடுமுரட் சீயஞ்
செந்நி ணங்கவர்ந் தலமர அணுகிமுன் னெற்றப்
பொன்னி ருந்தவி சிருந்திடும் வீரனே போன்றுன்.

இன்னமும்; மின்னல்போன்று துலங்கிடும் வேலைக் கையில் கொண்ட சூரபன்மன் முன்பாக நேரிருந்த வீரவாகு தேவர்; முன்பு ஒருகால் வாழ்ந்த இரணியன் என்பானைக் கொன்றருளிய நரசிங்க மூர்த்தியின் சிவந்த நிறமுடைய நிணத்தை நீக்கிடும்போது நரசிங்கம் அலமந்து துயருறும்படி அதன் முன்பு சென்று பொன்னுல் செய்த சிம்மாசனத்தின்மீது வீரபத்திரக் கடவுள் இருந்ததுபோன்றும் இருந்தார். நரசிங்கம் இரணியனைக் கொன்று தருக்கி உலகிற்கு துயர் புரிந்தபோது அதன்முன் சென்று வீரபத்திரக் கடவுள் அதன் தோலினை உரித்தருளிய வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது. 60

வெம்மைக் காலிருள் வேலைபோல் மூடிவிண் புவியைத்
தம்முட் சித்தரிற் காட்டலுஞ் சதுர்முகத் தொருவன்
நம்மொத் தாரிலை என்றிடச் சிவன்புகழ் நவிலுஞ்
செம்மைத் தொல்குண மாலுநேர்ந் திருந்தனன் திறலோன்.

கொடிய கரிய இருளானது சமுத்திரம்போன்று பரந்து வானை மூடி வானத்தில் நின்றும் பூமியைத் தன்னிடத்து தோற்றிட ஓர் சித்துச் செய்வார் போன்று காண்பித்திடுதலும்; அது வேளையும் அது கண்டு பிரமதேவர் நம்மை ஒத்தார் ஒருவரும் இல்லை என அகந்தையால் கூறிடலும் அந்நேரம் பிரமன் முன் நின்று சிவபிரானின் புகழை ஓதிய விஷ்ணுமூர்த்தியின் தன்மைபோன்று வீரவாகு தேவர் சிம்மாசனத்தின்மேல் அகந்தையோடுற்ற சூரன்முன் இருந்தருளினுர். 61

ஒப்பற்ற சனங்கள் நெருங்கி நின்ற இந்த இடத்தில் அவர்களுடன் உடன் கூடி நின்ற எம்மையெல்லாம் தப்பிக்கொண்டு தனியஞக ஒருவாறு உட்புகுந்தான் என்றும் இந்தப் பெரிய சிம்மாசனம் இவ்விடத்து இருந்தது ஆற்றவும் அற்புதம் அற்புதம் எனச் சொல்வார் சிலர்; 66

சீயமெல் லணையொடு செம்மல் முன்னரே
ஏயெனும் அளவையின் ஈண்டு தோன்றினன்
ஆய்பவர் உண்டெனின் அறைவன் நம்மினும்
மாயன்இங் கிவனென வகுக்கின் ருர்சிலர்.

இங்கு சிங்கம் விளங்கிடுகின்ற ஆசனத்துடன் எம் தலைவனை சூரபன்மன் முன்னரே ஏ என்னும் சொல் அளவையின் இவ்விடத்து இவன் தோன்றினன். இந்த வரலாற்றைப் பற்றிச் சிந்திக்கக் கூடியவர் இங்கு உண்டென்ருல் நாம் சொல்லக்கூடியது யாதெனில் நம்மிலும் பார்க்க மாயம் பொருந்தியவன் இங்கு இந்த வீரன் என வகுத்துச் சொல்கின்ருர் சில அசுரர். 67

அறைகழல் ஒருவனை அவையத் தென்முனங்
குறுகிய விடுத்ததென் குழாங்கொண் டீரென
இறையவன் நங்களை யாது செய்யுமோ
அறிகில மெனப்பதைத் தழுங்கு வார்சிலர்.

இன்னும் சிலர் சொல்வார்கள் வீரக்கழல் அணிந்த ஒருவனை இந்த சபையின் இடத்தாக என் முன்னர் எப்படி வரும்படி நீங்கள் விடுத்தீர்கள்? எல்லீரும் நீங்கள் கூட்டமாக நின்றீரன்ருே? என்று எங்கள் அரசன் சூரபன்மன் எங்களை யாதுதான் செய்யுமோ! அதை அறியமாட்டோமென்று பதைப்புற்று அழுது துயரப்படுவார் சில அசுரர். 68

ஒட்டலன் ஒருவனை ஒறுத்தி டாதிவண்
விட்டதெ னென்றிறை வெகுளு முன்னரே
கிட்டினம் அவன்றனைக் கெழுமிச் சுற்றியே
அட்டனம் வருதுமென் றறைகின் ருர்சிலர்.

எமது பகைவன் ஒருவனைச் சிறைப்படுத்தி தண்டியாது இவ்விடத்து என்முன் வந்து சேரவிட்டது என்ன காரணம் என்று எங்கள் அரசன் எம்மைக் கோபிக்கும் முன்னரே நாம் சென்று இந்த வீரனைக் கிட்டி அவனை நெருங்கிச் சூழ்ந்து கொன்று வருவோம் வாருங்கள் எனச் சொல்கின்ருர் சிலர். 69

விளிவிலாத் திறலுடை வேந்தன் தன்னெதிர்
களியுலா மனத்தொடு கடிதின் உற்றுளான்
தெளிவிலா மாயையின் திறலன் போலுமால்
அளியனே நுங்களுக் கவனென் பார்சிலர்.

அப்போது சிலர் சொல்வார்; என்ன நீங்கள் சொல்கிறீர்கள்? அழிவு இல்லாத வலிமையுடைய எங்கள் அரசனது முன்பாக மிக்க மகிழ்ச்சி நிறைந்த மனத்துடன் விரைவுடன் வந்துள்ளான். இவனுடைய மாயையை நாம் தெளிந்து அறிந்துகொள்ள முடியாதபடி அத்தகைய திறமை உடையான் போலும். இவன் என்ன உங்களுக்கு எளிதானவன் என நினைந்திரோ என்பார் சிலர். 70

மன்னவன் எதிருற வந்து ளானறனே
அன்னவன் பணியினுல் அடுவ தல்லதை
முன்னுற அதனேயா முன்னு வோமெனில்
பின்னது பிழையெனப் பேசு வார்சிலர்.

அதுவேளை சிலர்; எங்கள் சூரபன்மன் எதிராக வந்துள்ளவன்தனே எங்கள் அரசனுடைய ஆணையினுல் கொல்வதேயல்லாது அதற்கு முன்பு யாம் அதனை நினைப் போமென்ருல்; பின்னுல் அது பிழையாய் முடியும் என்பார்கள், 71

யாரிதை அறிகுவார் இனையன் இவ்விடைச்
சூருற வுன்னியே துன்னி னுன்கொலோ
சேரலர் பக்கமாய்ச் சேர்ந்து ளான்கொலோ
ஒருது மேலென உரைசெய் வார்சிலர்.

சிலர் சொல்வார்; யார் இதை அறிவார்கள்; இந்த வீரன் இவ்விடத்து சூர னுடைய உறவை நினைந்து வந்தனனே? அல்லது பகைவர் பக்கமாக வந்துளனே? இதை மேலாக நாம் அறிவோம் என்பார்கள். 72

கடுந்தகர் முகத்தவன் கையொன் றற்றநாள்
தடிந்தனன் காவலோர் தம்மை மன்னவன்
தொடுங்கழல் இவன்வருஞ் சூழ்ச்சி நோக்கியின்
றடும்பலர் தம்மையென் றச்சுற் ருர்சிலர்.

கொடுமை நிறைந்த ஆட்டுமுகமுடைய அசமுகியின் கை ஒன்றை வெட்டிய நாள் எங்கள் அரசன் எத்தனையோ காவலாளிகளைக் கொன்ருன். இப்போது வீரக் கழல் அணிந்திருக்கும் இவன் வந்துள்ள இந்தச் சூழ்ச்சியை நாம் பார்த்தால் இவனை இங்கு விட்டதற்காகவும் எங்கள் அரசன் பலரைக் கொவ்வான் போலும் என்பார் சிலர். 73

வாசவன் முதலினேர் மருளத் தொல்லைநாட்
தேசுறும் விஞ்சையர் வடிவிற் சேர்வுறீஇ
ஆசிலோர் புன்னிறுத் தாணை காட்டிய
ஈசனே இங்கிவன் என்கின் ருர்சிலர்.

இந்திரன் முதலியோர் மருளும்படியாக முன்னுளிற் பிரகாசமுடைய விஞ்சை யர் வடிவில் தோற்றம் கொண்டு குறைவிலாத ஓர் துரும்பை நிறுத்தி தமது ஆணை யைக் காட்டிய ஈசன்தான் இங்கு இவன் என்கின்ருர் சிலர். 74

ஆயதோர் காசிபன் அதிதி தங்கள்பாற்
சேயனுய் வந்தொரு சித்தன் போன்றுலாய்த்
தூயவான் புவியெலாம் அளப்பச் சூழ்ந்திடு
மாயனே இவனென மதிக்கின் ருர்சிலர்.

பெருமை மிக்க காசிபன் அதிதி ஆகியோர் பின்னுக மாவலிபால் வாமனனுய்க் குழந்தை உருவில் வந்த ஒரு சித்தன் போன்று உலாவியும் பின் தூயதான ஆகாயம், பூமி எல்லாம் அளக்கும்படி வளர்ந்துகொண்ட நாராயணனே இவன் என்று எண்ணு கின்ருர் சில அசுரர். 75

விண்டொடு சூளினை விளம்பி விண்புவி
உண்டொரு கணத்தினில் உந்தி காட்டிய
புண்டரி கத்தனே புணர்ப்பின் இவ்வுருக்
கொண்டன னுமெனக் கூறு வார்சிலர்.

முன்னர்க் காலத்து விஷ்ணுவோடு ஓர் சபதத்தைக் கூறி வான உலகையும் பூமியையும் உண்டு ஒரு கணத்தினில் மீண்டும் தனது உந்தி வழியாகத் தோற்றுவித்த தாமரை மலரில் இருக்கும் பிரமனே ஓர் சூழ்ச்சியால் இந்தஉருவம் கொண்டனன் போலும் எனக் கூறுவார் சிலர். 76

மூவரு ளாகுமோ முடிவின் மாதிரத்
தேவரு ளாகுமோ சேணில் வைகிய
தாவரு முனிவர் தம்மு ளாகுமோ
ஏவரு ளாகுமோ இவனென் பார்சிலர்.

இவன் யாராக இருப்பான்; மூவரில் ஒருவனுகுமோ? அல்லது முடிவிலாத திக்குப் பாலகரில் ஒருவனுகுமோ? அல்லது வானிலிருக்கும் குறைவிலாத முனிவர்களுள் ஒருவனுகுமோ? எவர்களில் இவன் ஒருவனுகுமென்று யாருக்குத் தெரியும் என்பார் சிலர். 77

மாலைதாழ் மார்புடை மன்னற் கின்னமும்
ஆலமார் கண்டனே அருளின் இன்னதோர்
கோலமாய் வரந்தரக் குறுகி னுன்கொலோ
மேலியாம் உணருதும் வினைவென் பார்சிலர்

மாலை தாழ்ந்து அழகுடன் விளங்கும் மார்புடைய எமது அரசனுக்கு இன்னமும் நஞ்சுண்ட கண்டமுடைய சிவபிரானே அன்பினுல் வரங்களை அருள் செய்திட இக்கோலத்தில் வந்துள்ளாரோ? இவ்வளவு அற்புதத்துடன் இது நிகழ்ந்துமையால் இதை நாம் மேலாக நிகழக்கூடிய கருமங்களைக் கொண்டு அறிவோம் என்பார்கள். 78

காற்றுடன் அங்கியுங் கடுங்கட் காலனுங்
கூற்றனும் ஒருருக் கொண்டு வைகிய
தோற்றமி தன்றியிச் சூரன் முன்வரும்
ஆற்றலர் யாரென அறைகின் றூர்சிலர்.

இன்னும் சிலர் காற்றுடன் நெருப்பும் கொடுங் கண்ணுடைய காலனும் இயமனும் ஒரு வடிவால் இந்தத் தோற்றமே கொண்டு வந்து இப்படியாக இந்தச் சிம்மாசனத்து இருந்தது அல்லாமல் இந்த சூரன் முன்பு வரும் வலியுடையார் யார் எனச் சொல்கின்றூர் சில அசுரர். 79

குன்றமும் அவுணனுங் குலைந்து பாடுற
ஒன்றொரு வேலினை ஒருவ னுய்த்தனன்
என்றனர் அன்னவன் ஈண்டு மன்னன்முன்
சென்றன னேவெனச் செப்பு வார்சிலர்.

கிரவுஞ்ச மலையும் தாரகாசூரனும் குலைவுற்று அழிந்துபோகும்படி தன்னந்தனியான வேலினை ஒருவன் உய்த்தார் என்று இவ்விடம் சிலர் கூறினுர். அந்த வீரன் தான் இந்த அரசன் முன்பு வந்தாரோ? என்று செப்புகின்றூர் சிலர் அசுரர். 80

செற்றிய பன்மணிச் செம்பொன் மன்றமும்
முற்றிடும் அவுணரும் ஒளிறு வான்கதிர்
மற்றிவன் அணிகளின் தவிசின் வாள்பட
அற்றது பகற்சுட ராயென் பார்சிலர்.

இந்த அதிசயத்தைப் பாருங்கள்; எங்கும் ஒளியினைப் பரப்புகின்ற செம்பொன் னினால் செய்யப்பெற்ற இந்த சபை மன்றமும்; இங்கு இருக்கின்ற அசுரரும்; பிரகாச முடைய வானில் நின்ற சூரியனின் ஒளியும்; இங்குள்ள ஆபரணங்களின் ஒளியும் இந்த இவனுடைய சிம்மாசனத்தின் ஒளிபட முற்றிலும் அற்று; பகலில் எரியும் விளக் கின் தன்மையாவே போயது என்றார் சிலர். 81

இருந்திடும் அவுணர்கள் யாரும் இத்திறம்
வருந்திறம் நினைகிலர் மறந்தும் இவ்விடை
தெரிந்திடின் இங்கிது திறல்கொள் மன்னனே
புரிந்திடு மாயையின் புணர்ப்பொன் பார்சிலர்.

இங்கு இருக்கின்ற அசுரர்கள் யாரென்றாலும் இத்தன்மையாக மாயையால் சிம் மாசனமும் கொண்டு வருதற்கு மறந்தும் நினைக்கார். இதனை நன்கு நாம் தெரிந்து கொண்டால் இங்கு இந்த அற்புதமான செயலைச் செய்வதற்கு எமது அரசனே செய் திட்ட மாயத்தன்மையின் செயலாகும் என்பார்கள் சில அசுரர்.

இங்குள்ளார் மறந்தும் இப்படி இதைச் செய்ய நினையார். ஆனால் எமது வவ் லமை உடைய சூரபன்மனே செய்துகொண்ட ஓர் மாயவித்தையின் செயலாகும் என் பார்கள். 82

நென்னலின் இறந்துயிர் நீத்த தாரகன்
முன்னுறு தன்னுரு முடிய இப்பகல்
இன்னதோர் பொன்னுரு வெடுத்து முன்னைபால்
துன்னினன் கொல்லெனச் சொல்கின் றார்சிலர்.

நேற்று இறந்துபோய் உயிர் நீங்கிய தாரகாசுரன் முன் தான் கொண்ட கறு த்த கொடிய உருவம் அழிந்துபோதலால் இன்று இப்பகற் பொழுதில் இந்தப் பொன் உருவம் எடுத்துக் கொண்டு தனது தமையன் பாலாக வந்துளன் போலும் எனச் சொல்கின்றார் சில அசுரர்.

ஆன்மா ஒருபோதும் அழிவிலாதது. அது பல உடல்களைப் பெற்றுப் பிறந்து இறந்து தொகழிற்படும் என்னும் உண்மை இப்பாடலால் பெறப்படுகின்றது. 83

வேறு

சங்க மேவினர் இனையன அளப்பில சாற்ற
அங்கண் ஓரரி மான்றவி சிருக்கையில் அவுணன்
துங்க மெத்துணை அத்துணைச் சிறப்பொடு தோன்றிச்
செங்கை வேலவற் புகழ்ந்துவீற் றிருந்தனன் திறலோன்.

அரச சபையில் சங்கமாகக் கூடியிருந்த இவர்கள் யாவரும் இத்திறமாக தமது மனதில் எட்டியபடி அளவில்லாதவற்றைப் பேசிக்கொள்ள அங்கு அருளால் வந்தரு ளிய ஓர் சிம்மாசனத்தின் இருக்கையில், சூரபன்மனின் மேம்பாடான சிறப்புகள் எவ்

வளவோ அல்வளவு சிறப்போடும் வீரவாகுதேவர் தோன்றி சிம்மாசனத்து அமர்ந்த ருளியபடியே; தமது சிவந்த திருக்கையில் வேலை உடைய பெருமானைப் புகழ்ந்து துதித்து சிறந்து வீற்றிருந்தருளினர் திறலுடைய வீரவாகுதேவர். எண்ணிய எண்ணப்படி வாழவைத்த பகவானை வாயார வாழ்த்திக் கொண்டு சிம்மாசனத்து திகழ்ந்து இருந்தார் வீரவாகுதேவர். 84

அறிவர் மேலவன் தவிசில்வீற் றிருத்தலும் அவுணர்க்
கிறைவ னுங்கது நோக்கியே எயிற்றணி கறித்துக்
கறுவி யேநகைத் துரப்பிமெய் வியர்ப்பெழக் கண்கள்
பொறிசோ ரிந்திடப் புகையுமிழ்ந் திணையன புகல்வான்.

அறிவாளிகளிலும் மேம்பட்டவரான வீரவாகுதேவர் சிம்மாசனத்தில் சூரன் முன் வீற்றிருத்தலும் அதனை அசுரர்க்கெல்லாம் அரசனான சூரபன்மன் பார்த்து தன்னுடைய வரிசையான பற்களை நறநறவெனக் கடித்து கோபத்தால் சிரித்து உரப்பி மேனி எல்லாம் வியர்வை கொள்ள, கண்கள் நெருப்புப் பொறிகளைச் சொரிந்திட வாயால் புகை கக்கியவாறு இதனைச் சொல்வான். 85

சுற்ற நீங்கியே இலையுண்டு விலங்கெனச் சுழன்று
வற்றன் மாமரக் காட்டகத் திருந்துடல் வருத்துஞ்
சிற்று ணர்ச்சியோர் வல்லசித் தியல்பிது சிறியோய்
கற்று ளாய்கொலாங் காட்டினை நமதுமுன் காண.

என்னடா இது, தனது சுற்றம் நீங்கி தொடர்வகன்று பசிக்கு இலைகளை உண்டு மிருகம் போன்று சுழன்று வற்றலாய்ப்போன பெருமரங்களினை உடைய காட்டினிடத்தாக இருந்து தமது உடலை வருத்தி வாழும் சிறிய உணர்ச்சியோர் செய்யக்கூடிய சித்தின் இயல்பு இது. நீ ஓர் சின்னத்தனமானவன். பெருமை என்பது எது; ஆரார்முன் எப்படி நடப்பது என்பது தெரிந்திடாத நீ; இந்த சித்தைக் கற்றுக் கொண்டுள்ளாய் போலும் அதனை என் முன் நான்காணும்படி காட்டினாய். 86

துன்று வார்சடை யோகினோர் அல்லது தொலைந்து
பின்று தேவரும் வல்லரிச் சிறுதொழில் பெரிதும்
ஒன்று மன்னதை இவ்விடைக் காட்டலர் உன்போல்
நன்று நன்றுநீ நம்முனர்க் காட்டிய நடனம்.

மேலாக நெருங்கிய சடையினையுடைய யோகிகளே அல்லது எனக்குப் பயந்து ஒளித்தோடிய தேவரும் நன்றாக நீ இப்போது செய்துள்ள சிறுதொழிலான இந்தச் சித்தைச் செய்ய வல்லார்கள். அப்படி இருந்தும் இதை என்முனம் உன்னைப்போன்று இவ்விடத்து செய்து காட்டார்கள். நல்லது நல்லது நீ என்முன்பு காட்டிய உனது நடத்தை. 87

சித்த ராயினோர் செங்கண்மால் முதலிய தேவர்
இத்தி றத்தன காட்டுதற் கஞ்சுவ ரென்முன்
தத்தம் எல்லையிற் புரிந்திடல் அல்லது தமியோய்
பித்த னேகொலாம் நமக்கிது காட்டுதல் பிடித்தாய்.

சித்தராயிருப்பாரும் சிவந்த கண்ணுடைய நாராயணக் கடவுள் முதலான பெருந்தேவரும் இப்படியான செய்கையை தங்கள் தங்கள் இருப்பிடத்து செய்து கொள்வது அல்லாமல் என் முன்பு வந்து செய்து காட்டுவதற்கு அஞ்சுவார்கள். நீ ஒரு தனியன் பயித்தியம் பிடித்துள்ளாய் போலும். அதனால்நமக்கு முன் வந்து இத்தகைய வித்தையைச் செய்து காட்டுதற்கு மனம்பிடித்தாய். 88

உரைசெய் இந்நகர் மகளிரும் செய்வருன் முற்றுக்
கருவி னுள்ளூறு குழவியுஞ் செய்திடுங் கருத்தில்
வரைக ளுஞ்செயும் மாக்களுஞ் செய்யுமற் றதனல்
அரிய தன்றரோ பேதைநீ புரிந்திடும் ஆடல்.

உனது வித்தையை சிறந்து பலராலும் புகழப்படும் எமது நகரத்து பெண்களும் செய்வார்கள் அதுவன்றி இந்நகரத்து ஓர் தாயின் கருவின் உள்ளே இருக்கும் ஊன் முற்றிடாத குழந்தையும் செய்யும். இதன்றி இங்குள்ள கருத்து இல்லாத சடமான மலைகளும் செய்யும். அதனாலே பேயனே நீ செய்த வித்தையான ஆடல் ஓர் பெருங்காரியமன்று. 89

என்னை ஏண்ணலை எதிருற இருந்தனை இதனுன்
மின்னல் வாட்படை யுறைகழித் தொய்யென வீசிச்
சென்னி வீட்டுவன் நின்செயல் முற்றவுந் தெரிந்து
பின்னர் அத்தொழில் புரிவனென் றேயுளம் பிடித்தேன்.

நான் யார் என்பதை எண்ணிடாமல் எனது எதிரில் வந்து இருந்தாய். இதற்காக மின்னுகின்ற கூரிய வாளை எனது உறையில் நின்றும் நீக்கி எடுத்து உடனுக வீசி உன் தலையை வெட்டி வீழ்த்துவேன். ஆனல் உன் செயல் முற்றவும் தெரிந்து கொண்டு பின்பாக நான் நினைந்த அந்தத் தொழிலைச் செய்வேன் என எனது உள்ளத்தில் கொண்டேன். 90

ஏனுற் றுரெலாம் வழுத்திய அவுணரும் யாமுங்
காணக் காட்டினை நீயறி விஞ்சையைக் கண்டாம்
பூணித் தாயென வருமுனக் கித்துணைப் பொழுது
பாணித் தாவியை அளித்தனன் அன்னது பரிசே.

எனது பகைவரெல்லாம் கைகூப்பி வணங்கிடுகின்ற இங்குள்ள அசுரரும் யானும் காணும்படி நீ இதைக் காண்பித்தாய். நீ அறிந்துள்ள வித்தையைக் கண்டுகொண்டேன். வலியவே என்னிடம் அகப்பட்டவனுய் வரும் உனக்கு இவ்வளவு நேரமும் உயிருடன் இருக்கும்படி விட்டிருக்கின்றேன். இதுதான் நீ காட்டிய வித்தைக்குப் பரிசாகும். 91

வாச வன்கரந் தோடினன் பிறரிது மதியார்
கேச வன்னிது நிலைகிலன் மறைகளின் கிழவோன்
ஆசி கூறியே திரிந்திடும் அவர்க்கெலாம் முதலாம்
ஈசன் என்னிடை வருகிலன் யாரைநீ யென்றான்.

இந்திரன் ஒளித்தோடினான். அவன் வரான். பிறர் ஒருபோதும் இதைச்செய்ய எண்ணார், நாராயணக் கடவுள் இதைச் செய்ய நினையார். வேதங்களின் வல்லவனை பிரமதேவன் எனக்கு ஆசி மொழிந்து கொண்டு திரிபவன். அவனும் செய்யான். அவர்கட்கெல்லாம் முதலான ஈசன் என்னிடத்து வரமாட்டான். யார் நீ எனக் கேட்டான் சூரபன்மன், 92

தீயன் இத்திறம் உரைத்தன கேட்டலுந் திறலோன்
காய மீனெனக் காயமேல் வியர்பெழக் கனன்று
மாயை செய்துழல் வலியிலார் போலெனை மதித்தாய்
ஆய புந்தியை விடுமதி கேளிதென் றறைவான்.

தீயவனை சூரபன்மன் இல்வகையாக உரைத்தவற்றை வீரவாகுதேவர் கேட்டுக் கொள்ளலும் திறலுடைய அவரது மேனியெல்லாம் வானத்தில் வெள்ளிகள் முளைத்தது போன்று வேர்வை அரும்பக் கோபித்து; சூரனே! கேள். மாயைகளைச் செய்து உழன்று திரிகின்ற வலியற்ற மக்களைப் போல நீ என்னை மதித்தாய். அந்த எண்ணத்தை விடுவாயாக. நான் சொல்லும் இதைக் கேட்பாயாக என்று கூறியருள்வார். 93

புரந்த ரன்குறை அயன்முதல் அமரர்தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலாம் நீக்கிமற் றவர்தந்
திருந்து தொல்லிறை உதவுவான் செந்திமா நகர்வந்
திருந்த ஆதியம் பண்ணவன் அடியனேன் யானே.

யான் யாரெனில்; இந்திரனுடைய குறைகள் பிரமதேவன் முதலான தேவர்களது சிறுமைகள், சிறையில் வருந்துகின்ற தேவர்களின் சிறைவாசம் எவ்லாவற்றையும் நீக்கி இழந்துபோன அவர்களது நன்மை விளையும் பதங்களையும் அரச நிலைகளையும் கொடுத்தருளும்படியாகத் திருச்செந்தூர் என்னும் நகரில் வந்து இருந்தருளுகின்ற ஆறுமுகமுடைய ஆதியாம் கடவுளின் அடியேன் என்பதை அறிவாயாக.

நான் வாழ்வின் பொருட்டு மாயம் செய்து பொருள் புகழ் இன்பம் தேடி அலைபவனல்ல. நான் ஆறுமுகத்து அப்பனின் அடியவன். 94

துன்னு தானைகட் கரசராய் அறுமுகத் தொல்லோன்
பின்னர் வந்துளார் ஒன்பதோ டிலக்கமாம் பெயரால்
அன்ன வர்க்குளே ஒருவன்யான் நந்திபாங் கமர்ந்தேன்
ஒன்ன லார்புகழ் வீரவா கெனும்பெய ருள்ளேன்.

ஆறுமுகமுடைய பழம்பொருளான பெருமானின் பின்னராக வந்து அவதரித்துள்ளவராய் அவரின் சேனைகளுக்கு நாயகராய் விளங்குகின்ற இலக்கத்து ஒன்பது என்னும் எண்ணிக்கையின் பெயரினில் உள்ளார்களில் யானும் ஒருவன். நந்தி கணத்தினில் வந்து தோன்றியிருக்கின்றேன். பகைவர் யாராலும் புகழப்படுகின்ற வீரவாகு என்னும் பெயருடையேன். 95

தாரகப் பெயர் இளவலைத் தடவரை தன்னை
ஓரி றைக்குமுன் படுத்தவேல் அறுமுகத் தொருவன்
சூரெ னப்படு நின்னிடைத் தமியனைத் தூதாப்
பேர ருட்டிறத் துய்த்தனன் என்றனன் பெரியோன்.

தாரகன் என்னும் பெயருடைய உனது தம்பியை கிரவுஞ்ச மலையை ஒரு இமைப்பொழுதின் முன்பாக அழிவு செய்த ஆறுமுகமுடைய ஒருவன்; சூரபன்மன் எனப்படுகின்ற உன்னிடத்தாக பெரும் அருள் நிரம்பிய காரணத்தினால் என்னைத் தூதாக அனுப்பினார் என்றனர் வீரவாகுதேவர். 96

கொடுத்திடாதவென் கொண்டவன் உரைத்தசொற் கொடுங்கோல்
நடத்து மன்னவன் கேட்டலும் ஆங்கவன் நம்மேல்
விடுத்த காரணம் என்னையோ விளம்புதி யென்ன
எடுத்து மற்றிவை எம்பிரான் தூதுவன் இசைப்பான்.

எத்தகையோர்க்கும் புறமுதுகு காட்டிடாத வெற்றிகளைக் கொண்ட வீரவாகு தேவர் உரைத்த இந்த சொற்களை; கொடுங்கோல் கொண்டு அரசை நடத்துகின்ற சூரபன்மன் கேட்டலும் வீரவாகு தேவரை நோக்கி; அப்படியாக அந்த ஆறுமுகன் நம்மிடம் உன்னை விடுத்த காரணம் யாது? சொல்வாயாக என்னலும் அப்போது இவைகளை எல்லாம் எடுத்து எம்பிரானுடைய தூதுவர் வீரவாகுதேவர் சொல்வார். 97

மருத்து வன்றனைச் சசியொடு துரந்துசேண் வதிந்த
புரத்தை ஆரழற் கூட்டியே அனையவன் புதல்வன்
ஒருத்த னேடுபல் லமரரை உவளகந் தன்னில்
இருத்தி னுயென வினவினன் அறுமுகத் திறைவன்.

சூரபன்மனே கேட்பாயாக; நீ இந்திரனை இந்திராணியோடு நாடு விடுத்து ஓடும்படி செய்து மிக உயர்ந்து விளங்கிய தேவ உலகை நெருப்பு மூட்டி எரித்து அவனுடைய மைந்தனை சயந்தன் ஒருத்தனேடு பல தேவர்களைச் சிறையிலே இருத்தினுய் என்பதை அறிந்துகொண்டார் ஆறுமுகமுடைய கடவுள். 98

இந்தி ராதிபர் அயன்முதற் பண்ணவர் யாரும்
வந்து வந்துவேண் டிடுதலும் அவர்குறை மாற்றப்
புந்தி கொண்டுபன் னிருபுயத் தெம்பிரான் புவிக்கண்
அந்த மின்றுறை பாரிடத் தானையோ டடைந்தான்.

இத்துடன் இந்திராதிபரான தேவர்களும் பிரமதேவன் முதல் கடவுளரும் வந்து எம்பிரானைத் தமது துயரம் நீங்கும்படி வேண்டிடுதலும் அவர்களுடைய குறைகளை நீக்கியருளும்படி பன்னிரு புயமுடைய பகவான் திருவுளம் கொண்டு இப்பூமியிடத்தாக அளவுபடுத்திட முடியாது விளங்கும் பூதகணங்களான சேனைகளுடன் வந்தருளினுர். 99

தரையின் நண்ணிநின் இளவலை வரையொடு தடிந்து
நெருந லேவந்து செந்தியின் வைகினுன் நினையும்
விரைவின் வந்தட உன்னினுன் இன்றுநும் மிசையே
அருள்கொ டேசில புகன்றெனைத் தூண்டினன் அதுகேள்.

இப்பூமியிடத்து போந்தருளி உனது தம்பியான தாரகனை கிரவுஞ்ச மலையோடு சேர்த்து முடிவு செய்து, நேற்றைய தினம் திருச்செந்தூரில் வந்து வீற்றிருந்தருளினுர். உன்னையும் விரைவாக வந்து சங்காரம் செய்ய திருவுளம் கொண்டார். ஆனுல் இன்று அதன் முன்பு உம்மிடம் அருள் கொண்டு சில வார்த்தைகளைச் சொல்லி தூதாகச் சென்றருளும்படி என்னை விடுத்தருளினுர். அந்த வார்த்தைகளைக் கேட்பாயாக. 100

நிறையும் இந்துவைப் படவராக் கவர்ந்தென நிகளச்
சிறைப டுத்தியே அமரரை வருத்தினை செய்யும்
மறையொ ழுக்கமும் நீக்கினை உலகம்ஆள் மன்னர்
அறமும் அன்றிது வீரர்தஞ் செய்கையும் அன்றுல்.

பூரணனாகிய சந்திரனை படமுடைய பாம்பு பற்றிக் கவர்ந்து அதன் ஒளியை மறைத்தல் போன்றும் அதன் தொண்டினை உலகிற்கு இல்லாமலும் செய்தல் போன்றும்; கொடிய விலங்குகள் பூட்டப்பட்டு சிறைக்களத்து வைத்துக்கொண்ட தேவகள் யாரையும் நீ வருத்தினாய். அவர்கள் செய்துவரும் வேத ஒழுக்க முறைகளையும் நீக்கினாய். இப்படியாக ஒருவருடைய ஒழுக்கங்களை சுதந்திரத்தைக் கெடுத்து வைத்தலான் இது உலகத்தை அரசாளும் அரசருடைய தருமமும் அல்ல. ஒரு வீரனுடைய செய்கையும் அன்றாகும். 101

தாதை யாகியோன் காசிபன் ஆங்கவன் தனயன்
ஆத லாலுனக் கமரரைச் சிறைசெய்வ தறனே
வேத மார்க்கமும் பிழைத்தனை சிறுபொருள் விழைந்தாய்
நீதி யாலுல களிப்பதே அரசர்தந் நெறியே.

உனது தந்தையானவன் காசிபமுனிவன். அப்படியான தவத்தினால் மேம்பட்ட புண்ணியவாளனுடைய பிள்ளையானவனாய் நீயிருக்கின்றபடியால் நீ தேவரைச் சிறை செய்தல் தருமமாகுமோ? முனிவனுடைய பிள்ளையான உனக்குரிய வேத ஒழுக்கத்தையும் நீ தவறவிட்டாய், அஃதன்றியும் நீதியால் அரசாள்வதல்லவோ அரசருடைய கடமையும் முறையுமாகும். 102

உலத்தின் மாண்டதோட் சலந்தரன் அந்தகன் ஒருங்கே
கலத்தல் இல்லதோர் புரத்தவ ராதியோர் கடவுட்
குலத்கை வர்ட்டலின் இமைப்பினில் வீந்தனர் கொடியோய்
நிலத்தின் உம்பரை வருத்துதல் அழகிதோ நினக்கே.

கல்லினும் வலியுடைய தோள் கொண்ட சலந்தராசுரன்; அந்தகாசுரன் ஒருங்காகக் கலந்து கொள்ளாமை உடைய முப்புரத்தவர் ஆதியான அசுரர்கள் கடவுளர்களின் குலத்தை வாட்டி துயருறுத்தியமையால் இமைப்பினில் அழிந்து போயினர். கொடியவனே இந்தப் பூமியில் தேவரை வருத்துதல் அழகாகுமோ!

உனது குலத்துள்ள முன்னையோர் தேவர்களை வருத்தியதால் அடியோடு அழிந்தார்கள். இதனையறிந்தும் அட பாவியே! நீயும் இதனைத் தொடர்ந்து செய்யின் உனக்கும் முடிவு வருமே என்றார். 103

மெய்மை நீங்கியே கொலைகள வியன்றுமே லுள்ள
செம்மை யாளரைச் சீறியே அணங்குசெய் தீயோர்
தம்மில் ஆற்றரும் பழிசுமந் தொல்லையில் தமரோ
டிம்மை வீடுவர் எழுமையுந் துயரினு டிருப்பார்.

உண்மை கடைப்பிடித்தலை நீங்கி; கொலை, களவு முதலிய பாதகங்களைச் செய்து; மேலான நெறிகளைக் கொண்டு ஒழுகும் செந்நெறி நின்ற பெரியோர்களை கோபித்து வருத்தஞ் செய்யும் கொடிய தீயவர்கள்; தம்முடைய செயலாலே தாங்கள் சுமக்க முடியாத பெரும் பழியுடன் இங்கு மாய்ந்துபோவார்கள். மாய்ந்தாலும் அவர்கள் பின்னர் எழுபிறப்பும் துயரத்தினில் தான் இருப்பார்கள். 104

இங்ங னந்திரு நீங்கியே துயருழந் திறப்பர்
அங்ங னம்பெரி தாரிருள் மூழ்குவர் அதற்பின்
உங்ங னம்பிறந் தயருவ ரென்றுமீ துலவா
எங்ஙன் உய்வரோ பிறர்தமக் கல்லல்செய் திடுவோர்.

இங்ஙனம் இப்பிறவியில் திருநீங்கியே துயரம் அடைந்து அனுபவித்து பின்னர் இறப்பார்கள். இறந்தாலும் அவர் அவ்வுலகில் ஏதும் அறியொண்ணாத இருளில் மூழ்குவார்கள். அதன் பின்பு பிறவியெடுத்தும் பெரும் துயரம் அனுபவிப்பார். எக்காலத்திலோ பிறருக்கு அல்லல் செய்வோர் உய்வார்கள்? அது நடவாததொன்றென்றறி.

பிறர் தமக்கு அல்லல் செய்வார்க்கு உய்வு ஒருபோதும் இல்லை என்பதை அறிநீ. 105

தீது நல்லன ஆயிரு திறத்தவுந் தெரிந்தே
ஏதி லார்கவை செய்வரேல் தமக்குடன் எய்தும்
பேதை நீரையாய் அமரரைச் சிறைசெய்த பிழையால்
மாதுயர்ப்படல் அன்றியே இறுதியும் வருமால்.

இவ்வுலகில் தீமையையும் நன்மையையும் நன்கு தெரிந்து ஆதரவற்றோர்க்கு நாம் அதைச் செய்தால் செய்த அவைகள் திரும்பவும் நமக்கு வந்து சேரும். ஆதரவிலாரை வருத்தினால் நாமும் வருந்துவோம். அவர்க்கு நன்மை புரிந்தால் அந்த நன்மையால் நாமே நன்மை பெறுவோம். அதேபோல் அறிவிலாத பேதமையுடைய சூரனே தேவரை நீ சிறை செய்த பிழையால் பெரும் துயரத்தை அனுபவித்தல் அன்றியே முடிவும் உனக்கு வரும் என்பதை அறிவாயாக. 106

அண்டர் ஆற்றலை வவ்விய தாரகன் ஆவி
உண்ட கொற்றவேல் இருந்தது விடுத்திடின் உனையுங்
கண்ட துண்டம தாக்குமால் அறநெறி கருதித்
தண்டம் வல்லையிற் புரிந்திலன் இத்துணை தாழ்த்தான்.

தேவர்களுடைய வலியை நீக்கி அடிமையாக்கிய தாரகாசூரனின் உயிரை உண்ட கொற்றம் மிக்க வேல் எம்பிரானிடம் இருந்தது, அதை விடுத்தால் உன்னையும் கண்டதுண்டமாக்கிக் கொன்றிடும். ஆனால் தரும நெறியை எம்பிரான் கடைப்பிடித்து உனக்கு; உனது தம்பிக்குச் செய்தவாறுபோல் தண்டனையை விரைவுடன் செய்திலன். எம்பிரான் இதுவரையும் பொறுத்திருக்கின்றான். 108

கெடுதல் இல்லதோர் அமரர்கள் சிறையிடைக் கிடப்ப
விடுதல் செய்தனை பல்லுகம் அவர்தமை இன்னே
விடுதல் உய்வகை யாகுமால் மறுத்தியேல் விரைந்து
படுதலேநினக் குறுதியாம் முறையுமப் பரிசே.

கெடுதல் இல்லாததான தேவர்கள் சிறையினிடத்துக் கிடந்து வருந்த பல யுக காலமாக இட்டு வைத்தாய். அவர்களை இப்பொழுதே சிறைநீக்கி விடுதல் உனக்கு உய்யும் வழியாகும. அதை மறுத்து நீ நிற்பாயேல் நீ அழிந்துபோவதே உனக்குரிய உண்மையான உறுதியாம். முறைமையும் அதுவே என்பதை அறிவாய். 107

ஆண்ட ளப்பில நோற்றனை வேள்விநின் றூற்றி
மூண்ட தீயிடை மூழ்கினேய்க் கெந்தைமுன் னளித்த
மாட்டி டாதபே ராயுளைத் திருவோடும் வாளா
ஈண்டொர் புன்னெறி யாற்றியே இழக்குவ தியல்போ.

ஆண்டுகள் பல செல்லும்வரையும் நீ தவம் செய்தாய்; கொடிய யாகத்தை நின்று செய்து பின்னர் மூண்டெரிந்த நெருப்பினிடத்துக் குதித்து மூழ்கிய பெரும் வைராக்கியமுடைய உனக்கு எந்தை பிரான் முன்னர் பரிந்து கொடுத்தருளிய மாண்டிடாத பெரிய ஆயுட் பேற்றையும், செல்வத்தையும் வீணே இவ்விடத்து ஒரு புன்னெறியான செயலைச் செய்து இழந்துபோவது உனக்குப் பொருத்தமாவதா ? 109

சைய மேற்படு வளத்தொடு நீயுநின் தமரும்
உய்ய வேண்டுமேல் அமர்தஞ் சிறையினை ஒழித்து
வைய மேலறத் தியல்புளி வாழிமற் றிதனைச்
செய்ய லாய்எனின் ஈங்குவந் தடுவனால் திண்ணம்.

மலையிலும் உயர்ந்த பெரும் திருவுடன் நீயும் உனது சுற்றமும் உய்ய வேண்டுமென நினைத்தால் நீ இப்பொழுதே தேவர் சிறையை நீக்கி இப்பூமியிடத்தாக தருமத்தின் முறையைக் கடைப்பிடித்துக்கொண்டு தரும நிலையால் வாழ்வாயாக. அப்படி இதனை நீ செய்யாமல் விடுவாயாயின் ; எம்பிரான் இங்குவந்து உன்னைச் சங்கரிப்பார். இது திண்ணமாகும் என்பதை நீ அறிவாயாக. 110

என்று மற்றிவை யாவையும் வரைபக எறிந்தோன்
உன்ற னக்கறை யென்றனன் ளீங்குநீ உம்பர்
வன்ற ளைச்சிறை நீக்கியே அறத்தின் இவ் வளத்தை
நன்று துய்த்தனை நெடிதுநீ வாழ்கென நவின்றான்.

என்று இந்த வார்த்தைகள் யாவையும் கிரவுஞ்ச மலையைப் பொடி செய்த பகவான் உன்னிடம் சொல்வாயாக என்று என்னை கற்பித்தருளினர். ஆதலால் இங்கு நீ தேவர்களின் நீங்கிட முடியாத வலிய சிறையை நீத்கிவிடுவாயாய் ; அதன் பின்பு நன்றுடனே இந்தச் சிவபிரான் தந்தருளிய வளங்களை எல்லாம் ஆண்டனுபவித்துக்கொண்டு சூரனே ! நீ நெடிது வாழ்வாயாக எனக் கூறியருளினர் வீரவாகு தேவர். 111

மறம கன்றிடா வீரனிங் கினையன வகுத்தே
அறையும் வாசகங் கேட்டலும் வெகுளிமூ ளகத்தன்
பொறியு மிழ்ந்திடு கண்ணினன் புகையுமிழ் உயிர்ப்பன்
எறியும் அங்கையன் இறந்திடும் முறுவலன் இசைப்பான்.

பெருமை குன்றிடாத வீரவாகுதேவர் இங்கு இது போன்றவைகளை எடுத்து வகுத்துச் சொல்லியருளிய வாசகங்களைக் கேட்டபோது சூரபன்மன் கோபம் மூளும் உள்ளம் உடையனாய் நெருப்புப்பொறிகள் கக்கும் கண்ணினை உடையனாய் புகைகள் தோன்றும் மூச்சினை உடையனாய் தனது அழகிய கைகளை ஒன்றுடன் ஒன்று ஓங்கி அடித்து பெருஞ்சிரிப்பான நகைகொண்டு இதைச் சொல்வான். 112

மேலை யாயிரத் தெட்டெனும் அண்டமும் வென்றே
ஏலு கின்றதோர் தனியிறை யாகிய எனக்குக்
கோல வாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பால னேகொலாம் இனையன புந்திகள் பகர்வான்,

மேலாகிய ஆயிரத்து எட்டு என்னும் எண்ணிக்கை உடைய அண்டங்கள் யாவையும் வென்று ஆளும் சிறப்பை அடைந்துள்ள எனக்கு; இன்னமும தன் அழகிய பற்கள் செவ்வனே முளைத்திடாத குதலை மொழிபேசும் குழந்தையா இத்தகைய வார்த்தைகளைச் சொல்வான். 113

விறலின் மேதகும் அவுணராம் வலியிலார் மிகவும்
வறிய ராகிய தேவராம் மேலவர் மழலைச்
சிறுவ ராந்தனி முதல்வற்கும் அமைச்சியல் செய்வார்
எறியும் நேமிசூழ் உலகத்து வழக்கம்நன் றிதுவே.

எல்லாரிலும் எக்காலமும் வலிமையில் மேம்பட்டுள்ள அசுரராம் வலியிலாது போவார். மிகவும் வலியிலாத வறுமையுடைய தேவர்களாம் மேம்பாடடையப் போகின்றவர். மழலை மொழி பயிலும் சிறு பிள்ளையாம் தனியாய் அண்டமெலாம் ஆளுகின்ற அரசனுக்கும் அறிவுரை வழங்கும் மந்திரித் தொழில் செய்வார்! ஓகோ திரை வீசும் கடல் சூழ்ந்த உலகத்து வழக்கம் மிகவும் நன்றாயிருக்கின்றது.

வலிமை தோற்குமாம். வலியிலாத வறுமை மேன்மை அடையுமாம். அன்றியும் சிறுகுழந்தையாம் உலகில் அரசர்க்கு வழிகாட்டுவது என இவைகள் இயற்கை முறைக்கு முரண்பாடுடையனவயாக சூரன் எண்ணியே சொன்னவாறு காண்க. 114

நறைகொ டார்முடி அவுணர்தங் குலத்தினை நலிந்து
வறுமை செய்தனர் கடவுளர் அவர்திரு மாற்றிக்
குறிய ஏவலுங் கொண்டனன் ஒழுக்கமுங் கொன்றேன்
சிறையும் வைத்தனன் எங்குடித் தமர்முறை செய்தேன்.

வாசம் கமழும் மலர் மாலைசூடிய அசுரர் குலத்தினை முன்னர் வருத்தி துயர் புரிந்து வறியோராக வாழச் செய்தனர் தேவர்கள். ஆதலின் யான் அதற்காகத் தேவர்கள் சிறப்பை என் வலியால் மாற்றி எமக்குக் குற்றேவல் செய்யும்படியும் வைத்துள்ளேன். இதுவன்றி இத்தேவர்கள் ஒழுக்கங்களையும் கெடுத்தேன். அவர்களைச் சிறையிலும் வைத்தேன். எங்கள் குலத்து என் முன்னோர் யாவரும் செய்யும் முறைப்படி இதனை நான் செய்தேன். 115

நெடிய மால்மகன் உறங்குநாள் ஆணையை நீங்கித்
தொடுபெ ருங்கடல் உலகெலாங் கொள்ளினுஞ் சுரரை
விடுவன் அல்லன்யான் வீடருஞ் சிறையினை விண்மேல்
உடைய அண்டத்தின் உச்சியின் ஒருதலை உய்ப்பேன்.

நெடிய நாராயணர் புதல்வரான பிரமதேவர் உறங்கும் சலப் பிரளய நாளில் தனது கட்டுப்பாட்டை நீக்கிச் சமுத்திரம் பெருகிப் பரந்து உலகெலாம் மூடிக் கொள்கினும்கூட அன்றும் தேவர்களைச் சிறைவிடுவேன் அல்லன். நான் நீக்கிட முடியாத இந்தத் தேவர் சிறையை விண்ணின் மேலாக உள்ள அண்டங்களின் உச்சியில் ஒரு பக்கராகக் கொண்டுசென்று வைப்பேன்.

உலகம் அழிந்து எல்லாம் அழியினும் அன்றும் யான் தேவர்களை இனியாகுதல் விடுவோம் என எண்ணிச் செய்யேன் என்னும் அவனின் மனவைராக்கியம் புலப்படுமாறு காண்க. 116

தப்பல் செய்திடு மகபதி முதலினோர் தமையும்
இப்ப திக்கணே கொணர்ந்தனன் சிறைசெய் இருந்தேன்
கைப்பு குஞ்சிறை விடுவனோ விடுகிலன் கண்டாய்
ஒப்ப ருந்திறல் சூரனென் றொருபெய ருடையேன்.

எனது படைக்குத் தப்பி ஓடி ஒளித்துக்கொண்டிருக்கின்ற இந்திரன் முதலியோர் தமையும் இந்த வீர மகேந்திரபுரிக்கணே கொண்டுவந்து சிறைவைக்க எண்ணி இருந்த யான் எனது கையிலே அகப்பட்டுக் கொண்ட தேவர் சிறையை விடுவனோ? ஒருபோதும் விடேன் இதை நீ காண்பாய். யான் யாரென்னில் ஒருவரும் ஒப்பிலா திறமுடைய சூரன் என்று ஒரு பெயர் உடையேன். 117

மின்னு வச்சிரப் படிவமும் வேறுபல் வரமும்
முன்னோர் ஞான்றுதன் தாதைஎற் களித்திடு முறையைப்
பின்னர் யாவரே பெயர்ப்பவர் பெருஞ்சமர் இயற்றி
என்னை ஆற்றலால் வென்றிடு நீர்மையோர் எவரே.

ஒளி வீசிடும் வச்சிர உடம்பும் வேறான பல வரங்களும் முன்னோர் காலத்து உனது தலைவனின் தந்தை சிவபிரான் எமக்குக் கொடுத்தருளிய வரத்தை பின்னால் யாரோ அதனை நீக்கிடுவார். இவ்வுலகில் என்முன் நேர் நின்று பெரும்போர் புரிந்து என்னைத் தமது வலியால் வென்றிடும் நிலையுடையோர் எவரிருக்கின்றார்கள்? 118

தான மாமுகத் தாரக எம்பியைத் தடிந்த
மான வேற்படை யவன்மிசை வருவது வலித்தேன்
பானல் வாய்ச்சிறு சேயொடு நீயமர் பயிறல்
ஊன மேயெனத் தடுத்தனர் ஆதலால் ஒழிந்தேன்.

யானை முகமுடைய எனது தம்பியைச் சங்கரித்த வீரம்பொருந்திய வேற்படையை உடைய ஆறுமுகன்மேல் போர்புரியச் செல்ல மனம் வலித்து எழுந்தேன். ஆனால் இங்குள்ளார் யாரும் என்னை அரசர்க்கரசனாய் அண்டமெலாம் ஆளும் நீ பால் மணம் மாறிடாத வாயுடைய குழந்தையோடு போர் செய்யப்போதல் அவமானம் எனக் கூறித் தடுத்தனர். அதனால் அதனை விடுத்து இங்கு தங்கினேன். 119

தூங்கு கையுடைத் தாரக இளவலைத் தொல்லை
ஓங்கல் தன்னோடும் அட்டது நென்னலே உணர்ந்தேன்
பாங்கி னோரையப் பாலன்மேல் உந்தியென் பழியும்
வாங்கு கின்றனன் நாளையே காண்டியான் மன்னோ.

தூங்கும் துதிக்கையினை உடைய என் தம்பி தாரகனை மிக முதியதான கிரவுஞ்ச மலையோடும் சேர அழிவு செய்திட்ட தன்மையை நேற்றைத் தினம்தான் உணர்ந்தேன், ஆகவே எனது பக்கராக உள்ள வீரரை அப்பாலகனோடு போர்புரிய விடுத்து. எனது தம்பியைக் கொன்ற பழிக்குப் பழியையும் வாங்குகின்றனன். இதை நாளைக்கே செய்வேன்; நீயதைக் காண்பாயாக. 120

அரிகள் எண்ணிலர் இந்திரர் எண்ணிலர் அல்லாச்
சுரர்கள் எண்ணிலர் அண்டங்கடொறுந்தொறும் இருந்தார்
செருவின் ஆற்றலர் வழுத்தியே போயினர் சிவன்கண்
நெருநல் வந்திடு சிறுவனே என்னெதிர் நிற்பான்.

எண்ணற்ற விஷ்ணுமூர்த்திகள், எண்ணற்ற இந்திரர்கள் இதுவல்லாமல் தேவர்கள் எண்ணிலாதவர்கள், வெவ்வேறு அண்டங்கள் தோறும் இருந்தார்கள். வந்துஎன்னேடு போர்செய்து போர்செய்ய முடியாது துதித்து விட்டுப் போயினர் கள். அப்படி நிலமை இருப்ப, சிவபிரான் கண்ணிடத்து நேற்றுத் தோன்றிய சிறு பாலகனே என்னுடன் எதிர்த்துப் போர்செய்து நிற்பான்? 121

ஓதி என்பல அமரரை விடுகிலன் உணர்ச்சி
ஏது மில்லதோர் மகவுதன் புன்மொழி ஏற்றுப்
பேதை ஆதலின் ஒற்றனய் வந்தனை பிழைத்துப்
போதி நின்னுயிர் தந்தனன் யானெனப் புகன்றான்.

பலவற்றை உன்னிடம் நான் ஓதி என்ன பிரயோசனம்? நான் தேவர்களை ஒருபோதும் சிறைவிடேன். நீயும் எதும் ஒரு நல்லுணர்ச்சி இல்லாத பேதை ஆன மையினல்போலும் அந்தக் குழந்தையின் சின்னத்தனமான வார்த்தைகேட்டு இங்கு தூதாக வந்தாய். சரி நீ தப்பிப் பிழைத்துத் திரும்பப் போய்விடு. இங்கு வந்த உனக்கு உனது உயிரை நான் நீக்காது சன்மானமாகத் தந்திருக்கின்றேன், சென்று விடுவாயாக என்றான் சூரபன்மன். 122

அகில மாள்பவன் இங்கிவை மொழிதலும் ஐயன்
வெகுளி வெங்கனல் சிந்திட வுளஞ்சுட வெகுண்டு
புகையும் அங்கியும் உயிர்ப்புற மயிர்ப்புறம் பொடிப்ப
நகையும் வந்திடச் சிவந்திட விழியிவை நவில்வான்.

உலகமெல்லாம் ஆள்கின்ற சூரபன்மன் இங்கு இந்த வார்த்தகளைக் கூறுதலும் எங்கள் ஐயன் வீரவாகுதேவன் கேட்டருளி கோபம் என்னும் கொடிய நெருப்புச் சிந்தி உள்ளமுஞ் சுடுப்படி வெகுட்சி எய்தி, புகையும் நெருப்பும் மூச்சாக வந்திட புற மயிர்கள் எல்லாம் சிலிர்ப்பப் பெரும் சிரிப்பும் தோன்றிட கண்கள் சிவந்திட இந்த வார்த்தைகளைச் சொல்லுகின்றார். 123

உய்ய லாவதோர் பரிசினை உணர்வுறு துழலுங்
கைய கேண்மதி கட்செவி மதியொடு கலந்த
செய்ய வார்சடைப் பரம்பொருள் திருநுதல் விழிசேர்
ஐயன் மேதக உணர்ந்திலை பாலனென் றறைந்தாய்.

உண்மையாவது யாது என்னும் நித்திய பொருளின் நிலையினை உணர்வுறுது உலக இன்பமே பெரிதென மகிழும் வஞ்சகனே கேட்பாயாக: பாமபுடன் இளம் பிறையையும் சேர அணிந்த செம்மையான திருச்சடையுடைய பரம்பொருளின் நெற் றிக் கண்ணில் சேர்ந்து தோன்றியருளிய எமது ஆறுமுக ஐயனின் மேன்மையை உணர்ந்திலை. அவரைப் பாலகன் என்று கூறினய். 124

மானு டத்தரைத் தேவென்பர் வானகத் தவரை
ஏனை முத்தொழி லவரென்பர் இருவர்தங் களையும்
நானி லத்தினிற் பரம்பொருள் இவரென நவில்வார்
ஆன சொற்றிறம் முகமனே சரதமற் றன்றால்.

இவ்வுலகில் மனிதரையும் கடவுளர் என்பார்கள். தேவர்களை மற்றைய முத்தொழில் புரியும் பிரமா விஷ்ணு உருத்திரன் எனவும் போற்றுவார்கள். இன்னும் சிலர் பிரமா, விஷ்ணுக்களையும் இப்பூமியில் இவரே பரம்பொருள் எனப் போற்றுதல் புரிவார். இவ்வாறு இவர்களைச் சொல்வது முகமனான துதியாகும் உண்மையல்ல. என்பதை அறிவாயாக.

மனிதரைத் தேவர் என்றும், தேவரை மும்மூர்த்திகள் என்றும், பிரம விஷ்ணுக்களை பரம்பொருள் என்றும் புகழ்வது அவரவர்களைச் சிறப்பிக்கும் பொருட்டாகவே யன்றி உண்மையல்ல. இது உலகில் அவர்களைப் போற்றுங்கால் செய்யும் முகமனான துதிகளாகும். ஆனால் அவர்கள் உண்மையில் முகமனால் கூறப்படும் துதிகளுக்கு ஏற்றவர் அல்ல. 125

ஆய புல்லிய புகழ்ச்சிபோற் கொள்ளலை அறிவோர்
தேய மாவது யார்க்குமெட் டாதது தெளியில்
தூய வீடுபே றருளுவ துபனிடத் துணிவாம்
வாய்மை யாவது புகலுவன் கேளென வகுப்பான்.

அவ்வாறாக மனிதரைத் தேவரை, பிரம, விஷ்ணுக்களைச் சொல்லும் கீழ்மையான புகழ்போல எமது பகவானை எண்ணாதே. அது அறிவாளிகளால் தியானம் செய்யப்படும் பொருளாவது. எவர்க்குமே எட்டமுடியாதபடி நின்றது. அதனைத் தெளிந்து அடைந்து கொண்டோர்க்கு மிகத் தூயதான முத்தி இன்பத்தைத் தருவது. உபநிடதங்களின் துணிந்த உண்மைப் பொருளாவது. அதன் பெருமையை முழுவதும் நான் உனக்கு எடுத்துச் சொல்வேன் கேள் என்று எம்பிரான் சிறப்புப்பற்றி வீரவாகுதேவர் சொல்லியருள்கின்றார். 126

மண்ணை ளந்திடு மாயனும் வனசமே லவனும்
எண்ண ரும்பகல் தேடியுங் காண்கிலா திருந்த
பண்ண வன்நுதல் விழியிடைப் பரஞ்சுடர் உருவாய்
உண்ணி றைந்தபே ரருளினன் மதலையாய் உதித்தான்.

ஈரடியால் மூவுலகும் அளவு செய்த திருமாலும், செந்தாமரையில் இருப்பிடங் கொண்ட பிரமதேவரும் அடியும் முடியும் அறியும் ஆவலால் எண்ணற்ற நாட்கள் தேடியும் காண்கிலாது இருந்த கடவுளான சிவபெருமானின் நெற்றியந் தலத்துத் திருவிழியிடையாகப் பரஞ்சுடர் வடிவாய் திருவுள்ளத்து நிறைந்த கருணைப் பேரருளுடன் குழந்தையாய் உதித்தருளினர். 127

முன்ன வர்க்குமுன் னானவோர் தமக்குமுற் பட்டுத்
தன்னை நேரிலா ஈசனுந் தனிப்பெயர் தாங்கி
இன்னு யிர்க்குயி ராய்அரு வுருவமாய் எவர்க்கும்
அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன்காண்.

இவ்வுலகில் முன்னர் என்பார்கட்கெல்லாம் முற்பட்டவர் என்னும் கடவுளார்க்கும் முதியவராக முற்பட்டுத் தமக்கு நேர்பிறிதொருவர் இல்லாத ஈசன் என்னும் தனிப் பெயரைத் தாங்கி இன்புடைய உயிர்கட்கெலாம் உயிராகி அருவாகி உருவமாகி எவர்க்கும் தாயாகித் தந்தையாகி இருந்திடும் பரமனே நீ பாலன் என்று பகர்த்த அவனுதும் என்பதை எண்ணிக்கொள்.

அவரின் தோற்றமோ, படைப்பவர் காப்பவர்கட்கு எட்டொணுத பரம்பொருளின் திருநுதல் விழி. கருணையே வடிவம். பேரருளே திரு உள்ள நிறைவு. யாவர்க்கும் முற்பட்ட பொருளான ஈசனே அவன். அன்றியும் உடலுக்குள் உயிர்போன்று உயிர்க்குயிராய் நிற்பவன். எல்லார்க்கும் தந்தை தாய் அவன். இதை அறி. 128

ஈச னேயவன் ஆடலால் மதலையா யினன்காண்
ஆசி லாவவன் அறுமுகத் துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனெடு பேதகன் அல்லன்
தேசு லாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்.

ஈசனே அவன் திருவிளையாடலால் குழந்தை உருக்கொண்டருளினுன். இந்த உண்மையை அப்பனுடைய அற்புதமான ஆறுமுகங்களின் சிறப்பால் தெரிந்துகொள். அலன் குழந்தையான இளநலத்தை நாம் சொல்லப்போனுல் அவர் சிவபிரானுடன் இரண்டாகப் பேதிக்கப்படுவன் அல்ல. அவன் தோற்றவரலாறு ஒளி உடைய இரத்தினத்தில் அந்த ஒளி முன்கூடியே உள்ளிருந்து தோன்றுவதுபோல என உணர்வாய். அவன் சிவன் திருநுதல் விழியிடைத் தோன்றினுலும் காலமும் கருமமும் கடந்த மூலமான முழுமுதற் பொருளாவன் என்பதைச் சூரனே அறிவாயாக. 129

பூதம் ஐந்தினுட் கீழ்நிலைத் தாகிய புவியுள்
ஓது கின்றபல் லண்டத்தின் ஓராயிரத் தெட்டுங்
கோதில் ஆக்கமும் படைகளும் உனக்குமுன் கொடுத்த
ஆதி ஈசனே அவனெனின் மாற்றுவ தரிதோ.

ஆகாயம் காற்று நெருப்பு நீர் மண் என்னும் ஐந்து பூதங்களுள் கீழ் நிலையான பூமியின் தொடர்பாய் உள்ளதாகச் சொல்லப்பெறுகின்ற நூற்றெரு கோடியின் மேற்பட்ட அண்டங்களில் ஓர் ஆயிரத்தெட்டு அண்டங்களையும்; குறைவிலாத செல்வங்களையும் படைகளையும் உனக்கு முன்னர் வரமாகக் கொடுத்த ஆதியாகிய ஈசனே இந்தப் பாலன் என்றுல் அவனுல் உனது செல்வத்தை அரச பதநிலையை நீக்கிவிடுதல் அருமை யாகுமோ ?

வரங்கொடுத்த ஆதி ஈசனே முருகனுக விளங்குகின்றுன் என்றுல் அவனுல் உனது மேன்மையை நீக்கல் முடியாதோ? வானத்தில் நின்றும் காற்று. காற்றில் நின்றும் நெருப்பு. நெருப்பில் நின்றும் நீர், நீரில் நின்றும் பூமியானது தோன்றுவது முறையாகும் என்பதனுல் கீழ்நிலைத்தாகிய பூமி என்றுர். 130

ஏத மில்புவி அண்டங்கள் பெற்றனம் என்றே
பேதை யுன்னினை சிறிதவன் தன்னருள் பெறுவோர்
பூதம் மைந்தனும் ஏனைய திறத்தினும் புறத்து
மீது மாமண்டம் எவற்றிக்கும் வேத்தியல் புரிவார்.

குறைவிலாத பூமி முதல் அண்டங்களைப் பெற்றேம் என்று அட பேதையே நீ நினைத்தாய். ஆனுல் சிறிது அந்த அப்பனின் அருள்பெற்றுக் கொள்வோர் அண்டங்கள் மட்டுமல்ல ஐந்து பூதங்களுக்கும் மற்றைய எத்திறத்தினிலும் உள்ளும் புறம்புமாக மேலுள்ள அண்டம் எவற்றிற்குமே அரசாட்சி புரிவோர் என்பதை நீ அறிவாய்.

ஐந்து பூதங்களை ஒன்றை மாறி ஒன்றாக்கி கல்லையும் மண்ணையும் ஆளுவார்கள் அன்றியும் வானில் உள்ள புறமாகிய இடங்கட்கும் ஆட்சிபுரியும் வலிமை நீ பாலன் என்ற ஐயனின் அருள் பெற்றார்க்கு உண்டு. 131

ஆதி யாகிய குடிலையும் ஐவகைப் பொறியும்
வேதம் யாவையுந் தந்திரப் பன்மையும் வேறா
ஓத நின்றிடு கலைகளும் அவ்வவற் றுணர்வாம்
போதம் யாவையுங் குமரவேள் பொருவிலா வுருவம்.

ஆதியான பிரணவமும் ஐந்துவகையான பொறிகளும் வேதங்கள் யாவும் ஆகமங்களின் பல தொகுதிகளும் இன்னும் வேறாகச் சொல்ல நிற்கின்ற கலைகளும் அவை அவைகளின் உண்மை உணர்வாகிய ஞான சொரூபம் யாவும் குமரப் பெருமானின் நிகரில்லாத உருவம் என அறிவாயாக. 132

எங்க ணும்பணி வதனங்கள் எங்கணும் விழிகள்
எங்க ணுந்திருக் கேள்விகள் எங்கணுங் கரங்கள்
எங்க ணுந்திருக் கழலடி எங்கணும் வடிவம்
எங்க ணுஞ்செறிந் தருள்செயும் அறுமுகத் திறைக்கே.

அவர்க்கு எங்கணும் எல்லாரும் தொழுதேத்தும் திருமுகங்கள்; எங்கணும் அவர்க்கு திருவிழிகள்; எங்கணும் திருச்செவிகள்; எங்கணும் திருக்கைகள்; எங்கணும் திருநிறையும் சிலப்பணிந்த சேவடிகள், எங்கணும் அவர் வடிவமாகி நிறைந்து, எங்கணும் செறிந்து அருள் செய்யும் ஆறுமுகமுடைய இறையோனுக்கு என்பதை அறிவாயாக. அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந்து செறிந்து அருள் செய்வான் ஆறுமுகமுடைய ஐயன் என்றார். 133

தாம ரைக்கணன் முதலிய பண்ணவர் தமக்கும்
ஏமு றப்படு மறைக்கெலாம் ஆதிபெற் றியலும்
ஓமெ னப்படுங் குடிலையே ஒப்பிலா முருகன்
மாமு கத்துளொன் றாமவன் தன்மையார் வகுப்பார்.

தாமரைக் கண்ணனை விஷ்ணு முதலிய கடவுளர்க்கும் இன்ப நெறியாகும் வேதங்கள் எல்லாவற்றிற்கும் முற்பட்டு ஆதியாய் விளங்கிடுகின்ற ஓம் எனப்படும் பிரணவமே அப்பனுடைய ஒப்பிலாத ஆறு திருமுகங்களில் ஒன்றாகும் என்றால் அவன் தம்மை இவ்வணம் ஆவது என யார் வகுத்து உரைப்பார்கள்.

பிரணவ சொரூபம் யாவர்க்கும் அறியொணாத மூலப்பொருளாக விளங்கிடலால் அதுவே ஐயனின் திருமுகம் ஒன்றாதலின் எவ்வாறு அவன் பெருமை உணரமுடியும் அல்லது சொல்லமுடியும். 134

முக்கண் மூர்த்தியும் ஆங்கவன் முண்டகா சனனுஞ்
சக்க ரப்படை அண்ணலும் ஆங்கவன் தானே
திக்குப் பாலருங் கதிர்களும் முனிவருஞ் சிறப்பின்
மிக்க தேவரும் ஆங்கவன் யாவர்க்கும் மேலோன்.

மூன்று கண்ணுடைய சிவமூர்த்தியும் அவனே. தாமரை மீதிருக்கும் பிரமனும் அவனே சக்கரப் படையுடைய பகவான் நாராயணனும் அவன்தானே; திக்குப் பாலகன் எனப் போற்றப்படும் இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என்போரும் சூரியனும் சந்திரனும் முனிவரும் சிறப்பின் மிக்க தேவரும் எல்லாம் அவன். ஆனால் இவர் யாவர்க்கும் மேலானவன். 135

ஈட்டு மன்னுயிர் எவற்றிற்கும் இருவினைப் பயனைக்
கூட்டு வானவன் ஆங்கவை துலையெனக் கூடின்
வேட்ட மேனிலைக் கதிபுரி வானவன் மேலாய்க்
காட்டு வான்முதல் திறமெலாம் ஆங்கவன் கண்டாய்.

உலகில் பிறவியெடுத்துள்ள பல உயிர்கள் எவற்றிற்கும் நல்வினை தீவினையின் பயனைக் கூட்டிவைப்பான் அவன். அந்த நல்வினையும் தீவினையும் தராசு போன்று சமமாகும் அல்லது ஒப்பாகும் நேரத்தில் அவ்வுயிர்களை மிக உயர்வான மேலாம் இன்பநிலையில் வைப்பவன் அவன். இன்னும் மேலாக நாம் காணும்படி காட்டுவானும் காண்பானும் காட்சிப் பொருள் ஆகிய அனைத்தும் அங்கு அவனே என்பதை நீ காண்பாயாக. முழுவதும் உண்மையாவது அவனே என்பதை அறிவாயாக. ஆனால் அறிய முடியாதவன். 136

சிறுவன் போலுறும் குரவனே போலுறும் திணையில்
குறியன் போலுறும் நெடியவ னாகியுங் குறுகும்
நெறியின் இன்னணம் வேறுபல் லுருக்கொடு நிலவும்
அறிவர் நாடருங் கந்தவேள் ஆடலார் அறிவார்.

சிறுவன் போல் வடிவாவான், தந்தைபோலாவான், குருவாவான், திணையிலும் குறியனுவான், நெடிய வடிவாகி நிமிருவான், சிறுகத் தோன்றுவான். முறையாக இவ்வணம் பல வடிவு கொண்டு நிலாவுவான். அவன் தம்மையை எல்லாம் அறியும் அறிவாளிகளாலும் அறிவொணுதவன். அவ்வாறு அறிவாளிகளுடன் வேறு அனைவராலும் அறியொணுத கந்தசுவாமியின் ஆடலை யார் அறிவார்.

அவனே அனைத்துமாகி தாயாகி தந்தையாகி மகனுகி மற்றை யாவுமாகி நின்றுலும் அவனையே உணரும் அறிவுடையார்க்கும் அறியப்படான் என்றுர். 137

சிவன தாடலின் வடிவமாய் உற்றிடுஞ் செவ்வேள்
அவன தாணையின் அன்றியே பெயர்கிலா தணுவும்
எவர வன்றனி ஆற்றலைக் கடந்தவர் இவண்நீ
தவம யங்கினை அவன்தனி மாயையிற் சார்வாய்.

சிவபிரானின் ஆடலாக விளங்கும் வடிவாகி நிற்கின்ற செவ்வொளியுடைய பகவானின் ஆணையின்றி அணுவும் அசையாது எனின் எவர்தான் அவனுடைய தனியாற்றலைக் கடந்தவர். சூரனே நீ பெரும் தவம் செய்தாய். தவத்தைச் செய்தும் உண்மை உணராது மயங்குகின்றுய். இந்த உனது மயக்கம் தானும் அப்பகவானுடைய தனியான மாயையின் வண்ணமே நீ இயங்குகின்றுய்;

அவனை அறியாது மயங்குதலும் அவன் தந்த மயக்கத்தாலாகும் என்றுர். 138

எல்லை இல்லதோர் பொருளெலாம்! ஆகுறு மியாவும்
அல்ல ராகியும் இருந்திடும் அருவமு மாகும்
பல்வ கைப்படும் உருக்கொளும் புதியரிற் பயிலுக்
தொல்லை யாதியாம் அநாதியும் ஆகியே தோன்றும்.

எல்லையில்லாத பொருளாகவும் இருப்பான். யாவும் இல்லாதவனாகவும் இருப்பர், அருவாகித் தோன்றுவதாகியும் ஆவன். அன்றியும் பலவகைப்படும் உருவங்களையும் கொள்ளும், புதியோராகவும் புதுமையுடன் தோன்றிடும். மிக முந்தியோரான ஆதியும் அதற்கும் மூதலான அநாதியுமாகியே தோன்றும்.

அவன் அருளால் தோன்றிய உலகெலாம் மூப்பவும் தான் மூவாத முதற் பொருளாக என்றும் உள்ளான். 139

வாரி வீழ்தரும் புன்னுனித் துள்ளிகண் மான
நேரி லாதமர் குமரவேள் நெடியபேர் உருவின்
ஒரு ரோமத்தின் உலப்பிலா அண்டங்கள் உதிக்கும்
ஆர வன்றிரு மேனியின் பெருமையை அறிவார்.

மழையால் வீழ்கின்றபோது புல்லின் நுனியில் தொங்கும் துளிகளை ஒப்ப இப்புவனமெங்குமாய் நிறைந்திருந்தருளுகின்ற குமரப்பெருமான் நெடியதான பெரிய உருவிலே ஓர் உரோமத்தில் அளவுபடுத்த முடியாத பல அண்டங்கள் உதித்தும் தோன்றி நிற்கும். யார்தான் அவனுடைய திருமேனியின் பெருமையை அறிவார்.

வானம் முதலான பூதங்கள் பலம் அவனது திருமேனியாகும். ஆகவே ஆங்காங்கு அவன் திருவுளப்படி அவனது திருமேனியின் ஓர் உரோமத்தில் பல அண்டங்கள் உதயமாகிய வண்ணம் இருக்கின்றன. இதனால் ஓர் அண்டத்தில் இருக்கும் நாம் எவ்வாறு அவனது திருமேனியின் பெருமையை அறிவோம் என்றார். 140

தொலைவி லாவுயிர்த் தொகுதியுந் தொல்லையைம் பூதத்
தலகி லண்டமும் ஏனவும் ஆதியங் குமரன்
நிலைகொள் மேனியின் நிவர்தரும் உரோமத்தின் நின்றே
உலவை யின்றிமுன் னுதித்திடும் இறுதிநாள் ஒடுங்கும்

தொலைவு இலாது பெருகும் பல உயிர்த் தொகுதியும் மிகப் பழமையான ஐந்து பூதங்களாலாய அளவிலாத அண்டங்களும் ஏனைய பொருள்களும் யாவும் ஆதியான குமரப் பெருமானின் குறைவிலா நிறைவாகி நிலையான திருமேனி மேல் சிறந்திருக்கும் ஓர் உரோமத்தில் நின்று ஒழிவின்றி உதித்திடும் முடிவு நாளில் வந்தவாறு அதனில் ஒருங்கும். 141

ஆவ தாகிய வடிவத்தின் அகிலமுஞ் செறிந்து
மேவு மந்நிலை அனையனே அல்லது வேறிங்
கேவர் கண்டனர் அவ்வுரு வியற்கையை எங்கோன்
தேவர் யாவர்க்குங் காட்டிடக் கண்டனர் சிறிது.

அவ்வாறாகிய வடிவத்தால் அகில உலகமும் செறிந்து மேவி விளங்கும் அறிவொணாத அந்த நிலையினை அப்பகவானே காண்பான் அவ்லது வேறு யார்தான் கண்டனர். ஒருவரும் இலை. அந்த திருவுருவின் இயற்கையை எம்பிரான் தேவர்கள் யாவருக்கும் காட்டிடச் சிறிது அத்தேவர் கண்டனர். 142

தண்டல் இல்லதோர் ஒன்றெரு மயிர்நுனித் தலையின்
அண்ட மெண்ணில கோடிகள் கோவைபட் டசையப்
பண்டு மேருவிற் கந்தவேள் கொண்டதோர் படிவங்
கண்டி லாய்கொலாங் கணிப்பிலாப் பவம்பரி கடியோய்

குறைவு ஏதும் இல்லதோர் ஏம்பிரானது ஒன்ருகும் திருமேனியில் ஓர்மயிர் நுனியின் உச்சியில் அண்டங்கள் எண்ணில கோடிகோர்வையாகப் பொருந்தி அசைந்திடும் வண்ணமாக முன்னர் முருகப் பிரான் மேரு மலையினிடத்து கொண்டதோர் அருள் நிறைந்த திருப்பெரு வடிவத்தை நீ கண்டிலாய் போலும். அளவு கணக்கிலாத பெரும் பாவங்களைப் புரியும் கொடிய சூரனே. 143

அன்று கந்தவேள் அமைத்ததோர் பெருவடி வதனுள்
ஒன்று ரோமத்தின் இருந்தற் காற்றிடா துனதாய்த்
துன்றும் ஆயிரத் தெட்டெனும் அண்டமாந் தொகையும்
இன்று நீயது தெரிகிலை சிறுவனென் றிசைத்தாய்.

அன்று முருகப்பிரான் தாஞக எங்கும் வளர்ந்து நின்றதோர் பெருவடிவம் அதனுளே ஒன்ருகும் ஓர் உரோமத்தின் இருந்த அண்டங்களுக்கு இணையாகாது உனதாய் நீ பெற்றுக்கொண்டவன் என பெருமைப்படும் ஆயிரத்தெட்டெனும் அண்டமாகிய தொகைகள். இன்று இதனை நீ தெரிந்திடாது சிறுவன் எனச் சொல்லிஞய். 144

அளப்ப ருங்குணத் தாதியாம் எம்பிரான் அமரர்
தளைப்ப டுஞ்சிறை மாற்றவுஞ் சதுர்முகன் முதலோர்
கொளப்ப டுந்துயர் அகற்றவுங் கொடியரை யறுத்து
வளப்ப டும்பரி சுலகெலாம் போற்றவும் வந்தான்.

இவ்வாறு எவருடைய சிந்தையாலும் அளத்தற்கரிய பெருங் குணமுடைய ஆதியான எம்பிரான் தேவர்கள் விலங்கில் இடப்பட்ட சிறையை நீக்கவும், பிரமதேவன் முதலியோர்கள் அனுபவிக்கப்படுகின்ற துன்பங்களை அகற்றவும், கொடியோர்களை அறுத்து நீக்கி வளமாகும் பரிசால் உலகெல்லாவற்றையும் காத்தருளும்படி வந்தருளியிருக்கின்ருர்,

எவராலும் அளத்தற்கரிய கருணையுடைய பகவான் தேவர் சிறை நீக்கி கடவுளர் துன்பகற்றி கொடியரை நீக்குதலாலே உலகத்தைச் சேமமுற வைத்தருளும் கருணையால் ஆறு முகமும் பன்னிரு கரமும் கொண்டு அருள் நிறைந்த வடிவுடன் வந்தருளிஞர். 145

வாழி யானநின் ஆயுளும் வன்மையும் வரமுங்
கேழில் சுற்றமும் படைகளும் வான்ெருடக் கிளர்ந்து
பூழி யாலுயர் மால்வரைச் சூழலிற் புகுந்த
ஊழி மாருதம் போலடும் எம்பிரான் ஒருவேல்.

அழிவிலாத வாழ்வுடைய நினது ஆயுளும் வலிமையும் வரமும் குறையற்ற சுற்றமும் படைகளும் யாவையும் வானில் தொடும்படி வளர்ந்த ஓர் புழுதியாலான மலையில் புகுந்த காற்று அதனை அழிப்பது போன்று எம்பிரானுடைய ஒரு வேலானது சங்கரிக்கும் என்பதை அறிவாய். 146

ஆகை யாலிவை உணர்ந்திலை இணையிலா தமர்ந்த
ஏக நாயக முதல்வனைப் பாலனென் றிகழ்ந்தாய்
சேகு லாவிய மனமுடைக் கற்பிலாச் சிறியோய்
போக போகயாம் இவ்வொரு தவற்றையும் பொறுத்தாம்

ஆனமையால் இந்த எம்பிரானுடைய தகுதிகள் யாவையும் நீ உணர்ந்துகொண்டாயிலை. தனக்கு இணையிலாத அமர்ந்தருளுகின்ற ஏக நாயக முதல்வனை பாலன் என்று இகழ்ந்தாய் வஞ்சனை பெரிது நிரம்பிய மனத்தால் நல்ல கற்பனையான எண்ணங்களை கொள்ளாத சின்னத்தனமுடைய சூரனே! சரி போகட்டும், போகட்டும் யான் இந்த ஒருபிழையையும் பொறுத்தோம்.

வஞ்சனையான உள்ளத்தால் நல்லெண்ணம் கொள்ளமுடியாது. வஞ்சகனான நீ எம்பிரானைப் பாலனென இகழ்ந்தமை பழுதான பெருங்குற்றம். அதற்கு தண்டனை இலாதுவிடுதல் பழுதாகும். அதை நான் செய்யாது பொறுத்தேன் என்றார். 147

நொய்ய சொற்களால் எந்தையை இகழ்ந்தனை நொடிப்பின்
வெய்ய நாத்துமித் துன்னுயிர் வாங்குவம் விடுத்த
ஐயன் ஆணையன் றாதலில் அளித்தனம் அதனால்
உய்தி இப்பகல் வேற்படைக் குண்டியாய் உறைவோய்.

மிகவும் அற்பமான வார்த்தைகளால் எந்விதபிரானை நீ இகழ்ந்தாய். இப்போது ஒரு நொடிப் பொழுதில் உனது கொடிய நாக்கை வெட்டி வீழ்த்தி விட்டு உனதுயிரை வாங்குவேன். அவ்வாறு செய்தற்கு எனது ஐயனுடைய சட்டளையாக இல்லாமையில் விடுத்தேன். அதனால் இன்றொரு பகலும் உய்ந்திருப்பாயாக வேற்படைக்கு உணவாக அமையப்போகின்றவனே! என்றார். 148

உறுதி இன்னமொன் றுரைக்குவம் நீயுமுன் கிளையும்
இறுதி இன்றியே எஞ்சுதல் வேண்டுமேல் இமையோர்
சிறைவி டுக்குதி இகலினைத் தவிருதி செய்வேள்
அறைக முற்றுணை அரணமென் றுன்னியே அமர்தி.

உனக்குறுதியான வாக்கு இன்னுமொன்று சொல்வேன். நீயும் உன் கிளையும் அழிவில்லாமல் வாழவேண்டும் என்றால் தேவர் சிறையை விடுத்து நீக்குவாயாக. கோபத்தை விடுப்பாயாக. செல்வேள் பெருமான் திருச்சிலம்பொலிக்கும் திருவடிகளை தஞ்சமாக நினைந்து இருப்பாயாக. 149

வேறு

என்றிவை பலப்பல இகப்பில்பெரு மாயைக்
குன்றெறி படைக்குரிசில் கொள்கைய தியம்பப்
புன்றொழில் படைத்துடைய சூரியன் உணர்ந்தே
கன்றினன் உயிர்த்தினைய கட்டுரைசெய் கின்றான்.

என்று இவைகள் பலபலவற்றை நீக்கமுடியாத கிரவுஞ்ச மலையை வேலினால் பிளந்தருளிய வேலின் தலைவனின் கொள்கையை எடுத்துக் கூறிட அதனை அற்பத்தொழில் மேற்கொண்டுள்ள சூரபன்மன் உணர்ந்து கொண்டு மனம் கறுவியமாகி பெருமூச்சு விட்டு இனைய வார்த்தைகளைச் சொல்வான். 150

கூரெயி றெழாதகுழ விச்சிறுவன் உய்த்த
சாரென நினைந்துனது தன்னுயிர் விடுத்தேன்
பேரலை அவன்பெருமை பின்னுமொழி கின்றாய்
வீரமும் உரைக்குதியென் வெய்யசின முன்னாய்.

இன்னமும் கூரிய பற்கள் முளைத்திடாத குழந்தையான சிறுவன் செலுத்திய தூதன் என நினைந்து உனது உயிரை நீக்காமல் விடுத்தேன். அப்படி இருந்தும் இவ்விடம் விட்டுப் போகாமல் அவன் பெருமை பின்னும் சொல்கின்றாய், அதுமட்டன்றி வீரமும் இங்கு பேசுகின்றாய். 151

கொஞ்சுமொழி கொண்டகுழ விச்சிறுவன் மேலாய்
எஞ்சலில தோர்முதல்வ னேயெனினு மாக
அஞ்சிடுவ னேசிறிதும் அண்டநிலை தோறும்
விஞ்சியமர் பண்ணவர்கள் யாவரையும் வென்றேன்.

கொஞ்சும் மொழி கொண்ட அந்தக் குழந்தைச் சிறுவன் மேலான முடிவிலாததோர் பரமனே எனினும் ஆகட்டும். அதற்கு நான் சிறிதும் அஞ்சமாட்டேன். வாளின் அண்டங்களின் நிலைகள் தோறும் இருந்து பரிபாலனம் செய்த மேலாகிய எத்தேவரையும் வென்றேன் 152

சேண்புரம தாகியமர் தேவர்சிறை தன்னை
வீண்படு கனாவினும் விடுக்கநினை கில்லேன்
ஏண்பல பகர்ந்தனை எனக்கெதிர் இருந்தே
காண்பன தெலாமொரு கணத்திலினி யென்றான்.

எல்லா உலகிற்கும் மேலாகி இருக்கின்ற வேவ உலகில் வாழும் தேவர் சிறையை வீணாகிப் போகின்ற கனவிலும் விடுதற்கு நினைக்கமாட்டேன். என் முன்னாக இருந்து பெருமிதமான கர்வப் பேச்சுகள் பல சொன்னாய். இதன் பலனை இது ஒரு கணத்தில் நான் காண்பேன். நீயும் பார் என்று கூறினான். 153

கொற்றமிகு சூரனிவை கூறிஅயல் நின்ற
அற்றமறு மானவருள் ஆயிரரை நோக்கி
ஒற்றுமைசெய் தோனுயிர் ஒறுத்தல்பழி வல்லே
பற்றியிவ னைச்சிறை படுத்திடுதி ரென்றான்.

கொற்றம் மிகுந்த சூரன் இவற்றைக் கூறி அயலாக நின்ற குற்றம் அற்ற கொடிய வீரருள் ஆயிரம்பேரைப் பார்த்து தூதாக வந்த இவனுடைய உயிரை நீக்கல் பழியாகும். ஆதலால் விரைவாக இவனைப் பிடித்து சிறைப்படுத்துங்கள் என்றான். 154

என்னலுமவ் வாயிரரும் ஏற்றெரி விழித்துத்
துன்னுகன லைப்புகை சுலாவுவது மானப்
பொன்னின்மிளிர் பீடிகை அமர்ந்தபுகழ் வீரன்
தன்னைவளை சூழ்ந்தனர் தருக்கினொடு பற்ற.

என்று சூரபன்மன் கூறலும் அந்த ஆயிரம்பேரும் அக்கட்டளையை ஏற்று நெருப்பு தோன்ற விழித்து, பிரகாசமுடைய நெருப்பை புகை சுற்றிவளைதல்போன்று; பொன்னினால் செய்து ஒளிவீசிடும் பீடத்தின் மேல் அமர்ந்த, பெரும்புகழுடைய வீரவாகு தேவரைச் கம்பீரமாகப் பற்றிக்கொள்ளும்படியாக சுற்றி வளைந்தார்கள். 155

மீடற்றகுவர் சூழ்வரலும் வீரனெழுந் தன்னோர்
முடிச்சிகை ஓராயிரமும் மொய்ம்பினொடு கையால்
பிடித்தவுணர் மன்னன் அமர் பேரவை நிலத்தின்
அடித்தனன் நொடிப்பிலவர் ஆவிமுழு துண்டான்.

பெரு வலியுடைய அசுரர் ஆயிரம்பேரும் சூழ்ந்து வரலும் வீரவாகு தேவர் எழுந்து சுற்றி வளைந்த ஆயிரம்பேரின் முடிகளின் மயிரை வலியுடன் ஒருகையால் எட்டிப்பிடித்து அசுரர் மன்னவனான சூரபன்மன் பெரும் சபையின் நிலத்தில் அடித்தார். அடித்து அவர் உயிர் முழுவதையும் மாய்த்தார். 156

மார்புடைய மொய்ம்பொசிய வார்குருதி சோர
ஓர்புடையின் யாவரையும் ஒல்லைதனின் அட்டே
சூர்புடையின் முன்னுறநனி துன்னும்வகை வீசிச்
சீர்புடை நம்பியிவை செப்பல்புரி கின்றான்.

வீரரின் நெஞ்சில்கொண்ட வலிகெட்டழிய இரத்தம் வடிந்தோட ஒரு பக்கமாக எல்லாரையும் விரைவாக நிலத்தில் மோதி அடித்துக்கொன்று அந்த உடல் முழுவதையும் சூரபன்மன் முன்பு விரைவுடன் சென்று சேரும் வகைவீசிவிட்டு சீர் கொண்ட தலைவரான வீரவாகு தேவர் இவை சொல்லத் தொடங்குகின்றார். 157

எந்தைநெடு வேலுனை இனித்தடிதல் திண்ணம்
அந்தமுறு முன்னமுன தைம்புலனும் வெஃக
வந்தபல துப்புரவும் வல்லைபெரி தார்ந்தே
புந்திதெளி வாயமர்தி போந்திடுவ னென்றான்.

சூரனே! எந்தை பெருமானின் நெடியவேல் இனி உன்னைக் கொல்லல் திண்ணம். அந்த முடிவு வரும் முன்பாக உனது ஐந்து புலன்களும் விரும்பிட வந்து கொண்டிருக்கும் பல செல்வங்களையும் நீ விரைவாக அனுபவித்து இன்புற்று மனம் தெளிவாகி இருப்பாயாக. நான் செல்வேன் என்றார். 158

ஐயவிறல் அண்ணலிவை செப்பியகல் காலை
ஆயவன் இருந்திடும் அரித்தவிசு தானும்
மீயுறவெ ழுந்துவிசும் பிற்றலையின் ஏகி
மாயையென ஒல்லையின் மறைந்துபடர்ந் தன்றே

சிங்கத்தின் துடுக்கு வலியுடைய வீரவாகுதேவர் இதனைச் செப்பிவிட்டு அகன்று போகும் காலையில் வீரவாகு தேவர் இருந்திட்ட சிம்மாசனம் தானும் மிக மேலெழுந்து வானத்தின்மேல்போய் மாயை என விரைவுடன் மறைந்து படர்ந்து போயது. 159

ஆகத் திருவிருத்தம் — 639

அவைபுகு படலம் முற்றிற்று.

---

1091

# சதமுகன் வதைப் படலம்

ஒண்ணில வெயிற்றினரொ ராயிரரை அட்டே
எண்ணலன் அவைக்களம் இகந்துபடர் காலைக்
கண்ணினழல் காலும்வகை கண்டுபுடை யாக
நண்ணுசத மாமுகனை நோக்கிநவில் கின்றான்.

அழகிய நிலவு போன்ற பிரகாசமுடைய வளைந்த கடைவாய் பற்களையுடைய வீரர்கள் ஆயிரம் பேரை அழித்துவிட்டு பகைவரான சூரபன்மனது சபையின் இடத்தை வீரவாகு தேவர் விடுத்து நீங்கிக் கடந்து செல்லும் காலையில் சூரபன்மன் இச்செயலைக் கண்ணில் நெருப்பெரியும்படியாக கண்டு கோபித்து பக்கராக நின்ற நூறு முகங்களுடைய சதமுகன் என்னும் பெரிய அசுரனை நோக்கிச் சொல்கின்றான். 1

ஆறுமுகன் ஆளெயிவன் ஆயிரரை இங்ஙன்
கோறல்புரிந் தானெனது கொற்றமுழு தெள்ளி
வேறலுடை யோர்களென மேன்மைபல செப்பிச்
சேறல்புரி வான்தவிசும் உம்பரிடை செல்ல.

சதமுகனே கேள் ஆறுமுகமுடைய சிவகுமாரனின் ஆளாய் இங்கு வந்த தூதுவன் இவ்விடம் ஆயிரம்பேரைக் கொன்று, எனது மேன்மைகள் யாவற்றையும் இகழ்ந்துவிட்டு வெற்றிகொண்டோர் பேசுவதுபோல் மிடுக்குடைய வார்த்தைகள் பலவற்றை கூறிவிட்டு தப்பி போகின்றான். அவன் இருந்த சிம்மாசனமும் வானிடையாகச் சென்றுகொண்டது. 2

ஒட்டியநம் வீரரை ஒறுத்தகல் வனேனும்
விட்டதொரு தூதனெடு வெஞ்சமர் இயற்றி
அட்டல்பழி யாகுமவன் ஆற்றலை அடக்கிக்
கட்டிவிரை வால்வருகெ னக்கழற லோடும்.

அவனைப் பிடிக்கும்படி சபதம் பேசிப்போன எமது வீரரைக் கொன்றுவிட்டு அப்பால் செல்வன் என்றாலும் நம்மிடம் அனுப்பப்பட்ட ஓர் தூதுவனைக் கொல்லல் பழியாகும். ஆகவே நீ அவனுடைய ஆற்றலை அடக்கி அவனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு விரைவாக இங்கு வருக என சூரபன்மன் சதமுகனுக்குக் கூறுதலோடும். 3

சூற்குல முகிற்பொருவு சூரனடி தாழா
ஏற்கும்விடை பெற்றிசைவின் ஏகுதல் புரிந்தான்
நாற்கடலும் மேவினும் நதுப்பரிய ஊழிக்
காற்கனலின் ஓதைதொடர் காட்சியது மான.

அது கேட்ட சதமுகன் சூல் நிறைவாய் கருமைகொண்டு விளங்கும் மேகம் போன்ற கரிய உருவுடைய சூரன் கால்களில் தாழ்ந்து வணங்கி அவ்வண்ணம் செய்வதற்கு ஏற்ற உத்தரவைப் பெற்றுக்கொண்டு சூரனின் இசைவின்படி செல்லத் தொடங்கினன். எதுபோல என்றால் நான்கு திக்குகளின் கடல் வந்துமூடினாலும் அவித்துவிட முடியாத ஊழிக் காற்றின் கனலின் ஓசை தொடர்ந்துசெல்லும் காட்சி போன்று இருந்தது. 4

ஏகுசத மாமுதன் இலக்கமற வீரர்
பாகம்வர எண்ணில்படை பாணிமிசை பற்றி
வேகமொடு சென்றதனி வேலன்விடு வீர
வாகுவினை எய்தியொரு மாற்றம்அறை கின்றான்.

இவ்வாறு செல்லும் சதமுகன் ஓர் இலக்கம் கொடிய வீரர் பாங்கரில் வரவும்; எண்ணற்ற படைகளைக் கையினில் பிடித்துக்கொண்டு வேகத்துடன் சென்று; தனியான வேலாயுதமுடைய பகவான் விடுத்த வீரவாகு தேவரை அடைந்து ஒரு வார்த்தை சொல்லுகின்றான். 5

காவல்பல நீங்கிவரு கள்வஉல குள்ளோர்
ஏவரும் வியப்பவரும் எங்களிறை முன்னம்
மேவினை இகழ்ந்துசில வீரருயிர் வெளவிப்
போவதெவன் நில்லுனது போர்வலி அழிப்பேன்.

எங்கள் நகரக் காவல் தடைகள் யாவற்றையும் கடந்து வருகின்ற கள்வனே! உலகில் உள்ளோர் எல்லோரும் வியக்கும்படி வீற்றிருந்து அரசாளும் எங்கள் அரசன் முன்பாக நீ வந்துள்ளாய். அவரை இகழ்ந்து பேசிவிட்டு சில வீரர்கள் உயிரைக் கொன்றுவிட்டு எப்படி நீ போவாய். நில் உனது போர் செய்யும் வலியை நான் அழிப்பேன். 6

பட்டிமை உருக்கள்கொடு பாறல்அரி தாசை
எட்டுள பரப்பதனுள் யாண்டகல்வை யேனும்
விட்டிடுவ னேவென விளம்பிவெரிந் எய்திக்
கிட்டுதலும் வீரனிது கேட்டனன் எதிர்ந்தான்.

கள்ளத்தனமான வடிவங்களை எடுத்துக்கொண்டு நீ தப்பி ஓடல் அரிது. எட்டுத் திக்கிலுள்ள எந்த ஒரு இடத்தால் நீ சென்றாலும் நீ போக நான் விட்டு விடுவேனா? என்று கூறிக்கொண்டு சதமுகன் பின்னால் தொடர்ந்து வந்து கிட்டுதலும்; வீரவாகு தேவரும் வந்து சதமுகனை எதிர்த்தார். 7

வேறு

கொற்றவேலுடை அண்ணல்தன் மொழியினைக்கொண்டிலன் இகழ்ந்தென்னைப்
பற்ற ஆயிரர் தங்களை விடுத்தலும் படுத்தனன் பெயர்காலை
மற்று மீதொரு வயவனை உய்த்தனன் மன்னவன் இவன் ஆவி
செற்று மாநக ரந்தனை அழித்தனன் செல்லுவன் இனியென்றான்.

அப்போது வீரவாகுதேவர் சொல்வார் கொற்றம் மிகுந்த வேலுடைய எமது ஐயனின் வார்த்தையை இந்த சூரபன்மன் ஏற்றுக்கொள்ளவில்லை'. அது போக என்னை இகழ்ந்து கூறினான். என்னைப் பிடிக்கும்படி ஆயிரம் வீரரை விடுத்தான். அவரை எல்லாம் அழித்துவிட்டு நான் போகுங்கால் திரும்பவும் இந்த ஒரு வீரனை விடுத்துள்ளான் சூரபன்மன். சரி இந்த வீரனுடைய உயிரைக்கொன்று பெரிய நகரத்தையும் அழிவு செய்தபின் நான் இனிச் செல்வேன். 8

கருதி இன்னணஞ் சதமுகன் எனப்படு காவலன் றனைநோக்கிக்
குருதி வேலுடைப் பண்ணவன் அடிமனங் கொண்டுதிண் டிறல்வாகு
பொருதல் உன்னியே ஈண்டறை கூவினை பொள்ளெனப் படையோடு
வருதி யாலெனத் தெள்விளி யெடுத்தனன் மறலிக்கும் இறைபோல்வான்.

இவ்வாறு எண்ணங் கொண்டு வீரவாகுதேவர்; சதமுகன் எனப்பட்ட காவல் வீரனை நோக்கி; இரத்தம் தோய்ந்த வேலுடைய பகவான் திருவடி மலர்களை மனத்தில் தியானித்து சதமுகனுடன் போர்செய்ய எண்ணி சதமுகனே! என்னை இங்கு அழைத்தாய். உனது படைகளுடன் விரைவால் வாவென்று உரத்த சத்தத்தொனியால் அழைத்தார். இயமனுக்கும் இறைவன் போன்ற வீரவாகு தேவர். 9

எல்லை யன்னதிற் சதமுகற் சூழ்தரும் இலக்கரும் எதிருன்றி
வில்லு மிழ்ந்திடு வெஞ்சரந் தொடுத்தனர் வேற்படை விடுக்கின்றார்
கல்லெ னும்படி நேமிகள் உருட்டினர் கப்பணஞ் சிதறுற்றார்
வல்லை முத்தலைப் படையெழு வோச்சினர் மழுக்கொடே எறிகின்றார்.

இந்த எல்லையில் சதமுகனைச் சூழ்ந்து நின்ற இலக்கம் வீரரும் தங்கள் விற்களை காலில் ஊன்றி வளைத்து வில்லினின்றும் செலுத்திடும் கொடிய அம்பை விடுப்பார்கள். வேல்படைகளை விடுக்கின்றார்கள். கல்லெனும்படி சக்கரங்களைச் சுழற்றி வீசுவர். கப்பணம் செலுத்துவார். விரைவுடன் மூன்று தலையுடைய எழுவாயுதம் செலுத்துவார். மழுவாயுதத்தால் எறிவார்கள். 1

அணிகள் பட்டவர் விட்டஇப் படைவகை அண்ணல்மேற் புகலோடுந்
துணிகள் பட்டன நெரிந்தன எரிந்தன துகளுமாய்ப் போயிற்றால்
மணிகள் பட்டிடும் இருஞ்சிறைக் கலுழர்க்குள் வலியன்மேற் படுநொய்ய
பணிகள் பட்டன போன்றன வேறிலை படியெடுத் துரைத்தற்கே.

அணியாக நின்று இலக்கம் வீரரும் விட்ட இப்படை வகைகள் வீரவாகு தேவர்மேல் படுதலோடும்; அப்படைகள் யாவும் துணிகளாக முரிந்தன. நெரிந்து போயின. எரிந்துபோயின. சாம்பலாகவும் சில போயின. இதன் தன்மை எப்படி இருந்ததென்றால் பொன் ஆபரண மணிகளால் சிறகுகொண்ட அழகிய கருடப் பறவைக்குள் அரசனானதன் முன்பு மிக நொய்தான பாம்புகள் சென்று பட்டால் எப்படி அப்பாம்புகள் அழிந்து சிதைந்துபோவது போன்றதென்பதே ஒழிய வேறு ஒரு பொருளை தாம் உவமையாகச் சொல்ல முடியாது. 11

இலக்க மாகிமுன் னின்றபேர் ஆண்டகை இவர்செய லினைநோக்கி
இலக் மாய்முழு துலகமுந் துளக்கியே இராயிரப் பத்தென்னும்
இலக்க மாமுடி கொண்டதோர் சூளிகை இம்மெனப் பறித்தேந்தி
இலக்கமாகியே யெதிர்பொரு தானவர் தங்கள்மேல் எறித்திட்டான்.

இலக்கம் வீரரின் படைகள் வீச்சுக்கு இலக்காகி முன்னின்ற ஆண்டகையான வீரவாகு தேவர் இவர்களின் செயலினைக் கண்டு; உடன் தனது ஒளியின் இலக்கத்தால் முழு உலகையும் துலங்கச் செய்து இருபதினாயிரம் என்னும் இலக்கமுடைய முடிகளைக் கொண்டதொரு சூளிகை அங்கு நின்றதை திடீரென பறித்து எடுத்துக் கொண்டாராய் தனது முன்பாக நின்ற இலக்கம் என்னும் எண்ணிக்கையுடையவராய் வந்த வீரர்மேல் அந்த சூளிகையை எறிந்திட்டார். 12

ஏதி லான்விடு சூளிகை சிறகர்பெற் றிறந்துவீழ் மேருப்போல்
மீதுசென்றமர் இயற்றியே நின்றிடும் வெய்யவர் மிசையெய்தித்
தாது முற்றவுஞ் சாந்துபட் டொருங்குறத் தனுவெலாஞ் சிதைத்திட்டே
ஓத நீர்முகி லார்ப்பொடு புவிக்கண்வீழ்த் துடைந்தது உதிராகி.

வீரவாகு தேவர் விடுத்திட்ட சூளிகையானது சிறகுகள் பெற்றுப் பறந்து சென்று தவறி வீழும் மேரு மலையைப்போன்று சென்று; முன்னின்று படைகள் வீசி போர்செய்து நின்றிட்ட கொடிய இலக்கம் வீரர்மேற் சென்று அவர்கள் தசைகள் முற்றவும் சாந்துபோல் குழைந்திட அவர்கள் உடலை எல்லாம் சிதைத்திட்டு கடல் பருகியமுகிலின் இரைச்சல்போன்ற சத்தத்துடன் உடைபட்டு துகளாசி வீழ்ந்தது. 13

கொடிசே றிந்திடு சூளிகை தன்னுடன் அவுணர்தங் குழாங்கொண்ட
முடிசி தைந்தன நாசிநீ டலையெலாம் முடிந்தன முடிவில்லா
வடிவ மைந்திடு கன்னகூ டத்தொகை மாய்ந்தன நிலைகொள்ளும்
அடித கர்ந்தன கொடுங்கையும் மாண்டன ஒழிந்தவும் அழிவுற்ற.

கொடிகள் செறிய நாட்டிய சூளிகை உடைந்துபோனதோடு அசுரர் கூட்டமாகக் கொண்ட முடிகள் சிதைந்தன. நாசிகள் நீண்ட தலை எலாம் முடிந்தன. முடிவிலாத பல வடிவம் கொண்ட காதுகள் மாய்ந்தன. நிலைபெற்று நிற்கும் கால்கள் முரிந்தன. கொடிய கைகளும் மாண்டன. இதுவன்றி ஏனைய உறுப்புகளும் அழிவுற்றன; 14

இலக்கர் தம்மையுஞ் சூளிகை தன்னுடன் இமைப்பொழு தினில்அட்டு
நிலக்கண் வீரனின் றிடுதலுஞ் சதமுகன் நிரைவிழி கொடுநோக்கிக்
கலக்க நண்ணியே தமரினைக் காண்கிலன் கவன்றனன் தெளிவெய்தி
உலக்கை சூலம்வேல் சக்கரந் தோமரம் ஓச்சுதல் உறுகின்றான்.

இலக்கம் வீரரையும் சூளிகையோடு சேர வீரவாகுதேவர் ஓர் இமைப்பொழுதில் அழித்துவிட்டு நிலத்தில் நிற்பதை நிரையான கண்களால் சதமுகன் பார்த்து கலக்கமடைந்தான். தனது ஆட்களைக் காண்கிலன். மனம் மருண்டு கவர்ச்சியாகினன். பின்னர் தெளிவெய்திக்கொண்டு உலக்கை சூலம். வேல், சக்கரம், தோமரம் ஆகிய படைகளை வீரவாகுதேவர் மேல் விட்டெறியத் தொடங்கினான். 15

உற்ற காலையின் ஒண்டிறல் மொய்ம்பினோன் உருகெழு சினஞ்செய்தோர்
பொற்றை நேர்தரு சிகரியைப் பறித்தனன் பொள்ளென எறிகாலை
மற்றோர் வார்சிலை வணக்கியே வெய்யதீ வாளியா யிரம்பூட்டி
இற்று வீழ்வகை இடைதனில் அறுத்தனன் எறிதரு கதிர்வேலான்.

சதமுகன் விட்டெறிகின்ற காலத்தில் மிகு வலியுடைய வீரவாகுதேவர் இடியேறு போன்ற கோபம் அடைந்து ஓர் மலை போன்ற கோபுரத்தை தமது கையால் பறித்து விரைவாக அதனைச் சதமுகன் மீது விட்டெறிந்த காலையில்; பிரகாசமுடைய வேலைக் கைக்கொண்ட சதமுகன் வேறோர் வில்லை வளைத்து கொடிய அக்கினிக் கணைகள் ஆயிரத்தை வில்லில் பூட்டி அந்த கோபுரம் நொருங்கி வீழும்படி இடையிலே அறுத்துத் தள்ளினான். 16

அறுத்து நூறுகோல் பின்னரும் ஆங்கவன் ஆகத்தின் நடுவெய்தச்
செறிந்த காலையின் வீரவா குப்பெயர்ச் செம்மல்போய் அவன்வில்லைப்
பறித்த னன்முறித் தெறிதலுஞ் சதமுகன் பற்றவீ திடையென்னுக்
குறித்தொ ரைம்பதிற் றிருகரம் ஒச்சியே குரிசிலைப் பிடித்திட்டான்.

கோபுரத்தை அறுத்துத் தள்ளி பின்னரும் நூறு அம்புகளை வீரவாகுதேவரின் உடலின் நடுவில் தைக்கும்படி செலுத்தவும் அதுகண்டு வீரவாகுதேவர் எனும் தலைவர் சென்று; சதமுகனின் வில்லைப் பறித்து முறித்து எறிதலும்; அதுவேளை சதமுகன் இவனைப் பிடித்தற்கு இதுவே தருணம் என எண்ணி தனது நூறு கைகளை நீட்டி எமது தலைவர் வீரவாகுதேவரைப் பிடித்திட்டான். 17

பிடித்த தானவத் தலைவனை அண்ணலோர் பெரும்புயங் கொடுதாக்கிப்
படித்த லைப்படத் தள்ளலும் வீழ்ந்துளான் பதைபதைக் தெழுகாலை
அடித்த லத்தினல் உதைத்தனன் அசனியால் அழுங்குறும் அரவம்போல்
துடிப்ப வேயுரத் தொருகழல் உறுத்தினன் சோரிவாய் தொறுஞ்சோர.

தன்னைப் பிடித்த அசுரத் தலைவன் சதமுகனை வீரவாகுதேவர் ஓர் தோளால் இடித்துத் தாக்கி பூமியில் விழுமாறு தள்ளலும், விழுந்தவனுன சதமுகன் பதைபதைத்துக்கொண்டு எழுகின்ற நேரத்தில் வீரவாகுதேவர் திருப்பாதத்தால் அவனை உதைத்தார். அந்த உதையால் இடியுண்ட பாம்பு அழுங்குவது போன்று சதமுகன் கிடந்து துடிதுடிப்ப அதுவேளை வீரவாகுதேவர் அவன் நெஞ்சில் ஒரு காலால் உழக்கினர். உழக்குதலும் இரத்தம் அவன் வாயால் பெருகியது. 18

கந்தெ னப்படு மொய்ம்புடை வெய்யசூர் கட்டுரை முறைபோற்றி
வந்தெ திர்த்திடு சதமுகத் தவுணனை மிதித்திடும் அறமைந்தன்
அந்த கப்பெயர் அசுரனை யாற்றல்பெற் றமர்முய லகன்றன்னைத்
தந்தி யைப்பதம் ஒன்றுகொண் டூன்றிய தாதைபோல் திகழ்கின்றுன்.

மலைபோன்றது எனப்படும் பருத்த தோள் கொண்ட கொடிய சூரனின் கட்டளையை முறையாகப் பேணி வந்து எதிர்த்திட்ட சதமுகன் என்னும் அசுரனை மிதித்திட்ட அறத்தின் மைந்தரான வீரவாகுதேவர்; அந்தகன் என்னும் பெயருடைய அசுரனை, வலிமை பெற்று விளங்கியிட்ட முயலகனை, கயாசூரன் என்னும் யானையை திருப்பாதம் ஒன்றைக் கொண்டு மிதித்து ஊன்றி நின்றருளிய தந்தையான சிவபிரான் போன்று திகழ்கின்ருர். 19

வே று

மின்னல் வாளெயிற் றவுணன் மார்பகம் விடரெ னும்படி விள்ளவே
தன்னெர் பாத முறுத்தி மற்றெரு தாளி னைக்கொடு தள்ளியே
சென்னி யாவும் உருட்டி ஞன்திசை மற்றும் நின்று பரித்திடுங்
கன்ன மார்மத மால்க ளிற்றினும் வன்மை சான்றிடு கழலினுன்.

மின்னல் காலும் வாள் போன்ற கூரிய பற்களுடைய சதமுகன் மார்பு; பூமி பிளந்தது போன்று வெடிக்கும்படி தனது ஓர் திருப்பாதத்தால் உழக்கிக் கொண்டு மற்றதோர் திருப்பாதத்தால் உதைத்து சதமுகனுடைய தலைகள் யாவற்றையும் உருட்டித் தள்ளினர். அவர் யார்எனில். திக்குகள் முழுவதையும் நின்று தாங்கி; கபோலத்தினின்றும் பெருகிடும் மதநீரையுடைய பெரு யானையிலும் வலிமை பெற்ற சிலம்பணிந்த சேவடியுடைய வீரவாகுதேவர். 20

நூறு சென்னியும் இடறி யாங்கொரு நொடிவரைப் பின்முன் அவுணனை
ஈறு செய்தனன் அதுமு டித்தபின் எல்லை யில்சின மெய்தியே
ஆறு மாமுக வள்ளல் வாய்மை இகழ்ந்து னான்அவை யத்தைமுன்
ஈறு செய்துபின் னடுவன் இந்நக ரத்தை யென்று நினைந்தனன்.

நூறு தலைகளையும் இடறிப் பிய்த்து அங்கு ஒரு நொடிப் பொழுதில் முன் சதமுகனைக் கொன்று அது முடித்த பின்னர் வீரவாகுதேவர் எல்லையில்லாத கோபம் கொண்டு ஆறுமுகமுடைய அருள் வள்ளலான எம்பிரானின் உறுதி மொழிகளை இகழ்ந்த இந்தப் பாவியான சூரனின் சபை மண்டபத்தை முதலில் சிதைத்தபின் இந்த நகரத்தை அழிப்பேன் என்று நினைத்தருளினார். 21

ஆகத் திருவிருத்தம் 660

சதமுகன் வதைப்படலம் முற்றிற்று.

---

# காவலாளர் வதைப் படலம்

சுடரும் வேற்படைத் தொல்குும ரேசன
தடிகள் முன்னி அருளுடன் ஆண்டகை
படிய ளந்திடு பண்ணவ னுமென
நெடிய பேருருக் கொண்டுநின் றனரோ.

சோதி வடிவாகி நிறையும் வேலினைத் திருக்கரத்தில் கொண்டருளிய எல்லார்க்கும் முன் தோன்றிய குமரேசனுடைய திருவடிகளைத் தியானித்து வீரவாகுதேவர் அருள் நிறைவாய் ஆண்டகமையுடைய அவர், இப்பூமியை அளந்த விஷ்ணுபிரானைப் போன்று நெடியதோர் உருவம் கொண்டு நிமிர்ந்து நின்றார். 1

திசைய ளந்தன திண்புயஞ் சென்றுசேண்
மிசைய ளந்தன மேதகு நீண்முடி
வசுதை யாவும் அளந்தன வார்கழல்
அசைவ ருந்திறல் ஆடவன் நிற்பவே.

இவருடைய இப்பெரு வடிவத்தில் அவர் தோள்கள் திக்குகளை அளவிடுதல் போன்று அகன்றிருந்தன. வானத்தை அளவிடல் போன்று முடிகள் மிக உயர்ந்து மேல் வளர்ந்தன. பூமியின் பரப்பு எங்கணும் அவருடைய வீரக்கழல் அணிந்த பாதங்கள் அளப்பன போன்று பருத்து நின்றன. இத்தன்மையான பெருத்த கோலத்துடன் அசைவில்லாத திறமைசாலியான வீரவாகுதேவர் நிற்றலும்' 2

திருவு லாங்கழற் சீறடிச் செம்மல்பேர்
உருவு தாங்கி உகந்தனன் நிற்றலும்
அரவின் வேந்தரும் ஆதியங் கூர்மரும்
வெருவி னார்கள் வியன்பொறை ஆற்றலார்.

திருவினள் உலாவி நிற்கும் சீருடைய சிலம்பு கொண்ட திருவடிகளையுடைய கடவுள் வீரவாகு பெரிய வடிவமெடுத்துக் கொண்டு மகிழ்வாகி நிற்றலும் அவரின் பெரும் பாரத்தைச் சுமக்க இயலாது பூமியைத் தாங்கும் பாம்புகளின் அரசனான ஆதிசேடனும் ஆதிக கூர்மமும் (ஆமை) சலிப்புற்று பெரும் அச்சம் கொண்டனர். 3

கதிரெ றித்திடு காமரு பூணினான்
மதுகை பெற்ற வடிவொடு நிற்றலும்
அதுப ரித்ததற் கருமையின் ஆற்றவும்
விதலை யுற்றது வீர மகேந்திரம்.

ஒளி வீசிடும் அழகிய ஆபரணம் அணிந்த வீரவாகுதேவர் சிறப்புடைய வடிவோடு நிற்றலும் அதனைத் தாங்குதற்கு அருமையாகி இருத்தலால் வீரமகேந்திரபுரம் மிகவும் நடுக்கங் கொண்டது. 4

உலங்கொள் வாகுவின் ஒண்பதம் ஊன்றலும்
விலங்கி யேதளர் வீர மகேந்திரம்
இலங்கை நீர்மையெய் தாமல் இருந்ததால்
குலங்கொள் தானவக் கோமகன் ஆணையால்.

வலிமை கொண்ட வீரவாகுதேவரின் அழகிய பாதம் ஊன்றுதலும் பிளவு கொண்டு நடுங்கித் தளர்கின்ற வீரமகேந்திரபுர நகரம் இலங்கை நகரைப் போல் கடலில் ஆழாமைப்போயது எவ்வாறெனில் அசுரர் குலங்கட்கெல்லாம் நாயகனான சூரபன்மனின் ஆணையின் வலியால். இல்லையேல் வீரவாகுதேவர் ஓங்கிய வடிவால் ஊன்றலும் தனது நிலை தவறி வீரமகேந்திரம் கடலினில் போயிருக்கும். 5

சேணெ ளாவிய சென்னியன் எண்டிசை
காண நிற்புறு காட்சியன் கந்தவேள்
ஆணை காட்டிநி றுவிய ஆடலாந்
தாணு வென்னத் தமியன் விளங்கினான்.

வானம் எல்லாம் நிலாவிய முடியுடைய வீரவாகுதேவர் எட்டுத் திக்கின் பரப்பெல்லாம் காணும்படியாக நிற்கும் காட்சியினையுடையராய் முருகப் பெருமானுடைய ஆணையின் வலியைக் காட்டிக்கொண்டிருக்கும் ஓர் தம்பம் போன்று தனியனாக விளங்கினார். 6

சான்ற கேள்வித் தலைமகன் தாட்டுணை
ஊன்று கின்ற வுழிதொறும் மாநிலம்
ஆன்று கீண்டிட அவ்வப் புழைதொறுந்
தோன்று கின்றன சூழ்கடல் நீத்தமே.

சால்புநிறைந்த நல்ல நூல் அறிவுகளையுடைய தலைமகனான வீரவாகுதேவர் தமது பாதத்தை ஊன்றுகின்ற இடம் தோறும் இப்பெரு நிலம் அகன்று கிழிபட்டிட அந்த வெடிப்பூடாக மேல் வந்து கீழுள்ள கடல் நீர் தோன்றுகின்றது. 7

ஆத்தன் ஊன்றும் அடிதொறுந் தோன்றிய
நீத்தம் யாவும் நெடுந்திறல் வெய்யசூர்
வாய்த்த கோயில் வளைந்திறை போற்றிய
வேத்த வைக்களத் தன்னினும் மேவிய.

எங்கள் வீரவாகுதேவர் ஊன்றும் அடிகள் தோறும்தோன்றி கடல்நீர் யாவும் பெருந்திறலுடைய கொடிய சூரபன்மனது வாய்ப்புடைய அரண்மனையை வளைந்து சுற்றி அரசு பேணுகின்ற அத்தாணி மண்டபத்திலும் சென்று உட்புகுகின்றது. 8

பூழை கொண்டு புறம்படர் நீத்தநீர்
மாழை கொண்டவன் கோயில் வளைந்துராய்ப்
பேழை கொண்ட பிணிப்பறு பாந்தள்போல்
கூழை கொண்ட மறுகிற் குலாயதே.

பாதம் ஊன்றிய துவாரங்களில் நின்றும் வெளிவந்த நீரானது பொன் வண்ணங் கொண்ட சூரனது அரண்மனையை வளைந்து சென்று ஓர் பெட்டியில் அடைத்து வைத்த பாம்பைத் திறந்துவிட்டது போன்று வேகத்துடன் சென்று பொன் வண்ணம்கொண்ட வீதிகள்தோறும் நிறைந்து குலாவியது. 9

துய்ய பூழை தொறுந்தொறுந் தோன்றுநீர்
மையல் வெங்கரி வாம்பரி தேர்படை
கைய ரிக்கொடு காசினி யாறுபோல்
செய்ய மாநகர் யாங்கணுஞ் சென்றதே.

துய்யதான துவாரங்கள் தோறும் தோன்றும் நீர் மதங்கொண்ட கொடிய யானை. தாவிப் பாயும் குதிரை, தேர், காலபட்படை இவைகளை வாரிக் கொண்டு பூமியில் பரந்தோடிச் செல்லும் ஆறுபோல் செம்மை வாய்ந்த சூரபன்மனுடைய நகரம் எங்கும் சென்றது. 10

தோட்ட தன்ன சுழிப்படு வாரியின்
ஈட்ட மாநகர் வீதிதொ றேகியே
பாட்டின் மாளிகை பற்பல சாடியே
மீட்டும் ஒல்லையின் வேலை மடுத்ததே.

தோண்டப்பட்டதை ஒத்த குழிகள் நின்றும் வெளிவந்த நீரின் தொகுதியானது பெருநகரின் விதி தோறும் சென்று வீதியின் பாங்கராக உள்ள பல பல மாளிகைகளை அழித்து வாரிக்கொண்டு மீண்டும் சமுத்திரத்தில் சென்றது. 11

எம்மை யாளுடை எந்தைதன் தூதுவன்
செம்மை நீடு திருவுரு நோக்கியே
கைம்ம றிக்கொடு கண்டனர் யாவரும்
அம்ம வோவென அச்சமுற் றோடினர்.

எம்மை முற்றிலும் ஆட்கொண்டருளும் எந்தைபெருமானின் தூதுவர் வீரவாகு தேவர் கொண்ட செம்மையான அறம் நிமிர்ந்து நின்றது போன்ற திருவுருவைப் பார்த்துக் கண்டோர் யாவரும் கலங்கி கைகளை உதறிக்கொண்டு அம்மவோ! எனக் கூழறி அச்சம்கொண்டு ஓடினர்கள். 12

மாவு லாவரும் மன்னவன் கோயிலுட்
காவ லாளர்இக் காளையைக் கண்ணுறீஇ
ஓவி தோர்வஞ்சன் உற்றனன் ஈண்டெனாக்
கூவி ளித்தனர் தத்தமிற் கூடினார்.

மகாலட்சுமி உலாவி வரும் சூரபன்மனது அரண்மனைக் கோயிலின், காவலாளர்
கள் இந்த வீரவாகுதேவரைக் கண்ணுற்று ஓகோ! இதோ ஒரு வஞ்சகமுடைய கள்
வன் இங்கு வந்தான் என்று ஆளை ஆள் சத்தமிட்டு தங்களில் அழைத்து கூடித் 13
திரண்டுகொண்டனர்.

கூடு கின்ற குணிப்பருங் காவலோர்
நீடு மெய்கொடு நின்றவற் கஞ்சியே
ஆடல் பூண்டிலம் என்னின் அரசனே
சாடு நம்மைச் சரதமென் றெண்ணினார்.

கூடுகின்ற அளவு காண்பரிய காவலாளிகள் நீண்ட பெரும் தோற்றத்துடன்
நின்ற வீரவாகுதேவரைக் கண்டு பயத்தால் நாம் இவனோடு போர் செய்யாது விடு
வோமெனில் எங்களை பின்னால் எமது அரசனே கொன்றிடுவன் இது உண்மையாம் 14
என எண்ணினார்.

குமரி மாமதிற் கோயிலுட் போற்றியே
அமரி யோர்களோ ரைம்பது வெள்ளத்தர்
திமிர மேனியர் தீயுகு கண்ணினர்
சமரி யற்றத் தலைத்தலை மண்டினார்.

துர்க்கையின் காவல் நிறைந்த மதில் சூழ்ந்த பெருமதிலைக் காத்து தங்கியிருந்
தோரான ஐம்பது வெள்ளம் என்னும் எண்ணிக்கையர், கறுத்த மேனியர், நெருப்
புக் கக்கும் கண்ணினையுடையவர். போர் செய்வதற்கு தலைத்தலை வந்து கூடிக் 15
கொண்டார்கள்.

மண்டி மற்றவர் வல்லெழுத் தோமரம்
பிண்டி பாலம் பெருங்கதை ஆதியாக்
கொண்ட கொண்ட கொடும்படை வீசியே
அண்டம் விண்டிட ஆர்த்தனர் ஆடினார்.

கூட்டமாய் நெருங்கிய இவர்கள் வலியுடைய எழுவாயுதம் தோமரம் பிண்டி
பாலம் பெரிய காதாயுதம் ஆதியாகத் தாங்கள் கையில் கொண்ட கொண்ட கொடிய
படைகளை வீசி அண்டங்கள் உடைபட ஆரவாரித்துப் போராடினார்கள். 16

ஆடும் எல்லை அடுபடைத் தானவர்
பாடு சூழ்ந்த பரிசினை நோக்கினான்
நீடு சான்ற இடித்தொகை ஆயிர
கோடி போற்புயங் கொட்டிநின் றார்ப்பவே.

படை எறிந்து போராடும் எல்லையில் கொடிய படைகளையுடைய அசுரர் தனது பக்கராக சுற்றி வளைந்தமையை வீரவாகு தேவர் கண்டார். பெருங் கணக்கால் விளங்கிய இடியேற்றின் கூட்டம் ஆயிர கோடி சத்தம் போட்டது போன்று தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்திட்ட வண்ணமாக. 17

அலைக்க வந்த அவுணப் படையெலாங்
கலக்க மூழ்கிக் கருத்துணர் வஃகியே
உலக்கு ருத உருமிடி உண்டிடும்
புலைக்கெ டுந்தொழிற் புள்ளென லாயவே.

போர் புரிந்து அலைவு செய்திட வந்த அசுரத் தொகை யாவும் தோள் தட்டிய ஓசை கேட்டு கலக்கங் கொண்டு கருத்தும் உணர்வுங் கெட்டு அழிவிலாத கொடிய இடியேற்றை உண்டிட்ட புலால் உண்ணும் கொடுந் தொழிலுடைய பட்சி போன்று துடித்துப் பதைத்தார்கள். 18

வேறு

பன்மழைக் குலங்களிற் படைக்கலங்கள் யாவையும்
வன்மைபெற்ற வீருய்ப்ப வந்துமேனி படுதலுஞ்
சின்மயத்தன் ஒற்றன்மிக்க செய்யவீழ் விழுத்திய
தொன்மரத் தியற்கைபோன்று சோரிசோர நின்றனன்.

பலமேகம் மழை சொரிவது போன்று படைக்கலங்கள் யாவற்றையும் வலிமை பெற்றுக்கொண்ட வீரர்கள் செலுத்திட; வந்து வீரவாகுதேவர் மேனியில் அவை படுதலும், ஞான வடிவான முருகப்பெருமான் தூதுவன் வீரவாகுதேவர் பெரிய நல்ல விழுதுகளை தூங்கவிட்டு நின்ற பருத்ததோர் ஆலமரம் போன்று மேனியெலாம் இரத்தம் வடிய நின்றிட்டார். 19

ஆனகாலை வீரவாகு அறிவனங்கி யிற்சினை இ
மானவீரர் மீதலாது வாளெடுக்க லேனெனாத்
தேனின்மாப் பெருங்கடல் திளைத்தலைக்கு மத்தெனத்
தானவப் பதாதியைத் தடிந்தலைத்தல் மேயினான்.

அவ்வாறான காலையில் வீரவாகுதேவர் நெருப்பை ஒத்த கோபம் மூண்டு நான் மானங்கொண்ட வீரர்கள் மேல் அல்லாமல் இவர்கள் போன்ற குப்பைகளோடு போர் செய்ய வாள் எடுக்கேன் என்று தேனிலான பெருங்கடலைக் கடைந்திட்டு அலையவைக்கும் பெருமத்தைப் போன்று காவலாளிகளான காலாட் சேனைகளைக் காலாலும் கையாலும் நெருக்கிக் கொன்று அலைப்பாராயினர். 20

மிதித்தனன் கொதித்தனன் விடுத்திலன் படுத்தனன்
தகைத்தனன் புதைத்தனன் தகர்த்தனன் துகைத்தனன்
உதைத்தனன் குதித்தனன் உருட்டினன் புரட்டினன்
சிதைத்தனன் செகுத்தனன் செருக்கினன் தருக்கினன்.

சிலரை உழக்கினர் கொதித்தார். தப்பவிடாது கொன்றார். நிலத்தினுள் சப்பையாக்கிப் புதைத்தார் பிய்த்தார், இடித்தார், உதைத்தார், ஏறிக் குதித்தார். உருட்டினர், புரட்டினர்; சிதைத்தார், நொருக்கிக் கொன்றார், வீரத்தால் செருக்கினர். கொலைபுரிந்து தருக்கினர். 21

சிரத்தினை நெரித்தனன் திறற்புயம் இறுத்தனன்
கரத்தினை முரித்தனன் களத்தினைத் திரித்தனன்
உரத்தினைப் பிரித்தனன் உருத்தனன் சிரித்தனன்
புரத்தினை உரித்தனன் பொடித்தனன் படைத்திறம்.

தலைகளை நெரித்தார், தோளைப் பிய்த்தெறிந்தார், கைகளை முறித்தார், கழுத்தைத் திருகினர், நெஞ்சைப் பிளந்தார், உருக் கொண்டார், சிரித்தார், முதுகை உரித்தார், படைகள் யாவையும் பொடியாக்கினர் வீரவாகுதேவர். 22

எடுத்தனன் சுழற்றினன் எறிந்தனன் சிலோர்தமைப்
புடைத்தனன் இடித்தனன் புயத்தினுற் சிலோர்தமைப்
பிடித்தனன் பிசைந்தனன் பிழிந்தனன் சிலோர்தமை
அடித்தலங் கொடுத்தலத் தரைத்தனன் சிலோர்தமை.

சிலரை கையில் தூக்கினர், சுழற்றினர், எறிந்தார், சிலர்தமை வீசி அடித்தார், சிலரை இடித்தார் சிலரைப் பிடித்து கையிலே பிசைந்தார் இரத்தத்தைப் பிழிந்தார், சிலரைக் காலால் உழக்கி பூமியிலே வைத்துத் தேய்த்து அரைத்தார்: 23

பெருத்தனன் சிறுத்தனன் பெயர்ந்தும்வேறு பல்லுருத்
தரித்தனன் நடந்தனன் தனித்தனி தொடர்ந்தனன்
மருத்தெனக் கறங்கினன் வளைத்தனன் கிளர்ந்தனன்
ஒருத்தன்வெள்ளம் ஐம்பதும் உலக்குறக் கலக்கினன்.

சில இடத்தில் பெருத்து நின்றார் சில இடம் சிறுத்து நின்றார், சில இடத்தில் பல்வேறு வடிவு கொண்டார், நடந்துசென்று ஒவ்வொருவராய் தொடர்ந்து கொன்றார். காற்றெனும்படி சுழன்று வந்தார் மேலெழுந்தார். இவ்வாறு வீரவாகு தேவர்; ஒருத்தனுக சூரபன்மனின் ஐம்பது வெள்ளம் காவலாளரான சேனையும் அழிந்து போகும்படி கலக்கினர். 24

மஞ்ஞை அன்னம் ஒண்புரு மடக்குயில் திரட்பயில்
செய்ஞ்ஞலங்கொள் மாடமீது சேனங்கூளி பிள்ளைகள்
பிஞ்ஞகன் குமாரனுடு பேரமர்க் களம்படும்
அஞ்ஞையாளர் குருதியூன் அருந்துமா றிருந்தவே.

மயில் அன்னம் அழகிய புரு மடம் கொண்ட குயில் இவைகள் சென்று திரண்டிருக்கும் வண்ணமாகச் செய்துள்ள நலஞ் சிறந்திருக்கும் மாடங்கள் மீது அவற்றிற்குப் பதிலாக நிணம் தின்பதற்காக வேண்டி பருந்து பேய்கள் பூதங்கள் காகங்கள் யாவும் சிவபிரானுடைய திருக்குமாரர் வீரவாகுதேவர் போராடுகின்ற போர்க்களத்து இறந்த காவலாளரான அசுரரின் இரத்த ஊனைத் தின்னும்படி வந்திருந்தன. 25

மானினஞ் செறிந்திரைந்து வந்தவெல்லை தன்னிடைத்
தானொர்சிங்க ஏறுபுக்க தன்மைபோல அவுணர்தங்
கோனிருந்த உறையுளிற் குலாயகாவ லாளராஞ்
சேனைவெள்ளம் ஐம்பதுஞ் சினத்தின்வல்லை சிந்தினான்.

மான் கூட்டம் செறிந்து திரண்டிருக்கும் இடத்தில் தனியான இராசசிங்கம் புகுந்த தன்மை போன்று அசுரர் அரசன் சூரபன்மன் இருந்த அரண்மனையில் கூடிக் காவலாக இருந்த ஐம்பது வெள்ளம் சேனைகளையும் வீரவாகுதேவர் கோபத்தினால் கொன்று விரைவாய் அழித்தருளினார். 26

முறிந்தனர் உறுப்பியாக்கை முற்றும்வேறு வேறதாய்ப்
பிறிந்தனர் தகர்ந்தனர் பிறங்குசென்னி சோரியுட்
செறிந்தனர் புதைந்தனர் சிதைந்தனர் உருண்டனர்
மறிந்தனர் இறந்தனர் மடிந்தனர் கிடந்தனர்.

சிலர் உடலின் உறுப்புகள்யாவும் முறிந்தார்கள், சிலர் உடலம் முற்றும் வெவ் வேறாகப் பின்வானார்கள்: தகர்க்கப்பட்டனர், மேலான தலைகள் இரத்த வெள்ளத்தில் கிடந்திடப் பட்டார்கள், புதைபட்டார்கள், சிதைந்தார்கள், உருண்டார்கள்-சுருண்டு மடங்கினார்கள், எல்லாரும் இறந்து மடிந்து கிடந்தார்கள். 27

இன்னபான்மை வீற்றுவீற்று அவுணர்சேனை யாவையுஞ்
சின்னபின்ன மாகியே சிதைந்துவீழ்ந் துலந்திட
உன்னுகின்ற முன்னமட் டுலம்பினான் சிலம்பினின்
மன்னன்மங்கை நூபுரத்தின் வந்தவீர வாகுவே.

இன்னபான்மையாக வேறு வேறாக அசுரச் சேனைகள் யாவரையும் சின்னபின் னமாக்கிச் சிதைவுற்று வீழ்ந்து மாண்டிட நினைக்கமுன்னம் கொன்று சிறந்து நின்றார்; முன்னர் இமயமலை அரசன் புத்திரியாகிய உமையம்மையாரின் சிலம்பினின்றும் தோன்றி வந்தருளிய மைந்தரான வீரவாகுதேவர். 28

வள்ளல்நின்று சமரிழைப்ப மாண்டவீரர் யாக்கையின்
உள்ளதாது வானஏழும் உருவம்வேறு காண்கிலா
தள்ளலாகி யொன்றுபட்ட தங்கிதன்னின் உருகியே
வெள்ளியாதி உலகம்யாவும் விரவும்வண்ணம் என்னவே.

அருள் வள்ளல் வீரவாகுதேவர் இவ்வாறு போர் இழைத்தலும் இறந்துபோன வீரரின் உடலில் உள்ள தாதுக்கள் ஏழும் (தோல் எலும்பு நரம்பு தசை இரத்தம் முதலியன) அதன் உருவங்களைக் காணமுடியாதபடி ஒன்றாகிச் சிதைவுபட்டு நிணச் சேறாகி இருந் தது எப்படியெனில் வெள்ளி பொன் இரும்பு ஈயம் முதலாய உலோகங்கள் யாவும் நெருப்பினால் உருகி ஒன்றுபட்ட தன்மை போன்று.

ஐம்பதாயிரம் வெள்ளம் அசுரகாவலரின் உடலம் அழிந்து தாதுக்கள் கூட வேறு காணமுடியாது ஒன்றாகி நெருப்பினால் உருக்கி வெள்ளி பொன் என்பனவற்றை ஒன்றாக்குவதுபோன்று இருந்தது. 29

ஆகத் திருவிருத்தம் 689
காவலாளர் வதைப் படலம் முற்றிற்று.

# நகரழி படலம்

ஆசுறும் அவுண வெள்ளம் ஐம்பது முடித்தோன் ஐஞ்ஞூ
றேசனை அளவை யான்றே ஓராயிர மும்ப ரேகித்
தேசுறு மேரு வென்னச் சிகரமோ ரிலக்கஞ் சூடி
வீசுபொன் சுடர நின்ற வேரமொன் றங்கட் கண்டான்.

குற்றம் பழி இவைகளுற்ற அசுரச்சேனை வெள்ளம் ஐம்பதையும் முடித்த வீரவாகுதேவர் ; ஐந்நூறு யோசனை அளவால் அகன்றும் ஆயிரம் யோசனை வானில் வளர்ந்து போய் பிரகாசமுடைய மேருமலையைப் போன்று இலக்கம் முடிகளையுடையதாய் பொன் ஒளி வீசிடும்படி நின்ற அழகியதோர் சூளிகை அங்கு இருப்பக் கண்டார். 1

புறத்திருள் இரிய வைகும் பொலஞ்சுடர்ப் பொன்செய் வேரந்
திறத்தியல் கோயில் முன்னஞ் சேர்ந்தது தன்னை வீரன்
பறித்தொரு கரத்தின் ஏந்திப் பதகனுஞ் சூர பன்மன்
அறத்தியல் இழுக்கி வைகும் அவைக்களம் வீசி ஆர்த்தான்.

வெளியாக உள்ள இருள் நீங்கியோட இருக்கும் அழகிய ஒளி கொண்ட பொன்னால் செய்த சூளிகை ஒன்று பல சிறப்புகளையும் உடைய சூரபன்மனின் அரண்மனைக் கோயில் முன்பாகச் சேர்ந்திருந்ததை வீரவாகுதேவர் கையால் பிடுங்கி எடுத்து ஒரு கையில் ஏந்திக்கொண்டு பாதகனான சூரபன்மன் தருமத்தின் இயல்புகளை நீக்கி அரசிருக்கின்ற சபை மண்டபம் மேலாக சூளிகையை வீசி ஆர்த்தார். 2

பன்மணி செறிந்த பொற்பிற் பாயொளி எரிபொன் வேரம்
மன்னவன் உறையுஞ் செம்பொன் மாயிரு மன்றில் போதல்
மின்னவிர் மேரு வாதி வெற்பெலா மிகலின் ஒன்றிப்
பொன்னகர் பொடிப்பச் செல்லுந் தன்மையைப் போலும் அம்மா.

பல மணிகள் செறிந்த பொற்பினால் வேகமாகவீசிச் சொரியும் ஒளி பிரகாசிக்கும் பொன்னாலான சூளிகை எறியப்பட்டு சூரபன்மன் உறைகின்ற செம்பொன்னாலான பெரிய சபையில் போதல்; அம்மவோ, மின்னல் கால்கின்ற மேருமலை ஆதியான மலையெலாம் வலியால் கூடித் திரண்டு ஒன்றாகிப் பொன்னகரான தேவ உலகை பொடியாக்கச் செல்லும் தன்மையைப் போலும். 3

வார்த்தரு கழற்கால் வீரன் வானுரும் ஏறும் உட்க
ஆர்த்திடு துழனி யேகி அரசன்மே வியவத் தாணி
சேர்ந்தவர் கன்னத் தூடு செறியுமுன் எறித லுற்ற
பேர்த்திடு செம்பொன் வேரம் பேரவை மிசையுற் றன்றே.

வார் பூட்டிய வீரக்கழல் அணிந்த வீரவாகுதேவர் வானின் இடியேறும் தொனி கேட்டு ஏங்கி உட்கிட ஆரவாரிக்கும் ஓசை சென்று சூரன் இருக்கின்ற அத்தாணி மண்டபத்திருப்பார் காதூடு சேர்வதற்கு முன்பு பேர்த்து எறியப்பட்ட செம்பொன்னான சூளிகை பெரிய சபை மண்டபம் மீது போய் விழுந்திட்டது. 4

விற்செறி தூபிச் செம்பொன் வியன்மணி கஞலும் வேரங்
கற்செறி பெருந்தோள் வீரன் எறிதலுங் கடிது நண்ணிப்
பொற்செறி மார்பிற் சூரும் புதல்வருஞ் சிலரும் வைகுஞ்
சிற்சில இடையே அன்றி மன்றெலாஞ் சிந்திற் றுமால்.

ஒளி செறிந்த தூபிகளையுடைய செம்பொன்னால் செய்து விநோதமான இரத்தினங்கள் பொருந்திச் சுடர் காலும் சூளிகையை, கற்போல் வலி செறிந்த பெரும் தோளுடைய வீரவாகுதேவர் எறிதலும் விரைவாகச் சென்று பொன் செறிந்த மார்புடைய சூரனும் அவன் புதல்வரும் இருக்கின்ற சிற்சில இடங்களை அல்லாது மற்றைய முழுச் சபையையும் சிதைத்து பொடியாக்கியது. 5

தடத்தனி வேரங் கீண்டு தபனியத் தவைக்கண் ஓச்சி
இடித்தனன் ஒருதான் நிற்கும் எம்பிரா னேவல் தூதன்
படைத்தளித் திறுதி வேலைப் பசும்பொனூர் தசும்பின் அண்டம்
உடைத்துல கழித்து நிற்கும் ஒருபெருங் கடவுள் ஒத்தான்.

விசாலித்த தனியான இந்த வேரத்தைப் பிய்த்தெடுத்துபொன்னினாற் செய்த சபை மேலாக வீசி இடிபோன்று சத்தமிட்டு தன்னந்தனியாகத் தான் ஒருவனாய் நிற்கும் எம்பிரானுடைய ஏவற் பணி புரியும் தூதுவர் வீரவாகுதேவர்; உலகைப் படைத்து காத்து முடிவாகும் நாளில் பசிய பொன்னின் ஒளியால் விளங்கிடும் அண்டங்களை உடைத்து உலகை அழித்து நிற்கின்ற ஒரு பெரும் கடவுளான உருத்திரமூர்த்தியை ஒத்தார். 6

புலவுகொள் அலகு வெவ்வாய்ப் புட்செறி பொதும்பர் தன்னில்
பலமுடை உருமு வீழப் பட்டதோர் பரிச தென்னத்
தொலைவகன் மைந்தன் விட்ட சூளிகை தகர்ப்பத் தொல்சீர்
மலிவுறு சனங்க ளோடு மன்றமங் குற்ற தம்மா.

புலாலை உட்கொள்கின்ற அலகுடன் கொடிய வாயுடைய பட்சிகள் செறிந்திருக்கும் சோலையில் பலம் கொண்டதோர் இடியேறு வீழப்பட்ட தன்மை போன்று அழிவகன்ற மைந்தனான வீரவாகுதேவர் விட்ட சூளிகை சென்று பட்டு மண்டபத்தைத் தகர்த்தெறிய அங்கு நெருங்கியிருந்த சனங்களோடு அந்த அத்தாணி மண்டபம் அழிந்து நொருங்கிப் போய் நின்றது. 7

இடிந்தன மிசையின் எல்லை இற்றபித் திகையின் சூழல்
பொடிந்தன உத்தி ரங்கள் போதிகை பூழி யாகி
முடிந்தன மதலை யாவும் முரிந்தன கபோதம் வீழ்ந்த
மடிந்தன திருவுஞ் சீரும் மன்றழி வுற்ற தன்றே.

மண்டபத்தின் மேற் கட்டிடங்கள் யாவும் இடிந்தன, பித்திகையின் அடுக்குகள் அழிந்தன; உத்திரங்கள் பொடியாகிற்று. போதிகை சாம்பராகி முடிந்தது. தூண்கள் யாவும் முரிந்தன. கபோதம் கவிண்டு வீழ்ந்தது அதன் அழகும் திருவும் நீங்கியது மண்டபம் இப்படி அழிந்தது. 8

பீடிகை புரைந்த பொற்பிற் பேரவை தகர்த்த லோடும்
பாடுற அரசர் சூழ்ந்த பரிசனர் தம்முட் சில்லோர்
ஓடினர் சிலவர் மெய்யூ றுற்றனர் சிலவர் நெக்கு
வீடினர் சிலவர் ஆற்ற மெலிந்தனர் புலம்ப லுற்றுர்.

பெருமை மலிந்த பொற்பால் பேரவை மண்டபம் பொடியாதலோடும் சூரபன்மன் பாங்கராக சூழ்ந்து நின்ற பரிசனரான சேவகர்களில் சிலர் ஓடுகின்றுர்; சிலர் மேனியில் ஊறடைந்தார், சிலர் நெக்கி சப்பையாகி மாண்டார் சிலர் பெரும் பயத்தால் மிகவும் மெலிந்து புலம்பி அழுகின்றுர்கள். 9

நெக்கது பொதியி லாக நிரந்தது செம்பொற் பூழி
திக்கொடு புவியும் வானுஞ் செறிந்தன அவுண ராகித்
தொக்கனர் உடைந்து மாய்ந்து தொகைபிரிந் தழிந்தார் தொல்லைத்
தக்கனின் உணர்வு தீர்ந்த தகுவர்கோன் இவற்றைக் கண்டான்.

விரைவுடன் அம்மண்டபம் நொருங்கி உடைந்து அதன் பகுதியாகவும் சிதறிப் பரந்து பொன்னின் புழுதியால் திக்கும் பூமியும் வானமும் செறிந்தது. அசுரராய் அங்கு கூடி நின்றுர் உடைந்து மாய்ந்து கூட்டம் பிரிந்து அழிந்தார்கள். முன்னுள்ள தக்கனைப் போன்று உணர்வுகெட்ட அசுரர் அரசனுன் சூரபன்மன் இதனைக் கண்டான், 10

ஆயிர நாமத் தண்ணல் அனையவன் வன்மை காணு
ஆயிரம் வடவை யேபோல் அழன்றுதன் னயலின் நின்ற
ஆயிர நெடுந்தோள் ஐஞ்ஞு றுனனங் கொண்ட தீயோர்
ஆயிரர் தம்மை நோக்கி அடலுரும் ஏற்றிற் சொல்வான்.

ஆயிரம் நாமமுடைய அண்ணலான உருத்திரமூர்த்தியை ஒத்தவரான விரவாகு தேவரின் வலிமையைச் சூரபன்மன் கண்டு; ஆயிரம் வடவாமுகாக்கினிகள் சேர்ந்து கொதிப்பது போன்று மனம் அழன்று உடனுகத் தனது அயலே நின்ற ஆயிரம் நெடிய தோளையும் ஐந்நூறு முகங்களையும் கொண்ட தீய அசுரர் ஆயிரம் பேரைப் பார்த்து கொடிய இடியேறு போன்று இதனைச் சொல்வான். 11

விழிப்பரு நிவப்பின் ஓங்கும் வேரமொன் றதனைக் கீண்டே
தெழிப்பொடு குமரன் தூதன் செலுத்தினன் செம்பொன் மன்றம்
இழிப்புறத் தகர்ந்து வீழ்ந்த தீண்டுசில் லிடமே அன்றிப்
பழிப்பெனக் கிதன்மேல் உண்டோ பட்டதென் புகழும் மன்னே.

கண்ணுல் நோக்கற்கரிய ஒளியுடைய சூளிகை ஒன்றைப் பிடுங்கி உரத்த சத்தத் தொனியுடன் குமரப்பெருமான் தூதுவன் செலுத்தினன். அதனுல் எமது செம்பொன்னுல் செய்த மண்டபம் இழிவாகிச் சிதைந்து தகர்ந்து வீழ்ந்தது. இங்கு நாம் இருக்கும் சில இடமேயன்றி மற்றை யாவும் அழிவுற்றன. எனக்கு நேரக்கூடிய பழிப்பு இதன் மேலும் உண்டோ? என் புகழும் பட்டதன்றே. 12

கோறலே கொற்ற மன்றுல் ஒற்றனைக் குறுகி நீவிர்
மாறுபோர் இயற்றி யேனும் மற்றவன் வழாத வாற்றுல்
ஈறுசெய் திடாது பற்றி எம்முனர்த் தருதிர் மெய்யின்
ஊறுசெய் தவனை வானே ருடன்சிறை உய்ப்ப னென்றுன்.

தூதுவனைக் கொல்லல் பழியாகும் ஆனதினால் அந்தத் தூதுவனைக் குறுகி நீங்கள் மாறுபட்ட போரைப் புரிந்தேனும் அத்தூதுவன் தப்பிப்போக முடியாதவாறு அவனைக் கொன்றிடாது பிடித்துக்கொண்டு என் முன்னர் வந்து அவனைத் தாருங்கள். அவனுடைய மேனியில் நான் கொடும் தண்டனையைப் புரிந்து வானோருடன் அவனையும் சிறை செய்வேன் என்றான் சூரபன்மன். 13

அன்னவர் அதனைக் கேளா அரசவீ தருளிக் கேண்மோ
ஒன்னலன் தூதன் சோரி உயிரொடு குடித்தற் குற்றும்
நின்னருள் ஆணை நாடி நெஞ்சகம் புழுங்கி யஞ்சி
இன்னதோர் பொழுதுந் தாழ்த்தேம் இனியது புரிது மென்றார்.

அந்த சகத்திரவாகுகள் அதனைக் கேட்டு; எமது அரசே இதைக் கேட்டருள்க அந்த பகைவனான தூதுவனின் இரத்தத்தை அவன் உயிரோடு சேர உறுஞ்சிக் குடித்தற்கு முடிவு செய்திருந்தோம். ஆனால் அது செய்ய தேவரீர் அருளுகின்ற கட்டளை எப்போது கிடைக்கும் என எமது நெஞ்சும் உள்ளமும் கவலையால் வாடி இவ்வளவு நேரம் தாமதமாகி நின்றோம். இனிமேல் அதனைச் செய்வோமென்றார்கள். 14

என்றனர் வணக்கஞ் செய்ய இனிதென உவகை பூத்துக்
கன்றிய அவுணர் தங்கள் காவலன் விடுப்ப அங்கட்
சென்றனர் பத்து நூற்றுத் திறலுடை மொய்ம்பர் முன்னம்
நின்றிடு வீர வாகு நிலைமையை உரைக்க லுற்றாம்.

என்று கூறி சகத்திரவாகுகள் வணக்கம் செய்ய அது கண்ட சூரபன்மன் அது இனிது என்று மகிழ்வால் மலர்ந்து மனங் கறுவியம் கொண்ட அந்த அசுரர்களை சூரபன்மன் செல்லும்படி விடுப்ப; அங்கு ஆயிரம் வலி கொண்ட தோளுடைய சகத்திரவாகுகள் சென்றார்கள். இவர்கள் போகும் முன்பு அங்கு நின்றிட்ட வீரவாகு தேவர் நிலைமையை நாம் சொல்லல் உற்றோம். 15

வேறு

வேரம தெறிந்தவை வீட்டி நின்றுளான்
சூருறை நகர்வளந் தொலைச்சிச் சூழுநர்
சேருறும் இருக்கையுஞ் சிதைப்பன் இன்றெனா
ஓருறு புந்தியில் உன்னி னானரோ.

சூளிகையை பிடுங்கி எறிந்து சபையை அழிவு செய்து நின்றவரான வீரவாகு தேவர் சூரபன்மன் இருக்கும் நகரின் வளச்சிறப்புக்களைத் தொலைத்திட்டு அவனைச் சேர்ந்துள்ளார் இருப்பிடங்களையும் தொலைப்பேன் இன்று என எல்லாவற்றையும் உணரும் மனதில் எண்ணினார், 16

மறிப்பிணை முதலிய மான்கள் புள்ளினஞ்
சிறப்புறு தண்டலை மணியிற் செம்பொனிற்
குறிப்பினர் குயிற்றுசெய் குன்றம் யாவையும்
பறித்தனன் திசைதொறும் பரவ வீசினான்.

பெண்மான் கன்னிமான் கலைமான் முதலிய மானினங்கள் பறவைகள் யாவும் சிறப்புடன் உலவிடு சோலைகள்; இரத்தினங்களை பொன்னினைக் கொண்டு அனுபவம் மிக்க சிற்பிகள் குயிற்றிச் செய்த செயற்கை மலைகள் யாவையும் பிடுங்கி எடுத்து திக்குகள் தோறும் பரவிச் செல்ல வீசினார் வீரவாகுதேவர், 17

வரைவயி றுயிர்த்திடு மாசில் பல்வகை
அரதன நிரைகளின் அணிய செம்பொனின்
மரபினில் இயற்றிய வரம்பில் தெற்றிகள்
விரைவொடு தொட்டனன் எடுத்து வீசினான்.

மலையின் இடங்களில் விளைகின்ற மாசில்லாத பலவகை இரத்தினங்களாலும் அழகிய செம்பொன்னினாலும் முறையாகச் செய்யப்பெற்ற அளவு கடந்த மதில்களை விரைவாகத் தூக்கி எடுத்து வீசி எறிந்தார், 18

முடிவகல் பேழையின் மூட்டு நீக்கியே
அடியுறு கொள்கலம் அவற்றைச் சாய்த்தெனப்
படியுறு மண்டபம் பலவுந் தொட்டெடா
இடிபுரை ஓதையான் யாண்டும் வீசினான்.

முடிவகன்ற பெட்டகங்களின் மூட்டினை நீக்கி அடிப்பாகத்து உள்ள தாங்கும் கால்கள் அப்பெட்டகங்களை சாய்த்து நிற்பது போன்று; நிலத்தில் உள்ள மண்டபங்கள் பலவற்றை எடுத்து இடியேற்றை ஒத்த பெருஞ் சத்தத்துடன் எப்பக்கமும் வீசினார். 19

மலரயன் மிசையுறு மாயற் புல்லுவான்
நிலமகள் கைகளை நீட்டி யென்னவான்
உலகெலாம் இகந்துமேல் ஓங்கு கோபுரம்
பலபல பறித்தனன் பாங்கர் ஓச்சினான்.

தாமரை மலர் மேலிருந்த பிரமதேவர் உலகிற்கும் மேலுள்ள வைகுந்த உலகில் உள்ள நாராயணனைத் தழுவும்படியாக பூமிதேவி தனது கைகளை நீட்டியதுபோன்று வானஉலகமெல்லாம் கடந்து மேலாக ஓங்குவது போன்ற உயர்ந்த கோபுரங்கள் பலபலவற்றைப் பறித்தெடுத்து பக்கரிலே வீசி எறிந்தார். 20

மூளுறும் எரிசிகை முடித்துத் தானவர்
கேளொடு தமித்தமி கெழுமி யுற்றென
வாளுறு மாமணி வயங்கு தூபிகைச்
சூளிகை பலபல தொட்டு வீசினான்.

மூண்டெரியும் நெருப்புப் போன்ற சிவந்த சடையை முடித்துள்ள அசுரர்கள் தமது சுற்றத்தோடு தாங்கள் தாங்கள் கூடி வாழ்கின்ற ஒளியுடைய பெருமணிகள் பிரகாசிக்கும் தூபிகைகள் சூளிகைகள் பலபலவற்றை அள்ளி வீசினார். 21

கற்றிடும் விஞ்சையின் கழகம் பல்கடைத்
தெற்றிகள் வேதிகை சிறந்த சாலைகள்
துற்றிடும் பழுமரச் சோலை வாவிகள்
மற்றுள பிறவொடும் மட்டித் தானரோ.

வித்தைகள் பயின்று கற்கின்ற கலைக் கழகங்கள், பல கடைகளையுடைய வீதிகள்; வேதிகைகள் சிறந்து விளங்கிடும் யாகசாலைகள்; சிறந்து பயன் தந்திடும் பெரிய மரங்களுடையசோலைகள் குளங்கள் மற்றுள்ள பிறபொருளோடும் அழித்தார். 22

கந்துக வியனிரை கரிகள் தேர்த்தொகை
பந்தியிற் சாலையிற் பயின்று நின்றன
அந்தமின் றுயின அள்ளி அள்ளியே
உந்தினன் திசைதொறும் உரற்றி வீழவே

கட்டுத் தறிகளில் நிரைபடக் கட்டிநின்ற யானைகள், தேர்த்தொகைகள் பந்தியிலும் சாலையிலும் தங்கி நின்றவை எல்லையற்றதாயினவற்றை அள்ளி அள்ளியே திக்குகள் தோறும் சென்று சென்று அலறிக்கொண்டு வீழ்ந்திட வீசி எறிந்தார் வீரவாகுதேவர் 23

நிலவரை சூழ்தரு நேமி வெற்பென
மலிதரு செம்மணி வகையிற் பண்ணிய
பலவகை இயந்திரப் பதணை இஞ்சிகள்
ஒலிகழற் காலினன் உதைத்து வீட்டினன்

நிலவும் பல மலைத்தொடர்கள் சூழ்ந்திருக்கும் சக்கரவாள மலையின் தன்மை போன்று செவ்வொளியால் சிறந்துள்ள இரத்தினங்களால் செய்துள்ள பலவகையான இயந்திரங்கள் பூட்டப்பட்ட உள் மேடைகள் உடைய மதில்களை ஒலிக்கும் கழல்கள் அணிந்த காலினையுடைய வீரவாகுதேவர் உதைத்து வீழ்த்தினர். 24

பூழியம் பொற்புயப் புனிதன் வெய்யசூர்
வாழுறு கோநகர் வளத்தை யின்னணம்
ஊழியின் மருத்தென உலாவி யட்டபின்
சூழுறு கிடங்கருந் தூர்த்திட் டானரோ.

திருநீறு விளங்கிடும் அழகிய பொற்றோள்களை உடைய வீரவாகுதேவர் கொடிய சூரபன்மன் வாழ்கின்ற தலைநகரின் வளத்தை இன்னவகையாக ஊழிக்காலத்துத் தோன்றி வீசிடும் புயல் போன்று உலாவி அழித்தபின்னராக நகரைச் சுற்றிய அகழிக் கிடங்கையும் தூர்த்து மூடினர். 25

அறந்தலை நின்றிடா அரசன் கோயில்நின்
றெறிந்திடு சிகரிகள் இலங்கு சூளிகை
நிறைந்திடு மண்டபம் நெருங்கு காமர்காச்
செறிந்தன பிறவொடு சென்று சேணெலாம்.

தருமத்தின் தலைநின்று ஒழுகிடாத சூரபன்மன் அரண்மனையின் நின்று அள்ளி எறிந்துள்ள கோபுரங்கள்; இலங்கிடும் சூளிகைகள் நிறைந்துள்ள மண்டபங்கள்; நெருங்கி நின்ற அழகிய பூஞ்சோலைகள் ஆகிய இவை யாவும் வானமெல்லாம் வீசப்பட்டு பிற பொருளோடும் சென்று செறிந்துள்ளது. 6

உளர்ந்திடு வரியளி யுலாவு தொங்கலான்
வளர்ந்திடு பாணியான் மன்னன் செல்வமாய்க்
களைந்தெறி கின்றன கணிப்பி லாதவுங்
கிளர்ந்திடு நெடுமுகில் கிழித்துச் சென்றவே.

இரைகின்ற வரி வண்டுகள் உலாவிடும் பூமாலையணிந்துள்ள வீரவாகுதேவர் கொண்ட பெருவடிவில் வளர்ந்திட்ட பெருங் கைகளால் சூரபன்மன் செல்வமாய்க் களைந்து வீசிடும் அளவிடமுடியாத பொருள்கள் யாவும் வானில் கிளர்ந்து எழுகின்ற பெருமுகில்களைக் கிழித்துக்கொண்டு சென்றன. 27

சூரெனும் அவுணர்கோன் படைத்த தொல்வளஞ்
சேரிய மிசைவரத் தெரிந்து வானிடைச்
சாருறு கடவுளர் தம்முள் ஏங்கியே
ஏரியல் தொகைபிரிந் திரியல் போயினர்.

சூரன் எனப்படும் அசுரர் தலைவன் பெற்றுக்கொண்ட தொன்மையாகும் வளங்கள் யாவும் வானத்தில் வீசப்பட்டு ஒன்றாகிச் சேர்ந்து வரும் தன்மையைத் தெரிந்து கண்டு வானத்தில் சார்ந்து நின்ற தேவர்கள் தம்முள் ஏக்கங் கொண்டு தாம் நின்ற அழகுறும் கூட்டணிகளை விடுத்து ஓட்டமெடுத்தனர். 28

ஊனிவர் குருதிவேல் ஒருவன் ஓச்சிய
தானவர் கோன்வளந் தகைந்து விண்ணவர்
மேனிகழ் பதங்களை வீட்டி ஏகியே
வானதி தன்னையும் வல்லை தூர்த்தவே.

இரத்தந் தோய்ந்த வேலுடைய ஒருவனான வீரவாகுதேவர் செலுத்திய சூரபன்மனின் பல வளங்களும் வானில் வீசப்பட்டுச் சென்று மேல் நின்ற தேவ உலகில் மோதி அடித்து அவைகளை அழித்து அப்பாலும் சென்று ஆகாய கங்கையையும் விரைவுடன் தூர்த்து மூடிப்போகச் செய்தது. 29

வெறித்திடு தார்ப்புய விடலை நொய்தினில்
பறித்தெறி அவுணர்கோன் பலவ ளங்களும்
எறித்திடு தீங்கதிர் எல்லை வேந்தனை
மறைத்தன பணிபல மயங்கிச் சூழ்ந்தபோல்.

வெறிக்கும் தேன் துளிக்கும் மாலையணிந்த தோளுடைய வீரவாகுதேவர் விரைவுடன் பறித்து எறிந்த சூரபன்மனின் பல வளங்களும் சென்று பிரகாசமுறும் வெப்பக் கிரணங்களை உடைய சூரியதேவனை மறைத்தன. எப்படியெனில் மயக்கமடைந்து திசை தெரியாத பல பாம்புகள் அவனைச் சூழ்வது போன்று. 30

சோலையின் மண்டபத் தொகையிற் சூளிகைப்
பாலினிற் சிகரியிற் பயின்ற புள்ளெலாம்
மேலுறு செலவினில் விரைவின் ஏகியே
மாலயன் புள்ளொடு மருவி வைகிய.

வீசி எறியப்பட்ட சோலையில் தொகையான மண்டபங்களில் சூளிகைகளின் இடத்தில் கோபுரங்களில் வசித்திருந்த பறவை யாவும் மேலாகிய போக்கில் விரைவுடன் சென்று பிரம்ம விஷ்ணு உலகில் உள்ள அந்த அன்னம், கருடன் முதலிய பறவைகளோடு மருவி இருந்தன. 31

செஞ்சுடர்ச் சூழிகை சிகர மாதிகள்
விஞ்சிய மிசைவர விழித்துத் தாளிலோன்
எஞ்சிய வுடலமும் இறுங்கொல் இன்றெனு
அஞ்சினன் அழுங்கினன் அலரி பாகனே.

சிவந்த சுடருடைய சூளிகைகள் கோபுரங்கள் வீசப்பட்டு மிக உயர்ந்து மேலாகி வருதலும் அதைக் கூர்ந்து நோக்கிய கால் இல்லாத அருணன் என்னும் சூரியதேவனின் தேர்ச் சாரதியானவன்; ஐயையோ! இயல்பாக எனக்கு காலும் இல்லை. இப்போது வரும் இவைகள் என்மீது பட்டு மிகுதியான எனது அங்கங்களும் அழிவுறுமோ என அஞ்சி அழுது அவதியுற்றுன் 32

வள்ளுறு வசிகெழு வுயிர மாமுடி
உள்ளபல் சூழிகை உம்பர் செல்வன
பிள்ளைகள் எறிந்திடப் பிறங்கு பம்பரம்
பொள்ளென ஈண்டிவான் போவ போன்றவே.

பிரகாசமுற்ற கூர்மையான வைர முடிகளை உள்ள பல சூளிகைகள் வீசப்பட்ட வேகத்தால் சுழன்று வானில் செல்வது; பிள்ளைகள் விளையாடும்போது சுழற்றி வீசி எறிகின்ற சுழலும் பம்பரங்கள் விரைவுடன் வானில் போவது போன்றது. 33

மீப்படு வியன்முகில் கிழித்து விண்மிசை
மாப்பெரும் சிகரிகள் வல்லை செல்வன
நீப்பருங் ககனமான் நெடுங்க துப்பினில்
சீப்பிடு கின்றதோர் செய்கை போலுமால்.

மேலுள்ள பெரும் வான முகில்களைக் கிழித்துக்கொண்டு வானின் மேல் பெரும் கோபுரங்கள் விரைவாகச் செல்கின்றன எதுபோலுமெனில்: நீக்ரிய வானம் என்னும் பெண்ணின் தலையில் சீப்பினையிட்டு வாருதல் போன்ற செய்கைபோன் றிருப்பது. 34

பயனுறு பழுமரப் பைம்பொற் காமர்கா
வயனெறி தந்திட அகல்விண் செல்வன
நயனறும் அவுணனூர் நணிய கற்பகம்
வியனுல கிருந்திட மீள்வ போன்றவே.

டயன் உற்ற பழங்கள் தூங்கும் பெருமரங்கள் நிறைந்த பசிய பொன்னுன சோலை பெருநெறியால் மேல் செல்லும் காலம் வந்திட வீசப்பட்டு அகன்ற வானில் செல்வது; நலம் இவ்லாத கொடிய சூரபன்மன் ஊருக்கு கொண்டு வந்து சேர்க்கப் பட்ட கற்பக விருட்சம் மேலான தேவ உலகிற்கு மீண்டு எழுந்து செல்வதுபோன் றிருந்தது. 35

ஐயன தொற்றுவன் அள்ளி வீசிய
செய்யபல் பொருள்களுஞ் செறிந்து சேணெலாங்
கொய்யுளை வயப்பரிக் கொடிஞ்சித் தேர்மிசை
வெய்யவன் செலவினை விலக்கு கின்றவே.

எமது ஐயனுடைய தூதுவர் வீரவாகுதேவர் அள்ளி வீசிய செம்மையான பொருள்கள் பலவும் வானமெலாம் செறிந்து நெருங்கி அழகிய பிடரி மயிரினையுடைய வெற்றிக் குதிரை பூட்டிய கொடிஞ்சியை உடைய தேர் மேலாகும் சூரியதேவனின் போக்கை செல்ல முடியாதபடி விலக்கியிடுகின்றன, 36

திருமிகு சூளிகை சிகர மாதிகள்
நிரல்பட ஏகியே நிரந்த பல்வகைப்
பருமணி யெரிசுடர் பரப்பி வான்படர்
இரவிதன் கதிரையும் இகலி வென்றவே.

திரு மிகுந்த சூளிகைகள் கோபுரங்கள் ஆதியன நிரைபடச் சென்று நிரந்த தான பலநிற வகைகளைக் கொண்ட பருத்த மணிகளின் சுடர் ஒளிகளைப் பரப்பி அந்த பெருகொளியால் வானில் செல்லும் சூரியதேவனின் சுடர் ஒளியுடன் போட்டிகொண்டு வென்று நின்றன. 37

மின்னவிர் சிகரிபொன் வேர மாதிகள்
என்னவும் வான்படர்ந் தெழாலின் விஞ்சையர்
உன்னுறும் ஓங்கலும் உவண வைப்பெனும்
பொன்னெயில் வட்டமும் பூழி செய்தவே.

மின்னல் காலும் கோபுரங்கள் சூளிகைகள் ஆதியனவாகிய பொருட்கள் வானில் சென்று அங்கு யாழில் வல்லமையுடைய விஞ்சையர்கள் நிலைபெற்று வாழும் மலைகளும் கருடவைப்பு என்னும் பொன்மதில் சூழ்ந்த வட்டங்களையும் பொடி செய்தனவே. 38

குன்ளெடு சூளிகை கோபு ரம்பிற
ஒன்றுடன் ஒன்றுபட் டுரிஞ்சி யாயிடைத்
துன்றிய மணிதிசை தோறுஞ் சிந்துவ
மின்றிகழ் தாரகை விளிந்து வீழ்வபோல்.

மலைகளோடு சூளிகைகள் கோபுரங்கள் பிறவும் ஒன்றுடன் ஒன்றுபட்டு உராஞ் சுதலாலே அதனிடத்து பதிந்துள்ள இரத்தினங்கள் திக்குகள் தோறும் சிதறிப்போ வன, மின்னல் திகழ்வது போன்ற ஒளியுடைய நட்சத்திரங்கள் மங்கி வீழ்வது போன்றிருந்தது. 39

பொற்றைகள் சிகரகோ புரங்கள் தத்தமில்
எற்றுழிப் புகையென எழுந்து பூழிகள்
சுற்றிய புலிங்கமுந் தோன்று கின்றன
வெற்றவெம் புயல்களு மின்னும் போலவே.

செயற்கை மலைகள் முடியுடைய கோபுரங்களானவை ஒன்றுடன் ஒன்று தம் பாட்டில் அடிபட்ட நேரத்து புகை எனும்படியாக புழுதிகள் எழுந்து சுற்றுகின்றன. நெருப்புப் பொறிகளும் தோன்றுகின்றன. இவைகள் வெண்புகார் போன்றும் மின்னல் போன்றும் காட்சி தருவன. 40

ஏழுயர் களிறனன் எறிந்த யாவையுஞ்
சூழுற வானிடைத் துவன்ற எற்றலிற்
கேழுறு நுண்டுகள் கெழுமிச் சிந்துவ
பூழியின் நெடுமழை பொழியுந் தன்மைபோல்.

மதம் மிக்க யானையை ஒத்த வீரவாகுதேவர் எறிந்த யாவையும் வானிடத்துச் சூழ்ந்து ஒன்றுடனொன்று நெருங்கி முட்டியடித்தலில் எழுந்துள்ள நுண்ணிய துகள்கள் சிதறுகின்றன; புழுதியாலான பெருமழை பொழிகின்ற தன்மையைப் போலும். 41

ஆரியன் ஒச்சிய அணிகொள் மண்டபம்
வேரமொ டகன்பொழில் பிறவும் விண்ணுறீஇத்
தாரகை முதற்சுடர்த் தனுக்கள் சார்ந்திடச்
சோரியும் இடையிடை துளித்த தென்பவே.

வீரவாகுதேவர் தூக்கி வீசிச் செலுத்திய அழகு விளங்கும் மண்டபம் சூளிகைகளோடு விசாலித்த சோலைகள் யாவும் வானில் சென்று நட்சத்திரங்கள் முதலாகிய ஒளிக்கிரகங்களின் உடலினில் பட்டிடுதலால் இரத்தமும் இடையிடை துளித்தது என்பது போன்றது. 42

புந்தியி லான்மகம் புகுந்த தீமையால்
இந்திர னாதியோர் யாருஞ் சூரனால்
நொந்தனர் அவன்நகர் வளமும் நோவுற
அந்தரத் தவரையும் அலக்கண் செய்தவே.

நற்புத்தியிலாத தக்கனுடைய யாகத்தில் புகுந்திருந்த தீமையால் இந்திரன் ஆதியான கடவுளர் யாரும் சூரனால் நொந்தனர். அவ்வணம் வானத்தவரை வருத்திய சூரபன்மன் வளம் அழிந்து நோவுறும் கால் அதுவும் வானில் சென்று தேவரைப் பின்னரும் வருத்தியது. 43

வெற்புறழ் மொய்ம்பினன் விடுத்த சூளிகை
பற்பல பொருந்தலும் பட்ட வன்னிபோய்
எற்படு கதிருடை இரவி பச்சைமாப்
பொற்புறு கொய்யுளை பூழி செய்ததே.

மலையொத்த தோளிணையுடைய வீரவாகுதேவர் அள்ளி வீசியிட்ட சூளிகைகள் பற்பல ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொள்வதினால் எழுந்த நெருப்புப் பொறி போய் பிரகாசமான கிரணமுடைய சூரியன் தேரில் பூட்டிய பசிய குதிரைகளின் பிடரியில் பட்டு அதன் அழகிய பிடரி மயிரினை எரித்து சாம்பராக்கி விடுகின்றது. 44

பொன்னவிர் சிகரகோ புரங்க ளாதிய
துன்னிய தாக்கலில் தோன்று தீப்பொறி
இன்னுயிர் வழங்கிய வெல்லை எங்கணும்
வன்னிபெய் மழையென மயங்கி வீழ்பவே

பொன் வண்ணமான முடி கொண்ட கோபுரங்கள் ஆதியன நெருங்கித் தாக்க லில் தோன்றியிட்ட நெருப்புப் பொறிகள் இன்பமுறும் உயிர்கள் வாழும் எல்லைகள் எங்கணும் நெருப்பு முகில் பெய்த மழை போன்று தடுமாற்றுடன் வீழ்வன. 45

வழுவுறும் அவுணர்கோன் வளங்கள் யாவையுங்
கெழுதகு விசும்பினைக் கிழித்துச் சேறலின்
எழிலிகள் வயிறுடைந் திரங்கி ஆற்றலா
தழுதென உலகெலாம் அறல்சிந் துற்றவே.

தவறுதல்களுடைய சூரபன்மன் செல்வமாய பொருள்கள் யாவும் வீசப்பட்டு மிக உயர்ந்த வானினைக் கிழித்துக் கொண்டு சேருதலினாலே அங்கு வானில் சூலுடன் தங்கி நின்ற வான முகில்கள் வயிறுடைந்து ஆற்றாது இரங்கி அழுதல் போன்று உலகமெல்லாம் சிறுதுளிகள் சிந்துற்றன. 46

வேறு

ஏசிலா அறிவன் விட்ட இன்னபல் வெறுக்கை யாவும்
மாசகல் விசும்பின் ஏகி மதிமுடி அருள்பெற் றுள்ள
கோசிகன் துறக்க முய்த்த கொற்றவன் தவறி யென்ன
ஆசுற மீண்டு ஞாலத் தகிலமும் வீழ்ந்த அன்றே.

குறைவிலாத அறிவு நிரம்பிய வீரவாகுதேவர் விட்டெறிந்த இந்த வகையான செல்வ வளங்கள் யாவும் மாசு அகன்ற வானில் சென்று; பிறையணிந்த சடைமுடி யுடைய சிவபிரான் அருள் பெற்றுடைய விசுவாமித்திரன் சொர்க்கத்திற்கு அனுப்பிய திரிசங்கு என்பான் தவறி வீழ்ந்தமை போன்று; உலகம் துயருற மீண்டும் வந்து எங் கும் பரந்து வீழ்ந்தது. 47

படிதனில் திசையின் பாலிற் பௌவத்திற் பழுவந் தன்னில்
தடவரை தன்னில் இன்ன தகையன பிறவிற் சூர
னுடையபல் வளங்க ளெல்லாம் உறற்றியே வீழ யாண்டும்
இடைதரு முயிரின் பொம்மல் வெருவிவீழ்ந் திரித லுற்ற.

பூமியிலும் திக்கின் பாலிலும் சமுத்திரத்திலும் சோலையிலும் விசாலித்த மலை கள் இடத்தும்; இன்னதன்மையான பிறவிடத்தினுள்ளும் சூரனுடைய இத்தகைய வளங்கள் யாவும் இரைந்து வந்து வீழ்தலும் அவ்விடத்துடைந்துள்ள உயிரின் தொகுதிகள் யாவும் பயந்து அலறிக்கொண்டு வீழ்ந்தோடித் திரிதலுற்றன. 48

**அலைந்தது பரிதி ஒங்கல் அதிர்ந்தது மேருச் சையங்**
**குலைந்தது சூழுங் குன்றங் குலுங்கிய அசலம் ஏழுங்**
**கலைந்தது நாகர் வைப்புங் கலங்கிய கடலும் பாரும்**
**உலைந்தன உயிர்கண் முற்றும் ஓடின திசையின் யானை.**

இந்நிலையால் சக்கரவாளமலை அலைந்தது. மேருமலை நடுங்கியது, அதனைச் சூழ்ந்த மலைகள் நிலைகுலைந்தது. ஏழுமலைகளும் குலுக்கம் கொண்டன. நாகர்கள் இருப்பிடங்கள் கலைந்து போயது. பூமியும் கடலும் கலங்கியது. உயிர்கள் முற்றும் உலைந்தன. திசையில் நின்ற யானைகள் நிலைவிட்டோடின. 49

**தண்படு தொடலை மார்பன் தானெறிந் தவற்றிப் பல்லவே**
**றெண்புவி முழுதுஞ் சிந்திற் றெழிந்தன உலப்பி லாத**
**எண்பதி னாயி ரப்பேர் யோசனை யெல்லைத் தாகிக்**
**கண்படு சூரன் ஊரில் கல்லென வீழ்ந்த மாதோ.**

குளிர்மை வாய்ந்த பூமாலையணிந்த மார்புடைய வீரவாகுதேவர் தாம் வீசி எறிந்திட்ட பல பொருள்களும் அழகிய பூமி முழுவதும் சிதறியது. அதுமட்டன்றி மற்றவை எண்பதினாயிரம் யோசனை எல்லையுடையதாகிய அகன்ற பரப்பில் கண் கெட்ட கொடிய சூரபன்மன் ஊரில் கல்லெனும்படி வந்து வீழ்ந்தது 50

**முடிந்திடல் அரிய சூரன் மொய்வளம் அவனூர் முற்றுந்**
**தடிந்தெறி உருமே றென்னத் தணப்பற வீழ்த லோடும்**
**இடிந்தன மாட வீதி யாவையுங் கடிகா இற்ற**
**பொடிந்தன சிகரி யாதி புரிசைகள் மறிந்து மாண்ட.**

முடிந்திடற்கரிய சூரபன்மன் ஊரின் மொய்த்துள்ள வளம் யாவும் அவனது ஊரை அழித்து எறிகின்ற இடியேறு என்ன ஓயாமல் வீழ்தலோடும் மாடவீதிகள் யாவும் இடிந்தன. வாசனையுடைய பூஞ்சோலைகள் யாவும் அழிந்தன. கோபுரங்களாதி பொடிந்தன. மதில்கள் சரிந்து மாண்டுபோயின. 51

**மண்டபஞ் சிகரி வேரம் அணிமதில் மாட கூடம்**
**எண்டகு பொதியின் முற்றும் இடிபட எழுபொற்பூழி**
**விண்டொடு திசைபார் யாண்டும் வெறுக்கையின் வடிவ மாக்கி**
**அண்டர்தம் உலகீ தென்றே அறிகுறு வகைசெய் தன்றே.**

மண்டபங்கள் கோபுரங்கள் சூளிகைகள் அழகிய மதில்கள் மாடங்கள் கூடங்கள் யாவும் எண்ணிக்கை மிக்க மலைகள் இடிவது போன்று இடிபடலால் எழுந்த புழுதி வானத்தோடு திக்கு பூமி எவ்விடத்தும் பொன் இரத்தினம் முதலிய பொருள்களின் வடிவமாக்கி விடலாலே தேவ உலகம் என்பது எங்கிருப்பது என்று அறிவுறுதபடி செய்தது. 52

**புடையகல் பொன்செய் மூதூர் பொள்ளெனத் தகர்ந்து வீழ**
**மிடைதரு வீதி முற்று மேயின சனங்கள் பூசல்**
**கடைவரு நாள தெல்லைக் ககனமூ திண்ட கூடம்**
**உடைதலும் மூடியும் ஆவி அரற்றுமா றெத்த தன்றே.**

பக்கராக அகன்ற பொன்னினால் செய்த முதிய ஹாரானது விரைவுடன் தகர்ந்து வீழ்தலால் நெருங்கிய வீதி முற்றும் இருக்கின்ற சனங்கள் யாவும் அவதியுற்று அலறிடும் ஓசைகள் யாவும்; உலகம் அழிவுற வருகின்ற நாட்களின் எல்லையில் வான உலகில் விளங்கிடும் அண்டகூடங்கள் யாவும் உடைபடுதலும் அதனாலே முடிவாகின்ற உயிர்கள் யாவும் அழுதிடுமாறு ஒத்துநின்றது. 58

வேறு

நாக முந்து நறுநிழல் மாதவி
நாக முந்து நறுநிழற் பொற்கணி
சேக ரம்பல சிந்திடு காழுடைச்
சேக ரம்பல வோடு சிதைந்தவே.

வானில் ஓங்கி வளர்ந்து வாசனையுடன் நல்ல நீழலைத் தரும் குருக்கத்தி மரங்கள் யானைகள் விரும்பி வந்து தங்கும் நல்ல நிழல் கொண்ட பொன் வேங்கைகள் வண்டுகள் பல சிதறி|ஓடித் திரிகின்ற கொம்பருடைய மாமரங்கள் ஆதியன பலாமரங்களோடு சிதைந்தது, 54

கோட ரங்குல வுற்றிட வான்றொடுங்
கோட ரங்குல வுற்றிடு தண்டலைக்
கோட ரங்குலங் கோலஞ்செய் பொன்வரைக்
கோட ரங்குல வுற்றிறை கொண்டவே.

கொம்புகள் பரந்து எங்கும் செழித்து வளர்ந்து குலாவி உயர்ந்து வானைத்தொடு இன்ற மரங்களில் குரங்குகள் தாவிப் பாய்ந்து விளையாடல் புரிகின்ற சோலைகள் யாவும் அள்ளி வீசப்பட்டு கிரகங்களின் கூட்டங்கள் யாவும் வலம் வரும் அழகிய பொன் வண்ணமான மேருமலையின் உச்சியில் போய் வீழ்ந்து அங்கு தாங்கள் நிமிர்ந்து நின்று விளங்கின. 55

ஓடும் வாவியின் மீனினம் ஓங்குபுள்
ளோடும் வாவிவிண் ணுற்றிட வீதியின்
மாட மாலை வரிசையின் மல்கிய
மாட மாலை மறிந்திடி பட்டதே,

குளங்களில் ஓடித் திரிகின்ற மீன் இனங்களுடன் பறந்து செல்லும் பறவைகளும் வானில் சென்றிட வீதியிலே மாலைகள் போன்று வரிசையாக அமைந்திருந்த மாட நிரைகள் யாவும் சரிந்து இடிபட்டு அழிந்தன. 56

அண்ட ரண்டரும் அங்கர் மாண்டன
அண்ட ரண்டம் அளவிடு சூளிகை
மண்ட பம்மதின் மாடந் தரித்தயர்
மண்ட பம்மதின் மாதவம் யாவதே.

தேவர்கள் சென்று அண்டிட முடியாத அத்துணை காவல் கொண்ட அந்த வீரமகேந்திரபுரத்து அழிவுற்றன தேவர்கள் உலகை அளாவிடுவன போன்ற சூளிகை

கள் மண்டபங்கள் மேல்மாடங்கள் மதில்கள். இப்படியாக இந்த சூளிகைகளேயும் மண்டபங்களேயும் மேல் மாடங்களேயும் சுமந்துகொண்டு சலித்து நின்ற கீழ் மண்டபங்களினதும் மாடங்களினதும் பெரும் தவம் யாது?

மேல்மாடங்களேச் சுமந்து மண்டபங்களும், சூளிகைகளேச் சுமந்து மதிலும் நின்றன. இப்பொழுது மேல்மாடமும் சூளிகைகளும் அழிந்துபோதலால் இவைகளேத் தாங்கி நின்ற மதிலிற்கும் மண்டபத்திற்கும் சுமை நீங்கப்பெற்று விடுதலையடைந்தன. ஆதலின் அதன் மாதவம் யாவதே என்ருர். 57

பூவை யன்ன மணிமயில் பொற்புறு
பூவை யன்ன மணிமயில் பொற்புரு
வாவி யோடைவண் டான மழிந்திட
வாவி யோடைவண் டானம் அழியுமால்.

நாகணவாய்ப் பட்சி அன்னம் அழகிய மயில் பொற்புடைய காயாம்பூவை ஒத்த நீல இரத்தினத்தாலாய மயில் பொன்னுலாய புருக்கள் தாவிப் பறந்து செல்கின்ற பறவைகள், நாரைகள் யாவும் அழிவுற குளங்கள் நீரோடைகள் குளிர்மை தரும் தானங்கள் பலவும் அழியுமால். 58

மொய்யு டைத்தறி மோதித் தளேபரீஇ
மையு டைப்பெரு மால்கரி சோரிநீர்
மெய்யி டத்துக விண்முகி லச்சுறக்
கையெ டுத்துக் கதறி உடைந்தவே.

வலியுடைய கட்டுத்தறிகளே மோதி கட்டுச் சங்கிலிகளே அறுத்து கருமை உடைய பெரிய யானேகள்; இரத்த நீர் மேனியிடத்து நின்றும் கக்கிட வான முகில்கள் அச்சுறும்படி துதிக்கைகளேத் தூக்கி ஓலமிட்டுக் கதறிக்கொண்டு எறியப்பட்ட பொருள் தங்கள் மேல் வந்து படுதலால் இறந்துபோகின்றன. 59

ஈடு சான்ற வெருத்தந முரிந்திட
நீடு பூநுதல் நெக்குறக் கிம்புரிக்
கோடு சிந்தக் குருதியு குத்தரோ
ஓடி வீழ்வ உவாக்கள் அரற்றியே.

பெருமை விளங்கிய எருத்தம் முரிந்திட நீடி அகன்ற புகருடைய நெற்றி நெக்குற கிம்புரிகள் அணிந்த கொம்புகள் சிந்திட இரத்தம் சொரிந்திட அந்தரம் கொண்டு ஓடி ஓடி விழுகின்றன யானேகள் கதறியவாறு. 60

கார்கொள் சிந்துரங் காயத் திடையிடைச்
சோரி சோர்தரத் தோன்றுவ ஈற்றினின்
மேரு வாதி விலங்கலே மெய்க்கனல்
சாரும் வெம்புகை தன்னேடுஞ் சூழ்ந்தபோல்.

கருமை கொண்ட யானேகள் தங்கள் மேனியில் உற்ற காயத்திடையிடையே இரத்தம் சோர்ந்திடத் தோன்றுவது எப்படியெனில் உலகு அழிவுறும் காலத்து மேரு முதலிய மலேகளே ஊழித்தீயுடன் சேர்கின்ற கொடிய புகை சூழ்ந்து கொள்வதே போன்று விளங்கியது. 61

கொடிகள் இற்ற கொடுஞ்சி முரிந்தன
இடைகொள் பீடிகை எல்லைகள் நெக்கன
அடிகொள் சில்லியும் ஆருஞ் சிதைந்தன
பொடிய தாகிப் புரண்டன தேர்களே.

கொடிகள் அழிந்தன, கொடிஞ்சிகள் முரிந்தன. இருப்பிடங் கொள்ளும் தட்டுகள் நெக்கி அழிந்தன; அடியில் உள்ள சில்லுகளும் தேர் அச்சுகளும் முரிந்தன. இவ்வண்ணம் பொடியாகித் தேர்கள் புரண்டன. 62

பந்தி தோறும் பராவிய ஐங்கதிக்
கந்து கங்கள் கலங்கி நெரிந்திட
நொந்து மேனி நொறில்வரு செம்புனல்
சிந்தி யோடச் சிதறிய திக்கெலாம்.

பந்திகள் தோறும் பரவிநின்ற ஐந்து வேகமுடைய குதிரைகள் வீரவாகுதேவர் வீசிய பொருள்வந்து படுதலால் கலங்கி நெரிந்திட உடலம் நொந்து சிறி வரும் செந்நிற இரத்தம் சிந்தி ஓடிட திக்கெல்லாம் சிதறி இறந்து கிடப்பன. 63

சிதவல் கொண்டிடு செம்மையிர்க் கொய்யுளை
மதுகை வெம்பரி வாய்களின் வீழ்தரு
முதிர வாரி யொலிகடல் புக்கதால்
இதுகொ லோவட வைக்கனல் என்னவே.

சிதறிக்கொண்ட சிவந்த பிடரி மயிர்களையுடைய வீரம் பொருந்திய கொடிய குதிரைகளின் வாயால் வடிந்து வீழ்கின்ற கடல் போலும் இரத்தம் ஒலிக்கின்ற கடலிடத்துச் சென்று சேர்கின்றது. இந்த குதிரை இரத்தத்தை நோக்குமிடத்து இது தானோ வடவாமுகாக்கினி எனச் சொல்வது எனும்படி இருந்தது. 64

காள வெங்கரிக் காலின் வயப்பரித்
தாளின் ஊடகப் பட்டுத் தரைபுகா
மூளை சிந்த முழுதுடல் பூழியாய்
மாளு கின்றனர் மாநக ரோர்சிலர்.

வீசிய பொருள்கள் திரும்பி வந்து விழ வீழ அந்தரமுற்று ஓடுகின்ற கருமை நிறமுடைய யானைகளின் காலின் கீழும் அகப்பட்டு தரையில் நசியப்பட்டு மூளைகள் சிதறிட முழு உடலமும் புழுதியாகி அழிவுற மாண்டுபோகின்றனர் பெருநகரிலுள்ள சில மக்கள். 65

ஆளி மொய்ம்புடை அண்ணல்முன் வீசின
நீளு மாநகர் ஞெள்ளலின் வீழ்தலுந்
தோளி மூந்து சுவல்முரிந் தொய்யெனத்
தாளி மூந்து தரங்கமுற் றுர்சிலர்.

சிங்கம் போலும் வலியுடைய வீரவாகுதேவர் முன்னர் அள்ளி வீசிய பொருட்கள் நீண்ட பெரிய நகர வீதிகள் இடைவந்து வீழ்தலும் தமது தோள்களை இழந்து முதுகும் முரிந்து விரைவுடனுகக் காலும் முரிந்து நிலத்தில் கிடந்தார் சிலர். 66

பொற்றை யன்ன பொலன்மணி மாளிகை
இற்று வீழ்தலும் என்னிது வென்றெழீஇ
வெற்ற வெள்ளிடை மேவுதல் முன்னியே
முற்றம் வந்திடு முன்மறிந் தார்சிலர்.

மலையை ஒத்த அழகிய மாளிகை இடிந்து வீழ்தலும் என்ன இது என்று எழுந்து விரைவுடன் வெளியிடத்தில் போய்விடுவோம் என எண்ணி முற்றத்திற்கு வந்துவதன் முன்பாக, வீழ்கின்ற பொருள் பட்டு இறந்தார் சிலர். 67

ஊடு மைந்தரும் ஒண்டொடி மாதரும்
மாட மோடு மறிந்தனர் தம்முடல்
வீடி விண்மிசை வேற்றுரு வெய்தியே
கூடி யேவழிக் கொண்டன ரோர்சிலர்.

தங்களில் மனம் மாறுகி கோபமுற்ற கணவன்மாரும் நல்ல அழகிய வளையல் அணிந்த பெண்களும் மாடத்துடன் இடிபட்டு வீழ்ந்து அதனுள் நசுங்கி உடலம் அழிந்து உயிர் வானில் சென்று வேற்றுருவம் அடைந்து ஒருங்கு கூடி கோபமாறி விண்ணில் வழிக்கொண்டனர் சிலர். 68

உவமன் இல்லவன் ஒச்சின எங்கணும்
அவதி யின்றிப் பொழிய வவைதெரீஇத்
தவறி லாதுசெய் தாழ்வரை கீண்டெடாக்
கவிகை யாத்தமைக் காத்துநிற் பார்சிலர்.

உவமை காண்கொணாத அற்புத வீரமுடைய வீரவாகுதேவர் வீசியன எவ்விடத்தும் குறைவின்றி ஓயாது பொழிந்து வீழ்ந்திட அவைகளைத் தெரிந்து அங்கண் தவறுதல் ஏதும் இலாது செய்யப்பெற்ற செயற்கை மலைகளை கீண்டு எடுத்து குடை போன்று சில அசுரர் பிடித்து தம்மைக் காத்து நிற்பார். 69

விறற்கொள் வாகு விடுத்தன கல்லக
வுறைப்பின் வீழ ஒதுங்கிடம் இன்மையிற்
சிறக்கு மாநகர்ச் செந்தரைக் கொண்டகீழ்
அறைக்கு ளேபுக் கலமரு வார்சிலர்.

வலிமை கொண்ட வீரவாகுதேவர் விடுத்துள்ள பொருட்கள் கல்மலை போன்ற காத்திரமுடன் வீழ்தலும் அதற்கு ஒதுங்கி நிற்கும் இடம் இல்லாமையால் சிறக்கும் பெரிய வீரமகேந்திரபுர நகரின் செவ்விய தரையின் கீழ் கொண்ட நில அறைக்குள்ளே புகுந்து அலமருவார் சிலர். 70

மாதர் தங்களை மக்களை அன்னையைத்
தாதை மாரைத் தமதுகைப் பற்றியே
ஏதின் மாடம் இகந்துகச் சோரிநீர்
வீதி போந்து வெருவிநிற் பார்சிலர்.

தனது மனைவிமாரை மக்களை தாயை தந்தைமாரைச் சில அசுரர் தம்து கையால் பிடித்துக்கொண்டு குறைவின்றி ஓங்கிய மாடங்களை விட்டுக் கடந்து ஓடி இரத்தம் பெருகும் வீதியிலே வந்து பயத்தால் திகைத்து நிற்பார் சிலர். 71

கருவி வானினுங் கண்ணகன் திக்கினுந்
தரணி தன்னினுந் தாவிலன் வீசிய
திருவ ளங்கள் செறிந்தன வீழ்தலும்
வெருவிப் போய்க்கடல் வீழ்ந்தொளிப் பார்சிலர்.

எப்பொருளும் தோற்றும் கருவியான வானிலும் அகன்ற பரப்புடைய திக்கிலும பூமியிலும் வீரவாகுதேவர் ஓய்வின்றி வீசிய செல்வ வளங்கள் எங்கும் செறிந்து வீழ்தலும் சில அசுரர்் அஞ்சி வெருவிப்போய் கடலில் வீழ்ந்து புகுந்து ஒளிப்பார்கள். 72

கிழிந்த சென்னியிற் கேழ்படு செம்புனல்
கழிந்து தோன்றவுங் கண்டனர் ஐயுறுப்
பொழிந்து மெய்ப்புறம் போர்த்தலுந் தேற்றியே
அழிந்தி ரங்குற ஆகுலிப் பார்சிலர்.

கிழிந்த தலையில் இருந்து கெழுமிக் கொண்டு சிவந்த இரத்தம் விரைவாக வடிந்து தோன்றவும் அதைக் கண்டு இது இரத்தமோ வேறு யாதோ என ஐயுறவு கொண்ட நேரத்தில் இரத்தம் மேனியின் புறம் வந்து பெருகி மூடிடலும் இரத்தம் தான் எனத் தெளிவு கொண்டு மனம் அழிந்து இரங்கி கவலையால் துன்புறுவர் சிலர். 73

ஆடல் மொய்ம்பினன் ஆர்த்துமுன் வீசிய
மாட வீதி வளநகர் எங்கணும்
நீட வீழ்தலும் நிற்றலை அஞ்சியே
ஓடி யூறுற் றுயிர்துறப் பார்சிலர்.

போராடல் மிகுந்த வீரவாகுதேவர் ஆரவாரத்துடன் முன் அள்ளி வீசிய பொருட்கள் மாடங்கள் நிறைந்த வீதியுடைய வளநகர் எங்கும் பரந்து ஓயாது நெடுக வீழ்தலும் அதனல் அங்கு நிற்பதற்குப் பயந்து ஓடிச் சென்று வீழும் பொருளால் ஊறுபட்டு உயிர் நீங்குவார் சில அசுரர். 74

திங்கள் சூடி திருமகன் விட்டன
எங்கும் வீழும் இறப்பினை நோக்கியே
அங்கி வெங்கணை தொட்டறுத் தன்னவை
தங்கள் ஆருயிர் தாங்கிநிற் பார்சிலர்.

திங்கள் சூடிய சிவபிரான் திருக்குமாரர் வீரவாகுதேவர் விட்ட பொருட்கள் எங்கும் வந்து வீழ்கின்ற கொடுமையைக் கண்டு தமது கையில் உள்ள வில்வில் நின்று அக்கினி அம்புகளை விடுத்து அவைகளை அறுத்து தங்கள் உயிரைக் காத்து தாங்கி நிற்பார் சில அசுரர். 75

மையல் மாதரும் மைந்தரும் ஆவியும்
யொய்யில் புந்தியும் ஒன்றிப் புணர்தலுஞ்
செய்ய மாடஞ் சிகரமொ டேவிழ
மெய்யும் ஒன்றி விளிந்திடு வார்சிலர்.

மையல் உடைய பெண்களும் ஆடவரும் அன்பால் உயிரும் பொய்யில்லாத உணர்வும் ஒன்ருக சேரக் கட்டி அணைத்து உடலுறவு வைத்துக் கூடிய நேரத்தில் அவர்கள் மேல் அழகிய மாடமானது கோபுரத்துடன் இடிந்து வீழ்தலும் இரண்டுடலும் ஒன்ருக அணைந்த அவர்கள் ஆண் உடலும் பெண் உடலும் நசுங்கி ஒன்ருகி இறந்துபோவார் சில அசுரர். 76

அத்தண் மாடத் தறிவன் விடுத்தன
வந்து வீழ மறித்துரு மேறெனச்
சிந்த வேயுகு செம்பொறி மெய்ப்பட
வெந்து சின்னம் விரவுறு வார்சிலர்.

அழகுடன் விளங்கி குளிர் ஊட்டிய மாடங்களில் வீரவாகுதேவர் விடுத்துள்ள பொருள்கள் வந்து வீழ்தலால் உடைபடும் பொருள்களினின்றும் சிதறிடும் பொறிகள் இடியின் பொறிகள் போன்று சிதறிட அப்பொறிகள் மேனியில் படுதலால் சூடுபட்ட காயத் தழும்புகளுடன் தோன்றிடுவார் சில அசுரர். 77

வரங்கொள் வீர மகேந்திரத் தின்னணந்
தரங்க மெய்திச் சனங்களெல் லாமிரீஇ
உரங்கள் சிந்தி அழிந்துழி ஒல்லென
இரங்கும் ஓதை எழுகடல் உண்டதே.

வரங்கொண்ட பெருநிலையுடைய வீரமகேந்திரபுரத்தில் உள்ள சனங்கள் கலக்கமடைந்து அவதியுற்று ஓடி தங்கள் விரம் சிந்தி அழிவுறும் காலையில் விரைவுடன் எல்லாரும் அழுது கூச்சலிடும் ஓசையானது எழுகடல் இரைச்சலையும் உண்டு மேற்கொண்டு நின்றது. 78

மன்றி னிற்கரி பொய்த்து மனுநெறி
கொன்று வாழுங் கொடியர்தம் மில்லெனத்
துன்று மாடத் தொகைவெள் ளிடையதாய்ப்
பொன்றி வீழ்ந்தன புல்லென வாகியே.

நீதித்தலத்தில் பொய்ச்சாட்சி கூறி நடுவிகந்து, மனு நீதியைக் கொன்று வாழ்கின்ற கொடியவர்கள் இருக்கும் இருப்பிடங்கள் எப்படிப் பின்னல் இடிந்து அழிந்து நிலைகெட்டுப்போகுமோ அத்தன்மை போன்று நெருங்கிய மாடங்களின் தொகைகள் இடிபட்டு வெள்ளிடையதாய் சீர்கெட்டு புன்மையாய் அழிந்து வீழ்ந்தன. 79

நீறு பட்ட நெடுநகர் எங்கணும்
ஊறு பட்ட உயிர்கடஞ் சோரிநீர்
ஆறு பட்டிட அங்கவை யோடளாய்ச்
சேறு பட்டன செக்கர்விண் போலவே.

நீருகி அழிக்கப்பட்ட நெடிய வீரமகேந்திரபுர நகர் எங்கணும் ஊறுபட்டு அழிந்து போன உயிர்களின் உடலில் பெருகும் இரத்த நீர் ஆருகிப் பெருகிட அந்த உடலும் இடிந்த பொருள்களுமாகச் சேர்ந்து இரத்த சேருகிச் செக்கர் வானம் போன்றிருந்தது. 80

மலிந்த சீர்த்தி மகேந்திர மாபுரம்
அலைந்து தொல்லைத் திருமுழு தற்றதால்
மெலிந்தி டும்படி விண்ணவர் தம்மெலாம்
நலிந்த வன்வளம் நன்றுறு மேகொலாம்.

சிறப்பு மலிந்துள்ள வீரமகேந்திரம் என்னும் பெரிய நகரம் இவ்வாறு அலைந்து தன்னுடைய முன்னுள்ள செல்வநிலை வளம் முழுதும் அற்றது. தேவர்கள் யாரும் மெலிந்து நோவுறுமாறு துயர் புரிந்த சூரபன்மனின் செல்வங்கள் நன்ருக சிறப்புடன் இருக்குமோ? ஆகாதே.

மற்றையோரை வருத்தி துயருற வைத்து சம்பாதித்த பொருள் நீங்கும் கால் பொருளுடையாரை அழவைத்துத்தான் போகும். 81

நகரழி படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 770

1121

# சகத்திரவாகுகள் வதைப் படலம்

ஏயின பான்மையின் இவன்மூதூர், மாய்தரும் எல்லையின் வருகின்ற
ஆயிர வாகுள அடல்வீரர், மேயின தன்மை விளம்புற்றும்.

இவ்வாறான பான்மையாக இந்த சூரபன்மனுடைய முதிய நகரம் அழிவுற்று மாயுங்காலையில் முன்னர் சூரபன்மனால் விரவாகுதேவரைப் பிடிக்கும்படி விடப்பட்ட ஆயிரம் தோளுடைய சகத்திரவாகுகள் என்னும் வீரர்கள் அவ்விடம் வந்த தன்மையைச் சொல்வாம். 1

ஓலம் உடைக்கடல் உமிழ்கின்ற, நீல விடத்தினை நிகர்மெய்யார்
மாலை யுடைப்பல வடவைத்திக், கோல மெனச்சிகை கொண்டுற்றார்.

இந்த சகத்திரவாகுகள் ஓலமிடும் இரைச்சல் கொண்ட கடல் உமிழ்ந்து கக்கி விட்ட நீல நிறமுடைய நஞ்சினை ஒத்த மேனியை உடையவர்கள் வரிசையாக உடைய லப வடவாமுகாக்கினிகள் நின்றிடுகின்ற கோலமென்ன அழகிய சிவந்த சடைக்குடுமி உடையார்கள். 2

திங்களி ருதிய திறல்மாக்கள், தாங்குவை யோடு தலைப்பெய்தே
ஆங்குள சோரி ஆருதிமப், பாங்கர்கள் அன்னதொர் பகுவாயார்.

கோடி யானைகள் ஆதியான வலியுடைய மிருகங்களை கூட்டாக அள்ளி வாயில் இட்டு கடித்தலாலே அம்மிருகங்களினின்றும் பெருகுகின்ற இரத்தங்கள் ஒழியாது வடிந்திட விளங்கிடும் சுடுகாட்டின் இடங்களை ஒத்ததோர் பெருவாயினை உடையவர். 3

எல்லையில் நேமிகள் யாவுந்தாம், ஒல்லொலி நீரின் உடைந்தென்னக்
கல்லுறை சிந்து கருங்கொண்மூச், செல்லென ஆர்த்தனர் செல்கின்றார்.

எல்லையற்ற சமுத்திரங்கள் யாவும் தாங்களாகவே பேரிரைச்சலுடைய நீர்ப் பெருக்கால் உடைபட்டுப்போனது எனும்படியாகவும் கல் மழை பொழிகின்ற கரு முகில்கள் இடித்தாற்போலவும் ஆரவாரத்துடன் செல்கின்றனர். 4

### வேறு

மைவரு நீல வரைத்தொகை தாங்கும், மொய்வரு கின்ற முடிக்குழு வென்ன
ஐவகை நூற்றின் அமர்ந்தகல் வானைத், தைவரு கின்ற தலைத்தொகை கொண்டார்

கருமையுடன் விளங்கும் நீலமலைக் கூட்டங்கள் தாங்கி நிற்கின்ற முடிகளின் கூட்டம் எனும்படி ஐந்நூறு என்னும் எண்ணிக்கையால் விளங்கி வானைத் தழுவிய வாறு வருகின்ற உயர்ந்த தலைகளைக் கொண்டார்கள். 5

மராமர மானவை மாதிர மெங்கும், பராவ விடுத்திடு பலகவ டென்ன
விராவிய அங்கத மேவி விளங்கும், ஓராயிர மாகிய ஒண்புய முள்ளார்.

மராமரங்கள் யாவும் திக்குகள் எங்கும் பரவும்படி விடுத்திட்ட பல கொம்பர்கள் எனும்படி அங்கதம் என்னும் ஆபரணங்கள் அணியப்பட்டு விளங்குகின்ற ஆயிரமாகிய வலியுடைய புயங்களையுடையவர். 6

எழுக்கொடு முத்தலை எஃகம் வில் நாஞ்சில், கழுக்கடை சங்கொடு கப்பணம் வெவ்வாள்
மழுக்கதை சக்கரம் வச்சிர மாதி, விழுப்படை யாவும் வீராவிய கையார்.

எழுவாயு தம் முத்தலைவேல் வில் நாஞ்சில் கழுமுட்படை சங்கு கப்பணம் கொடிய வாள் மழுவாயுதம் கதாயுதம் சக்கரம் வச்சிராயுதமாதியாகும் மேலான படைகள் யாவும் பொருந்திய கைகளை உடையவர்கள். 7

எண்டகு நேமிகள் ஏழும் அளக்கர், மண்டல மானவு மன்னுயிர் யாவுங்
கொண்டிடி னுங்குறை வின்றி நிரம்பா, தண்டம தென்ன அகன்ற வயிற்றார்.

எண்ணிக்கையில் சிறந்துள்ள கடல்கள் ஏழும் பல மண்டலங்களானவும் மேலான உயிர் வர்க்கங்களும் யாவற்றையும் எடுத்து உட்கொண்டிடினும் குறைவின்றி நிரம்பாத தண்டம் என்னும்படியாக அகன்ற வயிற்றையுடையவர்கள். 8

விழுமிய பன்றலை வெம்பணி யேனைக், குழுவொடு போற்றினர் கொண்டுற லாற்று
தழுதிட நாடிய தற்கயர் வார்போல், கழல்கள் அரற்று கழற்றுணை கொண்டார்.

மேலான பல தலைகளையுடைய கொடிய பாம்புகள் ஏனைய பாம்புகளின் கூட்டத்துடன் சேரத்தாங்கிக் கொண்டிடுதலும் அப்பாம்புகள் தாங்கிட முடியாது அழுதிட அதனை நாடி அதற்காக மெல்லிய சத்தத்தினால் துயருறுவார் போன்று சத்தமிடும் சிலம்புகள் அணிந்த காலுடையார்கள். 9

இருபுயம் ஓர்முகம் எய்திய வானோன், ஒருவனை வெல்ல ஓராயிர ரானேம்
பொருவகை சென்றிடல் புன்மைய தென்னு, வருபழி யுன்னி மனந்தளர் கின்றார்.

இரண்டு தோளும் ஒரு முகமும் கொண்ட வீரவாகுதேவர் ஒருவனை வெல்ல ஓராயிரம் பேர் செல்கின்றேம். இப்படி நாம் போர் புரியச் செல்வது அற்பத்தனமானதாகும் என்று தமக்கு வரக்கூடிய வசையை எண்ணி மனம் தளர்கின்றனர் இந்த சகத்திரவாகுகள். 10

மாகர வான்முன மாயையின் வந்தான், ஆகையி னால்இவன் ஐதென வானிற்
போகுவ னால்இது பொய்யல வல்லே, ஏகுமின் ஏகுமின் என்றுசெல்கின்றார்.

அம்மவோ பெரும் கள்ளத்தனமாக இங்கு வீரவாகுதேவன் மாயத்தால் வந்தான். ஆனமையால் இவன் விரைவுடன் வானில் மறைந்துபோயிடுவன், இது பொய்யல்ல. விரைவுடன் செல்லுங்கள், செல்லுங்கள் என்று கூறி ஓடிச் செல்கின்றனர். 11

மீளிகை யாலெறி மேதகு வேர, மாளிகை கோபுர மண்டபம் விழ்வ
காளிக ரன்னக ரங்கொ டேற்றுத், தூளிகள் செய்தனர் தூர்த்திடு கின்றார்.

வீரவாகுதேவர் தமது கையால் தூக்கி எறிந்திட மேன்மையான பெருஞ் சூளிகைகள், மாளிகைகள், மண்டபங்கள் வீழ வீழ கருமை கொண்ட தமது கைகளில் ஏந்தி துகள்படுத்திச் சொரிந்துகொண்டு வருகின்றனர் சகத்திரவாகுகள். 12

எய்யென மெய்யிடை எங்கும் வியர்ப்பச், செய்யன கண்வழி செந்தழல் சிந்த
வெய்ய உயிர்ப்பெழ வேர்வுள மூள, ஒய்யென ஓடினர் உற்றிடு கின்றார்.

சகத்திரவாகுவன் முள்ளம்பன்றி போல மேனி எங்கும் வேர்வை கொள்ள சிவந்துள்ள கண்களால் கொடிய நெருப்புப் பொறிகள் சிந்திட வெப்பமான மூச்சு வெளிவர வேர்வை உள்ளத்தில் மூள விரைவாக ஒடி வந்து கொண்டிருக்கின்றார்கள். 13

நாகர் தமக்கொர் நமன்றனை யன்னோர்
ஆகிய ஆயிரர் ஆயிர மொய்ம்பர்
வேகம தாகி விமுத்தகு வீர
வாகுவை எய்தி மடங்கலின் ஆர்த்தார்.

தேவர்கட்கு எல்லாம் ஓர் இயமனை ஒத்த அந்த ஆயிரம் தோளுடைய சகத்திரவாகுகள் ஆயிரம் பேரும் வேகமாக ஓடிவந்து மேன்மையுடன் விளங்கி நிற்கும் வீரவாகுதேவரை அடைந்து நாற்புறமும் சுற்றி சிங்கம் போன்று கர்ச்சனை செய்து ஆரவாரம் செய்தனர். 14

ஆர்த்திடும் ஓதை அகன்செவி செல்லத்
தார்த்தொகை தூங்கு தடம்புய வீரன்
பார்த்தனன் மூவெயில் பண்டெரி செய்த
தீர்த்தனெ னைச்சிறி தேநகை செய்தான்.

சகத்திரவாகுகள் ஆர ஈரித்திட்ட ஓசை வீரவாகுதேவரின் அகன்ற காதூடு செல்லலும்; அந்நேரம் மாலைகள் தொகையாக அணியப்பெற்றுத் தூங்கிட விளங்கும் விசாலித்த தோளுடைய வீரவாகுதேவர் இவர்களைப் பார்த்தார். உடன் முன்னர் முப்புரங்களையும் எரித்தருளிய சிவபிரான் அன்று சிறிது சிரித்தால் போன்று தாமும் சிறிதே நகைத்தார். 15

மேனிமிர் மந்தர வெற்பென நின்றே
வானள வோங்கு மராமரம் ஒன்றைத்
தேனினம் வான்றிசை சிந்தி யரற்ற
ஊன்முதிர் கைகொ டொசித்தனன் மன்னோ.

உடனுக வீரவாகுதேவர் மேல் நிமிர்ந்து நின்ற மந்தர மலை போன்று நின்றுகொண்டு வானளவும் உயர்ந்திட்ட மராமரம் ஒன்றை அம்மரப்பூக்கள் மீது மொய்த்திருந்த தேன ஈக்கள் சிதறி சத்தமிட்டு ஒடிடும்படியாக பல அசுரரைக் கொன்றமையால் ஊன்பட்டு நின்ற கையால் முறித்து எடுத்துக்கொண்டார். 16

அண்டம் இருண்டிட ஆதவ ரானோர்
மிண்டிய பேரொளி வீந்திட வீரன்
வண்டழை துன்று மராமரம் அங்கை
கொண்டது பன்முறை கொட்புறல் செய்தான்.

அண்டம் யாவும் இருண்டிடவும் சூரியர்களின் நெருங்கிய பேரொளி மங்கி யவிந்து போம்படியாகவும் அத்தகையாய் குளிர்ந்த தழைகள் நெருங்க விளங்கியிட்ட அந்த மராமரத்தைத் தனது அழகிய கையில் கொண்டு அதைப் பன்முறை சுழற்றினார், 17

வே று

மாயிர மருப்புள மராமரம் இறுத்தே
தூயன்அம ராடல்முயல் தொன்னிலைமை நோக்கி
ஆயிரம் அடுத்தபுயர் ஆயிரரும் அங்கண்
மூயினர்கள் அண்ணலை முரட்படை சொரிந்தார்.

பெரிய கருமை கொண்ட கொம்பரிணையுடைய மராமரத்தை முறித்து தூயவரான வீரவாகுதேவர் போர் செய்ய முனைந்து நிற்கின்ற அவரின் முந்திக்கொண்ட செயலை ஆயிரம் தோளுடைய ஆயிரம் சகத்திரவாகுகள் கண்டு தாங்களும் அங்கு போர் முயன்றார்கள். வீரவாகுதேவர் மேல் கொடிய வெம்படைகளைச் சொரிந்தார்கள். 18

தொடுத்தனர்கள் வார்கணைகள் தொட்டனர்கள் வைவேல்
எடுத்தபல தோமரம் எறிந்தனர்கள் ஆலம்
விடுத்தனர்கள் முத்தலை வியன்கழுமுள் உய்த்தார்
அடற்குலிசம் வீசினர்கள் ஆழிகள் துரந்தார்.

சகத்திரவாகுகள் வார் பூட்டிய வில்லினின்றும் அம்புகள் தொடுத்தார்கள், கூரிய வேலால் வீசி எறிந்தார்கள், கையில் எடுத்த பல தோமர ஆயுதத்தாலும் எறிந்தார்கள். ஆலப்படை விடுத்தார்கள். மூன்று கூரிய சுடர் நுனியினையுடைய கழுமுள் படையை செலுத்தினார்கள், வலிமை கொண்ட குலிசாயுதம் வீசினார்கள் சக்கரத்தையும் செலுத்தினார்கள். 19

இப்பரிசி னுள்ளபடை யாவுமுறை தூங்கு
மைப்புயல்க ளென்னவரை வின்றிவிரை வாக
ஒப்பரிய வீரன்மிசை உய்த்திடலும் அன்னோன்
துப்பொடு மரந்தனி சுழற்றிஅடல் உற்றான்.

இந்த வகையாகத் தங்களிடமுள்ள படைகள் யாவையும் சகத்திரவாகுகள் முறையாக மழையைப் பொழிகின்ற கரிய முகிற் கூட்டம் போன்று ஓய்வின்றி விரைவாக ஒப்பற்ற வீரவாகுதேவர் மீது வீசிடுதலும்; வீரவாகுதேவர் மிக்க திடமுடன் கையில் பிடித்த தனி மரத்தால் சுழற்றி வீசி அவர்கள் விடுத்த படைகள் யாவையும் வர வர அழித்திடத் தொடங்கினார். 20

விட்டபடை யாவையும் வெறுந்துகள வாகப்
பட்டிட மரங்கொடு பராகமவை செய்ய
உட்டெளிவின் மானவர் ஒராயிரரும் வீரற்
கிட்டினர் வளைந்தனர் கிளர்ந்தமர் முயன்றார்.

சகத்திரவாகுகள் விடுத்திட்ட படைகள் யாவற்றையும் வெறும் துகளாகி நொருங்கிப்போம் வண்ணம் மராமரத்தால் அடித்துப் பாழாக்கிவிட அப்பொழுது தாங்கள் என்ன செய்கின்றார்கள். எதற்காகப் போரிடுவது நன்று என்று உள்ளத் தெளிவிலாத சகத்திரவாகுகள் ஆயிரம் பேரும் வீரவாகுதேவரைக் கிட்டினார்களாய் சுற்றி வளைத்துக்கொண்டு வீரத்துடன் போர் புரிகின்றனர். 21

ஒட்டியமு ரர்டிய ஓராயிரவர் தாமுங்
கெட்டிரிய மேருநிகர் கேழ்கிளர் புயத்தோன்
மட்டுநனை வார்சினை மரங்கொடு புடைத்தே
சட்டக மிறந்துபடு தன்மைபுரி குற்றான்.

போட்டியிட்டுக்கொண்டு வீரம் பேசி போராடிய ஓர் ஆயிரம் பேரும் கெட்டு அழிந்து ஓடிடும்படி மகாமேரு மலையை நிகர்த்த தோளுடைய வீரவாகுதேவர் தேன் சொரியும் பூ மொட்டுகளுடன் மலியும் கொம்பர் கொண்ட பெரிய மராமரத்தால் அடித்து அவர்களது உடல்கள் இறந்துபடும் தம்மையைச் செய்தார். 22

செக்கர்புரை குஞ்சிகெழு சென்னிகள் கிழிந்தார்
நெக்களர் கபோலவகை நெற்றிபிள வுற்றார்
அக்கநிரை சிந்தினர் அலங்குகுழை யற்றார்
உக்கனர்கள் பல்லெயி றுடைந்தனர்கள் துண்டம்.

இப்படி வீரவாகுதேவர் அடித்தலும் சகத்திரவாகுகள் செக்கர் வானின் நிறம் போன்ற சிவந்த சடைகள் கொண்ட தலைகள் கிழியப்பெற்றார்கள் கபோல வகைகள் நொருங்கி நெக்கினார்கள். நெற்றிகள் பிளவுற்றார்கள். வரிசையான கண்கள் சிதறினர். அழகிய குண்டலங்கள் அறுந்தனர். பற்களும் கடைவாயில் பெரும்பல்லும் நொருங்கி உக்கினர், மூக்குகள் உடைந்தார்கள். 23

வாய்நிரை பகிர்ந்தனர்கள் மாழைதிகழ் கண்ட
மானவு முரிந்தனர்கள் அற்றனர்கள் பொற்றோள்
ஊனமகல் அங்கைகள் ஒசிந்தனர் தசைந்தே
பீனமுறு மார்பிடை பிளந்தனர் தளர்ந்தார்.

நிரையான வாய்கள் பிளந்தார்கள். பொன் ஆபரணம் திகள்வுறும் கழுத்துக்ளானவும் முரித்தார்கள். பொன்னனை தோள்களை இழந்தார்கள். குற்றமற்ற அழகிய கைகள் முறிந்தார்கள். தசைகள் கெட்டுப்போயிட பெருமை கொண்ட நெஞ்சு இடையில் பிளந்தார்கள். இவை கண்டு ஏனையோர் யாவரும் தளர்ந்தார்கள். 24

உந்திகள் குடங்கரின் உடைந்துகுடர் யாவுஞ்
சிந்தினர் மருங்கெழில் சிதைந்தனர் புறங்கண்
முந்துதொடர் என்பொடு முரிந்தனர்கள் வாமஞ்
சந்துபொரு இன்றமுழந் தாளடிகள் அற்றார்.

கொப்பூள் குடலினின்றும் வேறுபட்டுப் பிளவாயிட வயிறு உடைந்து குடல்கள் யாவும் சிந்தி அழியப்பெற்றனர், அரையின் அழகு சிதைந்தனர், முதுகுகள் பின்புள்ள எலும்புகளுடன் முரிந்தார்கள். அரையின் சந்துகள்! அவற்றைப் பொருந்திய தொடை முழந்தாள் கால்கள் யாவும் அற்றனர். 25

வீந்தனர்க ளோர்சிலவர் வீழ்ந்துமிதி பட்டுத்
தேய்ந்தனர்க ளோர்சிலவர் செய்யகுடர் சிந்திச்
சாய்ந்தனர்க ளோர்சிலவர் தங்குருதி ஆற்றுள்
தோய்ந்தனர்க ளோர்சிலர் துடித்தனர்கள் சில்லோர்.

சிலவர் இறந்தார்கள். சிலவர் நடக்கி வீழ்ந்து மிதிபட்டுத் தேய்ந்தார்கள். சிலவர் செம்மையான குடல்கள் சிந்தி சாய்ந்து வீழ்ந்தனர். சிலவர் தங்களுடைய உடலினின்றும் பெருகிய இரத்த ஆற்றுள் தோய்ந்து கிடந்தார்கள். சிலர் நிலத்திற் கிடந்து துடித்தார்கள். 26

எறிந்திடு படைத்தொகுதி ஏகுமுனம் வீழ்ந்து
மறிந்தனர்க ளோர்சிலவர் மாய்ந்துககன மேம்போய்ச்
செறிந்தனர்க ளோர்சிலர் சிதைந்துதலை போயும்
முறிந்தவுடல் கொண்டமர் முயன்றனர்கள் சில்லோர்.

தாங்கள் வீசி எறிந்திட்ட படைத் தொகுதிகள் சென்று சேர்வதன் முன்பாக சிலர் நிலத்தில் வீழ்ந்து இறந்தார்கள். சிலவர் இறந்து வானில் சென்று சேர்ந்தனர். சிலர் தங்கள் தலையானது அடியால் சிதறிப்போன பின்பும் முறிந்துபோன உடலம் கொண்டு போர் முயன்று நின்றனர். 27

ஏரகலும் வீரர்தமி யாக்கையிது வண்ணஞ்
சேரவிறல் உற்றுடைய செவ்வியின் எழுந்த
சோரிநதி மாநகர் தொலைந்துவளன் வாரி
வாரிதி நிறைந்தவனி மீதினும் மடுத்த.

சிறப்புகள் அகன்ற சகத்திரவாகுகள் என்பாரின் உடல்கள் இதுவண்ணமாக அழிந்துபோயிட அவர் உடலினின்றும் வலியுற்ற நிலையால் எழுந்திட்ட இரத்தம் என்னும் ஆறு பெருகிச் சென்று சூரபன்மனது பெருநகரினுட் சென்று நகரைத் தொலைத்துப் பொருட்களை வாரிக் கொண்டு சென்று கடலில் நிறைந்து மிஞ்சி இப்பூமியிலும் சேர்ந்துகொண்டது. 28

வேறு

அறந்தெ ரிந்துணர் ஆண்டகை அகன்மரம் புடைப்பக்
குறைந்த சென்னிவான் திரிவன எயிற்றெடு குலவிச்
செறிந்த தேவரோ டமிர்தொளித் துண்டவர் சென்னி
நிறைந்தி டாமதித் துணைகவர்ந் துலவுதல் நேரும்.

தருமத்தை நன்கு தெரிந்து உணர்கின்ற ஆண்டகைமையுடைய வீரவாகுதேவர் அகன்ற மரத்தால் மோதி அடிப்ப முறிந்து அழிவுற்ற தலைகள் வானில் சென்று கடைவாய்ப் பற்கள் தோன்றிடத் திரிவன எப்படியெனில்; முன்னர் தேவரோடு ஒளித்து அமிர்தம் உண்டவரான ராகு கேதுக்கள் நிறைவு பெற்றிடாத இளம்பிறைகளைக் கவர்ந்திடுதல் போன்றிருப்பது. 29

அடல்கொள் மொய்ம்பினன் மரம்புடைத் தலுஞ்சில அவுணர்
உடல்சி னப்பரி முகத்தவர் தலைதுமித் துதிரம்
நெடிதுதம் வாய்வழி சிந்தவீழ்ந் தனர்நெடுங் கடலுள்
வடவை மாமுக மங்கிகான் றிடுவதே மான.

வலிகொண்ட தோளுடைய வீரவாகுதேவர் மரத்தால் அடித்தலும் சில அசுரர்கள் உடலம் கோபமுடையகுதிரை முகங்களுடன் பொருந்தியோர்கள்; தலைகள் துவைக்கப்பட்டு வாய் வழி இரத்தம் சிந்திட வீழ்ந்து கிடப்பனர்; நெடிய கடலினுள் வடவாமுகாக்கினி அக்கினி முகத்தால் நெருப்பைக் கக்கி நிற்பது போன்றது. 30

வள்ளல் மாமரத் தண்டுகொண் டடித்தலும் வலியோர்
பிள்ளை மாமதி எயிற்றணி சிந்திவிண் பெயர்ந்தே
அள்ளல் வேலையின் முறைமுறை வீழ்வன அதன்கண்
துள்ளு மீன்கணம் உகண்டுவீழ் கின்றதோர் தொடர்பின்.

வள்ளலான வீரவாகுதேவர் பெரிய மராமரத்தின் தண்டு கொண்டு அடித்த லும் வலியுடைய சகத்திரவாகுக்களின் கடைவாயிற் பிறைபோன்ற பற்கள் சிதறுண்டு வானில் எழுந்து சென்று திரும்பவும் சேறுடைய கடலில் முறை முறையாக வந்து கடைவாய்ப் பற்கள் வீழ்வது எதுபோலுமெனில் கடலிடத்து துள்ளியெழுகின்ற மீன் கள் திரும்பவும் தெளித்து வீழ்கின்ற தன்மைபோன்றது. 31

வலிந்த ஊழ்முறை யாவரே கடந்தவர் மரத்தாற்
பொலந்த யங்குபூண் மார்பினன் எற்றிடும் பொழுதிற்
கலந்து போர்செய்தார் ஓர்சிலர் வாளொடு கரம்போய்த்
தொலைந்து ளார்செலும் நெறியின்வீழ்ந் தவர்சிரந் துணிப்ப.

உலகில் எப்பொருளினும் வலியுடைய ஊழின் திறத்தை யாவரே அறிந்தார், அல்லது கடந்தார். ஏனெனில் மராமரத் தண்டினால் அழகிய ஆபரணங்கள் பூண்ட மார்புடைய வீரவாகுதேவர் அடித்திடும் பொழுதில் அவரோடு நேரிட்டுப் போர் செய் தார் ஒரு சிலர் தமது கையில் பிடித்த வாளோடு கையும் அறுந்து மேலே போய் திரும்ப வந்து; போர் செய்யமாட்டாது தப்பிப் பயந்தோடுகின்ற சில அசுரர் மேல் முறையாக வீழ்ந்து ஓடினவருடைய தலையையும் துணித்துவிடுகின்றது. 32

இனைய பற்பல நிகழ்ந்திட இணையிலா ஒருவன்
தினையின் வேலையில் ஆயிரம் புயமுடைத் திறலோர்
அனைவர் தம்மையும் பலீறுணி படுந்திறன் அட்டுத்
தனிமை தன்னொடு நின்றனன் அமர்க்களந் தன்னில்.

இனையதாகிய பற்பல விநோத நிகழ்ச்சிகள் நிகழ்ந்திட தனக்கு இணையிலாதி ருக்கின்ற ஒருவனாகிய வீரவாகுதேவர்; தினைப்பொழுதின் முன்பாக ஆயிரம் தோளு டைய அந்த சகத்திரவாகுகள் என்னும் திறமைசாலிகள் அனைவரையும் கொன்று அழித்துவிட்டுத் தனியனாக அங்கு நின்றருளினார். 33

ஆகத் திருவிருத்தம் 803

சகத்திரவாகுகள் வதைப்படலம் முற்றிற்று.

---

## வச்சிரவாகு வதைப் படலம்

கூடி ஆரமர் இயற்றினர் தம்வலி குறைந்து
வீடி ஆவிபோய் விளிதலும் அன்னது விரைவின்
நேடி விண்ணிடை நணுகிய தூதுவர் நில்லா
தோடி யாளுடை அவுணர்கோன் முன்புசென் றுரைப்பார்.

ஒருங்கே திரண்டு கூடிப் பெரும் போர் இயற்றினர் ஆயிரம் பேரும் தமது வலிகெட்டு அழிந்து உயிர் போய் இறந்திடுதலும் அதனை விரைவுடன் பார்த்து வானில் நின்ற அசுரனின் தூதுவர்கள் மேலும் அங்கு நில்லாது ஓடி தங்களை ஆளு டையவனான சூரபன்மன் முன்பு சென்று இதனைச் சொல்வார். 1

துன்றும் ஆயிர மொய்ம்புடை நின்படைத் தொகைஞர்
சென்று சில்லமர் புரிந்தனர் அவனது தெரியா
ஒன்றோர் பாதவம் பறித்தனன் புடைத்தலும் ஒருங்கே
பொன்றி வீழ்ந்தனர் புகுந்தவா றீதெனப் புகன்றார்.

அரசே கேட்பீராக; நெருங்கியிருக்கும் ஆயிரம் தோளுடைய உனது படைக ளான சகத்திரவாகுகள் சென்று அத்தூதுவனுடன் சிறிது போர் புரிதலும் அத்தூது வன் அதனைத் தெரிந்து உடனே ஒரு தனியான பெரிய மராமரத்தைப் பறித்தான். பிய்த்தெடுத்துக்கொண்டு அம்மரத்தால் சுழற்றி ஓங்கி ஆயிரம் பேரையும் அடித்த லும் ஒருங்காக அந்த ஆயிரம் பேரும் வீழ்ந்து இறந்தார்கள். இதுதான் இங்கு நடை பெற்ற நிகழ்ச்சியாகும் எனக் கூறினார்கள். 2

புகன்ற வேலையின் அவுணர்கோன் புரையிலோன் வன்மை
புகன்ற வேலையின் வடவையார் அழலெனப் பொங்கி
அகன்ற னன்பெரு மிதத்துடன் ஆணையுந் திறலும்
அகன்ற னன்பெருந் துயர்கொளீஇ யினையன அறைவான்.

தூதுவர் சொல்லிய அளவில் அதுவும் குறைவிலாத வீரவாகுதேவரின் வலிமை யையே எடுத்து ஒரு மரத்தால் ஆயிரம் பேரையும் கொன்றார் எனும் வார்த்தை கேட்டபோதே சூரபன்மன்; சமுத்திரத்தில் நிற்கும் வடவாமுகாக்கினி போன்று கோபத்தால் மனம் பொங்கி, கோபத்தால் அகன்று பருத்து தனது பெருமிதமும் ஆணையும் திறலும் நீங்கினான். பெருந் துயரம் கொண்டு இவற்றைச் சொல் வான். 3

உமைய ளித்திடு சிறுமகன் தூதுவன் ஒருவன்
எமது முன்னம்வந் தவமதி செய்தனன் ஏகி
அமரில் யாரையும் அட்டுநின் றின்னமும் அகலான்
நமது கொற்றமும் நன்றுநன் றுலென நகைத்தான்.

உமையம்மையார் தந்தருளிய ஓர் சிறு குமரனின் தூதுவன் ஒருவன் எமது முன்பாக வந்து என்னை அவமதித்து பல காரியங்களைச் செய்தான். திரும்பிப்போய் போரிலே எல்லாரையும் அழித்திட்டு நின்று இன்னமும் அவன் அகலான் போலும். நமது மேன்மைகள் யாவும் மிகவும் நன்று, நன்று என்று கூறி கோபத்தால் சிரித் தான். 4

முச்ச கம்புகழ் அவுணர்கோன் முனிவினை முன்னி
யச்செ னக்கிளர்ந் தெழுந்துசென் றவனடி வணங்கி
மெய்ச் சிரங்கள் ஓரையிரு திறலுடைய விறல்சேர்
வச்சி ரத்திரு மொய்ம்புடைக் காதலன் வகுப்பான்,

மூன்றுலகும் புகழ்கின்ற சூரபன்மன் இவ்வாறு கொண்ட கோபத்தினை எண்ணி அச்செனும்படி நேரெழுந்து சென்று சூரபன்மன் காலில் தாழ்ந்து வணங்கி உடம்பின் பத்துத் தலைகளும் இருபது கைகளும் மிகு வலிமையும் கொண்ட வச்சிரவாகு என்னும் சூரபன்மனுடைய காதல் மைந்தன் இதனை வகுத்துச் சொல்வான். 5

நொய்ய தூதுவன் பொருட்டினுல் இத்திறம் நுவறல்
ஐய கேட்கநிற் கியலுமே இறையிவண் அமர்தி
மொய்யில் யான்சென்று மற்றவன் பெருமுரண் முருகிக்
கைய கப்படுத் துய்ப்பனுல் அன்னது காண்டி.

மிக அற்பனான அந்தத் தூதுவன் பொருட்டாக எனது ஐயனே நீர் இப்படி எங்களைப் பார்த்துக் கேட்கவும் உமக்கு இயல்பாவதோ? இல்லையே. நீர் ஓர் இறைப்போது இங்கு இரும். மிக்க வீரத்துடன் யான் சென்று மற்று அந்த தூதுவனுடைய பெருவலிமையைக் கெடுத்து வென்று கைப்பிடியாகப் பிடித்து வந்து உனது முன் விடுப்பேன். அதனை நீர் காண்பீராக. 6

வேறு

என்ன லோடும் இறப்பெதிர் உற்றிடா
மன்னன் மைந்தனை நோக்கி மகிழ்வுறு
அன்ன தன்மையை ஆற்றுதி நீயெனப்
பன்னி யேகும் படிபணித் தானரோ.

என்று இவ்வாறு வச்சிரவாகு கூறுதலோடும் அவ்வேளை மரணம் என்பதை அடையாத பேறுடைய சூரபன்மன் தனது மகனை நோக்கி மகிழ்வுற்று அந்தச் செயலை என் மகனே நீ செய்வாயாக என்று சொல்லி தன் மகனைச் செல்லுமாறு செலுத்தினான். 7

விடைபு ரிந்திட மெய்வழித் தாதைதன்
அடிவ ணங்கி யகன்றுமன் கோயிலிற்
புடையி ருந்தன் போர்ப்படைச் சாலையின்
இடைபு குந்தனன் யாரும் வழுத்தவே.

செல்லுமாறு சூரபன்மன் விடை கொடுத்திட அந்நேரம் மெய்யான வழியால் தந்தையின் காலில் வணங்கி அங்கு நின்றும் நீங்கி தனது உயர்வான அரண்மனையின் பக்கராக இருந்த தனது போர்ப்படைகள் நிரம்பியிருக்கும் ஆயுதசாலையில் உட்புகுந்தான் வச்சிரவாகு என்னும் மைந்தன். அவன் போர்க்கோலங் கொள்வதற்குச் செல்லும் தோறும் அவனைப் பலரும் வணங்கிடும்படியாக. 8

அட்டல் இன்றி அமர்தரு சாலிகை
இட்டு மார்பின் இறுக்கிவயத்தகு
பட்டி கைக்கலன் பாலத் துறுத்தியே
புட்டில் அங்குலி பூண்டு பொருக்கென.

ஆயுதசாலையில் சென்ற வச்சிரவாகு அழிவின்றி இருக்கின்ற ஓர் கவசத்தை நெஞ்சினில் பூட்டி இறுக்கினன். பின்னர் வெற்றியுடைய நெற்றிப் பட்டையத்தை நெற்றியிலும் பக்கரிலும் பொருந்துமாறு இறுக்கியே தனது கை விரல்களுக்கு விருவி 9
றென உறைகளைப் போட்டுக் கொண்டான்.

ஆணி கொண்ட அயிற்கணை பெய்தபொற்
றூணி கொண்டுபின் றும்பை மிலைச்சியே
நாணி கொண்டு நலந்தரு கார்முகம்
பாணி கொண்டு படைபிற வேந்தியே.

வைரம் கொண்ட அயில்முகக் கணைகளை வைத்திருக்கின்ற அம்புக் கூட்டினை பின் முதுகில் தொங்கவிடுத்தான் தும்பை பூவின் மாலையைச் சூடினன் நல்ல நாண் கொண்டு நலத்தைக் கொடுக்கின்ற வில்லை தனது கையில் எடுத்துக்கொண்டு மற் 10
றைய கரங்களில் பிறபடைகளையும் ஏந்திக்கொண்டு.

கொற்ற மாரமர்க் கோலங்கள் உள்ளன
முற்ற வேகொண்டு மூரிவில் வெஞ்சமர்
கற்ற காளை கதுமெனு நோக்கியே
சுற்று கம்பியர்க் கின்னன சொல்லுவான்.

கொற்ற விளங்கிடும் போர்க்கோலங்கள் எவையெவையுள்ளனவோ அவை யாவையும் முற்றுறக் கொண்டு வரி வில்லுடைய கொடிய போரினை நன்கு கற்றுக் கொண்ட இளவயதின் நலம் பெருகிடும் வச்சிரவாகு தன்னைச் சுற்றி நிற்கின்ற சேவ கர்களை விரைவுடன் பார்த்து இந்த வார்த்தையைச் சொல்கின்றுன். 11

மிக்க நம்படை வெள்ளத்தி லோர் சில
தொக்க பூசல் தொழிலினை முற்றிய
இக்க ணைந்தரு வீர் இவண் என்றலும்
தக்க தேயெனத் தாழ்ந்தவர் போயினர்.

மிகுதி கொண்ட எமது சேனைகளான வெள்ளங்களில் சில வெள்ளம் சேனைகள் போர்த் தொழிலினைத் தேர்ந்து முதிர்ந்துள்ளனவாய் விளங்கிடுகின்றவைகளை இக்க ணம் என்னிடம் இங்கு கொண்டுவருவீராக என்றலும் அதுகேட்ட தூதுவர்கள் அது தகுதியுடையது செய்வோம் என வணங்கிவிட்டு சென்றூர்கள்.

ஆங்கு நின்றிடும் ஏவலர் அப்பணி
தாங்கி யேகத் தகுவர்தங் கோமகன்
நீங்க லின்றுதன் நீழலின் வந்திடும்
பாங்கர் யாரையும் நோக்கிப் பகருவான்.

ஆங்கு நின்ற அச்சேவகர்கள் அந்தப் பணியினை உடனுக ஏற்றுக்கொண்டு சென் றிட வச்சிரவாகுவானவன் துணை பிரியாது தன்னுடன் நிழல் போன்று பாங்கராக எப்பொழுதும் கூடிவருகின்ற தோழர் யாரையும் பார்த்து இதனைச் சொல்லு 13
வான்.

குமர வேள்விடு கோற்றொழில் தூதனைச்
சமரில் வென்றொரு தாம்பில் தளைபுரிஇ
இமையொ டுங்குமுன் எந்தைமுன் உய்க்குவன்
அமைதிர் போருக் கனைவரும் என்றனன்.

குமரக்கடவுள் இங்கு வரும்படி விட்டிட்ட மேம்பாடுடைய தொழில் கொண்ட அத்தூதுவனை யான் போரில் வென்று அவனை ஓர் விலங்கில் இட்டு சிறைபிடித்து வந்து ஒரு இமைப்பொழுதின் முன் எந்தை சூரபன்மன் முன் விடுப்பேன். அதற்காக அவனுடன் போர்செய என்னுடன் செல்லுமாறு நீங்களும் போர்க்கோலங் கொள்ளுங்கள் என்றான் வச்சிரவாகு. 14

பாலன் மற்றிவை பன்னலும் நன்கென
ஏலு கின்ற இளைஞரும் மள்ளரும்
மேலை வெஞ்சமர் செய்ய விரைந்து போர்க்
கோல மெய்திக் குழீஇயினர் கொட்புற.

பாலப்பருவமுடைய வச்சிரவாகு என்னும் அசுரன் மற்றும் இந்த வார்த்தைகளைச் சொல்லலும் அதுகேட்டு அவன் தோழர்கள் யாருமான வலியுடைய இளைஞர்களும் வீரர்களும் மேலாகும் கொடிய போரைச் செய்வதற்கு இசைந்ததோர் போர்க்கோலம் கொண்டு வந்து வச்சிரவாகுவோடு சிறப்புடன் கூடிக்கொண்டார்கள். 15

தாறு கொண்டவன் தன்குறிப் பிற்செலும்
நூறு நூறு நொறில்பரி மான்பெறீஇ
வீறு பண்ணமை தேரொன்றின் வெய்தென
ஏறி ஞன்மொய்ம் பிருபது கொண்டுளான்.

கூரிய வேலைக் கைக்கொண்டவனை வச்சிரவாகுவின் குறிப்பின் வழி செல்கின்ற வேகமாகச் செல்லும் குதிரைகள் பதினாயிரம் பூட்டப்பெற்றதாய் நிற்கின்ற வீறுகொண்டிட்ட அழகிய தேர் ஒன்றின் மீதாக விரைவுடன் இருபது தோளுடைய வச்சிரவாகு ஏறிக்கொண்டான். 16

தந்தி ரத்துத் தலைவர்தம் மைந்தரும்
மந்தி ரத்து மதிஞர்தம் மைந்தருஞ்
சுந்த ரத்துத் தொடர்பினில் சுற்றுறு
எந்தி ரப்பெருந் தேர்களில் ஏறினர்.

அவ்வேளை அவன் துணைவர்களாக அமைந்து நின்ற சேனாபதிகளின் மைந்தரும் மந்திரிகளின் குமாரருமாகியோர்கள் நெடுநாளாக வச்சிரவாகுவுடன் கொண்டிருந்த சுந்தரமுடைய தோழமைத் தொடர்பால் அவனைச் சுற்றிக்கொண்டு இயந்திரங்கள் பூட்டப்பெற்ற தேர்கள் மேல் ஏறிக்கொண்டனர். 17

ஆன வேலை அரசன் சுதன்விடப்
போன கம்மியர் போர்வினை கூறியே
யானை மேல்கொண் டிரும்பணை எற்றலுஞ்
சேனை தம்முட் சிலதிரண் டுற்றவே.

அவ்வாறான நேரத்து சூரபன்மன் மகன் வச்சிரவாகு முன்னர் அனுப்பிடச் சென்ற தூதுவர்கள் போர் செய்கின்ற செயலினை எடுத்துக் கூறி யானை மேல் ஏறிக் கொண்டு பெரிய முரசப்பறையை அடித்தலும் அதுகேட்ட சேனைகளில் சில எழுந்து திரண்டுகொண்டுபுறப்பட்டன. 18

ஒருங்கு தாம்பல ஓடலின் அன்னவை
பரங்கொ ளற்கரி தாகிப் படிமகள்
புரங்கி ழிந்திடு புண்கொண் டரற்றல்போல்
இரங்கும் ஓதைகொண் டேகுவ தேர்களே.

இச்சேனைகள் புறப்பட்ட பொழுதினில் ஒருங்காக பல தேர்கள் ஓடுதலினாலே அந்தத் தேர்களினதும் சேனைகளினதும் பாரத்தைத் தாங்குதற்கு அருமையாக இருத்தலால் இப்பூமிதேவியினுடைய உடல் கிழிந்து ஊறுபட்ட புண்ணினைத் தாங்கிக் கொள்ள முடியாது பூமிதேவி அழுது சத்தமிட்டவாறு போன்று தேர்கள் பெரும் இரைச்சலுடன் பூமியில் வழிக்கொண்டு ஓடுவன. 19

கருவி வானங் கடலுண்டு செல்லுறும்
வரைக ளாமென வந்துதம் மேலுறீஇ
உருமி னத்தை உகுத்தொலி கேட்டலும்
வெருவி வீழ விரைவன வேழமே

வானில் உள்ள மேகங்கள் கடலினை உண்டுகொண்டு சென்று தங்கிடும் பெரு மலைகள் போன்ற யானைகள் ஓடிவந்து மேகங்கள் மேல் பெருமுழக்கத்துடன் முட்டுதலும் அம்மேகங்கள் அவ்வோசை கேட்டலும் அஞ்சி தங்கள்பால் உள்ள இடிகளையும் சொரிந்துவிட்டு வீழும்படியாக அங்கு யானைகள் விரைவுடன் செல்வன 20

கிட்டி நாடு நயனமுங் கேடுசெய்
தொட்டலார்தம் உளமுஞ் சுழன்றிட
எட்டு மாதிரத் தெல்லையுஞ் சாரிகை
வட்ட மாகி வருவன வாசியே.

கிட்டிப் பார்க்கின்ற கண்ணையும் கெடுக்கக் கூடியதாய் பகைவருடைய உள்ளங்களையும் சுடக்கூடியதாய் எட்டுத் திக்கின் எல்லையையும் இடம் வலமாகும் சாரிகை வட்டமாகி விரைந்து கொண்டு அங்கு வேகமுடன் குதிரைப் படைகள் வருவன.
21

ஆடல் வேல்கதை ஆழி அலப்படை
பாடு சேர்ந்த பலகைவாள் வாள்சிலை
நீடு சூலம் நெடுமழு ஆதியாக்
கூடு பல்படை கொண்டிடு கையினர்.

போர் புரியும் வேல் கதாயுதம் சக்கரம் கலப்பைப்படை பெருமை சேர்ந்த பலகை கூரிய வாள் வில்லு நீண்ட சூலம் நெடிய மழுவாயுதம் ஆதியாகக் கொண்ட பல படைகளையும் ஏந்திக் கொண்ட கையினை உடையராகியும். 22

இடித்த சொல்லர் இமையவர் போர்பல
முடித்த மொய்ம்பர் முரணிய பல்படை
வடித்த கற்பினர் மால்வரை யானவை
படித்த லத்திற் படர்ந்தன்ன காட்சியார்,

இடியேறு போன்ற சொல்லினை உடையர்களு ; தேவர்களுடன் போர் செய்து வெற்றியாகி இனிமேல் போர் செய்ய எத்தேவரும் இல்லை எனும்படியாகி பல போர் களை முடித்து நின்ற வலியுடையாரும்: முரணுடைய பல படைகளை பிரயோகிக்கும் தன்மைகளை நன்றுடன் கற்றுள்ள கற்பனைத்திறம் உடையோர்களும்; பெரிய மலைக ளானவை இப்பூமியினிடத்து சென்றுகொண்டிருப்பது போன்ற காட்சியினை உடைய வரும் 23

விசும்பின் மாலை மிலைச்சிய குஞ்சியர்
பசும்பொன் வீரமெய்ப் பட்டிகை நெற்றியர்
நிசும்பர் அன்னதோர் நேரலர் சோரியின்
அசும்ப றாத அகன்பில வாயினர்.

தேவ உலக தருக்களின் பூக்களாலயா மாலைகளையணிந்த கூந்தலை யுடையவர்களும் பசிய பொன்னினால் செய்த வீரமுடைய பட்டையத்தை அணிந்த நெற்றியை உடை யவர்களும் நிசும்பாசுரனைப் போன்ற கொடுமை கொண்டவர்களும் மிருகங்களை உண்ட லால் இரத்தத்தின் சொரிதல் நீங்கிடாத அகன்ற பெரிய வாயினை உடையவர்கள்களும். 24

தீம டங்கலின் திறலினர் தென்புலக்
கோம டங்கலின் கொள்கையர் தங்கிளை
தாம டங்கத் தறிபிளந் தார்த்தெழு
மாம டங்கல் தனைப்பொரும் வன்மையார்.

கொடிய சிங்கம் போன்ற திறமை உடையவர்கள்: தென்திசைக்கு இறையான இயமனின் கொள்கையை உடையவர். தங்களது அசுரக்கிளை முழுவதும் அடங்கிட அன்று ஆரவாரத்துடன் தூணைப் பிளந்து எழுந்து வந்த பெரிய நரசிங்கத்தை நேரி ட்டுப் போர் செயும் வல்லமையுடையவர்கள், 25

ஏகும் வெஞ்சமர்க் கென்றலும் பூண்பரீஇ
மாகம் அஞ்ச வளர்ந்தெழு தோளினர்
மோகம் இல்லவர் மொய்ம்பினின் மேலவ
ராகும் வீரர் அளப்பிலர் எய்தினர்.

ஆகிய இத்தகையோரை; நீங்கள் எழுந்து போங்கள் கொடிய போருக்கு என்று தூதுவர் பறை முழக்கலும் அதுகேட்டு பெருமகிழ்வு கொண்டமையாலே தமது தோளில் அணிந்துள்ள ஆபரணங்கள் கட்டுவிட்டு வானுலகம் அஞ்சும்படி வளர்ந்தெழுகின்ற தோளினையுடையவர்கள் தம்மீது பற்றில்லாதவர்கள் வன்மையில் மிகமேம்பட்டவர்கள் ஆகிய இத்தன்மையராகும் வீரர்கள காலாட்படையாகி அளவு கடந்தோர் சென்றனர். 26

ஐந்து நூறெனும் வெள்ளம் அழுங்குதேர்
தந்தி யின்குழுத் தானும் அனையதே
உந்து மாக்களோ ராயிரம் வெள்ளமாம்
பந்த மிக்க பதாதி இரட்டியே.

இவ்வாறு செல்லும் சேனையில் ஐந்நூறு வெள்ளம் இரைகின்ற தேர்களும் யானைப்படையானதும் அப்படியே ஐந்நூறு வெள்ளமாகவும், தாவிப் பாய்ந்து செல்லும் குதிரைகள் தாமும் ஓர் ஆயிரம் வெள்ளமாகவும், வலிமை மிக்க அணியாகச் சென்ற காலாட்படையின் கணிதம் இரண்டாயிரம் வெள்ளம் என்னும் கணக்காகவும். 27

இத்தொ கைப்படும் ஈரிரு தானையும்
மைத்தி ரைக்கடல் வாரியின் ஆர்ப்புறீஇப்
பத்தி ரட்டி படர்புயத் தண்ணலைத்
தத்த மிற்கலந் தொன்றித் தழீஇயின.

இத்தொகைப்பட்ட தேர், யானை குதிரை, காலாள் என்னும் நான்கு வகையான படைகளும். கருமை கொண்ட திரைக்கடல்களாகும் சமுத்திரம் போன்று இரைந்து ஆர்ப்பரித்து; அகன்று படர்ந்த இருபது தோளுடைய வச்சிரவாகு என்னும் தலைவனை தாங்கள் தாங்களாக வந்து கூடிச் சேர்ந்துகொண்டன. 28

துடிவ லம்புரி துந்துபி சச்சரி
கடிகொள் மொந்தை கரடிகை தண்ணுமை
இடிகொள் பேரி இரலைகள் ஆதியாய்
முடிவி லாவிய முற்று முழங்கிய.

உடுக்கை வலம்புரி துந்துபி சச்சரி பேரோசை தரும் மொந்தை கரடிகை மத்தளம் இடிபோல் முழங்கும் பேரிகை கொம்பு வாத்தியம் ஆதியாகச் சொல்லப்பெறும் முடிவற்ற வாத்தியங்கள் முற்றும் அவ்விடத்து எங்கும் முழக்கம் செய்தன. 29

இற்ற எல்லையின் ஈரிரு தானையும்
நெற்றி யேகடை நீடயலிற் செல
மற்று ளார்களும் வந்திட வச்சிரப்
பொற்ற டம்புயன் பொள்ளென வேகினான்.

இவ்வாறு பெருநிலைகொண்ட சேனைகள் புறப்பட இநத எல்லையில் நான்கு வகையான சேனையும் முன்னும் பின்னும் பக்கரின் இருபுறமும் செல்ல மற்றுள்ள தனது தோழர்களும் வந்திட வச்சிரவாகு என்னும் பொன்னார்ந்த தோளினையுடையவன் விரைவாக வீரவாகுதேவரை நோக்கிச் சென்றான். 30

வல்லி யக்கடு மான்பொரு மானவர்
செல்வி யக்கமுஞ் செல்லினை மாறுகொள்
சொல்லி யக்கமுந் துண்ணெனத் தொக்கெழு
பல்லி யக்கடல் ஆர்ப்பும் பரந்தவே.

சிங்கேறு போன்ற வலிமையை ஒத்திருக்கும் வீரர்கள் செல்கின்ற வேகமும்; அவர்களது வாயில் வரும் இடியேற்றேடுமாறு கொள்ளும்படியான சொற்களின் இயக்கமும்; யாரும் திடுக்கிடும்படி தொகுத்து ஆர்ப்புற்று எழுந்திடுகின்ற வாத்தியங்கள் என்னும் கடலின் முழக்கமும் எழுந்கிட்டு எங்கும் பரந்தது. 31

ஊழி மால்படை ஒல்லென வேயெழப்
பூழி ஈண்டிவிண் பொன்னென மூடிய
வேழ மால்வரை வீழ்தகு தானநீர்
ஆழி யென்ன அகன்புவி கொள்ளவே.

ஊழியிலும் அழிவுறாப் பெரும்படை ஒல்லென இரைந்து இவ்வாறு எழுந்து சென்றிட அவர் செலவால் எழுந்துள்ள புழுதி எங்கும் பரந்து வானம் முழுவதும் விரைவுடன் மூடிக்கொண்டன. அச்சேனையின் யானைப்படைகள் சொரிந்திட்ட மத நீரானது கடல் போன்று பெருகி இந்த அகன்ற பூமியை வளைந்துகொண்டது. 32
புழுதி வானம் கொண்டது. மதநீர் பூமியைக் கொண்டது.

திகந்தம் எட்டுந் திருநிழல் ஒச்சியே
உகந்த தேர்களின் ஒண்கொடி ஆடுவ
குகன்வி டுத்திடு கொற்றவன் ஆற்றல்கண்
டகன்சி ரங்கள் அசைப்பன போன்றவே.

எட்டுத் திக்கின் எல்லை வரையும் நல்ல நீழலினைப் பரப்பியவாறு சென்றுகொண்டிருக்கும் தேர்கள் மீது நாட்டிய கொடிகள் ஆடிக்கொண்டிருப்பன எதுபோலென்றால்; உள்ளொளியாகும் முருகப்பிரான் விடுத்திட்ட தூதுவர் வீரவாகுதேவரின் ஆற்றலைக் கண்டு அத்தேர்கள் அகன்ற தமது தலைகளை அசைத்து ஆட்டி மகிழ்வுறல்போன்றது. 33

ஆகும் எல்லை அவுணர்மன் தேர்மிசைப்
பேய்கள் சூழ்ந்து பிணங்கி மலைத்தன
காகம் யாவுங் கழுகும்வெஞ் சேனமுங்
கூகை யோடு குழீஇயிரங் குற்றவே.

அவ்வாறாக படை எழுச்சி நிகழ்ந்திட வச்சிரவாகு செல்லும் எல்லையில் அசுரர் தலைவன் வச்சிரவாகுவின் தேர் மேலாகப் பேய்கள் சூழ்ந்து பிணைபட்டுப் போரிட்டன. காகங்கள் யாவும் கழுகும் கொடிய பருந்தும் கூகையோடு கூடி இரங்கி அவனது தேர்மேல் விழுந்தடித்து அழுதன

காகம் அழுவது ஓர் துர்ச்சகுனம் என்னும் கொள்கையைக் காண்க. 34

மடித்த வாயுடை வச்சிர மொய்ம்பினன்
பிடித்த கையிற் பெருஞ்சிலை வீழ்ந்தது
தொடுத்த வெந்நுறு தூணியும் இற்றதால்
துடித்த வால்இடக் கண்களும் தோள்களும்.

கோப மிகுதியால் மடித்த வாயுடைய வச்சிரவாகு கையில் பிடித்த பெரிய வில்லு தவறி வீழ்ந்தது முதுகின் புறமாகத் தொடுத்துப் பூட்டியிருந்த அம்புக்கூடு அறுந்து வீழ்ந்தது. அவனுடைய இடக்கண்ணும் இடது தோளும் துடித்தன. 35

அண்ணல் மைந்தன தாழியந் தேர்மிசைக்
கண்ண கன்கொடி கையற வீழ்ந்தன
விண்ணின் ஏறு விசும்பின்றி ஆர்ப்பன
எண்ணில் தீக்குறி இவ்வகை யுற்றவே.

தலைவனை சூரபன்மன் மகன் வச்சிரவாகுவின் தேரில் கட்டிய அகன்ற சிங்கக் கொடி அறுந்து வீழ்ந்தது. வானில் இடிமுழக்கம் முகில் இல்லாமலே சத்தமிடுவன. இதுபோன்று இன்னும் எண்ணற்ற தீய சகுனங்கள் இவ்வகை பெருகிடும்படியாக நிகழ்ந்துகொண்டன.

பிரயாணத்தின்போது தீய சகுனம் காணப்பெறின் பிரயாணத்தை விலக்கிடுதல் முறை என்பதற்கு ஏற்ப இவ்வணம் முதற்கண் அவனுக்குத் துர்நிமித்தங்கள் தோன்றின. 36

உற்ற காலவை உள்ளுறக் கொள்கிலன்
செற்ற மேல்கொண்டு சென்னியோர் பத்துளான்
மற்றோர் தூணியும் வார்சிலை யுங்கொளாப்
பொற்ற டங்கை புறந்தனிற் சேர்த்தினன்.

இவ்வாறு தீய சகுனங்கள் நேர்ந்துள்ள போதும் அவைகளைப் பற்றியாதானும் ஓர் சிந்தனையை தனது உள்ளத்தில் கொள்ளாதவனாய் பத்துத் தலையுடைய வச்சிரவாகு மிகு கோபம் கொண்டு தவறிப்போன வில்லையும் அம்புக் கூட்டினையும் நீக்கிவிட்டு வேறொன்றினை எடுத்துக்கொண்டு பொன் போன்ற தனது விசாலித்த கையின் புறத்தினிலே மீண்டும் முன்போல் அம்புக்கூட்டையும் வில்லையும் சேர்த்தான். 37

மொய்கொள் வச்சிர மொய்ம்பன்இத் தன்மையால்
வெய்ய தன்படை வெள்ளமோ டேகியே
செய்ய வேலுடைச் சேவகன் எவல்செய்
ஐயன் நின்ற அடுகளம் எய்தினன்.

வலிமை கொண்ட வச்சிரவாகு இத்தன்மையால் கொடிய தனது படையாகும் சேனை வெள்ளங்களுடன் சென்று செம்மை கொண்ட வேலினைக் கையில் ஏந்திய பெருமானின் ஏவலினைச் செய்கின்ற எமது ஐயன் வீரவாகுதேவர் தனித்து நிற்பு றும் போர்க்களத்தைச் சேர்ந்தான். 38

வண்டு லாங்தொடை வச்சிர வாகுதன்
தண்ட மோடு சமர்க்களஞ் சேர்தலும்
அண்டர் நாயகன் தூதுவன் அன்னவை
கண்டு நின்று கழறுதல் மேயினன்.

வண்டுகள் உலாவிடுகின்ற மாலையணிந்த வச்சிரவாகு தன்னுடைய பெரும் சேனையோடு போர்க்களத்தைச் சென்று சேர்தலும் தேவர்கட்கு எல்லாம் நாயகரான சுப்பிரமணியப் பெருமானின் தூதுவர் வீரவாகுதேவர் அவற்றைக் கண்டு நின்று இவ ற்றைச் சொல்லத் தொடங்கினர். 39

வேறு

இந்திர ஞால வையத் திறைவனே அல்லன் மற்றை
மைந்தரில் ஒருவ னாகும் வருபவன் வருவான் றன்னை
முந்திய தானை யோடு முரணற முருக்கி வீட்டி
அந்திவான் புகுமுன் எந்தை அடிதொழப் போவன் என்றான்.

இங்கே வருகின்றவனைப் பார்த்தால் இந்திர ஞானம் என்னும் தேருக்கு அதி பனான சூரபன்மன் அல்ல அவனுடைய மைந்தர்களில் இவன் ஒருவனாகும். சரி யாமென்றாலும் வருகின்றவன் வரட்டும் வருகின்ற இவனை முற்பட்ட பெரும் சேனை யோடும் வலிகெட்டழியக் கொன்றுவிட்டு மாலையில் சூரியன் அத்தமிக்குமுன் எந்தை பெருமானின் திருவடி தொழப்போவேன் என்றார் வீரவாகுதேவர். 40

எறிதிரை அளக்கர் என்ன ஈண்டுறும் அனிகம் யாவும்
முறைமுறை சாடி வந்த முதல்வனை முடித்து மாலை
உறுதல்முன் விசய மொடும் ஒய்யென மீளேன் என்னின்
அறுமுக ஐயன் தூதன் ஆவனோ அடிய னென்றான்.

திரை வீசிடும் சமுத்திரம் போன்று பெருகி ஈங்கு வரும் சேனைகள் யாவற்றையும் முறை முறையாகக் கொன்றுவிட்டு அவர்களுடன் வரும் முதல்வனை முடிவாக்கி மாலைக்காலம் வரமுன்பு வெற்றியுடன் விரைவுடன் மீளேன் என்னில் அடியேனாகும் யான் ஆறுமுகப் பெருமானின் தூதன் ஆவனோ என்றார். 41

எண்டிசை புகழும் வீரன் இனையன விளம்பிச் செவ்வேள்
புண்டரீ கத்துப் பொற்றாள் புந்தியால் இறைஞ்சிப் போற்றி
மண்டமர் முயன்று நேமி மறிதர வரைகள் கீற
அண்டமுந் திசையும் வானுங் குலுங்கத்தோள் கொட்டி ஆர்த்தான்.

எட்டுத் திக்கும் புகழ்கின்ற வீரவாகுதேவர் இவற்றைக் கூறி செம்மையான திருக்கோலமுடைய ஆறுமுகப்பெருமானின் பொற்றுளினை மனதால் வணங்கித் துதித்து பெரும் போர் செய்ய முயன்று கடலுங் கலங்கிட மலைகள் கிழிய அண்டமும் திசைகளும் வானமும் குலுங்கிடும்படி உரப்பாகத் தனது தோளைத் தட்டி மகிழ்வால் ஆர்த்திட்டார். 42

ஆர்த்திடும் ஓதை கேளா அமர்குறித் தெழுதேர் மேலோர்
கார்த்திடு தந்தி மேலோர் கவனமாப் புரவி மேலோர்
பேர்த்திடு நிலத்தின் மேலோர் பிறங்குசி ரவுணர் யாரும்
வேர்த்தனர் திரிந்து சிந்தை வெருவினர் விளம்பு கின்றூர்.

இவ்வாறு ஆர்த்திட்ட ஓசை கேட்டு போர் குறித்து எழுந்து புறப்பட்டு வந்தோரில் தேரில் இருந்தோர்; கறுத்த நிறமுடைய யானைமேலிருந்தோர் கடிவாளமுடைய குதிரை மேலோர் நிலத்தின் மேல் போய்க்கொண்டிருக்கும் காலாட்படை வீரர் ஆகிய; தேரில் யானையில் குதிரையில் நிலத்திலுள்ள அத்தனை சீர்கொண்ட அசுர வீரர் யாவரும் திக்கிட்டு உடலம் வேர்த்து மனம் மயங்கிப் பயங்கொண்டோராய் இதனைச் சொல்கின்றனர். 43

வாழிய உலகம் யாவும் மன்னுயிர்த் தொகையு மாய
ஊழியில் தனிநின் றூர்க்கும் உருத்திரன் ஆர்ப்போ அன்றேல்
ஆழிகட் கரசன் ஆர்ப்போ அண்டங்கள் நெக்க ஆர்ப்போ
ஏழ்கட லுடைந்த ஆர்ப்போ இத்திறம் ஆர்ப்ப தென்றூர்.

இது என்னவாகுமோ இங்கு கேட்ட சத்தம்: வாழ்வு தருகின்ற உலகம் யாவையும் அதில் வாழ்கின்ற மேலான உயிர்கள் யாவும் மாய்ந்து போவதற்காக ஊழிக்காலத்து தனியே நின்று ஆர்க்கின்ற உருத்திரமூர்த்தியின் ஆரவாரிப்போ இது! அல்லது சமுத்திரங்கட்கு அரசனான வருணதேவனின் ஆர்ப்போ அல்லது அண்டங்கள் நெகிழ உடைந்திட்ட தன்மையால்எழுந்த ஓசையோ ; அல்லது எழுகடல்களும் நிலைகெட்டு உடைந்து நின்ற ஆர்ப்போ? இத்தன்மையான ஓர் தொனி தோன்றுவதற்குக் காரணமாகுமென்றூர். 44

செருவலி கொண்ட சீற்றச் செங்கணுன் ஆர்க்கும் ஓதை
மருமலர்த் தொடைய லாக வச்சிர வாகு வென்போன்
இருபது செவியி னூடும் இரவியம் புழைகள் புக்க
உருமெனச் சேற லோடும் உளம்பனித் துரைக்கல் உற்றூன்.

போர்வலி கொண்ட கோபத்தால் சிவந்த கண்ணுடைய வீரவாகுதேவர் ஆர்க்கின்ற ஓசையானது வாசமுறும் மாலையணிந்துள்ள வச்சிரவாகு என்பவனின் இருபது காதில் ஒளியுடைய அழகிய துவாரங்களில் ஊடாக புகுந்துள்ள இடியேறு எனும்படி சென்று சேரலும் உள்ளம் நடுங்கி இவற்றைச் சொல்லத்தொடங்கினுன். 45

ஈரெழு திறத்த வான உலகினுள் இன்று காறிப்
பேரொலி கேட்ட தின்றூல் பிறந்ததித் துழனி யாதோ
தேருதி ரென்று பாங்கர் உழையரில் செப்பத் திண்டேர்ச்
சாரதி விசய னென்பான் தாழ்ந்திவை புகலல் உற்றூன்.

பதினான்கு என்னும் திறத்தினையுடைய உலகினுள் இன்று வரையும் இப்படியாக ஓர் பேரோசை கேட்கப்படவில்லை. அப்படியான இந்த ஓசை யாதாயிருக்குமோ? அதை நாடி அறியுங்கள் என்று பக்கரில் நின்ற தனது தூதுவர்கட்குச் சொல்லிட அதுவேளை வச்சிரவாகுவின் திண்மையுடைய தேர்ச்சாரதியாகின்ற விசயன் என்பவன் இதைச் சொல்லத் தொடங்கினான். 46

தெற்றென உணர்தீ மான்தேர் செலுத்திய வலவ னென்றே
மற்றென துரையை எள்ளல் வல்லைமேற் காண்டி எந்தை
அற்றமில் படையி னோடும் அமர்செய வருதல் நாடி
ஒற்றென நின்றோன் போர்வேட் டார்த்திடும் ஒலியி தென்றான்.

ஐயனே! தான் சொல்வதை உடன் மனதில் உணர்ந்துகொள்ளும். எனது வார்த்தையை சாரதி சொல்வது என்று இகழாதீர். விரைவுடன் இதைப் பின்னால் காண்பீர். எங்கள் அரசரான நீர் குறைவிலாத பெரும் படையுடன் போர் செய்ய வருகின்றதை நாடிக் கண்டுகொண்டு முன்னர் தூதுவன் எனும்படி வந்துள்ள வீரவாகு போர் செய்ய விரும்பி ஆர்த்திட்ட ஓசைதான் இது. என்றான் விசயன் என்னும் சாரதி. 47

தூதுவன் ஆர்ப்பி தென்று சொல்லுமுன் உருத்துக் கண்கள்
மீதெரி பொங்க நக்கு வெய்துயிர்த் துரப்பி யான்போய்
ஈதொரு கணத்தின் அன்னான் இகல்முரண் அழித்துப் பற்றித்
தாதைமுன் உய்ப்பன் காண்டி சரதம்இத் தன்மை யென்றான்.

தூதுவனுடைய ஆர்ப்புத்தான் என சாரதி சொல்வதற்கு முன்னரேயே வச்சிரவாகு கோபத்தால் பொங்கி கண்கள் மீது நெருப்பு எரிந்திடச் சிரித்தான். பெருமூச்சு விட்டான். ஆமோ என உரப்பினான். நான் இப்பொழுதே சென்று இந்த ஒரு கணத்தினிலே அந்த தூதுவனுடைய வலிய முரண் கொண்ட நிலையைக் கெடுத்தழித்து அவனைப் பிடித்து என் தந்தை முன்பு கொண்டுசென்று விடுப்பேன் சாரதியே இதை நீ பார் எனக் கூறினான். 48

என்றிவை உரைத்துப் போதும் எல்லையின் முன்ன மாகச்
சென்றிடும் அவுண வீரர் சேனையை வகுத்துச் சீறித்
தன்றுணைத் தாளுந் தோளுந் தடக்கையும் அனிக மாக
நின்றதோர் வீரன் றன்னை நேமியிற் சுற்றி ஆர்த்தார்.

என்று இவைகளைச் சொல்லிக்கொண்போகும் காலையில் முன்பாகச் சென்றிட்ட அசுர வீரர்கள் யாபேரும் தங்கள் சேனைகளை அணியாக வகுத்துச் சீறிக்கொண்டு தன்னுடைய தோளும் காலும் விசாலித்த கையுமே சேனையாக நின்றிட்ட தனி வீரனான வீரவாகுதேவரை கடல்போன்று சுற்றி வளைத்து ஆரவாரித்தார். 49

கைதனில் இருந்த செம்பொற் கார்முகங் குனித்து வெங்கோல்
எய்தனர் முசலம் நாஞ்சில் எறிந்தனர் தண்டஞ் சூலம்
பெய்தனர் கணிச்சி விட்டார் பிண்டிபா லங்கள் தூர்த்தார்
நெய்தவழ் அயில்வேல் தொட்டார் நேமிகள் உருட்டு இன்றார்.

கையிலே இருந்த செம்பொன்னினாலாய பெரும் வில்லை வளைத்து கொடிய அம்புகளை வீரவாகுதேவர்மேல் எய்தார்கள். முசலப்படை நாஞ்சில் படை இவைகளை விட்டெறிந்தார்கள். தண்டாயுதம், சூலம் இவைகளை வீசி எறிந்தார்கள், வச்சி

ராயுதத்தை விட்டார்கள். பிண்டிபாலம் என்னும் படையை ஓய்வின்றிச் சொரிந்தனர். நெய் பூசிய கூரிய வேலை விடுத்தார்கள். சக்கரங்களைச் சுழற்றி எறிந்தார்கள்; 50

வேறு

தஞ்சனக் கொடுமைசெய் தானவப் படைஞர்கள்
வெஞ்சினத் தன்மையால் விடுபடைக் கலமெலாங்
கஞ்சனைச் சிறைசெயுங் காரணன் தூதுவன்
செஞ்சுடர்ப் படிவமேற் செவ்வண்வந் துற்றவே.

தமக்கு இது பெருமை என எண்ணிக் கொடுமை செய்கின்ற அசுரப் படைஞர்கள் கொடும் கோபத் தன்மையால் விடுகின்ற படைக்கலங்கள் யாவையும் தாமரை மீதிருக்கின்ற பிரமதேவனைச் சிறைசெய்திட்ட வரும்; எல்லாக் கருமங்கட்கும் காரணராயும் இருக்கின்ற முருகப்பிரானின் தூதுவர் வீரவாகுதேவரின் அழகிய செவ்வொளி கான்று நிற்கும் மேனியில் நேரடியாக வந்து பட்டுக்கொண்டது. 51

துய்யன்மேல் வெம்படைத் தொகுதிவந் தடைதலும்
மெய்யெலா முற்றதான் மிக்கசோ ரிப்புனல்
மையல்தீர் காலையின் வந்தெழும் பரிதிபால்
பையவே செய்யதண் கதிர்வரும் பான்மைபோல்.

தூயதான வீரவாகுதேவர் மேல் கொடிய படைகளின் கூட்டங்கள் வந்து அடைந்து கொள்ளலும் அவர் மேனியில் நின்றெல்லாம் இரத்தமானது வடிந்தெழுந்து கொண்டது எதுபோலுமெனில்; நித்திரை மயக்கம் தீர்க்கின்ற நேரத்தில் வந்து உதயமாகும் சூரியதேவனில் செம்மையான சிவந்த கதிர்கள் தோன்றி வரும் பான்மையாக. 52

ஆனதோர் காலையெம் மையன்வெஞ் சினமுறு
மானினம் பலபல மருவியே செறிவுழி
மேனிவந் தேகியோர் வேங்கைபாய்ந் தடுதல்போல்
தானவப் படையினைத் தாக்குதல் மேயினான்.

ஆனதோர் காலையில் எமது ஐயன் வீரவாகுதேவர் பெருங் கோபடைந்து சென்று; மான் கூட்டங்கள் பலபலவாக மருவி நின்று மேய்கின்ற இடத்தில் ஓர் வேங்கைப்புலி சென்று பாய்ந்து அம்மான்களைக் கொல்கின்ற தன்மை போன்று அசுரப் படைகள் யாவையும் தான் தாக்கிக் கொல்லத் தொடங்கினார். 53

ஆயிரம் ஆயிரம் அவதிசேர் அவுணர்தஞ்
சேயதண் குஞ்சியைச் செங்கையாற் பற்றியே
பாயிருக் தரையினும் பாற்படு கிரியினும்
ஏயெனும் அளவைமுன் எற்றியே எறியுமால்.

ஆயிரம் ஆயிரம் என்னும் எண்ணிக்கை கொண்ட அசுரரை ஒருசேர அவர்களது சிவந்த முடியிலே சிவந்த கையால் எட்டிப் பிடித்து பெரிய இப்பூமியிலும் பக்கராக உள்ள மலையிலும் ஏ என்று சொல்லும் அளவிற்குள் மோதி மோதி அடித்துக் கொன்று உடலினை வீசி எறிவார். 54

எய்யும்வெம் படைகளும் எறியும்வெம் படைகளும்
கையினிற் பற்றியே கனலெழப் பிசைதரு
மொய்யெனப் பதைபதைத் தோலமிட் டுயிருகச்
செய்யபொற் றாள்களால் சிலவரைத் தேய்த்திடும்.

அசுரர்கள் எய்கின்ற கொடிய படைகளையும் எறிகின்ற கொடிய படைகளையும் எல்லாவற்றையும் வர வர கையால் பிடித்து கசக்கி நெருப்பெழ பிசைவார். அங்கு வந்த அசுரர் ஐயோ என ஓலமிட்டுக் கதறி உயிர் நீங்கிட செம்மை வாய்ந்த பொற் றாள்களால் சிலபேரைத் தேய்த்துக் கொல்வார். 55

மத்தமால் கரிகளும் வாம்பரித் தொகுதியுஞ்
சித்திரந் திகழ்மணித் தேர்களும் அவுணர்தங்
கொத்தொடே வீழ்தரக் கோலமால் அடிதனக்
கொத்ததன் றாள்களால் உதைபுரிந் துலவுறும்.

மதம் பொழியும் பெரிய யானையும் கொடிய குதிரைக் கூட்டங்களும் சித்திரங் கள் திகழ்கின்ற மணித்தேர்களையும் அசுரர் கூட்டத்துடன் சிதறி வீழ்ந்திடக் கோலம் பொருந்திய திருமாலின் திருவடிகளுக்கு ஒத்த தனது திருப்பாதத்தால் உதைத்து வீழ்த்திய வண்ணம் உலா வருவார். 56

கிடைத்திடும் சிலவரைக் கீண்டனன் நீண்டமெய்
துடித்திடக் கழல்களால் துகைத்தனன் சிலவரை
அடித்தனன் சிலவரை அரைத்தனன் சிலவரை
புடைத்தனன் சிலவரைப் புதுமரத் தண்டினால்.

கையினில் அகப்பட்ட சிலபேரைக் கிழித்தெறிவார். சிலபேரை அவர்களது நீண்ட மேனிகள் துடிக்கத் துடிக்க காலால் உழக்கி துவைத்துக் கொல்வார். சில பேரை அடிப்பார். சிலபேரை நிலத்திலே இட்டு அரைத்துத் தேய்ப்பார். சில அசு ரரை புதிய மராமரத் தண்டால் மோதி அடிப்பார். 57

மத்தவெங் கரிபரி வயவர்தேர் ஆயின
பத்துநூ றொருதலைப் படநெடும் பாணியாற்
குத்திடுஞ் சிகரமேற் கோளரி பாய்ந்தெனத்
தத்தியே திரிதருந் தலைமலைக் குலமிசை.

மதம் பொழியும் யானை குதிரை வீரர்கள் தேர்கள் ஆயினவற்றை ஆயிரக் கணக்கில் ஒரே வாரியாக நீண்ட தனது கையால் தூக்கிக் குத்திடுவார். அவர்கள் தலைமேல் சிங்கம் பாய்ந்தது போன்று பாய்ந்து; தத்தித் தத்தி அவர்களது மலை போன்ற தலைமீது திரிந்திடுவார். 58

தேரெலாம் இற்றன திண்டிறற் கவனமாப்
பேரெலாம் இற்றன பிளிறுமால் கரிகளின்
தாரெலாம் இற்றன தானவத் தலைவர்செய்
போரெலாம் இற்றன புகழெலாம் இற்றதே.

இவ்வாறு 'வீரவாகுதேவர் போர் செய்தலும் தேரெல்லாம் அழிந்தன, திண்மை யுடன் கூடிய திறல் கொண்ட கடிவாளம் பூட்டிய குதிரைகளானவை முழுவதும் அழிந் தன, (குதிரை என்று பேர் சொல்வதற்கு இடமிலாது இறந்தன எனச் சுவைபடச்

சொல்லியவை காண்க. பிளிற்றோசையுடைய மதம் பொலியும் யானைகள் மாலைகள் யாவும் அழிந்தன. அசுரத் தலைவர்கள் செய்திட்ட போர் யாவும் அழிந்தன. எல்லா ரையும் வென்றோமென்ற புகழ் யாவும் அழிந்தன. 59

ஆங்கதோர் பொழுதினில் அவுணருக் கிறைமகன்
பாங்கராய் வந்திடும் பல்பெருங் குமரரும்
ஓங்குநாற் படையொடும் ஒருவனைச் சுற்றியே
தாங்குபல் படையினால் சமர்முயன் றாற்றினார்.

ஆங்காகிய பொழுதினில் அசுரருக்கு இறைவனான சூரபன்மன் மகன் வச்சிர வாகுவின் பக்கராக வந்திடுகின்ற பகைவராகிய பெரிய மந்திரி குமாரரும் மேலோங்கிய அணிவகுத்து நின்றிட்ட காலாட்படையோடும் தான் ஒருவராகியே இவ்வளவு பேரை யும் எதிர்த்திட்டு நின்ற வீரவாகுதேவரைச் சூழ்ந்திட்டு தாங்கள் கையில் தாங்கிக் கொண்ட பல படையாலும் போர் முயற்சி கொண்டு அதைச் செய்து நின்றார். 60

வேறு

அன்ன காலையில் வீரவா குப்பெயர் அறிஞன்
தன்ன தோர்கரத் திருந்திடு பழுமரத் தண்டான்
முன்னர் வந்துசூழ் மைந்தர்கள் முரட்படை யோடுஞ்
சின்ன மாகியே வீளிவுறப் புடைத்தனன் திரிந்தான்.

அன்னவாகிய நேரத்தில் வீரவாகு என்னும் பெயருடைய அறிஞன் இவர்கள் செயலைக் கண்டு தனது ஒரு கரத்திலே இருந்திடுகின்ற பெரிய மரத்தண்டினால் தமது முன்னராக வந்து போரிட்டு நின்ற அந்த குமரர்கள் தாங்கள் தாங்கள் கையில் கொண்ட வலிய படைகளோடும் சின்னபின்னமாகியே வீழ்வுறும்படி அடித்துக் கொன்று கொண்டு திரிந்தார். 61

செய்ய மத்தகம் இற்றன இற்றன செழுந்தாள்
கைகள் இற்றன மருப்பிணை இற்றன கரிகள்
வெய்ய காலுடன் எருத்தமும் இற்றன மிலைச்சுஞ்
கொய்யு ளைத்தலை இற்றன குரகதக் குழுவே.

இவ்வாறு வீரவாகுதேவர் மராமரத் தண்டால் மோதி அடித்தலும் செம்மை யான யானைகளின் மத்தகம் அழிந்தன. அழகிய கால்கள் அழிந்தன. துதிக்கைகள் முறிந்தன. துணையான தந்தங்கள் முரிந்தன. இப்பால் குதிரைகளோ என்றால் தாங் கள் வேகமுடன் செல்லும் கொடிய காலுடன் முதுகும் முரிந்தன. சிலிர்க்கின்ற பிடரி மயிருடன் தலைகளும் அழிந்தன. 62

தட்ட ழிந்தன பாரகம் அழிந்தன சகடு
கெட்ட ழிந்தன கேதனம் அழிந்தன கிளர்ந்த
மொட்ட ழிந்தன பாகினம் அழிந்தன முரண்மாக்
கெட்ட ழிந்தன ஒழிந்தன கனைகுரல் பனைதேர்.

தட்டுகள் மோதப்பட்டு அழிவுற்றன. நடுப்பாக உறுப்புகள் யாவும் அழிந் தன. சில்லுகள் நொருங்கி அழிந்தன. கொடிகள் அழிந்தன. மேல் கிளர்ந்து நின்ற முடிகள் அழிந்தன. சாரதிகள் மடிந்தனர். வலியுடைய தேர்க்குதிரைகள் நிலைகெட்டு அழிந்தன. இவ்வாறு இரைச்சல் ஓசையுடன் செல்கின்ற பல தேர்கள் முடிவாகின. 63

காலக ளூற்றிடும் வெஞ்சிலை இற்றன கடிய
கோல்க ளிற்றன பரிதிகள் இற்றன கொட்பார்
தோல்க ளிற்றன நாந்தகம் இற்றன தூண்டும்
வேல்கள் இற்றன நாஞ்சில்கள் இற்றன விரைவில்.

கால் நின்று எடுத்தேந்திய கையில் பிடித்த கொடிய விற்கள் முறிந்தன. கொடிய அம்புகள் அழிந்தன. சக்கரங்கள் அற்றன. கொட்புற்று விளங்கிடும் தோல்கள் அழிந்தன. வாள்கள் நொருங்கியது; எறிகின்ற வேல்கள் அழிந்தன. நாஞ்சில் படைகள் அழிந்தன. 64

நெரிந்த சென்னிகள் நெரிந்தன மார்பகம் நெடிது
சரிந்த வெங்குடர் சரிந்தன இழுக்குடைத் தசைகள்
சொரிந்த மூளைகள் சொரிந்தன விரிந்தெழு சோரி
திரிந்த கூளிகள் திரிந்துமாய் வுற்றன சேனை.

தலைகள் நெரிந்தன. நெஞ்சுகள் பிளந்து நெரிந்தன. நீண்ட கொடிய குடல்கள் சரிந்தழிந்தன. நிணம் கொண்ட நாற்றமுடைய தசைகள் எங்கும் சொரிந்தன. மூளைகள் சொரிந்தன. இரத்தம் பீறிட்டுப் பாய்ந்து பெருகிட அந்த இரத்த நீருள் தோய்ந்து ஆடி நிணம் உண்டு பூதங்களும் திரிந்தன, இவ்வாறு அழிந்தொழிந்தன வச்சிரவாகுவின் தோழராய குமரர்களோடு வந்த சேனை. 65

கரந்து ணிந்தனர் புயங்களுந் துணிந்தனர் காமர்
சிரந்து ணிந்தனர் நாசிகள் துணிந்தனர் செழும்பூண்
உரந்து ணிந்தனர் கழலடி துணிந்தனர் உளதொல்
வரந்து ணிந்தனர் வன்மையுந் துணிந்தனர் மைந்தர்.

கைகள் துணிபட்டனர். தோள்களும் துணிபட்டனர். அழகிய தலைகள் துணிபட்டனர். மூக்குகள் துணிபட்டார்கள். செழுமை வாய்ந்த ஆபரணம் அணிந்த நெஞ்சு துணிபட்டார்க்ள். சிலம்பணிந்த கால்கள் அறுந்தார்கள். தாம் முன்னர் பெற்றுள்ள பெருவரங்கள் யாவும் அழிந்தனர். வலியும் கெட்டு அசுரர்கள் யாவரும் அழிவுற்றனர். 66

வாக்கி னாற்சிலர் தம்முயிர் உண்டிடும் வன்கைத்
தாக்கி னார்சிலர் தம்முயிர் உண்டிடுஞ் சமர்செய்
ஊக்கி னாற்சிலர் தம்முயிர் உண்டிடும் உலம்பு
நோக்கி னாற்சிலர் தம்முயிர் உண்டிடு நொய்தின்.

வீரவாகுதேவர் தமது சொல்லாலே சில குமரரைக் கொல்வார். கையால் அடித்து சிலரைக் கொல்வார். போர் செய்யும் தமது ஊக்கத்தினால் சிலரைக் கொல்வார், தமது பார்வையாலே சில அசுரர் உயிரை உண்பார். விரைவுடனே இவ்வண்ணமே பலரைக் கொல்வார். 67

அங்கண் ஓர்சில அவுணரை ஆடல்வெம் பரியை
வெண்கண் யானையை இரதத்தை வாரினன் விரைவின்
மங்குல் வானினுந் தரையினும் வரைகள்
எங்கு மாகியே வீழ்தர வீரனார்த் தெறிந்தான்.

அவ்விடத்தே ஓர் சில அசுரரை போர் செய்யும் கொடிய; குதிரையை கோபத்தால் சிவந்த கண்ணுடைய யானையை; தேர்களை வாரி வாரி அதிவீரைவுடன் மேகம் நிறைந்த வானத்திலும் பூமியிலும் கடலிலும் மலைகளிலும் எங்குமாகிப் பரந்து சென்று வீழ்வுறும்படி வீரவாகுதேவர் ஆரவாரிப்புடன் வீசி எறிந்திடுவார். 68

அன்பு லப்புறு கொடுந்தொழில் அவுணர்கள் அமரும்
வன்பு லத்துயிர் கொளவரு மறலிதன் தூதர்
துன்பும் அச்சமும் அணங்குடன் அகன்றுதற் றுதிப்பத்
தென்பு லத்தவன் மூன்னுற வீசினன் சிலரை.

அன்பு எனும் பொருளை அறவே நீக்கிக் கொண்ட கொடுந்தொழில் மேற்கொண்டுள்ள அசுரர்கள் இருக்கின்ற வலிமை கொண்ட ஊரினிடத்து அவர்களது உயிரைப் பிடிக்கும்படி வருகின்ற இயமனின் தூதுவர்கள் அங்கு வந்து சேர்வதற்கு பெரும் துயரமும் அச்சமும் நடுக்கமும் முன்கொண்ட காரணத்தினால் இப்போது வருவதற்கு பயம் கொண்ட தூதுவர்கள் வீரவாகுதேவரே நாங்கள் அங்கே வரும் சிரமத்தை நீக்கி எம்மை நன்மைப்படுத்தினீர் என்று தன்னைத் துதிக்கும்படி தென்புலத்தவனான இயமனுடைய ஊரின் முன்பாகச் சில அசுரரை அள்ளி வீசினார். 69

ஒருத லைப்படுங் கேளிரைத் துன்னுவான் உய்ப்பக்
கருதி னான்கொலோ சிற்சில அவுணர்தங் கணத்தை
நிருதி மாநகர் புகுந்திட வீசினன் நிகரில்
சுருதி நாயகன் ஏவலாற் றியதனித் தூதன்.

இந்த அசுரர் கூட்டம் தனது இனத்தவர் ஊரில் சென்று வாழட்டும் எனக் கருதினாரோ வீரவாகுதேவர் நாம் அறியோம். சிற்சில அசுரரின் தலைவர்களை அள்ளி அசுர கணத்தோனான நிருதியினுடைய ஊரில் போய் விழும்படி வீசினார். யாரெனில் தனக்கு நிகர் பிறிதில்லாத வேதங்கட்கு நாயகரான முருகப் பிரான் ஏவலினைப் புரிந்து நின்ற வீரவாகுதேவர். 70

நேர்ந்து போர்புரிந் துயிர்தனை விடாததந் நிலைமை
ஓர்ந்து விண்ணவர் மானங்கள் விடுத்திடா துயர்வான்
சார்ந்த ஞாயிறு பிளந்திடா தாடலின் தன்மை
சேர்ந்து ளார்பெறுந் துறக்கமேல் வீசினன் சிலரை.

நேரிட்டுப் போர் புரிந்தமையாலே வீரசொர்க்கம் அடையவேண்டிய அந்நிலைக்கு இவர்களுடைய உயிரை மட்டும் விடாத அந்த நிலையை வீரவாகுதேவர் உணர்ந்து போலும்; வீரசொர்க்கம் செல்லும் வழியால் தேவர்கள் தங்கள் விமானங்களை விடுத்திடாதபடியும் சூரியனும் பிளந்திடாதபடியும் போராடலின் பெருமையைச் சேர்ந்துளார் பெறவேண்டிய சொர்க்க உலகிற்கு நேரே சென்றிட சில அசுரரை அள்ளி வீசினார். 71

எண்டி சைப்புறந் தாங்கியே பெயர்கிலா இரக்கங்
கொண்ட வெங்கரிக் கிரையெனச் சிலவரைக் கொடுக்குந்
தெண்டி ரைப்புனல் பருகியப் நிரப்பது தீர
உண்டி யாகவே வடவைபால் சிலவரை உய்க்கும்.

எட்டுத் திக்குகளின் புறங்களைத் தாங்கியே நீங்கிடாது இரக்கம் கொண்டு நின்றிட்ட கொடிய திக்கு யானைகளுக்கு இரையெனும்படி சில அசுரரை அள்ளி வீசிடுவார். தெள்ளிய திரையுடைய சமுத்திர நீரை உண்டுவிட்ட களைப்புத் தீரும்படி வடவாமுகாக்கினிக்கு உணவாகும்படி சில அசுரரைக் கொடுப்பார். 72

ஏந்தல் இன்னபல் வகையினால் அடுதலும் இமைப்பின்
வீந்த தானைகள் துணைவரும் பொன்றினர் மிக்கோர்
ஒய்ந்து வானினுங் கடலினுந் திசையினும் உலைந்துச்
சாய்ந்து போயினர் மானமும் வன்மையுந் தவறி

எங்கள் தலைவராகும் வீரவாகுதேவர் இன்ன வகையால் பல அசுரரைக் கொலை புரிதலும் இமைப் பொழுதினிலே அங்கு வந்த அசுரரி சேனைத் தலைவர்கள் யாவரும் இறந்தனர். இதுகண்டு மிகுதியாக உள்ள அ ரர்கள் போரை விடுத்து ஒய்ந்து வானத்திலும் கடலினும் திசையினும் உலைந்து புறமுதுகு காட்டியோடிச் சாய்ந்துபோயினாகள். தமக்குற்ற மானமும் வன்மையும் நீங்கியவர்களாய். 73

மற்றிந் நீர்மையைக் காண்டலும் வச்சிர வாகு
இற்ற தேகொலாம் நம்பெருந் தானையென் றிரங்கிச்
செற்ற மீக்கொண்டு வலவனை நோக்கியித் தேரை
ஒற்றன் முன்னுற விடுத்தியால் கடிதென உரைத்தான்.

வச்சிரவாகு இந்த நிலைமையைக் காண்டலும ஐயையோ நமது பெரும் சேனை எல்லாம் அழிந்ததோ என இரக்கங் கொண்டு மனதில் பெருங் கோபங் கொண்டு தேர்ச் சாரதியை நோக்கி; சாரதியே இத்தேரை அந்தத் தூதுவன் முன்பாக அதி விரைவாக விடுப்பாயாக எனக் கூறினன். 74

உரைக்கும் வாசகங் கேட்டலுந் தொழுதுமுன் னுற்ற
பரிக்கு லங்களின் மத்திகை வீசியே பாகன்
அருக்கன் ஆழியந் திரிகியூர் வலவனும் அஞ்சி
வெருக்கொ ளும்படி தேரினை வீரன்முன் விடுத்தான்.

வச்சிரவாகு உரைத்த வாசகத்தைக் கேட்டலும் சாரதியானவன் வச்சிரவாகுவை நன்று எனக் கூறி வணங்கி முன்னாக நின்ற குதிரைக் கூட்டங்களில் சவுக்கினை வீசியே குதிரைகளை எழுப்பி தேரைச் செலுத்திய நிலைமையைக் கண்டு சூரியதேவனுடைய பெருஞ் சில்லுடைய தேர்ச் சாரதியும் அஞ்சி வெருக் கொள்ளும்படியாக சாரதியானவன் வச்சிரவாகுவின் தேரினை விரைவுடன் செலுத்திக்கொண்டு சென்று வீரவாகுதேவர் முன் விடுத்தான். 75

கொடிய வெஞ்சினந் திருகியே சூர்தரு குமரன்
கடிது போர்செய்வான் வருவது மேலையோன் காணு
முடிவி லாமகிழ் வெய்தியே முழுதுல களந்த
நெடிய மாலினும் நெடியன்மற் றிவனென நிமிர்ந்தான்.

கொடிய பொல்லாத கோபம் மேலிட்டுப் பொங்கிடும் மனத்துடன் சூரன் தந்த மைந்தனை வச்சிரவாகு விரைவுடன் போர் செயுமபடியாக வருவதை மேலவரான வீரவாகுதேவர் கண்ணுற்று முடிவிலாத மகிழ்ச்சி கொண்டு உடனாக ஏரடியே

லே முழுதுலகையும் அன்றளந்த நெடிய நாராயணக் கடவுள் கொண்ட நெடிய உருவிலும் இவர் கொண்டுள்ள உருவம் மிக நெடிது எனும்படி வளர்ந்து நிமிர்ந்து நின்றார். 76

நெடிய தாள்புவி அளந்திடப் புயங்கள்விண் நெருக்க
முடியெ லாங்கடந் தண்டகோ ளகைதனை முட்ட
வடிவ மைந்திடு திறலினான் பணிபதி மயங்க
அடிபெ யர்ந்துபார் வெடிபட இடிபட ஆர்த்தான்.

வீரவாகுதேவருடைய நெடிய திருவடிகள் பூமியை அளந்திடவும் தோள்கள் வானில் நெருங்கிடவும் அவருடைய முடிகள் எல்லாம் வான வெளியையும் கடந்து அண்டகோளகைதனை முட்டி விளங்கும்படியான திருப்பெரு வடிவத்துடன் அமைந்து நின்றருளிய வீரவாகுதேவர்; பாம்புகட்கு அரசனான ஆதிசேடனும் பொறையாற்றாது மயங்கிட காலை எடுத்து வைத்து பூமியும் வெடிபட இடிபோன்று உரக்க சத்தமிட்டு ஆரவாரித்தார். 77

புரம டங்கலுந் தெறுகணை போன்றுளான் பொன்னோன்
வரம டங்கலுஞ் சோரிய தடங்கலும் வாணாள்
உரம டங்கலும் உண்டிடத் தறியின்வந் துதித்த
நரம டங்கலும் வெருவர எரியெழ நகைத்தான்.

முப்புரங்கள் முழுவதையும் அழிக்கின்ற அம்பாகிய விஷ்ணுபிரானை ஒத்த வடிவுடன் நின்ற வீரவாகுதேவர்; இரணியனுடைய மேலாகும் வரங்கள் முழுவதும் அவனது இரத்தம் முழுவதும் வலிமை முழுவதும் உண்டிடும்படியாக அன்று தூணில் வந்து உதித்தருளிய நரசிங்க மூர்த்தியும் அஞ்சிடும்படியாக நெருப்பெழச் சிரித்தார். 78

மூச்ச கம்புகழ் திறலினான் முறுவலும் மூழக்கமும்
வச்சி ரத்தட மொய்ம்பினான் கேட்டலும் மறுகி
மெச்சி ரத்தொகை துளக்கி ஆரழலெழ விழித்து
நச்செ யிற்றர வாமெனச் செயிர்த்திவை நவில்வான்.

மூன்று உலகமும் புகழ்ந்து துதித்திடும் திறமைசாலியான வீரவாகுதேவரின் கோபச் சிரிப்பையும் ஆரவார முழக்கினையும் வச்சிரவாகு கேட்டலும் மறுகிச் சோர்ந்து தனது அழிவிலாத பத்துத் தலைகளையும் அசைத்து நெருப்பெழ கண்களை விழித்து நச்சுப் பல்லுடைய பாம்பு சீறுவதுபோல் மூச்செறிந்து சீறி இவைகளைச் சொல்வான். 79

வீர நன்றுநின் ஆண்மையும் நன்றுமே தக்க
பேரு நன்றுபே ராற்றலும் நன்றுநீ பெற்ற
சீரும் நன்றுநின் விஞ்சையும் நன்றுசெய் கின்ற
போரு நன்றுநிற் கேற்பதிவ் வார்ப்பெனப் புகன்றான்.

அட, தூதனான வீரனே! உனது வீரம் நன்று. உன் ஆண்மையும் நல்லது. மேம்பாடுடைய வீரவாகு என்னும் பேரும் நன்று. உனது பெரிய ஆற்றலும் நன்று. நீ பெற்றுக்கொண்ட சீரும் நன்று உனது மாயவித்தைகளும் நல்லாக இருக்கின்றது. நீ செய்கின்ற போரும் நன்று. இவையாவற்றிற்கும் பொருத்தமாக நீ போட்ட சத்தமும் ஏற்புறும்படியாகத்தான் இருப்பது என்றான். 80

மற்று மோருரை புகலுவன் வந்தெதிர் மலைந்த
கொற்ற வீரரைப் படுத்தனம் என்றுளங் கொண்டாய்
அற்றெ லாமினி விடுமதி நின்வலி யலைத்துப்
பற்றி எந்தைமுன் விடுப்பனால் உனையெனப் பகர்ந்தான்.

இதற்கு மேலாக நான் இன்னுமொரு வார்த்தை சொல்லுவேன். அது யாதெனில் உன்னோடு இத்துணையும் வந்து எதிர்த்து போரிட்டு நின்ற மேலான வீரரை எல்லாம் கொன்றேன் என்று உனது உளத்தில் எண்ணிக்கொண்டாய். அந்த எண்ணங்களை எல்லாம் இனிமேல் விட்டுவிடு. உனது வலியை நான் அலைய வைத்து அழித்து நீக்கி உன்னைப் பிடித்துச் சென்று என் தந்தை முன் விடுப்பேன் எனக் கூறினன். வச்சிரவாகு. 81

நின்னை வென்றிட முயலுவன் தமியனும் நீயும்
என்னை வென்றிட முயலுதி இருவரும் அதனைப்
பன்னி நிற்பதிற் பயனெவன் கடிதமர் பயிறி
பின்னை வென்றுளார் வெல்லுக என்றனன் பெரியோன்.

அவ்வண்ணம் கோபத்துடன் கூறிய வச்சிரவாகுவை நோக்கி "உன்னை வென்றிடும்படி தமியேனும் முயற்சி செய்வேன். என்னை வெற்றி கொள்வதற்கு நீயும் முயற்சி செய்து பார். இருவரும் வெல்லுவோம் எனவாயால் அதனைச் சொல்லி நிற்பதில் பயன் யாது?. விரைவுடன் நீ கற்ற போரைச் செய்வாயாக, பின்னால் வெல்ல வேண்டும் விதியுடையார் வெல்லட்டும் என்றார் பெரியவரான வீரவாகுதேவர். 82

என்று முன்னரே வச்சிர வாகுவெள் றிசைக்கும்
மன்னன் மாமகன் தனதுகைக் கார்முகம் வாங்கிப்
பொன்னின் நாணொலி கொண்டொரா யிரங்கணை பூட்டி
மின்னு லாந்தனி வேலவன் தூதன்மேல் விடுத்தான்.

என்று வீரவாகுதேவர் சொல்வதற்கு முன்னராகவே வச்சிரவாகு என்று பெயர் கொண்ட சூரபன்மனின் பெரிய மகன் தனது கையில் உள்ள பெரிய வில்லை வளைத்துப் பொன்னின் விளங்கிய நாணின் ஓசையைச் செய்து அந்த வில்லிலே ஓர் ஆயிரம் அம்புகளைப் பூட்டி மின்னல் உலவிடும் தனியான வேலையுடைய ஆறுமுகப்பிரானின் தூதன்மேல் விடுத்தான். 83

விடுத்த ஆயிரம் பகழியும் விடலைதன் மிசையே
அடுத்த எல்லையிற் காலுற அங்கையொன் றதனை
எடுத்து முன்னுற ஓச்சியே அங்கவை அனைத்தும்
பிடித்து வல்லையின் றுண்டுகள் பட்டிடப் பிசைந்தான்.

விடப்பட்ட ஆயிரம் அம்புகளும் இளநலம் கொண்ட வீரரான வீரவாகுதேவர் மேலாகச் சென்று சேர்ந்துள்ள காலையில் அதனைக் கண்டு தமது அழகிய கையொன்றினை எடுத்து முன்னாக நீட்டி அங்கு வரும் அம்புகள் அனைத்தையும் பிடித்து விரைவுடன் நுண்ணிய துகளாகும்படி கையினால் பிசைந்தார். 84

விட்ட வாழிகள் பூழிபட் டிடுதலும் வெகுண்டு
மட்டு வாகைவெஞ் சிலையினைப் பின்னரும் வணக்கி
நெட்டி லைச்சரம் ஒருபதி னாயிரம் நிறத்திற்
பட்டி டும்படி தொட்டனன் அவுணர்கோன் பாலன்.

வச்சிரவாகு விட்ட அம்புகள் தூள்பட்டுப் போதலும் கோபம் கொண்டு தேன் துளிக்கும் மாலை கட்டிய வில்லை பின்னரும் வளைத்து; அந்த வில்லில் நீண்ட இலை போன்ற கூர்மையும் வடிவும் அமைந்த அம்புகள் பதினாயிரத்தைத் தொடுத்து வீர வாகுதேவர் நெஞ்சிலே பட்டிடும்படி விடுத்தான் அசுரர்க்கெல்லாம் தலைவனான சூர பன்மனின் புதல்வன். 85

அசைவி லானது நோக்கியே முந்துபோர் அகத்தில்
இசைமை நீங்கியே முடிந்திடு தானவர் இட்ட
முசல மாகிய தொன்றினை யெடுத்துமுன் வந்த
விசிகம் யாவையும் புடைத்தனன் திசைதொறும்வீழ.

எதற்கும் அஞ்சிடாத திறமைசாலியாகும் வீரவாகுதேவர் அதனைக் கண்ணுற்றருளி முன்னர் அப்போர்க்களத்தில் தனது பெருமைகள் யாவும் கெட்டு இறந்த அசுரர் போட்டிருந்த ஓர் முசலப்படையை எடுத்து தமக்கு முன்பாக வந்திட்ட அம்புகள் யாவற்றையும் திசைதோறும் சிதறுண்டுவீழ அடித்து நெருக்கினார். 86

வழுவில் வாளிகள் வறிதுபட் டிடுதலும் மற்றும்
விழுமி தாகிய ஒருபதி னாயிரம் விசிகம்
பழுது றாதன தூண்டியே ஆண்டகை பரித்த
எழுவை நுண்டுகள் ஆக்கியே பின்னரும் எய்வான்.

தவறில்லாது நேரே சென்று தைக்கக் கூடிய அம்புகள் நொருங்கப் பெற்று வீணாகிப்போதலும் அதுகண்டு வச்சிரவாகு என்பவன் பின்னரும் மிகவும் உயர்வுடையதான ஓர் பதினாயிரம் அம்புகளை பழுதடையாத வகையால் தேர்ந்தெடுத்து விடுத்துச் செலுத்தி வீரவாகுதேவர் கையில் பிடித்தருளிய அந்த முசலப்படையைத் துகளாக்கி முரியச் செய்து பின்னரும் பல அம்புகளை எய்வானாயினான். 87

தலையி லாயிரங் களத்தினில் ஆயிரந் தடந்தோள்
மலையி லாயிரம் உரத்தினி லாயிரம் வயத்தாள்
நிலையில் ஆயிரங் கணைகளாத் தூண்டினன் நீடுங்
கொலையில் ஆயிரங் கூற்றினை போலுறுங் கொடியோன்.

வீரவாகுதேவரின் தலையில் பட்டிட ஆயிரம் அம்பும்; நெஞ்சினில் படுதற்கு ஆயிரம் அம்பும்; வெற்றியுடன் நின்றிடும் காலினில் படுதற்கு ஆயிரம் அம்புகளுமாகச் செலுத்தி நின்றான் வச்சிரவாகு இவன் கொடும் கொலைத்தொழில் செய்யும் இயல்பில் ஆயிரம் இயமனைப் போன்று விளங்கிடும் கொடியவனாவன். 88

கையில் ஏந்திய பேரெழு முரிந்திடக் காமர்
செய்ய மெய்ம்முழு தீண்டியே பகழிகள் செறிய
ஐயன் நின்றனன் ஓரிறை வருந்தியே அதற்பின்
ஒய்யெ னச்சென்று வெய்யவன் தேரினை உதைத்தான்.

தமது திருக்கையில் பிடித்த பெரிய எழுவாயுதம் முறிந்துபோக அழகிய தமது செம்மையான மேனியில் முழுவதும் வச்சிரவாகு விடுத்திட்ட அம்புகள் பட்டிட எமது ஐயன் வீரவாகுதேவர் ஓர் இறைப்பொழுது வருத்தங் கொண்டவராய் நின்றார். அதன் பின்பாக திடீரெனச் சென்று கொடியவனும் வச்சிரவாகுவின் தேரைக் காலால் உதைத்தார். 89

உதைத்த காலையிற் பண்ணுறு பரியெலாம் ஒருங்கே
பதைத்து வீழ்ந்தன பாகனும் உருண்டனன் பட்டான்
கதித்த வையமும் அழிந்தது அன்னது காணு
மதித்து வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் மறவோன்.

வீரவாகுதேவர் உதைத்த நேரத்தில் அழகுடன் பொலியப் பண்ணிவைத்த தேர்க்குதிரைகள் யாவும் ஒருமித்து பதைத்து வீழ்ந்தன. தேர்ச் சாரதியும் உருண்டு இறந்தான், மேலோங்கிய தேரும் அழிந்தது. அதனைக் கண்ணுற்று இதுதான் சரி என மனதில் மதித்து அந்தக் கொடியவனான வச்சிரவாகு வேறொரு தேர் மேலாசப் பாய்ந்து ஏறிக்கொண்டான். 90

பாய்ந்து வச்சிர வாகுவாந் தொல்பெயர் படைத்தோன்
தேய்ந்த ஒண்பிறை பணியொடு சேர்ந்தன சிலையின்
ஆய்ந்தொ ராயிரம் அயிற்கணை பூட்டியே அடுபோர்
ஏந்தல் நெற்றியுட் செறித்தனன் அமரர்கள் இரங்க.

வேறொரு தேரில் பாய்ந்து ஏறிக்கொண்ட வச்சிரவாகு என்னும் மிகப் பழமையான பெயரினைப் பெற்றுக்கொண்ட அசுரன்; தேய்வுற்ற இளம்பிறையொன்று பாம்புடன் இணைந்தால் இருக்கும் வடிவுபோன்ற தனது வில்லையெடுத்து; அதில் ஆராய்ந்து எடுத்துக்கொண்ட ஆயிரம் வேல் போலும் அம்புகளைப் பூட்டி கொடும் போரினைப் புரிந்து நிற்கின்ற கடவுளாகும் வீரவாகுதேவர் நெற்றியிற் சென்று படும்படி எய்தான். இவனுடைய இந்தச் செயலைக் கண்டு தேவர்கள் யாவரும் இரக்கம் கொள்ளும்படியாக. 91

ஆயி ரங்கணை நுதலிடை அழுத்தலும் அடல்வேல்
தூய வன்றிருத் தூதுவன் சூரருள் புரிந்த
தீய வன்தடந் தேரினைச் செங்கையால் எடுத்து
மீயுயர்ந்திடும் விண்ணிடை எறிந்தனன் விடுத்தான்.

ஆயிரம் அம்புகளை வீரவாகுதேவர் நெற்றியிற் சென்று தைத்திடும்படி அழுத்தி விடலும் அந்நேரத்து வலியுடன் அசுரரை அழித்தருளும் கூரிய வேற்படையை ஏந்தியருளும் தூயவரான முருகப்பிரானின் செம்மைத் திறலுடைய தூதுவர் வீரவாகுதேவர் விறுக்கெனச் சென்று சூரபன்மன் பெற்ற மைந்தனான வச்சிரவாகு ஏறிய தேரினை சிவந்த கையால் எடுத்து மிக உயர்ந்திட்ட வானத்திடை எறிந்துவிட்டார். 92

விண்ண கத்திடை எறிந்தபின் வீரவா குப்பேர்
அண்ணல் வச்சிர வாகுவந் தேறுவான் அமைந்து
பண்ணு றுத்திய ஏமமாய் நின்றதேர் பலவுந்
துண்ணெ னப்புடைத் தெறிந்துதைத் தொல்லையிற் றொலைத்தான்.

வானத்திடையாக வச்சிரவாகுவோடும் தேரைத் தூக்கி எறிந்திட்ட பின்பாக வீரவாகு என்னும் கடவுள்; எறியப்பட்ட தேரொடும் மேற்சென்றுள்ள வச்சிரவாகு திரும்ப வருங்கால் அவன் ஏறிக்கொள்வதற்கென அமைந்து அல்விடத்து நின்ற அழகு விளங்கிய சிறப்புடன் கூடிய சேமத்தேர்களாக நின்ற அத்தனை தேர்களையும் திடீரென அடித்தும் நொருக்கியும் தூக்கி எறிந்தும் உதைத்து அழித்தும் விரைவாக நாசஞ் செய்திட்டார். 93

தொலைக்கும் எல்லையின் அவுணர்கோன் மதலைதொல் புவிக்கோர்
இலக்கம் யோசனை எல்லையின் காறும்வின் ணேகி
அலக்க ணுற்றுமீண் பழிதரு தேருடன் அமரில்
வெலற்க ருந்திறல் அறுமுகன் தூதன்முன் வீழ்ந்தான்.

அவ்வாறு வீரவாகுதேவர் சேமத் தேர்கள் யாவற்றையும் நாசம் செய்யுங் காலையில் சூரபன்மனுடைய பிள்ளை இப்பூமிக்கு ஓர் இலக்கம் யோசனை தூரம் வரையும் வானில் சென்று அங்கு அலைக்கழிக்கப்பட்டு மீண்டு அழிந்துபோகின்ற அந்தத் தேருடன் வந்து; போரில் யாவராலும் வெல்லற்கரிய ஆறுமுகமுடைய பெருமானின் தூதுவர் வீரவாகுதேவர் முன்பாக வீழ்ந்தான். 94

நிலவ ரைப்புறுஞ் சூர்மகன் எழுந்தனன் நெடிய
சிலைவ ளைத்தமர் செய்திட முன்னலுந் திறலின்
தலைமை பெற்றவன் கண்டுகை ஓச்சியத் தனுவை
வலிது பற்றியே முரித்தனன் பேரொலி மயங்க.

நிலத்தின் எல்லையில் வீழ்ந்த சூரனுடைய மகன் வச்சிரவாகு எழுந்து தனது நெடிய வில்லைப் பின்பும் வளைத்து போர் செய்திட நினைந்து முற்படலும் அதுவேளை திறல் என்னும் நிலையில் தலைமைப்பாடு கொண்ட வீரவாகுதேவர் அது கண்டு தமது கையினை நீட்டி வச்சிரவாகுவினுடைய வில்லை வலியால் பறித்தெடுத்து பேரோசை கொள்ள இரு துணியாக முறித்தெறிந்தார். 95

ஏந்து கார்முகந் தனைமுரித் திடுதலும் எரியிற்
காந்து கண்ணுடை வச்சிர மொய்ம்பனோர் கரத்தின்
வாய்ந்த வான்கொடே எதிர்தலுந் தன்னுடை மருங்கின்
நாந்த கந்தனை உறைகழித் தறிவன்மேல் நடந்தான்.

வச்சிரவாகு தான் பிடித்த வில்லை வீரவாகுதேவர் முறித்தெறிதலும் நெருப்பைப் போன்று காந்துகின்ற கண்ணுடையவனாகி தனது ஒரு கையிலே வாய்புடன் விளங்கிடும் ஓர் வாளினை எடுத்து வீரவாகுதேவருடன் எதிர்ந்து வரலும். அதுவேளை தனது இடையிலே செருகப்பெற்றிருந்த வாளை உறையை நீக்கி எடுத்துக்கொண்டு அறிவு சொருபமாகிய வீரவாகுதேவர் வாளுடன் தன்னை எதிர்ந்த வச்சிரவாகுவின் மேல் போர்புரியச் சென்றார். 96

நடந்து வச்சிர வாகுமுன் உய்த்திட நனிதோள்
அடைந்த வாளினை விலக்கியே அறிவரில் அறிவன்
கடந்த போர்வலி கொண்டதன் வாளினாற் கடிது
தடிந்து வீட்டினன் அவுணர்கோன் நாந்தகத் தடக்கை.

இவ்வாறு சென்ற வீரவாகுதேவர் வச்சிரவாகு முன்பாக வீசியபோது தனது தோளுக்கு மிகவும் இலக்காக வந்த வாளினைத் தடுத்து நீக்கியபின்னர் அறிவாளிகளினும் அறிவாளியான வீரவாகுதேவர்; பலபோரில் வெற்றியீட்டி வலி கொண்ட தனது கை வாளினை விரைவாக வீசி அசுரர் தலைவனான வச்சிரவாகுவின் வாள் பிடித்த கையை வெட்டி வீழ்த்தினார், 97

செய்ய தோர்கரந் துணிபடத் தீயவன் செறுத்தோர்
கையி ருந்திடு தண்டினை எறிதலுங் கண்டு
மையில் கேள்வியன் துணிபடுத் தவுணர்கோன் மதலை
ஐயி ரண்டவாந் தலையையும் வாளினால் அறுத்தான்.

செம்மையான தனது கை வாளுடன் வெட்டுண்ணலும் தீயவனான வச்சிரவாகு கோபம் கொண்டு கையில் இருந்திடுகின்ற தண்டாயுதம் ஒன்றை வீசி வீரவாகுதேவர் மேலாக எறிதலும் அதுகண்டு மயக்கம் சந்தேகம் நீங்கி தெளிவுறக் கற்றுணர்ந்த வீரவாகுதேவர் அந்தத் தண்டினைத் துகளாக வெட்டி வீழ்த்தியபின் வாளை மீண்டும் வீசி சூரபன்மனின் பிள்ளை வச்சிரவாகுவின் பத்துத் தலைகளையும் அறுத்துத் தள்ளினார். 98

வேறு

எந்தைதன் தூதுவன் எறிந்த வாளினால், ஐந்திரு சென்னியும் அற்று வீழ்தலும்
மைந்தியல் வச்சிர வாகு வாகிய, வெந்திறல் அவுணர்கோன் வீடி னானரே.

எந்தைபிரானின் தூதுவர் வீரவாகுதேவர் வீசிய வாளினால் வச்சிரவாகுவின் பத்துத் தலையும் அறுந்து வீழ்தலும் சூரபன்மனுடைய பிள்ளைகளில் சிறந்த இயல்புடைய மைந்தன் கொடுமையான இயல்புடைய அசுரர் தலைவன் வச்சிரவாகு இறந்து போயினான். 99

ஆடியல் அவுர்தம் அண்ணால் தன்மகன், வீடிய காலையின் வெருவிப் பாங்கரின்
நாடிய அவுணர்கள் நனிபு லம்புறீஇ, ஓடினர் திசைதொறும் உடைந்து போயினர்.

போர்வலி கொண்ட அசுரர்க்கெல்லாம் தலைவனான சூரபன்மனின் மகன் இறந்த நேரத்தில் இதனைப் பக்கத்தாக நின்று பார்த்திருந்த அசுரர்கள் மிகவும் பயந்து அழுது புலம்பிக் கொண்டு திக்குகள் தோறும் அணி கெட்டுச் சிதறி ஓடினார்கள். 100

துஞ்சினன் வச்சிரத் தோளன் கண்டிது
நெஞ்சகம் மகிழ்ந்திவண் நிற்ப னேயெனின்
வெஞ்சின அவுணர்கோன் வினவில் தீமையென்
றஞ்சினன் கரந்தென அருக்கன் போயினான்

வச்சிரம் போலும் இறுகிய வலுவும் கொண்ட தோளினையுடைய வச்சிரவாகு இறந்துபோனான், நான் இதைக் கண்டு கொண்டு எனது உள்ளம் மகிழ்வாகி இங்கு நிற்பவேன் என்றால்; நான் பார்த்திட்டு நின்றதை கொடுங் கோபமுடைய சூரபன்மன் அறிந்தால் தீமையாகி முடியும் என அஞ்சி நில்லாமல் மறைந்துபோவான் போன்று சூரியதேவன் மேற்திசையில் சென்று அத்தமனமாயினான். 101

வச்சிரவாகு வதைப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 904

---

# யாளிமுகன் வதைப் படலம்

திண்டிறல் அவுணர்கோன் சிறுவன் வீந்ததும்
மண்டமர் இயற்றிட வருநர் இன்மையுந்
தண்டம துடைந்ததுந் தபனன் மாய்ந்ததுங்
கண்டனன் இனையன கருதல் மேயினான்.

திண்மையான வலியுடைய சூரபன்மன் மகன் இறந்துபோயதும் மீண்டு தன்னுடன் பெரும் போர் செய்வதற்கு வருபவர் யாரும் இல்லாமையாலும் அசுரச்சேனைகள் யாவும் நிலைகெட்டு ஓடிப்போயதும் சூரியதேவன் சென்று அத்தமனமாயதும் ஆகிய இவற்றையெல்லாம் எமது வீரவா தேவர் கண்டுகொண்டு இந்த வகையாக எண்ணத் தொடங்கினார். 1

எந்தையை எள்ளினான் இருந்த கோநகர்
சிந்தினன் புரத்தையுஞ் சிறிது விட்டினன்
வந்தவர் யாரையும் மாய்வு செய்தனன்
புந்தியின் வெகுளியிற் சிறிது போக்கினேன்

எந்தை பெருமானை இகழ்ந்திட்ட சூரபன்மன் இருந்த தலைமையான நகரை அழித்துச் சிந்தினேன். வீரமகேந்திரபுரத்தையும் சிறிது அழித்துள்ளேன். இங்கு வந்தார் யாவரையும் மாய்த்து விட்டேன். எனது மனதில் கொண்ட கோபத்தையும் சிறிது போக்கியுள்ளேன். 2

ஏலவெம் போர்செய எவரும் வந்திலர்
ஞாலம தவிரொளி நடாத்து ஞாயிறு
மேல்கடல் நீந்தினன் விரையப் போயினான்
மாலையும் இவ்விடை வந்து நேர்ந்ததே.

என்னோடு நேரிட்டு இயல்புடன் போர் செய்திட யாரும் வந்தாரில்லை. இப்பூமியில் பிரகாசமுடைய ஒளியைக் காட்டி நன்மைப் படுத்துகின்ற சூரியதேவன் மேற்புறத்துச் சமுத்திரத்தில் சென்று அப்பால் கடந்து விரைவுடன் போயினான். மாலைக்காலமும் இவ்விடத்து வந்து சேர்ந்துகொண்டது. 3

அறந்தனை நினைகிலா தல்லல் செய்பவர்
உறைந்திடு நகரிதின் ஒற்றிற் போந்தயான்
சிறந்திடும் அறுமுகத் தேவ தேவனை
மறந்திட லாங்கொல்இம் மாலை காறுமே.

தருமத்தை நினைவிலாது உலக உயிர்கட்கு அல்லல் செய்கின்றவரான அசுரர்கள் உறைகின்ற இந்த நகரத்தில் தூதுவன் என்னும் கடமையுடன் வந்த யான்! சிறந்து விளங்குகின்ற ஆறுமுகமுடைய தேவாதிதேவனை எம்பெருமானைக் காணாது மறந்திருக்கலாகுமோ? இன்றைய இந்த மாலைக்காலம் வரையும். ஆகாதே. 4

ஏவரும் வழுத்திய எந்தை கந்தவேள்
பூவடி தணந்திடு புலம்பும் இவ்விடைத்
தேவர்கள் புன்மையுந் தீர வல்லையிற்
போவது துணிவெனப் புந்தி தேற்றினான்

எல்லாரும் வழுத்தித் துதித்திடும் எந்தை பெருமான் கந்தனின் மிருதுவாகும் மலர் போன்ற திருவடிகளைச் சென்று தரிசியாது தடைபட்டு இங்கிருந்து புலம்புகின்ற எனது துயரும் இவ்விடத்துச் சிறையில் இருக்கின்ற தேவர்களுடைய புன்மையாகும் துயரங்களும் தீரும்படி விரைவுடன் இவ்விடம் விடுத்துப் போவதுதான் துணியாகும் என தனது மனத்தில் தேற்றம் கொண்டார் வீரவாகுதேவர். 5

தேற்றிய திறலுடைச் செம்மல் இம்மென
மாற்றலர் படுநில வரைப்பு நீங்கியே
காற்றெனக் கனலெனக் காலன் என்னவெங்
கூற்றென மறுகிடைக் குலவி ஏகினான்.

இவ்வாறு தேறுதல் கொண்ட திறலுடைய வீரவாகுதேவர் திடீரென பகையசுரர் பட்டிறந்திருக்கும் போர்க்களம் நீங்கியே; காற்றின் வேகமெனவும் நெருப்பின் வேகமெனவும் காலன் என்பவனின் வேகமெனவும் இயமனின் வேகமெனும்படியும் விரைவுடன் வீதியால் சிறப்புடன் போயினார். 6

திறல்கெழு மொய்ம்புடைச் செல்வன் செல்லுழி
மறுகிடை அவுணர்கள் மறலி மற்றிவன்
குறுகலிர் நுங்களைக் கொல்வன் கொல்வனென்
றறைகுநர் முறைமுறை அரற்றி ஓடினார்.

வலிமை கொண்ட தோளினையுடைய எமது செல்வர் வீரவாகுதேவர் செல்லும் தோறும் வீதியூடு நிற்கும் அசுரர் கண்டு பயந்து ஐயையோ இங்கே வருபவன் அசுரர்களின் இயமன். இவனைக் கிட்டிச் செல்லாதீர். உங்களைக் கொல்வான்! கொல்வான்! என்று உரக்கச் சத்தமிட்டுக்கொண்டு முறைமுறையாக யாவரும் ஓடினார்கள். 7

எஞ்சிய அவுணர்கள் யாரும் இவ்வகை
அஞ்சினர் இரிந்திட அழிந்து முன்னையாள்
துஞ்சிய ஆவணத் தொகைகள் தந்தொராய்
விஞ்சிய மகேந்திரம் விடுத்து நீங்கினான்.

மிச்சமாகத் தப்பிநின்ற அசுரர்கள் யாரும் இவ் வண்ணமாகப் பயந்து ஓட்டமெடுத்திட அழிவுற்றுச் சிதைந்து முன்புள்ள அசுரர் இறந்து கிடக்கும் வீதிகளை நீங்கிப் போயருளி மேலோங்கிய வீரமகேந்திரத்தைக் கடந்து சென்றருளினார் வீரவாகுதேவர். 8

புடையகல் மகேந்திர புரத்தை நீத்தபின்
விடைபொரு வலியினன் விண்ணின் பாலெழீஇ
முடுகினன் வழிக்கொடு முருகற் போற்றியே
வடதிசை இலங்கையின் வரைப்பு நண்ணினன்.

இடம் அகன்று விளங்கிடும் வீரமகேந்திரபுரத்தை நீங்கிய பின்பு இடபம் போன்ற வலியுடைய வீரவாகுதேவர் வானின்பால் மேலெழுந்து விரைவுடன் வழிக்கொண்டு முருகப்பெருமானைத் துதித்துப் போற்றி செய்த வண்ணமாக வடதிசையில் உள்ள இலங்கைமாநகரின் எல்லையினைச் சேர்ந்தருளினார். 9

வேறு

ஆங்கது காலையில் அனைய, பாங்கரின் மேவரு பழையோன்
ஓங்கிய மூவெயி லுள்ளோர், தாங்கிய வன்மை தரித்தோன்.

அவ்வாறுள்ள நேரத்தில் அந்த இலங்கை நகரின் பாங்கராக வீற்றிருக்கும் ஓர் பழைய அசுரன்; அவன் ஓங்கி நின்ற மூப்புரத்து உள்ள அசுரர்கள் கொண்டுள்ள அந்த வைய வலிமை உள்ளவன். 10

முடியும் மகேந்திர மூதூர், வடதிசை யார் அரண் மன்னி
உடைய இலங்கையின் ஓம்பும், படியறு காவல் பரித்தோன்.

அவன் முடிவாகிப்போகும் வீரமகேந்திரபுரத்தின் வடதிசையில் உள்ள சிறந்த அரணமாகும் தன்மை விளங்கிடுகின்ற இலங்கை நகரில் தங்கி ஓயாது காவல் கொண்டும் நிகரற்ற கடமையைத் தாங்கினன். 11

ஆயிர மாமுகன் அடுதோள், ஓய்வில் இராயிர முடையோன்
ஞாயிறு தன்மகன் நகரின், வாயில்கள் அன்னதோர் வாயான்.

ஆயிரம் பெரிய யாளி முகமுடையவன். ஓய்வின்றி கொடிய போரிடுதற்கு ஏற்ற தோள்கள் இரண்டாயிரம் உடையவன். சூரியன் புத்திரனுகிய இயமனின் நகரின் வாயில்கள் இது எனும்படியாகும் பெரிய வாய்களை உடையவன். 12

வடவரை ஆயிரம் வந்தோர், உடல்கொடு மேவிய தொப்பான்
படைபல பாணி பரித்தான், கடையழல் கான்றிடு கண்ணன்.

பெரிய மேருமலை ஆயிரமாக வந்து ஓர் உடல்கொண்டு வீற்றிருப்பதை ஒத்து விளங்கிடுவான். பல படைகளையும் தனது கையில் தரித்துள்ளான் கொடிய நெருப்பு உமிழ்கின்ற கண்களை உடையவன். 13

தண்ணளி யோரிறை தானும், உண்ணிகழ் வற்ற உளத்தான்
எண்ணரும் வெம்பவம் யாவும், பண்ணினன் அன்று பயின்றான்.

இரக்கம் என்பது ஓர் இறையளவேனும் உள்ளத்து இல்லாத உளம் உடையவன். எண்ணற்கரிய கொடிய பாவங்கள் யாவையும் பண்ணிக்கொண்டவனுய் அன்று அந்த இலங்கையில் இருந்தான். 14

மீளில் சினத்ததி வேகக், கோளரி யைத்தரு கொடியோன்
யாளி முகத்தவன் என்போன், வாள்வய முற்றிடு வலியோன்.

மீண்டிட முடியாத கோபம் என்பதனில் மேல் கொண்ட வேகமுடைய அதி வீரன் என்பானைப் பெற்றெடுத்த கொடிய தந்தையானவன். யாளிமுகன் என்னும் பேருடையவன். வாட்போரிலே அநேக வெற்றிகளைப் பெற்று சிறந்திருக்கும் வீரனுவன். 15

வேறு

பெருந்தகை யாங்கவன் பெயர்ந்த காலையின்
அருந்திறற் சூரனை அடைந்து மீண்டுபின்
மருந்துறழ் தன்மகன் மாட்சி தேர்வுறீஇ
இருந்தனன் வருந்தியே இலங்கை தன்னிடை.

பெருந்தகையான வீரவாகுதேவர் யாளிமுகன் இலங்கையில் காவலில்லாது நீங்கிய காலத்தில் வந்தவரானமையால் அந்நேரத்தில் யாளிமுகன் அரிய திறலுடைய சூரபன்மனை அடைந்து மீண்டு பின்னர் அமிர்தம் போன்ற தனது மகன் மாண்டு போன அந்த மாட்சியினைத் தேர்ந்துகொண்டு அந்த இலங்கை நகரிலே கவலையால் வருத்தமடைந்தவனுக இருந்தான். 16

சண்டவெங் கதிகொடு தமியன் சேறலுங்
கண்டனன் யாரிவன் கள்வன் போலுமால்
விண்டலம் நீந்தியே மேவு வானெனத்
தொண்டுசெய் உழையரில் ஒருவன் சொல்லுவான்.

காற்றின் வேகத்துடன் தனியனுகி வீரவாகுதேவர் அங்கு வந்து சேர்ந்துகொண்டதை யாளிமுகன் கண்டனனுகி யார் இவன் ஓர் கள்வன் போலுமாகும். வானமார்க்கமாக நீந்திக்கொண்டு பாய்ந்து வருகின்றுன் என்று யாளிமுகன் சொல்லலும் அப்போது யாளிமுகனுக்குத் தொண்டுசெய்கின்ற தூதுவரில் ஒருவன் சொல்லுவான். 17

நங்குல நாயக நவில்வன் கேட்டிநீ
செங்கதிர் முளைத்துழிச் செல்வற் காணிய
பொங்கொழி மகேந்திர புரத்திற் போந்தனை
இங்குநின் திருமகன் இருந்து காப்பவே.

எங்கள் குலத்திற்கு தலைவரே நான் சொல்வதை நீர் கேளும்; சூரியன் உதயமாகும் பொழுது எங்கள் செல்வர் சூரபன்மனைக் காணும் பொருட்டு நீர் பொங்கிடும் ஒளி நிரம்பிய வீரமகேந்திரபுரத்திற்குப் போனீர். அந்நேரம் இங்கு உமது திருக்குமாரன் இருந்து இலங்கையைக் காவல் கொள்ளும்படி விடுத்து. 18

போந்திடு கின்றபின் புணரி தன்னுள்வான்
நீந்தினன் ஈங்கிவன் நேர வன்னதை
வாய்ந்திடு பெருந்திறல் மடங்கற் பேரினுன்
காந்திய கனலெனக் கண்டு சீறினுன்.

நீர் போய்விட்ட பிற்பாடு சமுத்திர எல்லையினை வானில் பாய்ந்து கடந்து இங்கு உவன் வரலும் அதனை வாய்புற்ற பெரும் திறல் கொண்ட வீரசிங்கன் என்பான் பொறி சொரிகின்ற நெருப்பு எனும்படி இவனைக் கண்டு சீறினன். 19

சீறினன் படையொடு சென்று தாக்கலும்
வீறொடு வருமிவன் வெகுண்டு வாளுரீஇ
மாறமர் இயற்றியே மற்ற வன்றனைக்
கோறல்செய் தொருவிறல் கொண்டு மேயினன்.

வீரசிங்கன் சீறிக் கோபமுற்று பெரும் படையுடன் சென்று இவனைத் தாக்குதலும் வீறொடு வருகின்ற இவன் வெகுட்சி எய்தி வாளை உருவி மாறான பெரிய போரினைச் செய்து வீரசிங்கன் என்பவனைக் கொலை செய்து ஒரு வெற்றியினைக்கொண்டு சிறந்து மேல்கொண்டு வந்தான். 20

மின்னவிர் பூணுடை வீர மொய்ம்பினன்
இன்னதோர் இலங்கையின் இடைக்கட் பாய்ந்தனன்
அன்னவன் அடிபொறு தாழி உற்றதாற்
பொன்னகர் வளனொடும் அங்கட் புக்கபோல்.

மின்னல் கால்கின்ற ஒளியுடைய ஆபரணமணிந்த வீரத்தோளுடைய இவன் பின்னராக இந்த இலங்கையின் நடுவிலே குதித்தான். அவ்வாறாகக் குதித்த இவனுடைய விசையைத் தாங்கிடமுடியாது இந்த இலங்கை சமுத்திரத்தினில் ஆழ்ந்து போயது. பொன்னான தேவ உலகம் செல்வத்துடனும் கடலினுள் புகுந்தவாறு போன்று. 21

புக்கிட அளப்பிலர் பொன்ற ஏனையோர்
அக்கணம் எழுந்தனர் அவற்கண் டஞ்சியே
திக்கொடு வானமுஞ் சிந்த நின்மகன்
மைக்கடல் அகமொரீஇ வல்லை எய்தினன்.

கடலிலே இலங்கை நகர் ஆழ்ந்துபோக அளவிறந்தோர் இறந்திட மற்றைய அசுரர் அந்தக் கணமே எழுந்தனர். இந்த வீரனைக் கண்டு பயந்து எல்லாருமாக திசையிலும் வானிலும் சென்று சேர்ந்திட; உமது மகன் அதிவீரன் கரிய கடலினின்றும் மேலெழுந்து வெளியே விரைவுடன் வந்தான். 22

வெய்தென இவண்வரும் வீர னோடமர்
செய்தனன் வாள்கொடு செவ்வி அன்னதின்
மைதவழ் மேனியின் மதலை மார்புதாள்
கைதலை யொருதலை கண்ட மாக்கினன்.

அதிவீரன் விரைவாக எழுந்து வேகமுடன் புதிதாக இவ்விடம் வருகின்ற இந்த வீரனோடு போர் செய்தான், அவ்வாறான செவ்விய நேரத்து இந்த வீரன் தனது வாளினைச் செப்பமுடன் உருவி கருநிறம் விளங்கிடும் உமது மைந்தனின் நெஞ்சை காலை கையை தலையை ஒரே வீச்சில் வெட்டி முடிவாக்கினன். 23

பூழியம் புயமுடைப் பொருநன் பின்னுறக்
கேழுறு வானெறி கிளர்ந்து போந்திடா
வாழிய மகேந்திர வரைப்பிற் புக்கனன்
ஆழுறும் இலங்கையும் ஆழி மேலெழ.

திருநீறு அணிந்திட்ட திருத்தேபனுடைய இந்த வீரன் அதன்பிற்பாடு மிகச் சிறந்துள்ள வானத்தின் வழியாக எழுந்துகொண்டு போய் வாழ்வுடைய வீரமகேந்திரபுரத்தின் எல்லையில் சேர்ந்துள்ளான். அவனும் போக ஆழ்ந்துபோன இலங்கையும் பழையபடி கடலின்மேல் மிதந்துகொண்டது. 24

சூருறை திருநகர் துன்னி யாயிடைச்
சீரினை முழுவதுஞ் சிந்தி நங்குல
வீரரொ டேயமர் விளைத்து வென்றவண்
நேருநர் இன்மையின் நீங்கி னனரோ.

ஐயனே கேளும்; சூரபன்மன் இருக்கின்ற திருவுடைய நகரினில் சென்று அவ்விடத்து உள்ள நகரின் சிறப்புகள் முழுவதையும் அழித்து நாசஞ் செய்து எங்கள் குலத்து வீரர்களோடு போர் செய்து வென்று அங்கு பின்னர் தன்னோடு நேரிட்டுப் போர் செய்ய யாரும் இல்லாமையால் மீண்டு வருகின்றான் அல்லவோ, 25

என்னலும் உருமினும் இடித்த சொல்லினன்
வன்னிகொள் உயிர்ப்பினன் மடித்த வாயினன்
துன்னிய வியர்ப்பினன் சுழலுங் கண்ணினன்
மெய்நிறை வெகுட்சியன் விளம்பல் மேயினான்.

என்று இவ்வாறு தூதுவன் வீரவாகுதேவரின் வரலாறு பற்றிச் சொல்லுதலும் அதுகேட்ட யாளிமுகன் என்னும் அசுரன் இடியேற்றிலும் கொடுஞ் சத்தமுடைய சொல்லை உடையவனாய் நெருப்புக் கொண்ட மூச்சினை உடையவனாய் வாயை மடித்துக் கொண்டவனாய் மேனி எங்கும் அரும்பிடும் வியர்வை கொண்டவனாய் சுழலுங் கண்ணினை உடையவனாய் உடலம் நிறைந்த கோபமுடையவனாய் இவ்வணம் சொல்லத் தொடங்கினான். 26

காண்டியென் கடிமுறை கடந்து மைந்தனை
ஈண்டுயிர் வவ்வியே இறைவன் ஊர்புகா
மீண்டிடு கள்வன்இவ் வீரந் தன்னொடே
மாண்டிட அடுகுவன் வன்மை யாலென்றான்.

எனது ஏவல் தூதனே இதை நீ பார்த்துக்கொள்வாய். எனது காவல் தடையினை நீங்கிக் கடந்து எனது மைந்தனை இவ்விடத்து உயிரை நீக்கிக் கொன்று; அப்பால் எங்கள் அரசனின் ஊரில் புகுந்து மீண்டிடுகின்ற இந்தக் கள்வன் வீரவாகு பெற்றிட்ட இந்த வீரங்களுடன் மாண்டிடும்படி எனது வலிமையால் கொல்வேன் என்றான் யாளிமுகன். 27

என்றிவை விளம்பியே யாளி மாமுகன்
குன்றென எழுந்தொரு கொற்றவாள்கொளீஇ
நின்றசில் படையொடு நேர்ந்து வீரன்முன்
சென்றனன் இனையன செப்பல் மேயினன்.

என்று இவற்றை எல்லாம் கூறிய பின்பாக யாளியின் பெருமுகம் ஆயிரம் உடைய அசுரன் மலைபோன்று எழுந்து கையிலே கொற்றம் மிகுந்த வாளை எடுத்துக் கொண்டு தன்னுடன் நின்ற சில படைகளுடன் புறப்பட்டு நேராக வீரவாகுதேவர் முன் சென்றான். இந்த வார்த்தைகளைச் சொல்லத் தொடங்குகின்றான். 28

நங்கடன் முறையினை நடாத்து மைந்தனை
இங்கடல் செய்தனை இனைய காப்பொரீஇ
அங்கடற் போந்தனை அழிவு செய்தனை
வெங்கடல் கடந்தனை மீடி யேகொலாம்.

எனது கடமையினை இங்கு நடாத்துகின்ற என்னுடைய மகனை இங்கு நீ கொன்றிட்டாய். இத்தகைய காவலைக் கடந்து நீங்கி அப்பால் கடல் தாண்டிப் போயினாய். அழிவுகள் பல செய்தாய். இவ்வளவும் செய்துவிட்டு கொடிய கடலையும் கடந்து மீண்டுபோக உன்னால் முடியுமோ? 29

ஓல்லொலி அளக்கரை உகண்டு நிற்கினிச்
செல்லுதல் அரிதியான் செருவின் நேர்ந்தனன்
கொல்லுவன் பெருவயங் கொள்வன் நீயிவண்
வல்லது புரிமதி மதியிலாய் என்றான்.

ஓல்லென ஒலித்திடும் கடலினைத் தாண்டி உனக்கு இனி செல்லுதல் முடியாத காரியம். அது அரிதாகும் நான் இப்பொழுது உன்னுடன் போரில் நேரிட்டு வந்துள்ளேன் உன்னைக் கொல்வேன், பெருவெற்றிகளைக் கொள்வேன். நீ இவ்விடத்து உனது வல்லபத்தினைப் புரிவாயாக மதியிலாதவனே என்றான் யாளிமுகன்
30

சொற்றது கேட்டலுங் துழனிப் பேரொலி
உற்றெரி கனலென உயிர்ப்பு மூரலுஞ்
செற்றமும் எய்தியே துளக்கிச் சென்னியைக்
கொற்றமொய்ம் புடையதோர் குரிசில் கூறுவான்.

யாளிமுகன் சொன்னதை வீரவாகுதேவர் கேட்டலும் பெரும் சத்தத்துடன் சுவாலித்தெரிகின்ற நெருப்பினைப் போன்று மூச்சும் சிரிப்பும் தோன்றிட கோபமடைந்து தலையை அசைத்துக்கொண்டு கொற்றம் மிகுந்த தோளுடைய வீரவாகுதேவர் இதனைச் சொல்கின்றார். 31

ஒருதலை யுடையவென் னுயர்வும் ஆயிரந்
தருதலை யுடையநின் தாழ்வும் யாமிவட்
பொருதலை இமைத்திடும் போது காண்புறுங்
கருதலை பெருவடி வமைந்த காட்சியே.

யாளிமுகனே கேள்! ஒரு தலையுடையேன் யான். அவ்வண்ணமான எனது உயர்வையும் ஆயிரம் எனும் எண்ணிக்கை கொண்ட தலையுடைய உனது தாழ்வையும் நாங்கள் இங்கு போரிடும் காலத்தில் கண்டுகொள்வோம். நீ பெரிய வடிவு கொண்டாயென மனதில் எண்ணி பெருமிதம் கொள்ளாதே. 32

தீயவ இம்மொழி திண்ணந் திண்ணமுன்
மாயிரும் புழைக்கையின் மாமு கங்களோர்
ஆயிரந் தன்னையும் அறுத்து வீட்டியே
நாயினங் கவரிய நல்கு வேனென்ருன்.

அட தீயவனான அசுரனே! இந்த எனது வார்த்தை திண்ணம். எப்படியெனில் உனது பெரும் துதிக்கைகள் கொண்ட மாமுகங்கள் ஆயிரத்தையும் அறுத்து நான் வீழ்த்தி; நாய் அந்தத் தலைகளைக் கவ்விச் செல்லுமாறு கொடுப்பேன். இது உண்மை என்பதை அறிவாயாக. 33

கருணைகொள் நந்தியங் கணத்தன் இவ்வகை
உரைதரும் எல்லையின் உததி மேருமால்
வரையினை விழுங்கிய வளைந்த தேயென
விரைவொடு படைஞர்கள் வீரற் சுற்றினர்.

கருணை கொண்ட நந்தியெம்பெருமானுடைய கணத்தவராகும் வீரவாகுதேவர் இவ்வாருகக் கூறியருளி நிற்கும் எல்லையில் சமுத்திரமானது மேரு எனப்படும் பெரிய மலையை விழுங்கும்படி சுற்றி வளைந்து கொள்கின்றது என்னும்படியாக; யாளிமுக அசுரனின் படைகள் எல்லாம் எழுந்து வீரவாகுதேவரைச் சுற்றி வளைத்துக் கொண்டார்கள். 34

சுற்றிய தானையர் தோன்றல் மீதுதாம்
பற்றிய படைக்கலம் பலவுந் தூண்டியே
செற்றமொ டமர்வினை செய்யச் சூறைபோல்
மற்றவர் சூழலுள் வாள்கொண் டெய்தினன்.

அவ்வாறு வீரவாகுதேவரைச் சுற்றிய யாளிமுகனின் சேனைகள் யாவும் எம்பிரான் வீரவாகுதேவர் மேலாக தாங்கள் கையில் பிடித்த படைக்கலங்கள் பலவற்றையும் எடுத்து வீசிச் செலுத்தி மிகும் கோபத்துடன் போர் செய்திடலும் அந்நேரம் வீரவாகுதேவர் சூறவளிக் காற்று சுற்றிச் சுழன்றடிக்கின்ற தன்மை போன்று தன்னை வளைந்து கொண்ட அசுரர்கள் கூட்டத்துள்ளே வாளை எடுத்துக்கொண்டு போயினர். 35

துண்டமும் அகலமுந் தோளுந் தாளுமொண்
கண்டமுஞ் சென்னியுங் கரமு மானவை
விண்டுவிண் டழிவுற வெய்ய தானவர்
தண்டம தனைத்தையுந் தடிந்திட்டானரோ.

வாளோடு சென்ற வீரவாகுதேவர் வாளை வீசி வீசி அவர்களுடைய மூக்கும் நெஞ்சும் தோளும் காலும் வலியுடைய கழுத்தும் தலையும் கையும் எனப்படும் அவயவங்கள் யாவும் வெட்டுண்டு வெட்டுண்டு சொரியும்படி சேனைகள் முழுவதையும் வெட்டி எறிந்து அனைவரையும் கொன்று குவித்தார். 36

வேறு

அறுகு மாமுகத் தண்ணல் ஆற்றவும்
கறுவு பெற்றிடுங் கருத்தின் வீரனைக்
குறுகி ஆயிரங் கொண்ட கைகளால்
இறுதி யூழிநாள் இடியின் எற்றினான்.

ஆறு முகமுடைய எமது பெருமானின் கறுவியம் எனும் பொருளுக்கெனவோர் கருத்துடன் தோன்றிய வீரவாகுதேவரை கிட்டி யாளிமுகன் என்பான் உலகம் அழிவுறும் காலத்து முழங்கிடுகின்ற இடியின் தன்மை போன்று ஆயிரம் கைகளால் அவர்மீது குற்றியடித்தான். 37

அடித்த கைகளை அங்கை ஒன்றினால்
பிடித்து மேலவன் பெருங்கை வாளினால்
உடைத்த சோரிநீர் உகுத்து வீழ்ந்திறை
துடித்தி டும்படி துண்டம் ஆக்கினான்.

அவ்வாறு யாளிமுகன் அடித்த கைகளை வீரவாகுதேவர் தமது அழகிய கை ஒன்றினால் எட்டிப் பிடித்துக்கொண்டு மற்றதோர் பெருங் கையில் இருக்கின்ற வாளினால் யாளிமுகனுடைய அடித்த கைகளை அவனிடத்துடைய இரத்தம் கக்கிச் சீறிக் கொண்டு பூமியிலே கிடந்து துடிக்கும்படி துண்டமாக வெட்டி வீழ்த்தினார். 38

ஆயி ரங்கரம் அறலும் மற்றுள
ஆயி ரங்கரம் அவைகள் நீட்டியே
ஆயி ரங்கிரி அவைப றிந்தனன்
ஆயி ரங்கணன் ஆடல் கொண்டுளான்.

யாளிமுகனின் ஆயிரங் கைகளும் வெட்டுண்டு கீழே வீழ்தலும் மற்ற தனது ஆயிரம் கைகளையும் பின்னர் நீட்டி அவைகளால் ஆயிரம் மலைகளை வீரவாகுதேவர் மேல் வீசி எறிந்திடுவதற்குப் பிடுங்கினான் யாரெனில் ஆயிரங் கண்ணுடைய விஷ்ணுபிரானைப்போன்ற போர் வலிமை கொண்ட யாளிமுகன். 39

பறித்த ஆயிரம் பருப்ப தத்தையுங்
கறுத்து வீரன்மேற் கடிது வீசலும்
இறத்தல் கொண்டுமெய் ஏங்கும் எய்தியே
புறத்து வீழ்ந்தன உடைந்து பூழியாய்.

தான் பறித்து எடுத்துக்கொண்ட ஆயிரம் பெரு மலைகளையும் மிகு கோபத்துடன் வீரவாகுதேவர் மேல் எறிந்து வீசிடுதலும் அம்மலைகள் வலிகெட்டு மிகு வேகமாக வந்து வீரவாகுதேவர் மேனி எங்கும் பட்டு உடன் புறத்தே வீழ்ந்து பூழுதியாய் உடைந்துபோயது. 40

பொற்றை யாவையும் பூழி ஆகியே
அற்ற காலையில் ஐயன் தூதுவன்
மற்றை ஆயிரம் வான்க ரத்தையுங்
கொற்ற வாள்கொடே குறைத்து வீட்டினான்.

யாளிமுகனால் எறியப்பட்ட மலைகள் யாவும் புழுதியாகியே அழிவுற்ற காலையில் எமது ஐயரின் தூதுவர் வீரவாகுதேவர் யாளிமுகனின் மலைகளைப் பறித்தெடுத்த மற்றைய ஆயிரம் கைகளையும் தமது மேன்மை படைத்த கை வாளினால் வெட்டி வீழ்த்தினார். 41

இமைக்கும் எல்லையின் எய்துங் கூற்றினை
அழைக்கு மாறெனை ஆர்த்துத் தானவன்
தழைக்கு மொய்ம்பினான் தன்னைப் பற்றுவான்
புழைக்கை முற்றவும் பொள்ளென் றுய்த்தனன்.

யாளிமுகனின் கைகளை வீரவாகுதேவர் வெட்டி வீழ்த்திய நேரத்தில் யாளிமுகன் தனக்கு முன்பாக வருகின்ற இயமனைக் கூப்பிட்டு அழைப்பது போன்று பெரும் சத்தமுடன் ஆர்த்து பருத்து தழைத்த தோளுடைய வீரவாகுதேவரைப் பிடித்திடும்படியாக தனது ஆயிரம் துதிக்கையையும் நீட்டினான். 42

உய்த்த காலையின் ஒருதன் வாளினால்
எய்த்த வன்மைசேர் யாளி மாமுகன்
பத்து நூறெனப் பட்ட சென்னியுங்
கொத்தொ டேவிழக் குறைத்திட் டானரோ.

வீரவாகுதேவரைப் பிடிக்கும்படி யாளிமுகன் தனது கைகளை நீட்டிய நேரத்து வீரவாகுதேவர்; மிகவும் களைப்படைந்திட்டாலும் வலியுடன் சேர்வுற்ற யாளிகளின் பெரு முகமுடைய அவ்வசுரனின் ஆயிரம் எனப்பட்ட தலைகளும் கூட்டாக வீழும்படி வெட்டி வீழ்த்தினார். 43

யாளிமுகன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 947

---

## வீரவாகு மீட்சிப் படலம்

இன்ன பான்மையால் யாளிமாமுகன்
தன்னை அட்டபின் தன்கை வாளினைப்
பொன்னு லாவுறை புகுத்திச் சென்றனன்
மின்னு செஞ்சுடர் மேனி வீரனே.

இவ்வாறான பான்மையாக யாளிமுகன் என்னும் அசுரனைக் கொன்ற பிற்பாடு தனது கையிலிருக்கின்ற வாளினை பொன் விளங்கும் உறையிலே செருகிக் கொண்டு அப்பால் சென்றருளினார் மின்னுகின்ற செஞ்சுடர் ஒளி வீசிடும் மேனியுடைய வீரவாகுதேவர். 1

இந்தி ரத்திரு இலங்கை நீங்கியே
அந்தி ரைக்கடல் அழுவம் வாவியே
கந்த மாதனங் கவின்ற வேலைசேர்
செந்தி மாநகர் சென்று புக்கனன்.

இந்திரலோக செல்வங்களை உடைய இலங்கை நகரை விடுத்து நீங்கி அப்பால் அழகிய திரைகளையுடைய சமுத்திரத்தைத் தாண்டிக் கடந்து கந்தமாதனம் எனும் மலை கவின்பெற நிற்கின்ற திருச்செந்தூரில் சென்று சேர்ந்தருளினார் வீரவாகு தேவர். 2

புக்க காலையில் பொருவில் ஆற்றலான்
மிக்க சேவகன் மேவல் காணுறுத்
தொக்க பாரிடஞ் சோமற் காணுறு
மைக்கருங் கடல் மான ஆர்த்தவே.

திருச்செந்தூரிடத்து வீரவாகுதேவர் பெருமான் சென்று புகுந்த நேரத்தில் தனக்கு நிகர் பிறிதிலாத வலிமையுடைய தூதுவர்பிரான் திரும்பிவரும் தன்மையைக் கண்ணுற்று அங்கு தொகுதியாகப் பரந்திருந்த பூதசேனைகள் யாவும் சந்திரதேவனைக் கண்டபோது சமுத்திரமானது பொங்கி எழுகின்ற பேரிரைச்சல் போன்று மிகவும் மகிழ்வால் இரைந்து ஆரவாரித்தன. 3

பாரி டத்தொகை பரிக்கும் மன்னவர்
சேர வந்துதஞ் செங்கை கூப்பியே
வீர வாகுவை மெய்யுறத் தழீஇ
ஆர்வம் எய்தினர் அன்பு கூறினர்.

பூதங்களின் தொகைகளை பரிபாலனம் செய்கின்ற பூதசேனாதிபதிகள் யாவரும் ஒருங்கு சேர வந்து எப்பிரான் வீரவாகுதேவரை; தங்கள் சிவந்த கைகளைக் கூப்பித் தொழுது அவர் மேனியுடன் சேரத் தழுவிக் கொண்டு பெரிதும் ஆர்வம் அடைந்து அன்பினால் பெருகியெழும் இனிய முகமன் வார்த்தைகளைக் கூறினர்கள். 4

தழுவு வோர்தமைத் தானும் புல்லியே
இழிஞர் தம்பதிக் கேகும் வெம்பவம்
ஒழீவ தாயினன் உமைக்கண் டேயென
உழுவ லன்பினன் முகமன் கூறினன்.

வீரவாகுதேவர் பிரான் தம்மைத் தழுவுவோர்களை தாமும் பதில் தழுவிக் கொண்டு சொல்வார்; இழிந்த வாழ்க்கையுடைய அந்த அசுரர் இருப்பிடஞ் சென்றமையால் அடைந்துள்ள பாவத்தை இங்கு உம்மைக் காண்பதால் நீங்கிக்கொண்டேன் என்று எக்காலமும் பிரிவறியாத அன்பினால் நல்ல முகமன் வார்த்தை கூறினார். 5

விலக்கில் வன்மைகொள் வீர வாகுவை
இலக்கத் தெண்மரும் எதிர்ந்து மற்றவன்
மலர்க்க ருங்கழல் வணங்கிக் கைத்தொழ
அலக்கண் நீங்குமா றனையர்ப் புல்லினன்.

யாவராலும் விலக்கிட முடியாத வலிமை கொண்ட வீரவாகுதேவரை இலக்கம் வீரரும் மற்றும் எட்டுப்பேரும் ஆகிய துணைவர்கள் யாரும் எதிர்கொண்டு அவருடைய மிருதுவான திருவடி மலர்களில் தாழ்ந்து கைகூப்பி வணக்கஞ் செய்ய அவர்கள் அவரைப் பிரிவுற்றதால் கொண்ட துயரம் நீங்கிடுமாறு வீரவாகுதேவர் அவர்களைத் தழுவிக்கொண்டார். 6

அமைவில் பாரிடத் தனிக வேந்தருந்
தமர்க ளாயினோர் தாமுஞ் சூழ்வர
விமல ளுகியே வீற்றி ருந்திடுங்
குமர நாயகன் கோயில் மேயினான்.

வீரவாகுதேவர் பிரானைக் கண்ணுற்ற மகிழ்வால் கட்டுக்கடங்கிடாதபடி பொங்கிநிற்கும் பூதங்களின் தலைவர்களும் தனது துணைவர்களாயினோரும் சூழ்ந்து வர நின்மல சோதியாய் விளங்கி வீற்றிருந்தருள்கின்ற குமரநாயகப் பெருமானின் கோயிலைச் சென்று சேர்ந்தருளினார் வீரவாகுதேவர். 7

விண்டு வானுளோர் விரிஞ்சன் மாதவர்
கொண்டல் ஊர்பவன் குழுமிப் பாங்குற
அண்டர் நாயகன் அமருந் தன்மையைக்
கண்டு முந்துகண் களிப்பின் மேயினான்.

அவ்வாறு வீரவாகுதேவர் கோயில் உள்ளாகச் செல்லலும் அங்கு கோயிலுள் விஷ்ணுமூர்த்தி, தேவர்கள் பிரமன், பெரும் தபோதனர்கள், மேகவாகனனான இந்திரதேவன் ஆகியோர் பக்கராகச் சூழ்ந்திருப்ப அங்கு தேவர்களுக்கெல்லாம் நாயகரான ஆறுமுகப்பிரான் அமர்ந்திருப்பதைக் கண்டு முள்பே தமது கண் களிப்பாராயினார். 8

உள்ளம் என்புடன் உருகத் தூயநீர்
வெள்ளங் கண்ணுற விதிர்ப்பு மேவரப்
பொள்ளெ னப்புரம் பொடிப்பச் சூரடும்
வள்ளல் சேவடி வணங்கி னனரோ.

எம்பிரானைச் சென்று சேரும்தோறும் உள்ளமானது எலும்புடன் சேர உருகும்படியாக தூயதான கண்ணீர் வெள்ளம் கண்களில் பெருகிட நடுக்கமும் கொண்டு திடீதிடீரென உரோமமும் சிலிர்த்து நின்றிட அசுராதிகளை அறவே மாய்த்திடுகின்ற அருள் வள்ளலின் சேவடிகளை வணக்கஞ் செய்தருளினார் வீரவாகுதேவர். 9

அணங்கு சால்வுறும் அந்தண் சேவடி
வணங்கி மும்முறை மகிழ்ச்சி அன்பிவை
இணங்க அஞ்சலித் தேத்தி நிற்றலுங்
குணங்கள் மேற்படுங் குமரன் கூறுவான்.

எம்பெருமானுடைய அற்புதம் விளைகின்ற ஆனந்தம் தந்திடும் அழகியகுளிர்ந்தசேவடிகளை மும்முறையாக வீரவாகுதேவர் வணங்கினராகி மகிழ்ச்சி அன்பு ஆகிய இவைகள் இணங்கி நிறைவுறுமாறு கைகளைக் கூப்பித் தொழுது துதித்து நிற்றலும் கருணையே திருவுருவாகி குணங்கள்தாம் இல்லாத இன்பமாகி எக்குணங்களுக்கும் மேற்பட்டவரான குமரப்பெருமான் கூறியருள்வார். 10

சூரரை வாட்டுறாஞ் சூரன் முன்புபோய்
விரைவின் நம்மொழி விளம்ப மற்றவன்
உரைசெய் திட்டதும் ஒல்லை மீண்டதும்
மரபின் இவ்விடை வகுத்தியால் என்றான்,

வீரவாகுதேவனே கேள். தேவர்களை வாட்டித் துயருறுத்தும் சூரபன்மன் முன்பாக நீ சென்று விரைவுடன் எமது வார்த்தையை அவனிடம் சொல்ல அதனைக் கேட்ட சூரன் அங்கு கூறியமையும் அதை உணர்ந்து உடனுக நீ மீண்டு வந்ததையும் முறையாக இவ்விடத்து வகுத்துச் சொல்வாயாக என எம்பிரான் கூறியருளுதலும். 11

வீரன் கூறுவான் விமல நின்மொழி
சூரன் முன்புபோய்ச் சொல்ல விண்ணுளோர்
ஆரி ருஞ்சிறை அதனை வீடலே
காரி யம்மெனக் கருத்திற் கொண்டிலன்.

அதனைக் கேட்ட வீரரான வீரவாகுதேவர் கூறியருள்வார்; நின்மல மூர்த்தியே தேவரீருடைய திருவாக்கை அடியனேன் சூரபன்மன் முன்பு போய் நின்று சொல்லலும் அப்பொழுதும் சூரபன்மன் வானில் உள்ள தேவர்களைத் துயருறுத்துகின்ற கொடிய சிறையை நீக்குதல் ஓர் பெரும் பொருளான காரியம் என அவன் தனது கருத்தில் கொண்டானில்லை. 12

கெடல ருஞ்சுரர் கிளையை வெஞ்சிறை
விடுகி லேனென வெகுண்டு கூறினன்
அடிகள் அன்னதால் ஆண்டு நீங்கியே
கடிது வந்தனன் கருமமீ தென்றான்.

கெடுதல் என்பது அரிதாகும் அத்தேவர்கள் சிறையை அவன் ஒருபோதும் விடமாட்டேன் என வெகுட்சியோடு கூறினன். எமது குருபரனே அத்தன்மையால் யான் அவ்விடம் விடுத்து நீங்கி விரைவாக இவ்விடம் வந்தேன். இதுவே நடந்துள்ள கருமங்கள் எனக் கூறினர் வீரவாகுதேவர். 13

என்ற காலையின் யாண்டு மாகியே
நின்று முற்றெருங் குணர்ந்த நீர்மையான்
உன்றன் செய்கையுள் ஒன்றுஞ் சொற்றிலை
நன்று மற்றது நவிறியால் என்றான்.

என்று வீரவாகுதேவர் கூறியருளிய காலையில் எங்குமாகியே நிறைந்து நின்று முழுவதையும் ஒருங்காக உணர்ந்திடுகின்ற நீர்மை கொண்ட எம் பகவான் வீரவாகு தேவரை நோக்கி இது இப்படியாகில் உன்னுடைய செயல்களுள் ஒன்றையும் சொன்னாயில்லை. ஆதலால் நன்றுடன் அந்தக் கருமங்களையும் இவ்விடம் எடுத்துக் கூறிடுவாயாக என்றருள் புரிந்தார். 14

தொடக்க முற்றுவாழ் சூரன் மாநகர்
அடுத்த காலையின் அகன்ற வேலையில்
தடுத்து ளோரைநின் சரண வன்மையால்
படுத்து வந்தனன் பான்மையீ தென்றான்.

அவ்வேளை வீரவாகுதேவர் எம்பிரானைநோக்கி; பெரும் சுற்றத் தொடக்கத்துடன் வாழ்கின்ற சூரனுடைய பெருநகரில் நான் சென்ற காலையிலும் அங்கு நின்று மீண்ட காலங்களிலும் என்னைத் தடுத்துளோரை எல்லாம் தேவரீருடைய திருவடிகள் தந்தருளுகின்ற அருளின் வலிமையால் கொன்று அழித்து வந்தேன். இதுவே நடந்த பான்மையாகும் என்றார். 15

அருந்தி றற்புயன் அனைய செப்பலும்
இருந்த கந்தவேள் இகலி னோர்களால்
வருந்தி னாய்கொலோ மன்ற என்றுதன்
திருந்து பேரருள் செய்தல் மேயினான்.

வலிமை கொண்ட தோளினையுடைய வீரவாகு தேவர் இவற்றைக் கூறியரு ளலும் அதுகேட்டு அங்கிருந்தருளிய முருகப் பெருமான் வீரவாகு தேவரை நோக்கி உன்னை தடுத்துப் போரிட்ட பகைவர்களால் நன்கு நீ வருந்தியுள்ளாய்போலும் என்று எல்லா வருத்தங்களையும் நீக்கியருளி திருத்தமுற வைத்தருளும் பேரருளினை எம்பிரான் வீரவாகு தேவர்க்குச் செய்தருளுகின்றார். 16

அங்கவ் வெல்லையின் ஆயி ரம்பெயர்ச்
செங்கண் மாயவன் திசைமு கத்தவன்
மங்குல் மேலவன் வதன நோக்கியே
எங்கள் நாயகன் இனைய கூறுவான்.

அங்கு அந்த வேளையில் ஆயிரம் பெயருடன் சிவந்த கண்ணுடைய நாரா யணக் கடவுள் திக்குகளுக்கொரு முகமுடைய பிரமதேவர்; மேகங்களை வாகனமாக உடைய இந்திரபகவான் ஆகியோரின் முகங்களை பார்த்தருளி எங்கள் நாயகரான முருகப்பெருமான் இவற்றைக் கூறியருள்வார். 17

தேவ ரைச்செயுஞ் சிறைவி டுத்துநீ
மேவு நன்கெனா வெய்ய சூரனுக்
கேவு தூதைவிட் டியம்பு வித்தனம்
பாவி யன்னது பயனென் றுன்னலான்.

தேவரைச் செய்து வைத்த சிறைவிடுத்து நன்றுடன் நீ உய்ந்திருப்பாயாக என ஓர் தூதனை நாம் விடுத்து அந்தக் கொடிய சூரிபன்மனிடம் சொல்லுவித்தோம். ஆனால் அந்தப் பாவியான சூரபன்மன் அதை பயன்தரும் ஒரு பொருளாக எண்ணிக்கொள்ளவில்லை. 18

வீத லேயவன் விதிய தாதலின்
தீதில் விண்ணவர் சிறைவி டோமென
ஓதி னான்அவன் உயர்வு நீக்குவான்
போது நாளையா மெனப்பு கன்றனன்.

இறப்பதே அவனுடைய விதி ஆதலால் அந்த சூரபன்மன் தீமை எதுவும் இல்லாத தேவர்கள் சிறையை விடமாட்டேன் என்று எமக்குக் கூறும்படி அங்கு சொல்லினான். ஆகவே அவ்வாறு தீமை புரிவதற்கு அஞ்சாத அத்துணைச் சிறப்புற்ற அந்த சூரபன்மனின் உயர்வை நீக்குவதற்கு நாளை நாம் வீரமகேந்திரபுரம் செல்வோ மெனக் கூறியருளினார். 19

ஆறு மாமுகத் தையன் இவ்வகை
கூறக் கேட்டுளோர் கொடிய சூர்மிசைச்
சேறு மென் றசொல் தெளிவின் நந்துயர்
மாறிற் றென்றனர் மகிழ்ச்சி எய்தினார்.

உலகெங்குமாகச் செறிந்து அருள் புரிகின்ற ஆறு பெருமுகங்களுடைய எமது ஐயன் இவ்வகையாகக் கூறியருளுதலைக் கேட்டுளோரான திருமால் பிரமன் இந்திரன் முதலியோர் யாரும் கொடிய சூரபன்மன் மேலாகப் போரிடும்படி நாம் செல்வோம் என்ற எம்பிரானுடைய அமுத வாக்கின் தெளிவை உட்கொண்டு இனிமேல் எல்லாம் நமது துயரம் மாறிபது என்றார்கள். அளவற்ற மகிழ்ச்சியை அவர்கள் கொண்டனர். 20

ஆன வத்துனை ஆடன் மொய்ம்பினன்
தான அப்பதிச் சயந்தன் உற்றதும்
ஏனைச் செய்கையும் எடுத்துக் கூறியே
வான வர்க்கிறை மனதைத் தேற்றினன்.

அவ்வாறாகிய நேரத்து போரில் மிகு வெற்றி கொள்ளும் தோளுடைய வீரவாகு தேவர் அசுரர் நகரமான வீரமகேந்திரபுரத்தில் சயந்தன் இருந்திடுகின்ற சிறைவாசத்தின் தன்மையையும் மற்றும் அங்கு நிகழ்ந்துள்ள ஏனைய செய்கைகளையும் எடுத்துக் கூறியே தேவர்கட்கு அரசனான இந்திரபகவானின் மனத்தை தேறுதல் அடையச் செய்தான். 21

சீரு லாமகேந் திரபு ரத்தினும்
வீர வாகுமீண் டதுவி ளம்பினும்
ஆர ஞர்த்கடல் அலைப்ப ஆண்டுறுஞ்
சூர னுற்றதும் பிறவுஞ் சொல்லுவாம்.

சிறப்பு எஞ்ஞான்றும் நிலவிடுகின்ற வீரமகேந்திரபுரத்து வீரவாகுதேவர் தூதாகச் சென்று மீண்டுள்ள வரலாற்றை முனிவர்களே இதுகாறும் எடுத்துக் கூறியுள்ளோம். இப்பால் நீக்கமுடியாத துயரம் என்னும் கடல் துன்புறுத்தலாலே வேதனையடைந்து கொண்டு அந்த வீரமகேந்திரபுரத்திருக்கும் சூரபன்மனின் நிலையை எடுத்து கூறியருள்வோம் என நைமிசாரணியத்து முனிவர்கட்கு மீண்டும் சூதமுனிவர் சொல்லத் தொடங்குவார். 22

வீரவாகு மீட்சிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 959

---

# சூரன் நகர்புரி படலம்

ஊக வான்படை உலப்ப வச்சிர
வாகு மாண்டதும் வாகை மொய்ம்பினன்
ஏகுந் தன்மையும் ஏவல் தூதுவர்
சோக மோடுபோய்ச் சூர்முன் கூறினர்.

தன்னுடன் அணிவகுத்து பெருவீரத்துடன் சென்ற மேலான சேனைகள் யாவும் மாண்டிட வச்சிரவாகு தானும் முடிவாயதும் அப்பால் வீரவாகுதேவர் அவ்விடம் விடுத்து போயருளிய தன்மைகள் யாவையும் சூரபன்மனின் ஏவலினைப் புரிகின்ற தூதுவர்கள் கண்டு மிகுந்த சோகமோடு சென்று மிகத் துயரத்தோடும் இச்செய்திகளை சூரபன்மன் முன்பு கூறினார்கள். 1

ஈரைஞ் சென்னிசேர் இளைய காளைமுனை
வீரஞ் சிந்தியே விளிந்த வாற்றினைச்
சூரன் கேட்டலுந் துளங்கித் துன்பெனும்
வாரி யுள்ளுற மயங்கி வீழ்ந்தனன்.

பத்துத் தலை கொண்ட இளைய மைந்தனை வச்சிரவாகு தனது வீரம் கெட்டு மாண்டுபோன வரலாற்றினைச் சூரபன்மன் கேட்டலும் நடுக்கம் கொண்டு துன்பம் எனப்படும் கடலினிடத்து உள்ளாக மயங்கி ஆழ்ந்தான். முன்னமே தூதுவர் வீரவாகுவின் செயல்களால் மானமிழந்து மதிமயங்கி நின்ற சூரன்; மைந்தனும் இறந்தான் எனும் வார்த்தை கேட்டலும் நீக்கிடமுடியாத கவலையால் மூடப்பெற்று மயங்கி வீழ்ந்தான். 2

வேறு

கண்ணிடை நெடும்புனல் கால மைந்தன்மேல்
உண்ணிகழ் அன்புசென் றுயிரை ஈர்ந்திடத்
துண்ணென உயிர்ப்பெனும் புகையுஞ் சுற்றிட
எண்ணருஞ் செல்லல்கொண் டிரங்கி ஏங்கினன்.

தனது கண்ணிடத்தாக பெருகுகின்ற கண்ணீர் சொரிந்திட உள்ளே நிகழ்கின்ற மகன் மீது கொண்ட இரக்கமாகிய அன்பு சென்று அவனது உயிரை அரிந்திட துண்ணென்று பெருமூச்சு என்னும் புகையும் தோன்றி சுற்றிக் கொள்ள எம் மனதால் எண்ணமுடியாத துயரம் கொண்டு இரங்கி அழுது ஏங்கினன். சோகம் யாவிலும் புத்திரசோகம் பொல்லாதது. அதனால் வரும் துயரத்தால் அவதியுறுதல் இங்கு சொல்லிய வண்ணம் காண்க. 3

ஏங்கினன் புலம்பலும் இளைய வெய்யசூர்
பாங்கமர் தமர்களும் பரிச னத்தருந்
தீங்குசெம் அரக்கருந் தெரிவை மார்களும்
நீங்கற அழுதனர் நெடுங்கண் நீருக

சூரபன்மன் ஏங்கியவனாய் புலம்புதலும் இவ்வாறான கொடிய சூரபன்மன் பாங்காக அமர்ந்திட்ட அவன் சுற்றத்தவரும் அவனுடைய பரசனரான காவலாளிகள் யாவரும் தீங்கு செய்கின்ற இராட்சதரும் பெண்களும் ஓயாது கதறி நீண்ட கண்களில் நீர் பெருகிட அழுதார்கள், 4

பழிதவிர் கற்புடைப் பதுமை தன்மகன்
ஒழிவுறு தன்மையை ஓர்ந்து மாமலர்க்
குழலவிழ்ந் தலமரக் கொங்கை மேற்புடைத்
தழுதனள் விழ்ந்தனள் மறிக்கும் அங்கையாள்.

பழி தவிர்ந்த கற்பினையுடையவளான பதுமகோமளை என்பாள் தனது மகன் முடிவாகிப் போன தன்மையை உணர்ந்து ஏக்கத்தால் அழகிய பூச்சூடிய பெருங்கூந்தல் அவிழ்ந்து குலைந்திட தனது தனங்கள் மீது மோதி அடித்து அலறி அழுதாள். விழுந்தாள், பூமியின் மீது அழகிய கையால் ஓங்கி அடித்த வண்ணமானள். 5

தொல்லியல் இழுக்கிய சூர னென்பவன்
புல்லிய பின்முறைப் புணர்வின் மாதருஞ்
சில்லியற். கூந்தல்தாழ் சேடி மார்களும்
எல்லவ ருந்தழீஇ யிரங்கல் மேயினர்.

தனது பழையதான நல இயல்பை எல்லாம் கெட்டு நின்ற சூரபன்மன் என்ப பவன் இச்சையால் திருமணம் செய்துகொண்ட பின்னராகும் காமக்கிழ திகளும் தோழிப்பெண்களும் மற்றுள்ள எல்லாப் பெண்களும் கட்டித் தழுவிக்கொண்டு அழுவா ராயினர். 6

களமெழு மிசையொலி கடிநல் யாழொலி
துளையொலி வயிரொலி தூரி யத்தொலி
அளமரு மொழியொலி அடங்கி அப்பெரு
வளநகர் புலம்பொலி மயங்கிற் றென்பவே.

போர்க்களத்து முழங்கிடும் பேரோசை அழகிய நல்ல யாழோசை குழலோசை வாத்தியம் வயிரின் ஓசை ஏனைய வாத்தியங்களின் ஓசையும் இன்னும் பிற ஓசைகள் பலவும் அப்பெரு வளநகரில் எல்லாரும் அழுதிடும் ஓசையால் அடங்கி ஒடுங்கிட நகரம் முழுவதும் புலம்போசையால் மயங்கி நின்றது. 7

அன்னது போழ்தினில் அறத்தைக் காய்தரு
துன்னெறி மந்திரி சூர பன்மனும்
மன்னவன் முன்னுற வந்து கைதொழு
தின்னன கேண்மென இசைத்தல் மேயினன்.

அவ்வாறாகிய நேரத்தில் தருமத்தைக் கோப வெறியுடன் நீக்கிவிட்டு ஒழுகு கின்ற தீய நெறியுடைய தருமகோபன் என்னும் மந்திரி சூரபன்மனுக்கும் அரசன் முன்பு வந்து கைதொழுது அரசே இதைக் கேட்பீராக என இவைகளை எடுத்துச் சொல்வான். 8

மெய்ப்புவி அண்டங்கள் பரித்த மேன்மையை
ஒப்பருந் திருவினை உலப்பி லாயுளை
செப்பருந் திறலினை சிறந்த சீர்த்தியை
இப்பரி சழுங்குதல் இயற்கை யாகுமோ.

அரசே! நீரோ அளிவில்லாத பூமிகள் அண்டங்கள் பலவற்றையும் அரசாண் டிருக்கின்றீர். நிகர்வேறு இல்லாத செல்வமுடையீர். அழியாத ஆயுள் உடையீர். சிறந்த கீர்த்தியுடையீர். சொல்லற்கரிய வலிமை உடையீர். இப்பரிசாக நீர் துய ரப்படுதல் இயற்யைாகுமோ? 9

தெண்டிரை நேமிவான் செறிந்து கொள்ளினும்
அண்டம தழியினும் அனைத்து மாயினும்
விண்டிடல் இன்றிவாழ் வீர நீமனங்
கொண்டிடு திண்மையுங் குன்றற் பாலதோ.

தெள்ளிய திரையுடைய கடல் வானம் பூமி முழுவதும் செறிந்து பரந்து கொளினும் அண்டங்கள் அழிந்து போனாலும் அனைத்துப் பொருள்களும் மாய்ந்து போனாலும் நீர் மட்டும் அழிவுறாது வாழ்வுறும் வீரனாவீர். ஆதலின் நீர் மனம் கொண்டிட்ட திண்மையிலும் குறைந்துகொள்ள முயுமாமோ? 10

ஏவரும் வியத்தகும் இறைவ நீயிவண்
ஓவென அரற்றியே உயங்குற் றுயெனின்
மூவரும் நகைப்பர்கள் முன்னம் ஏவல்செய்
தேவரும் நகைப்பர்கள் புகழுந் தேயுமால்.

இவ்வுலகில் எல்லாராலும் வியந்து பாராட்டிடப்பட்டவனுகிய அரசன் நீ ஐயோ எனக் கதறிக்கொண்டு அழுது புலம்புறுவாயெனின் உனது நிலைகண்டு பிரம்மா விஷ்ணு உருத்திரனுன மூவரும் சிரிப்பார்கள். உனக்கு முன்பு ஏவல் செய்த தேவர்களும் சிரிப்பார்கள். இதுவன்றி உனது புகழும் தேய்ந்து போய்விடும். 11

பூதர்தம் படையல புராரி நல்கிய
காதல னேயல கழற விட்டதோர்
தூதுவன் செய்தபுன் தொழிலுக் காற்றலை
பேதுற லாகுமோ பெருமைக் கிறிலாய்.

பூதங்களுடைய படைகள் வந்து ஓர் காரியத்தை இங்கு சாதித்தல்ல. அன்றி முப்புரம் எரித்த சிவபிரான் திருக்குமாரன் இதைச் செய்தது அல்ல ; அந்தக் குழந்தை உன்னிடம் சிலவார்த்தைகள் சொல்லும்படிவிட்ட ஓர் தூதுவன் செய்த அற்பத்தனமான தொழிலுக்கு நீ சகிக்க மாட்டாது பேதுறலுற்று நடுங்கலாகுமோ பெருமைக்கு முடிவில்லாதவனே. 12

தந்தையர் துஞ்சினுந் தம்முன் பின்னவர்
மைந்தர்கள் துஞ்சினும் மற்றுஞ் சார்ந்தவர்
தந்தொகை துஞ்சினுஞ் சயத்தின் மேலையோர்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தேயுமோ.

போர்க்களத்திலே தனது தந்தை இறந்தாலும் தமது தமையன் அல்லது இளைய சகோதரர் பிள்ளைகள் இறந்தாலும் இதுவன்றித் தன்னைச் சார்ந்துள்ள வேறு எத்திறத்திவர் தொகையாக இறந்தாலும் போரில் வெற்றியுறல் வேண்டும் என எண்ணிக் கொண்ட பெரியோர் தாம் மனதில் கொண்ட திண்ணமான வலியிற் சிறிதளவேனும் தேயுமோ ? 13

மேதகு பெருந்திறல் வீரர் தம்மையும்
மாதரும் வெல்வரால் மாயும் ஊழ்வரின்
ஆதலின் நின்மகற் காயுள் குன்றலின்
தூதனும் அட்டன னுகித் தோன்றினுன்.

ஒருவன் இறக்க வேண்டும் எனும் விதிதலைப்படும்பொழுது மேன்மை வாய்ந்த வெல்ல முடியாத வீரர்கள் தங்களையும் பெண்கள்கூட வெற்றி கொள்வார்கள். ஆனதன்மையின் உனது மகனுக்கும் ஆயுட்காலம் குறைந்திட்ட படியாலும் அந்தத் தூதுவனும் அவனைக் கொன்றவன் போல விளங்கிடுகின்றுன். ஆகவே இது ஊழின் செயல். 14

வெவ்விய ஒன்னலர் வினையும் வன்மையுங்
கைவரு நெல்லியங் கனியின் நாடியே
செய்வகை தேற்றினஞ் செய்க லாதிவண்
நைவதும் ஆண்மையின் நலத்திற் காகுமோ.

எம்முடன் மாறுகொண்ட கொடிய பகைவரது செயல்களையும் வலிமையையும் கையில் வைத்துள்ள நெல்லிக் கனிபோன்று அதனை எடுத்து ஆராய்ந்து அடுத்த படியாக நாம் செய்யவேண்டிய யாது எனச் செய்திடாதபடி இவ்விடத்து இருந்து புலம்புறுவதும் இது ஆண்மையின் நலத்திற்கு பொருத்தமாகுமோ ? 15

வரங்களும் மதுகையும் வரம்பின் றெய்தியே
உரங்கிளர் சூரனென் றொருபேர் பெற்றநீ
தரங்கம தடைவதுந் தலைமைக் கேற்பதோ
இரங்கலை இரங்கலை யென்று தேற்றினன்.

வரங்களும் வெற்றியும் அளவு கடந்தவற்றைப் பெற்றுக் கொண்டு வலியுடன் விளங்கிடும் சூரன் என்ற ஒரு பெயரைப் பெற்றுக் கொண்ட நீ அழுது துயருறுத லும் உனது தலைமைக்கு ஏற்பதொன்றோ. அழாதே அழாதே எனத் தேறுதல் கூறி னன் தருமகோபன் எனும் மந்திரி. 16

மேற்றிகழ் அறத்தினை வெகுளும் நாமத்தான்
தேற்றலும் அவுணர்கோன் தெளிவு பெற்றெழீஇ
ஆற்றருந் துயரினை அடக்கித் தன்பணிக்
கூற்றரில் உழையரை நோக்கிக் கூறுவான்.

எல்லாவற்றிற்கும் மேலாகத் திகழ்கின்ற தருமத்தைக் கோபிப்பவனான நாம முடைய தருமகோபன் தேறுதல் கூறுதலும் சூரபன்மன் தெளிவு பெற்றுக்கொண்டு எழுந்து புத்திர சோகத்தால் ஏற்பட்ட துயரினை அடக்கிக்கொண்டு தனது பணியின் சொற்கேட்டு நடக்கின்ற தூதுவரை நோக்கி இப்படிக் கூறுகின்றான். 17

சேயுயிர் வௌவியே சிறந்த இந்நகர்
மாய்வது புணர்த்திடு வலிய தூதுவன்
போயது தெரிந்திரோ புகலக் கேட்டிரோ
நீயிர்கள் வாய்மையை நிகழ்த்து மென்னவே.

எனது குமரனுடைய உயிரை நீக்கிக் கொன்று சிறந்துள்ள இந்த நகரத்தை மாய்வு செய்திட்டுப் போனவனான வலிகொண்ட அந்தத் தூதுவன் போய்விட்ட தன்மையை நன்றாக நீங்கள் கண்டீர்களோ ? அல்லது அவன் போய்விட்டான் என்று யாரெனும் சொல்லக் கேட்டீரோ? தூதுவர்களே! நீங்கள் அத்தூதுவனின் நிகழ்ச்சி பற்றிய வரலாற்றின் உண்மையினைக் கூறுவீராக என சூரபன்மன் கேட்டிடலும். 18

துப்புடன் இவ்வழி தூதிற் சென்றுளான்
இப்புரம் மகன்றனன் இலங்கை நோக்குறீ
அப்புற மேகினன் அதனைக் கண்டனம்
மெய்ப்பரி சிஃதென விளம்பி னாரரோ.

அப்போது அதுகேட்ட தூதுவர்கள் சூரபன்மனை நோக்கி மிக்க தைரியத்துடன் இவ்வழியால் தூதாகிச் சென்ற அவன் இந்த வீரமகேந்திரபுகத்தைக் கடந்து நீங்கி இலங்கை நகரை நோக்கியவாறு அப்பால் போயினன். அதனை யாம் கண்டுள்ளோம். இது உண்மையாகும் செய்தி என்று அத்தூதுவர் கூறினார்கள்; 16

## வேறு

அம்மொழி வினவ லோடும் அவுணர்கோன் தன்பால் நின்ற
கம்மியர் தம்மை நோக்கிக் கடிதுபோய் அகிலம் நல்கிச்
செம்மலர் மிசையே வைகுந் திசைமுகத் தொருவன் றன்னை
இம்மெனக் கொணர்திர் என்ன அனையவர் இசைக்க லுற்றார்.

அந்த வார்த்தையை சூரபன்மன் கேட்டலோடும் தனது பக்கராக நின்ற சேவகர்களை நோக்கி நீங்கள் விரைவுடன் சென்று உலகம் யாவையும் படைத்த வண்ணம் சிவந்த தாமரை மலர்மேல் இருக்கும் திக்கிற்கொரு முகமுடைய பிரம தேவனை விரைவுடன் இங்கு அழைத்து வாருங்கள் என்னலும் அந்த சேவகர்கள் சொல்வார்கள்: 20

ஈங்கிது கேட்டி மன்ன இனையமு தண்டம் நல்குந்
தேங்கமழ் பதுமத் தண்ணல் தேவர்கோ னுதியான
பாங்கின ரோடு மேவிப் படையொடு புவியில் வந்த
காங்கெயன் றன்கண் உற்றான் என்பராற் கண்டோர் என்றார்.

அரசே இதைக் கேட்பீராக. இந்த முதிய அண்டங்களைப் படைக்கின்ற தேன் சொரியும் தாமரைப் பூவில் இருக்கும் பிரமாவானவர்; தேவர்கட்கு அரசனான இந்திரன் முதலிய தேவரோடும் சேர்ந்து பூதப்படையுடன் இந்தப் பூமியின் கண் எழுந்தருளி வந்துள்ள காங்கேயன் என்னும் கடவுளிடத்தாக இருக்கின்றான் என்று சொன்னார்கள் அவற்றையெல்லாம் நாடிக்கண்டோர்கள் என அந்த தூதுவர் கூறினார்கள். 21

தொழுவர்கள் இனைய மாற்றஞ் சொற்றலுஞ் சூரன் கேளா
விழுமிது விழுமி தென்னா வெய்துயிர்ப் பெய்திச் சீறி
அழலெழ நகைத்து மற்றை அண்டத்தின் இருந்து நல்குஞ்
செழுமலர் அயனைப் பற்றிச் செல்லுமின் வல்லை என்றான்'

தூதுவர்கள் தொழுதவாறு இந்த வார்த்தையைச் சொல்லலும் சூரபன்மன் கேட்டு இது நன்றாயிருக்கிறது! நன்றாயிருக்கிறது! என்று கொடுமுச் செறிந்து சீறி நெருந்பெழச் சிரித்து அப்படியா பதுங்கியவாறு பஞ்சாங்கம் சொன்னவர் அங்கா இருக்கின்றார் என்று பின்னர் சொல்வான் சரி போகட்டும், அந்தப் பிரமனைப் போன்று மற்றைய அண்டங்களிலிருந்து படைத்துக்கொண்டிருக்கும் தாமரைமலர் ஆசனரான வேறொரு பிரமனை விரைவில் கொண்டு வாருங்கள் என்றான். 22

கொற்றவன் இனைய மாற்றங் கூறலும் உழையர் கேளா
இற்றிது செய்தும் என்னா இசைவுகொண் டொல்லை ஏகி
மற்றையண் டத்திற்சென்று வானவர் முதுவன் றன்னைப்
பற்றினர் கொணர்ந்தார் தங்கோன் பணித்திடு பரிசு கூறி.

சூரமன்மன் இந்த வார்த்தையைக் கூறலும் அதனைத் தூதுவர் கேட்டு இதை நாங்கள் செய்வோம் என்று இசைவுகொண்டு விரைவுடனாகப்போய் மற்றையதோர் அண்டத்தில் புகுந்து அங்குள்ள தேவர்கட்கு எல்லாம் முன்புதோன்றிய அப்பிரம விடம் தங்கள் அரசன் பணித்துள்ள வரலாற்றினை எடுத்துக்கூறி அப்பிரமனை கைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். 23

பரிசனர் பலரும் ஈண்டிப் பார்புகழ் சூர னென்னும்
அரசன்முற் கொணர்ந்து வேறோர் அண்டத்தின் அயனை உய்ப்ப
வரிசையால் அவனை நோக்கி மாணழி வுற்ற மற்றித்
திருநகர் அதனைத் தொன்மை போலவே செய்தி யென்றான்.

தூதுவர்கள் யாரும் ஒருங்குசேர்ந்து இப்பூமி புகழ்கின்ற சூரபன்மன் முன்னராகக் கொண்டுவந்து வேறொரு அண்டத்தில் படைத்த வண்ணம் இருந்திடும் பிரமனை சேர்த்தலும்; சூரபன்மன் முறைமையால் அந்த பிரமனைப்பார்த்தது நீர் மாண்பெல்லாம் கெட்டழிந்து போயிருக்கின்ற எனது இந்த செல்வமூதூரை பழமைபோல செவ்விதின் விளங்கிடுமாறு செய்து வைப்பாயாக என்றான். 24

சூரன்மற் றிதனைச் செப்பச் சொற்பணி தலைக்கொண் டைய
ஓரிறை யொடுங்கு முன்னர் உனதுதொன் னகர மாற்ற
ஏருற முன்ன மேபோல் இயற்றுவன் யானே என்னாப்
பேருல குதவுகின்ற பெற்றியை நினைந்து செய்வான்.

சூரபன்மன் மற்று இந்த வார்த்தையைக் கூறுதலும் அவனுடைய அச்சொல்லை அப்பிரமன் தலைக்கொண்டு ஏற்று ஐயனே ஓர் இறைப்பொழுது ஒடுங்கு முன்பாக அதனை நான் செய்வேன் என நினைந்து இப் பெரிய உலகைப் படைக்கின்ற முறைமையை நினைந்து அவ்வாறே அழிந்துள்ள சூரனது நகரத்தைச் செய்தான் அப்பிரமதேவன். 25

பொன்மதில் மாட வீதி பொலன்மணிச் சிகரம் வேரம்
மன்மதன் விழையுஞ் சோலை மண்டபம் வாவி பொய்கை
சென்மலி அரங்க மன்றந் தெற்றியே முதல வெல்லாந்
தொன்மைபோலாகத் தன்கைத் தொழில்முறை படைத்தான் மன்னோ.

பொன்னினாலான மதில்கள் கோபுரங்கள்; சூளிகைகள்; மன்மதனும் விரும்பிடும்படியான சோலைகள்; மண்டபங்கள்; நீர்த்தேக்கங்கள்; பூம்பொய்கைகள்; அழகு நிரம்பிய நாட்டிய அரங்குகள்; வீதிகள் ஆதியனவாகிய எல்லாவற்றையும் தனது கையால்பழமைபோல சிறப்புடன் விளங்கிடும்படி படைத்து வைத்தான் அப்பிரமன். அழிந்தவற்றை முன்பிருந்த வனப்புடன் விளங்கும்படியாகச் செய்துவைத்தான். 26

இவ்வகை நகர முற்றும் எழில்பெறப் படைத்த பின்றை
மைவரை மேனி மன்னன் மாபெரும் கோயில் தன்னைச்
செவ்விதின் முதுமை போலச் சிறப்பினால் திருத்தல் செய்தான்
ஐவகை இருபான் கொண்ட அல்லியங் கமலத் தண்ணல்.

இவ்வகையாக நகரம் முழுவதையும் எழில் விளங்கிட பழைமைபோல படைத்த பிற்பாடு; பெரிய மலைபோன்ற மேனியுடைய சூரபன்மனின் பெரிய அரண்மனை அழிந்திருந்ததை பழமைபோல சிறப்புடன் அமையுமாறு திருத்தமுறும்படி செய்து வைத்தான் நூறு இதழ்களைக்கொண்ட தாமரைப் பூவில் இருந்திடும் வேறோர் அண்டத்து பிரமதேவர். 27

தொன்பெரு நகரும் அந்தண் கோயிலும் படைத்த லோடும்
மன்பெருந் தகைய சூரன் மற்றவன் செய்கை நோக்கி
அன்புசெய் துவகையாகி அவுணர்கள் யாரும் போற்ற
முன்புபோல் அரிமா னேற்று முழுமணித் தவிசின் உற்ருன்.

மேலான பெரிய நகரமும், அழகிய அரண்மனையும் ஆதியனவற்றை அந்த பிரமன் படைத்தலும் அதனை மிக உயர்ச்சி பொருந்திய சூரபன்மன் அந்த பிரம தேவர் அவைகளைத் திருத்த முறப்படைத்திட்ட திறமையைக் கண்டு அப்பிரமன் மீது அன்புகொண்டு மகிழ்வாகி அங்குள்ள அசுரர்கள் யாபேரும் வணங்கிட முன்பு போல மேலான சிங்கங்கள் தாங்கிடுகின்ற சிம்மாசனத்து எழுந்து வீற்றிருந்தான். 28

உற்றன ளுகிப் பின்னர் ஓதிமத் திறையை நோக்கி
மற்றுநின் னண்டஞ் சென்று வைகுதி நல்கி என்னுச்
சொற்றனன் ஏவ அன்னேன் துண்ணென விடைபெற் றேகிப்
பெற்றதன் னண்டஞ் சென்று பிறங்குதன் லுலகம் புக்கான்.

சூரபன்மன் வழமைபோன்ற சிம்மாசனத்து இருந்துகொண்ட பிற்பாடு அன்னப் பட்சி வாகனத்தையுடைய வேறு அண்டப் பிரமனை நோக்கி பிரமனே இனி நீ உனது அண்டத்தில் சென்று அங்கு படைப்புத் தொழிலைப் புரிந்து இருப்பாயாக என்று சொல்லி அந்த பிரமனை அனுப்ப அப்பிரமனும் துரிதமுடன் விடைபெற்றுச் சென்று தன்னுடைய அண்டத்தை அடைந்து அங்குதான் தங்கியிருந்து படைக்கின்ற அந்த அண்டத்தின் பிரம உலகில் புகுந்திருந்தான். 29

சூரன் நகர்புரி படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் : 998

---

# சூரன் அமைச்சியற் படலம்

அந்தநல் லமையந் தன்னின் அவுணர்கோன் ஏவல் போற்றி
முந்துசெல் லொற்ற ராஞேர் மூரிநீர்க் கடலை வாவிச்
செந்தியிற் சென்று கந்தன் சேனையும் பிறவுந் தேர்ந்து
வந்தனர் விரைவின் அங்கண் மன்னனை வணங்கிச் சொல்வார்.

அவ்வாருன நல்ல சமயத்தில் அசுரர்க்கெல்லாம் தலைவனுன சூரபன்மனின் ஏவலினைப் பணிவுடன் புரிந்துகொண்டு முன்னர் திருச்செந்தூருக்குச் சென்ற தூதுவராஞேர்கள் சமுத்திரங்களை எல்லாம் தாண்டி திருச்செந்தூரிடத்துச் சென்று அங்கு கந்தக் கடவுளின் சேனைகளைப் பற்றிய வரலாற்றையும் வேறு இன்னும் பிற செய்திகளையும் நன்றுடன் அறிந்து மிகு விரைவாக மீண்டு சூரபன்மன் பாங்கராக வந்து சூரனை வணங்கி இதனைச் சொல்வார்கள். 1

ஏற்றவெம் பூத வெள்ளம் இராயிரம் படையின் வேந்தர்
நூற்றுடன் எண்மர் பின்னும் நுவலருஞ் சிறப்பின் மிக்கோர்
மேற்றிகழ் இலக்கத் தொன்பான் வீரர்மற்றி னையரோடுந்
தோற்றமில் பரமன் மைந்தன் தொடுகடல் உலகின் வந்தான்.

எம் அரசே இதைக் கேட்க! போருக்கு ஏற்ற வலிகொண்ட கொடிய பூதங்கள் இரண்டாயிரம் வெள்ளம் என்னும் கணக்குடனும் அவைகட்கு சேனாதிபதியாக நூற்றி எட்டுப் பேரும் இவர்கள் யாவரிலும் சிறப்பு மிகுந்த வீரராய இலக்கத்து ஒன்பது பேரும் ஆகிய படைஞர் இவரோடும் தோற்றம் என்பதில்லாத பரம்பொருளின் குமரன் தொடுத்தவாறு விளங்கிடும் கடல் சூழ்ந்த இவ்வுலகிலே வந்தருளினார். 2

சரதமீ தவுணர் கோவே தாரக வீரன் தன்னைக்
கரையறு மாயை போற்றுங் காமரு பிறங்கல் தன்னை
இருபிள வாக வேலால் எறிந்தனன் ஈறு செய்து
திரைபொரும் அளக்கர் வேலைச் செந்திமா நகரின் உற்றான்.

இது உண்மையாகும் அசுரர் தலைவா! தாரகாசூரன் என்னும் வீரனையும் அளவு கடந்த மாயைகளை விளைத்து நிற்கும் அழகுடன் விளங்கிய கிரவுஞ்ச மலையையும் முருகப்பிரான் இரண்டு பிளவாகும்படி வேலால் எறிந்து அழித்திட்டு முடிவாக்கிய பின்னர் திரைகள் மோதி அலைத்திடும் பெருங் கரையினையுடைய திருச்செந்தூர் எனும் நகரினிடத்தாக வந்தருளினார். 3

விலங்கிய கதிர்வேல் அண்ணல் விரைந்திவண் மேவு மாற்றால்
உலங்கிளர் மொய்ம்பில் தூதன் ஒருவனை விடுத்தான் அன்னான்
இலங்கையை அழித்து வந்தான் யாளிமா முகவன் றன்னை
வலங்கையின் வாளாற் செற்று வாரிதி கடந்து போனான்.

பிரகாசம் கொண்டு விளங்கிடும் வேலுடைய அண்ணல் முருகப்பெருமான் விரைவாக இங்கு வந்திடும் தன்மையால் அங்கு நின்றும் தோள் வலிமை மிக்க ஓர் தூதுவனை விடுத்தார். அத்தூதுவனும் வரும்போது இலங்கையை அழித்திட்டு உமது புரத்திற்கு வந்தான். பின்னர் அத்தூதுவன் திரும்பும்போது இலங்கையைக் காத்து நின்ற யாளிமுகன் என்னும் அசுரனை வலிமை கொண்ட தனது கைவாளினால் வெட்டிக் கொன்று அப்பால் கடலைக் கடந்து போயினான். 4

செங்கதிர் அயில்வேல் மைந்தன் தெண்டிரைப் புணரி வாவி
பொங்குவெங் கணங்க ளோடும் போர்ப்படை வீர ரோடும்
இங்குவந் தாடல் செய்வான் எண்ணினன் இருந்தான் ஈது
சங்கையென் றுன்னல் வாய்மை தகுவன உணர்தி யென்றார்.

இதன் பின்பாக செவ்வொளியுடன் திகழ்ந்திடும் வேலுடைய குமரப்பெருமான் தெள்ளிய திரையுடைய கடலைக் கடந்து பொங்கி எழுகின்ற கொடிய பூதங்களுடனும் போர்ப்படைகள் கொண்ட வீரருடனும் இங்கு வந்து உம்முடன் போர் செய்ய எண்ணியவாறு அங்கு இருந்தார். அரசே இதை சந்தேகமுடையது என எண்ணல் வேண்டாம். உண்மையாகும். மேற்கொண்டு தகுந்த காரியங்களை நீர் உணர்ந்து கொள்வீராக என அத்தூதுவர்கள் கூறினார்கள். 5

ஒற்றர்சொல் வினவி மன்னன் ஒருதனி இளவல் தன்னை
அற்றமில் கேள்வி சான்ற அமைச்சரை மைந்தர் தம்மைச்
சுற்றமொ டமைந்த தானைத் தொல்பெருந் தலைமை யோரை
மற்றொரு கணத்தின் முன்னர் மரபொடு கொணரு வித்தான்.

தூதுவரின் இந்த வார்த்தைகளை சூரபன்மன் கேட்டு உடனுக அங்கு தனது ஒரு இளைய சகோதரனுன சிங்கமுகாசூரனை; குற்றமில்லாத நல்ல நூல்களைக் கற்று தேர்ந்த அறிவுடைய மந்திரிமாரை; தனது மைந்தர்களை; தனது படைகளின் முது மையான பெரும் சேனுதிபதிகளாயினோரை ஒரு கணத்தின் முன்பாக யாவரையும் அங்கு தூதுவர் மூலமாக அழைப்பித்து தனது சபையில் கொணர்வித்தான். 6

வேறு

ஆங்கவர் யாவரும் அவுணர் மன்னவன்
பூங்கழல் கைதொழூஉப் புடையின் வைகலுந்
தீங்கனல் சுடுவதோர் சீற்றம் உள்ளெழ
வீங்கிய உயிர்ப்பினன் விளம்பல் மேயினுன்.

அவ்வாறு அங்கு வரப்பட்டோர் யாவரும் அசுரர்க்கரசன் சூரபன்மனின் மலர் போன்ற பாதங்களை கைதொழுது வணங்கிய பின்னராக சூரபன்மன் பக்கரில் வீற்றி ருத்தலும் அந்நேரம் சூரபன்மன் தனது நெஞ்சிலே நெருப்பு எழுந்து சுடுகின்றது போன்ற கோபம் உள்ளே எழுதலால் பெருகுகின்ற மூச்சினையுடையவனுய் இவற்றை கூறத்தொடங்கினுன். 7

போற்றல ராகிய புலவர் யாரையும்
மாற்றருஞ் சிறையில்யான் வைத்த பான்மையைத்
தேற்றிய மகபதி சென்று சென்னிமேல்
ஆற்றினை வைத்திடும் அமலற் கோதினுன்.

எமது பகைவராகிய தேவர்கள் யாரையும் யான் நீக்கிடமுடியாத சிறையில் வைத்த அத்தன்மையை தெளிந்து அறிந்துகொண்ட இந்திரன் சென்று இந்நிலையை சடைமுடி மீது கங்கையைத் தரித்து வைத்த கடவுள் சிவபெருமானிடம் எடுத்து ஓதினுன். 8

கண்ணுத லுடையதோர் கடவுள் வல்லையோர்
அண்ணலங் குமரனை அளித்து மைந்தநீ
விண்ணவர் சிறையினை வீட்டிச் செல்கெனத்
துண்ணென நம்மிசைத் தூண்டி னுனரோ.

நெற்றியில் கண் கொண்ட அக்கடவுள் விரைவுடன் மிகு மேம்பாடு கொண்ட ஓர் குமரனை தனது நெற்றிக் கண்ணுல் தந்து; அக்குமரனைப் பார்த்தருளி மைந்த னே நீ சென்று தேவர் சிறையினை நீக்கிவிட்டு வருவாயாக என விரைவுடன் அப் பிள்ளையை என்மீது மாருகப் போரிடச் செலுத்தினுர். 9

வாய்த்திடு கயிலைமால் வரையை வைகலுங்
காத்திடு நந்திதன் கணத்து வீரரும்
மீத்தகு பூதரும் விரவ மாலயன்
ஏத்திட அரன்மகன் இம்பர் எய்தினன்.

வாய்ப்புடைய கைலையாகும் பெரிய மலையை நித்தலும் காவல் கொள்கின்ற நந்திதேவனுடைய கணத்தில் தோன்றிய வீரவாகு முதல் வீரரும் மேலோங்கிய பூதங் களும் நெருங்கி உடன் வந்திட திருமால் பிரமன் முதலினோர் துதித்திட சிவகுமா ரன் இப்பூமியிடத்து வந்தருளினர். 10

பாரிடை யுற்றுளான் பாணி கொண்டதோர்
கூருடை வேலினற் கொடிய குன்றொடு
தாரக இளவலைத் தடிந்து பின்னுற
வாரிதி யகன்கரை வந்து வைகினன்

பூமியின் கண் வந்துற்ற சிவகுமாரன் தன் கரத்திலே கொண்டதோர் கூருடைய வேலினற் கொடிய கிரவுஞ்ச மலையோடும் தாரகன் என்னும் என் தம்பியைக் கொன்று பின்னராக சமுத்திரத்தின் அகன்றகரையிடத்திலே விளங்கிய திருச்செந்தூரில் வந்து வீற்றிருந்தான். 11

அன்னதோர் அறுமுகன் ஆங்கோர் தூதனை
என்னிடை விடுத்தலும் ஏகி மற்றவன்
மைந்நிற நெடுங்கடல் வரைப்பிற் பாய்ந்தொராய்ப்
பொன்னவிர் இலங்கைமா புரத்தை வீட்டினன்.

அவ்வணம் புரிந்திட்ட ஆறுமுகன் அவ்விடம் நின்றும் ஓர் தூதுவனை என்னி டம் செல்லும்படியாக விடுத்தலும், அத்தூதுவன் புறப்பட்டு இந்த நகரத்திற்கு வரும பொழுதினில் கரிய நிறங்கொண்ட நெடிய கடலைப் பாய்ந்து தாண்டி அந்தக் கட லின் கரையினிடத்து விளங்கிடுகின்ற பொன் நகரமாகிய பெரிய இலங்கையில் குதித்து அதை அழித்தான். 12

இலங்கையங் காவலும் இகப்புற் றின்னதோர்
பொலங்கெழு திருநகர் நடுவட் புக்குலாய்
நலங்கிளர் என்னவைக் களத்தின் நண்ணினன்
கலங்கலன் நிறையது மாயைக் கற்பினன்.

இலங்கை நகரில் குதித்து அதைக் கடலுள் ஆழ்த்தி அங்குள்ள காவலையும் கடந்து நீங்கி அத்தூதுவன் இந்த ஒரு மேலான திருவுடைய நகரின் நடுவில் புகுந்து உலாவித் திரிந்த பின்னர் எல்லா நலங்களுடன் நிகழ்ந்திருக்கின்ற எனது சபையினி டத்து நண்ணினன். அவன் அவ்வணம் என்முன்வருங்கால் கொஞ்சமேனும் கலக்கம் டையவில்லை ஏதேதோ மாயத்தன்மைகளை நிறைய கற்றுக்கொண்டான் போலும். 13

நண்ணினன் எதிருற நவையில் வீரர்போல்
விண்ணவர் பாங்கராச் சிலவி ளம்பியென்
கண்முனஞ் சிலருயிர் களைந்து வன்மையால்
எண்ணலன் பின்னுற எழுந்து போயினன்.

எனது சபையில் என் எதிரே குறைவிலாத வீரனைப்போல் வந்தான். அங்கு நின்று தேவர் பக்கராக சிறந்துள்ள சில வார்த்தைகளைப் பேசி அதுமட்டன்றி எனது கண் முன்பாக சில அசுரர்களை தனது வலிமையால் கொன்று எதையும் எண்ணாதவனாய் பின்னால் எழுந்து அத்தூதுவன் போயினன். 14

போயவன் இந்நகர் பொடித்துச் சிந்தியான்
ஏயின ஏயின படைஞர் யாரையும்
மாயுறு வித்தனன் மற்றும் என்னிளஞ்
சேயுயிர் கொண்டனன் செருக்கு நீங்கலான்.

போகின்ற அவன் இந்த நகரை அழித்துப் பொடி செய்து சிந்தினான். அவனைப் பிடிக்கும்படி செலுத்திவிட்ட எந்த எந்த எனது படை வீரரையும் கொன்று விட்டான். இதுமட்டன்றி எனது இளைய மைந்தன் வச்சிரவாகுவையும் கொன்றிட்டான். இன்னமும்தான் தனது செருக்கை தூதுவன் நீங்கவில்லை. 15

அழிந்ததித் திருநகர் அளப்பில் தானைகள்
கழிந்தன செறிந்தது களேப ரத்தொகை
கிழிந்தது பாரகங் கெழீஇய சோரியா
றொழிந்ததென் னாணையும் உயர்வுந் தீர்ந்ததால்.

மேலான திருவுடைய எனது நகரம் அழிந்தது. அளவிறந்த இங்குள்ள சேனைகள் மாண்டுபோயின. எங்கும் பிணக்குவியலே செறிந்து கிடக்கின்றது. இப்பூமியின் பகுதி கிழிந்து வெடித்துள்ளது. இரத்தாறு ஓடுகின்றது. எனது ஆணை ஒழிந்துபோயது. என் உயர்ச்சியும் நீங்கியதே. 16

ஒற்றென வந்தவவ் வொருவன் தன்னையும்
பற்றிவெஞ் சிறையிடைப் படுத்தி னேன்அலேன்
செற்றிலன் ஊறதே எனினுஞ் செய்திலேன்
எற்றினி வசையுரைக் கிறு கூறுகேன்.

தூதுவன் என வந்த அந்த ஒரு வீரனை யான் பிடித்து கொடிய எனது சிறையிடத்து வைத்திட இயலாமல் போய்விட்டேன். அல்லது அவனைக் கொல்லவும் முடியாது போயினேன். அல்லது அவனது மேனியில் ஓர் சிறு காயம் தானும் உண்டாக்க முடியாது விட்டுவிட்டேன். அம்மவோ எனக்கு இனிமேல் வரப்போகின்ற வசையான வார்த்தைகளுக்கு என்ன முடிவைச் சொல்வேன்! 17

இம்பரின் இவையெலாம் இழைத்த தூதுவன்
நம்பதி இகந்துபோய் இலங்கை நண்ணிய
மொய்ம்புடை யாளிமா முகவற் சாடியே
அம்புதி கடந்தனன் அவனி யெய்தினன்.

இந்த இடத்தில் இந்தவகையெலாம் இழைத்துவிட்ட அந்தத் தூதுவன் எங்கள் பதியைக் கடந்துபோயிடும் பொழுதினில் இலங்கை நகரிலே காவல் கொண்டிருந்த மிக்க வீரமுடைய யாளிமுகன் என்னும் தலைவனைக் கொன்றிட்டு கடலினையும் தாண்டிக் கடந்து அந்த அழகிய பூமியில் போய்ச் சேர்ந்திட்டான். 18

கார்பொரு மிடற்றவன் காதன் மாமகன்
வாரிதி கடந்திவண் வந்து நம்மொடும்
போர்பொர நினைகுவான் போலும் இவ்வெலாஞ்
சாரணர் மொழிந்தனர் சரத மாகுமால்.

இப்பால் மேகத்தின் கருமையை ஒத்து விளங்கிடும் கறுத்த நஞ்சைக் கொண்ட கண்டமுடைய கடவுளின் பெருமையான திருக்குமரன் இங்குள்ள இப்பெருங் கடலைக் கடந்து இங்கு நமது நகரத்தில் சேர்ந்து எம்முடன் போர் புரிய நினைக்கின்றான் போலும். இவ்வரலாற்றையெல்லாம் எனது தூதுவர் சொல்லினர். இது உண்மையாகும். 19

நெற்றியில் அனிகமாய் நின்ற பூதரைச்
செற்றிகல் வீரரைச் செகுத்துச் சேயினை
வெற்றிகொண் டேனையர் தமையும் விட்டியே
மற்றொரு விகலைமுன் வரவல் லேனியான்.

முன்படையாகி நிற்கின்ற பூதங்களைக் கொன்று பின்னால் அணிகொண்டு நிற்கின்ற மிக்க வலியுடைய வீரரை மாய்த்து அந்தக் குழந்தையை வெற்றி கொண்டு மற்றையோர் எல்லாரையும் முடிவாக்கிவிட்டு நான் ஓர் இமைப்பொழுதினில் வர வல்லமையுடையேன். 20

சூரனென் றொருபெயர் படைத்த தொல்லையேன்
பாரிடர் தம்மொடும் பாலன் தன்னொடும்
போரினை இழைத்தடல் புரிந்து வெல்லினும்
வீரம தன்றென வறிது மேவினேன்.

ஆனால் சூரபன்மன் என்று ஒரு பெயர் பெற்றுக்கொண்ட மிகு தொன்மையான புகழ் கொண்ட யான் பூதங்கள் தம்முடனும் குழந்தை தன்னுடனும் போரினை இழைத்து அடல் கொண்டு வெற்றி கொண்டாலும் அது வீரமல்ல என எண்ணி வீணே தாமதப்பட்டிருந்தேன். 21

துய்த்திடுந் திருவினில் வலியிற் சூழ்ச்சியில்
எத்துணைப் பெரியர்தாம் எனினும் மேலையோர்
கைத்தொரு வினைசெயக் கருதிற் றம்முடை
மெய்த்துணை யோரைமுன் வினவிச் செய்வரால்.

அனுபவிக்கப்படுகின்ற செல்வத்தில் வலியில் சூழ்ச்சியில் எத்துணையான பெருமையுடையராக இருப்பினும்; எமது முன்னோர்கள் தாம் மிகு விரைவுடன் கடினமான ஒரு கருமத்தைச் செய்ய எணணிக்கொண்டால் தமக்கு உற்ற உண்மையாகும் துணைவர்களை வினவியபின்பே அதனைச் செய்வார்கள். 22

ஆதலின் வினவினன் யானு மாற்றுதல்
ஈதென வுரைத்திரால் என்று மன்னவன்
ஓதினன் அன்னதை உணர்ந்து கைதொழூஉ
மேதியம் பெயரினன் இவைவி ளம்பினன்.

ஆதலினால் யானும் உங்களை இங்கு செய்யப்படவேண்டிய கருமங்களைப் பற்றிக்
கேட்டுக் கொள்கின்றேன், நீவிரும் இனிமேலாக செய்திடும் கருமம் யாதென இதைச்
சொல்வீராக என்று சூரபன்மன் கூறினன். அதனைக் கேட்டு உணர்ந்துகொண்டு மகி
டன் என்னும் பெயருடைய மந்திரியானவன் எழுந்து சூரனைக் கை தொழுது வணங்கி 23
இவற்றைச் சொல்கின்றான்.

மேலுயர் மாயைகள் விளைக்கும் வெற்பினை
மாலினை வென்றநின் வலிய தம்பியை
ஏலவொர் கணத்தின்முன் எறிந்த வீரனைப்
பாலனென் றுரைப்பதும் உணர்வின் பாலதோ.

அரசே கேட்பீராக; மேலான உயர்வுடைய மாயைகளை விளைத்து நிற்கின்ற
கிரவுஞ்ச மலையினையும், நாராயணக் கடவுளை வெற்றி கொண்ட உம்முடைய வலிமை
யுடைய தம்பியையும் ஓர் கணத்தின் முன்பாக வேலினால் எறிந்து கொன்றிட்ட அந்த
வீரனைப் பாலன் என்று உரைப்பதும் நல்ல உணர்ச்சியுடையார் சொல்லக்கூடிய 24
வாக்கியமோ?

மேதகு தாரக விரன் தானையை
ஆதிபர் தம்முடன் அட்ட தீரரை
ஏதுமோர் வலியிலா எளிய ரென்பதும்
பூதரென் றிகழ்வதும் புலமைப் பாலதோ.

இதுவுமன்றி மேலான வீரனாகும் தாரகன் எனப்படும் உமது தம்பியின் சேனை
யாவற்றையும் அச்சேனையின் அதிபர்களுடன் அழித்துவிட்ட வெற்றியுடைய அந்த
வீரர்களான பூதங்களை, யாதும் ஒரு வலி இல்லாதவர்கள், எளியவர்கள் என்று
சொல்வதும் பூதர் என்று வஞ்சனையால் இகழ்வதும் அறிவின்பாற்பட்ட செயலாமோ? 25

மீதெழு திரைக்கடல் விரைவிற் பாய்ந்துநம்
மூதெயில் வளநகர் முடித்து நின்னுடைக்
காதல னுயிரையுங் கவர்ந்த கள்வனைத்
தூதனென் றுரைப்பதும் அறிஞர் சூழ்ச்சியோ.

மேல் எழுகின்ற பெரும் அலையுடைய கடலைத் தாண்டி விரைவிற் பாய்ந்து
நமது முதுமையுடைய மதில் சூழ்ந்த வளங்கொண்ட நகரை முடிவு செய்து உன்
னுடைய அன்பான மகனின் உயிரையும் மாய்த்துவிட்ட அக்கள்வனை தூதன் எனச்
சொல்லலும் அறிவாளிகளுடைய எண்ணமாகுமோ.

தூதுவனுக்கு கொலையும் பொருந்துவதா இல்லையே. ஆகவே இவ்வண்ணம்
அவன் இந்நகரில் தூதுவன் போல வந்து கபடமான கொலை முதலியவற்றைப் புரிந்
தமையால் அவனைத் தூதன் எனச் சொல்லல் முடியாது. வஞ்சனையான கள்வன் 26
என்றான் மகிடன்.

கற்றையஞ் சிறையுடைக் கலுழன் ஊர்தரு
கொற்றவன் திசைமுகன் அமரர் கோமகன்
மற்றொரு வடிவமாய் வந்த தேயலால்
ஒற்றுவன் நிலைமையே றுணரற் பாலதோ.

இன்னமும் நான் நினைக்கும் அளவில்; கற்றையாகும் அழகிய சிறகுகளையுடைய கருடன் மீது ஊர்ந்து செல்லும் முதல்வரான விஷ்ணு அல்லது பிரமன் அல்லது தேவ அரசனாகும் இந்திரன் ஆகிய இவர்களில் ஒருவர் தனது வடிவை மறைத்து மாறுவேடங்கொண்டு வந்ததே அல்லாமல் இந்தத் தூதுவனின் நிலைமை வேறாக. ஒருவனாக இருக்குமென்று நினைக்கமுடியுமோ? 27

உன்றனி இளவலும் ஒருநின் றோங்கலும்
பொன்றிய காலையே புராரி மைந்தன்மேற்
சென்றிலை யல்லதுன் சேனை தூண்டியும்
வென்றிலை தாழ்த்திவண் வறிது மேவினாய்.

இஃதிருப்ப எமது அரசே! உனது தனிமையான தம்பி தராகனும் உமது ஆணையின்படி ஒழுகிடும் கிரவுஞ்சம் என்னும் மலையும் இறந்துள்ள அக்காலையில்தானே சிவபிரானது திருக்குமாரர்மேல் போர் செய்ய நீ சென்றாயில்லை. அல்லது உனது சேனையை அவர்கள் எதிராகச் செலுத்தி அவர்களை வெற்றிகொண்டாயில்லை, இவ்வளவு நேரமும் வீணே தாமதித்து இங்கு இருந்தாயல்லவோ? 28

தீயழல் வறியதே எனினுஞ் சீரியோர்
ஏயிது சிறிதென எள்ளற் பாலரோ
வாயத னாற்றலை அடக்க லாரெனின்
மாயிரும் புவியெலாம் இறையின் மாய்க்குமால்.

நெருப்பின் சுடர் சிறிதாக இருப்பினும் சிறப்புடைய அறிவாளிகள் ஏட! இது சிறுகொள்ளிதானே என இகழ்வார்களோ? அதை அடக்காரெனின் அந்தச் சிறு கொள்ளிதானே இப்பெரும் பூமியெல்லாம் ஒரு இமைப்பொழுதின் மாய்த்திடுமல்லவோ. ஆகவே நீர் பாலனுடன் போர்செய்வது பெருமை அன்று என நினைந்திருந்தது எத்துணைத் தவறாகும். 26

மாற்றலர் சூழ்ச்சிய தெனினும் மாறதாய்
வீற்றொரு நிலைமைய தெனினும் மேவுமுன்
ஏற்றெதிர் காப்பரே என்னின் அன்னவர்க்
காற்றரும் இடுக்கண்வந் தடைதற் பாலதோ.

பகைவருடைய சூழ்ச்சியான ஓர் செயல் என்றாலும்; அல்லது எமக்கு மாறாக நிகழ்கின்ற வேறு ஒரு நிலைமையாக இருப்பினும் அக்காரியம் நிகழ்வதற்கு முன்பே அதை அறிந்து மேற்சென்று எதிர்க்துத் தடுத்துவிடுவரே எனின் அப்படி முன்யோசனையுடன் நடந்துகொள்வார்க்கு சகிக்கமுடியாத ஓர் துன்பமும் வந்து அடைந்திடுமோ. 30

துறந்திடா வளந்தனைத் துய்த்துச் செய்வகை
மறந்தன மாகியே வன்மை யாளரை
எறிந்தவர் தமையிகழ்ந் திங்ஙன் வாழ்துமேற்
சிறந்தவர் யாமலால் ஏவர் சீரியோய்.

நீக்கிட முடியாதபடி ஆசையூட்டும் இன்ப வளங்களை அநுபவித்து உண்டு கொண்டு அந்த மயக்கத்தினால் செய்யவேண்டிய கருமங்களை மறந்தனமாகி; வன்மை உடைய பெருமக்களையும் கொன்று வெற்றி கொண்டோரையும் இகழ்ந்து கொண்டு இங்கு வாழ்வோமென்றால் நாங்கள் அல்லாமல் வேறுயார் சிறந்தவர்கள் எனச் சொல் 31
லலாம். சீருடைய அரசே இதை அறிந்திடுதி !

முன்னமக் குமரன்மேல் முனிந்து சேறியேல்
உன்னகர்க் கேகுமோ ஒற்று மற்றுநீ
அன்னது புரிந்திலை ஆடல் மைந்தனோ
டிந்நகர் அழிந்ததென் றிரங்கற் பாலையோ.

அரசே! உனது தம்பி இறந்துபோனதைக் கேட்ட அக்கணமே அந்தக் குமரக் கடவுளுடன் முன்பு கோபத்துடன் போர்செயச் சென்றிருந்தால் உன்னுடைய நக ருக்கு அத்தூதுவன் வந்திருப்பானா? இப்படிச் செய்யவேண்டியதை உடன் அறிந்து செய்திடாமல் என்னுடைய பெரும் போர் வல்ல மகனோடு இந்த நகரமும் அழிந் 32
தது என்று இரக்கத்துடனும் பேசிடுவாயோ? இது நடந்திராதே!

மொய்யுடை நின்மகன் முடிந்த தன்மையும்
ஐயநின் திருநகர் அழிவ தானதுஞ்
செய்யுறு நிலைமைகள் தெரிந்து செய்திடா
மையலின் கீழ்மையால் வந்த வாகுமால்.

அரசே நான் சொல்வது யாதெனில் மிக்க வலியுடைய உமது மகன் இறந் திட்ட தன்மையும் உமது திருநகரம் அழிந்து போவதான அந்நிலையும் எப்படி வந் தது என்றால் செய்யவேண்டிய நிலைமைகளைத் தெரிந்து செய்திடாத அறியாமை 33
மயக்கம் என்னும் குறைபாட்டின் நிலையால்வந்ததாகும்.

கழிந்திடு பிழையினைக் கருதிச் சாலவுள்
அழிந்திடல் இயற்கையன் றறிஞர்க் காதலால்
ஒழிந்தன போகவொன் றுரைப்பன் கேண்மியா
இழிந்ததென் றுன்னலை இமைப்பிற் செய்திநீ.

ஆகவே இனி நடந்துபோன பிழையான காரியத்தை நாம் நினைந்து சாலவும் உள்ளம் வருந்தி அழிந்திடுதல் அறிவாளிகளுக்கு இயல்பானதொன்றல்ல ஆகையால் நடந்து முடிந்தது எல்லாம் போகட்டும். நான் ஒன்று சொல்வேன். எனது வார்த்தை 34
யை இழிந்தது என எண்ணாதே! ஓர் இமைப்பொழுதினில் அதைச் செய்வாயாக.

ஆயது பிறவிலை அவுணர் தம்மொடு
மேயின படையொடும் விரைந்து கண்ணுதற்
சேயினை வளைந்தமர் செய்யப் போதியால்
நீயினித் தாழ்க்கலை நெருநல் போலவே.

அதுவும் பிறது வேறென்றில்லை. அரசே! சேனைகளாகும் அசுரர்களுடனும் உம்மிடத்து இருக்கும் மேலான படைகள் தன்னுடனும் அதிவிரைவுடனாக இப்பொழுதே நெற்றியிற் சண்ணுடைய கடவுளின் குழந்தையை வளைத்துப் போர்புரிவதற்குச் செல்வாயாக. நீர் நேற்றைய தினம்போன்று இனித்தாமதம் செய்தல் கூடாது என்றான் மகிடன். 35

என்றிவை மேதியன் இசைப்பக் கேட்டலும்
நன்றிது வாமென நவின்று கையெறிந்
தொன்றிய முறுவலும் உதிப்ப நல்லறங்
கொன்றிடு துர்க்குணன் இனைய கூறுவான்.

என்று இந்த வார்த்தையை மகிடன் சொல்ல அதனைக் கேட்டுக்கொண்டபோது சபையில் இருந்த இன்னுமொரு மந்திரியாயவன் நல்ல தருமத்தைக் கொன்றிடுகின்ற துர்க்குணன் என்னும் பெயருடையவன் எழுந்து நல்லாயிருக்கின்றது மகிடனின் வார்த்தை எனக்கூறி கையை வீசி ஒழுங்குடன் முறுவலும் தோன்ற இவற்றைக் கூறுவான். 36

வன்றிறல் உவணன்மேல் வந்த மாயன்மேல்
நின்றிடும் அமரர்மேல் நேர்ந்து போர்செயச்
சென்றிலை இளையரால் திறல்கொண் டேகினாய்
இன்றினிப் பாலன்மேல் ஏக லாகுமோ.

அரசே நீர் மிக்கவலியினையுடைய கருடன் மீது எழுந்துவந்த திருமாலோடும் அல்லது அவரல்லாது இங்கிருக்கும் தேவருடனாதல் போர் செய்வதற்குச் செல்லவில்லை. அதன் பதிலாக உனது தம்பியரை அனுப்பி அவர் மூலமாக வெற்றிகொண்டு வந்தாய். அப்படியான பெருமையுடைய நீர் இன்று ஒரு குழந்தையுடன் போர் செய்யச் செல்லலாமோ ? அதுமானயீனமல்லவோ ! 37

இறுதியில் ஆயுளும் இலங்கும் ஆழியும்
மறுவிலா வெறுக்கையும் வலியும் வீரமும்
பிறவுள திறங்களும் தவத்திற் பெற்றனை
சிறுவனொ டேயமர் செய்தற் கேகொலாம்

முடிவில்லாத ஆயுளும் எங்கும் உமது ஆணைசெறிய ஒளிவீசிடும் ஆஞ்ஞாசக்கரமும், குற்றம் இலாத செல்வமும், வலியும், வீரமும் இன்னும் பிறவுள்ளதான திறங்களும் தவத்தினால் பெற்றீர். இவையாவையும் நீர் பெற்றுக்கொண்டது முடிவில் ஒரு குழந்தையுடன் போர் புரிவதற்காகவா?

அழியாத வரமும் ஆணையும் வீரமும் செல்வமும் வேண்டியது குழந்தையோடு போர்செய்வதற்கா ? எத்துணை வெட்கம் இது என்றான் துர்க்குணன். 38

மேதகு பசிப்பிணி அலைப்ப வெம்பலிக்
காதல்கொண் டலமருங் கணங்கள் தம்மையுந்
தூதுவன் தன்னையுந் தொடர்ந்து போர்செயப்
போதியோ அமரரைப் புறங்கண் டுற்றுளாய்.

அரசே வயிற்றில் உதராக்கினி எழுந்துமூள அதனால் கொடிய பசி என்னும்
பிணியினால் வாடி எங்கே உணவிருக்கும் என் காதலால் ஓடி அலைந்து திரிகின்ற
பூதங்கள் தம்மையும் தூதுவன் தன்னையும் நீ பின் தொடர்ந்து போர் செய்யப்
போகின்றாயோ. தேவர்களுடன் போர்செய்யப்போன காலையில் உன் சேனையை
கண்டு பயத்தால் அவர்களை பின்காட்டி ஓட்டமெடுக்கும்படி வைத்தவனே. 39

இன்றுநின் பெரும்படைக் கிறைவர் யாரையுஞ்
சென்றிட விடுக்குதி சிறிது போழ்தினில்
குன்றெறி பகைஞனைக் கூளி தம்மொடும்
வென்றிவண் மீள்குவர் வினைய மீதென்றான்.

நான் சொல்லக்கூடியது யாதெனில் இன்று நீர் உமது பெரும் படைகட்குத்
தலைவரான சேனாதிபதிகள் யாரையும் அந்தக் குழந்தையுடன் போர் செய்யும்படி
விடுப்பீராக. அவர்களே ஒரு சிறுபொழுதில் அந்த கிரவுஞ்ச மலையைப் பிளந்த
அப்பகைவனை அங்குள்ள பூதங்கள் கூட்டத்துடன் வெற்றிகொண்டு மீள்வார்கள். 40
இதுவே செய்யத்தகும் கருமமாகும் என்றான் துர்க்குணன்.

கருதிடு துர்க்குணக் கயவன் இன்னென
உரைதரு முடிவினில் ஒழிக இங்கெனக்
கருமணி யாழியங் கைய மைத்தரோ
தருமவெம் பகையுடை யமைச்சன் சாற்றுவான்.

வஞ்சனையாகும் கருத்தினில் வீரனாகும் துர்க்குணன் என்னும் கள்வன் இந்த
வார்த்தைகளை உரைத்திட்ட முடிவினிலே இந்த பேச்சை இங்கு நீ நிறுத்துவாய் !
என்று கருமைகொண்ட நீல இரத்தினக்காப்பினை அணிந்துகொண்ட கையினை
அமைத்துக் காண்பித்துவிட்டுத் தருமத்தின் மீது எக்காலமும் பகைகொண்டு வெறுப் 41
புற்ற தருமகோபன் என்பான் பேசத்தொடங்குவான்.

குலம்படு நவமணி குயின்று பொன்புனை
அலம்படை கொண்டுபின் முதிரை ஆக்கத்தாற்
புலம்படக் கீறுவ போலும் வீரநீ
சிலம்படி மைந்தனோ டாடல் செய்வதே.

அரசே ! கேட்பீராக. ஓர் உழவன் தனது வயலை உழுதல் வேண்டி அதற்
காக ஓர் கலப்பையை நல்ல குலத்தில் விளங்கிடும் நவஇரத்தினங்களால்
செய்து பொன்னின் கொழுவைத்து அதனைக் கொண்டு என் குரக்கன் இவைகளை
விதைப்பதற்காக நிலத்தை உழுவதுபோன்றிருக்கும் நீர் சிலம்பணிந்த
அடியுடையமைந்தனோடு போர்செய்யச் செல்வது என்றான் தருமகோபன். பெரு
மையுடைய பொருள் ஒன்றைச் செய்யவேண்டிய பெருமையான காரியத்திற்கு பயன்
படுத்தாது சிறு தொழிலுக்கு பிரயோசனப்படுத்தல் போன்றிருக்கும் நீரும் போர்செயச் 42
செலின்.

மேலுயர் கண்ணுதல் விமலன் அன்றெனின்
ஆலவன் அன்றெனின் அயனும் அன்றெனில்
காலனும் அன்றெனிற் காவல் வீரநீ
பாலனொ டமர்செயிற் பயனுண் டாகுமோ.

அரசே உம்மோடு போர் செய்ய வந்தது மேலான உயர்ந்த நெறியுடன் விளங்கிடும் கண்ணுதற் கடவுள் சிவனும் அல்ல என்ருல் ஆலிலையில் பள்ளி கொண்ட அத்தன் நாராயணனும் அல்ல என்ருல் பிரமதேவனும் அல்ல என்ருல் இயமனும் அல்ல என்ருல் எல்லா உலகிற்கும் காவல் அரசனுகும் வீரன் நீர் ஓர் குழந்தையோடு போர் செய்யின் ஏதேனும் ஓர் பயன் பெறலாகுமா? அதனுல் வெற்றியடைந்ததும் ஏதும் பிரயோசனம் உண்டா இல்லை என்ருன். 43

மன்னிளங் குதலைவாய் மதலை மீதினும்
இன்னினி அமர்செய இறத்தி யென்னினும்
அன்னவன் நினதுபே ராற்றல் காண்பனேல்
வென்னிடும் எதிர்ந்துபோர் விளைக்க வல்லனே.

மிகவும் சிறியவனும் மழலைச் சொல் மாறிடாதவனுமான அக்குழந்தை மீதாக நீ போர் செயச் செல்வாய் என்ருலும் உன்னுடைய தோற்றத்தையும் பெரு வலிமையும் அப்பிள்ளை காண்பனேல் உடன் பயந்து ஓடிவிடுவான் அல்லவோ அல்லாது அப்பிள்ளை உம்மோடு எதிர்ந்துபோய் செய்ய வல்லவனே? 44

நேரலர் தங்களை நேர்ந்து ளாரெனப்
பேரிகல் ஆற்றியே பெரிது மாய்வதும்
பூரியர் கடனலாற் புலமைக் கேற்பதோ
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே.

பகைவராய் இருப்பதற்கு வலி இல்லாதாரை பகைவர்கள் என எண்ணிப் பெரும்போரினை விளைத்து பெரும் மாய்ச்சல் பட்டு துன்புறுவதும் அற்பத்தனமுடையாருடைய கடனுகும். அன்றி அறிவின்பாற்பட்டுள்ள ஒருவனுக்கு பொருந்துவதொன்ருகுவதோ? ஆகாது, ஆதலால் சீருடையார்களின் கடமை அதை என்ன விதமான காரியம், அதில் எப்படி நடக்கவேண்டுமென்று தெரிந்துகொண்டு பின் செய்வதாகும். 45

எரிமுகன் இரணியன் எனுமுன் மைந்தரில்
ஒருவனுக் காற்றலர் இலக்கத் தொன்பது
பொருதிறல் வயவரும் பூதர் யாவரும்
அரனருள் புரிதரும் அறுமு கத்தனும்.

ஆதலால் அரசே நான் சொல்வதைக் கேளும். அக்கினிமுகன் இரணியன் எனச் சொல்லப்பெறும் உமது பிள்ளைகளில் ஒருவனுக்கு எதிர் நிற்கமாட்டார், இந்த இலக்கத்தொன்பது மேம்பாடுடைய போர் வல்ல வீரரும் அந்தப் பூதங்கள் யாவரும். அது மட்டல்ல சிவன் அருளித் தந்துள்ள ஆறுமுகமுடைய குழந்தையும் என எண்ணுவீராக. 46

கிள்கொடு நகங்கொடு கிள்ளும் ஒன்றினை
வாள்கொடு தடியுமோ வன்மை சான்றதோர்
ஆள்கொடு முடித்திடும் அவரை வென்றிட
நீள்கொடு மரங்கொடு நீயுஞ் சேறியோ,

அரசே! விரலில் இருக்கப்பெறும் நகத்தாலே கிள்ளவேண்டிய ஒன்றினை வாளால் வெட்டி எறியவேண்டுமோ? இங்கேயே அதேபோன்று வலிமைகொண்டதொரு வீரனாலே முடிபடவேண்டிய அவர்களை வெல்லும் காரியத்திற்காக நீயும் நீண்ட ஓர்பெரிய வில்லையும் எடுத்துக்கொண்டு போர்செயப் போவாயோ? 47

மாணிமை கூடுறா மகவு தன்னொடு
மேணறு சாரதர் இனங்கள் தம்மொடும்
பூணுதி செருவெனும் புகற்சி கேட்பரேல்
நாணுவர் நமரெலாம் நகுவர் தேவரும்.

நன்றாக இன்னும் இமைகள் கூடிடாத அத்துணைச் சிறிய குழந்தையுடனும் இறுமாப்புடைய அப்பூதங்களாகும் இனங்களுடனும் நீர் போர்செய்கின்றீர் என்னும் வார்த்தை இங்குள்ளார் கேட்பரேல் எங்கள் சுற்றத்தவராகும் அசுரர் யாவரும் வெட்கமடைவார்கள். அந்த தேவர் யாரும் இகழ்ந்து சிரிப்பார்களே! 48

பொற்றையை முடித்தனன் பொருவில் தம்பியைச்
செற்றனன் என்றிளஞ் சிறுவன் தன்னையும்
வெற்றிகொள் புதல்வனை வீட்டி னானென
ஒற்றையும் மதித்தனை தொன்மை உன்னலாய்.

ஏதோ அந்த கிரவுஞ்ச மலையைப் பிளந்து முடிவாக்கி; நிகரற்ற வலிமை பூண்ட உமது தம்பி தாரகனைக் கொன்றான் என்று அந்த சிறுபிள்ளையான முருகன் தன்னையும்; பல வெற்றிகளைப்பெற்றுக்கொண்ட பிள்ளை வச்சிரவாகுவை கொன்று விட்டான் அத்தூதுவன் என்று அந்த தூதுவனையும் பிரமாதமாக மனதில் எண்ணிக் கொண்டாய். ஆனால் இதன் முன்னைய இயல்புகளை எல்லாம் நினைக்கின்றாய் இல்லை.

ஆறணி செஞ்சடை அண்ணல் தந்திடும்
பேறுடை வேலினைப் பிள்ளை உய்த்தலும்
மாறுள படையினான் மாற்ற லாமையால்
ஈறது வாயினன் இளவல் தாரகன்.

கங்கையைச் சடையுள் வைத்த கடவுள் சிவன் கொடுத்திட்ட பெரும்பேறு உடைய வேலை அப்பிள்ளை முருகன் செலுத்துதலும் அப்படைக்கு மாறாக வேறு படைகளை விடுத்து அநத வேலைத் தடுக்க முடியாமற் போன காரணத்தினால் உனது தம்பி தாரகன் வேல் பட்டு இறந்துபோனான். அல்லாமல் அவன் அந்தக் குழந்தை முருகனின் போர் வலிமையால் கொல்பட்டு இறந்தானா இல்லையே! 50

குறுமுனி தொல்லைநாட் கூறும் வாய்மையால்
இறுதியை யடைந்ததாங் கிருந்த மால்வரை
அறிகிலை ஈதெலாம் ஆற்றல் கூடுறாச்
சிறுவன செய்கையே சிந்தை கோடியால்.

கிரவுஞ்ச மலை அழிவுற்றமைக்கு காரணம் சொல்வேன் கேட்பீராக. அகத்தியர் முனிவன் முன்னாளில் கூறிய அழிவிலாத சாபத்தால் குமரன் வேலால் எறிய அங்கிருந்த கிரவுஞ்ச மலை முடிவை அடைந்துகொண்டது. இவ்வாறு இவர்கள் அழிவுறுதற்கு ஏற்ற காரணங்களை நீ அறிந்தாயில்லை. அதை எண்ணாமல் அந்த குழந்தையுடைய வலியையே உனது சிந்தையில் எண்ணிக்கொண்டுள்ளாய்போலும். தான் செய்யவேண்டிய கடமைகளைச் சரியாகச் செய்யாமையால் தாரகன் அழிந்தானே ஒழிய அந்த குழந்தை முருகனின் சாமர்த்தியத்தால் அன்று. 51

எச்சமொ டழிவுறு இரதஞ் சாலிகை
கைச்சிலை பெற்றிலன் கருதி நீயவை
அச்சொடு புரிந்திலை அதனில் தூதனால்
வச்சிர வாகுவாம் சுதனுந் துஞ்சினான்.

அடுத்தபடியாக உனது மகன் வச்சிரவாகு இறந்ததை எடுத்துக் கொண்டால் உனது மகன் வச்சிரவாகுவிற்கு எக்காலமும் கெடுதல் அடையாத தேரும், கவசமும், கையில்லும் கிடைக்கப்பெறவில்லை. அவைகளை நீ அவன் பெறும்படியாக உன் மனதில் எண்ணி ஏதொன்றுதானும் செய்தாய் இல்லை. அதனாலே அத்தூதுவனால் வச்சிர வாகுவும் கொல்லப்பெற்றான்.

உனது மகன் மிக இளையவன் நல்ல கவசம் வில்லு தேர் இவை இல்லாததால் அனுபவமிக்க தூதன் வாளை வீசிட பட்டு இறந்தான். ஆகவே அப்பிள்ளை இறந்தது நீ கொண்ட கவனக் குறைவால் நிகழ்ந்தது. 52

பலவினி மொழிவதென் படியில் தானவத்
தலைவரில் ஒருவனை விளித்துத் தானையோ
டிலையயின் முருகன்மேல் ஏவு வாயெனின்
அலைவுசெய் தொல்லையின் அடல்பெற் றேகுவான்.

பலவற்றை நாம் எடுத்து இங்கு மொழிவதால் பிரயோசனம் யாது ஒன்றுமில்லை. நீர் இப்போது செய்யவேண்டிய காரியம் இங்கு உடனாக நிகரில்லாத வலியையுடைய அசுரர் தலைவரில் ஒருவனை அழைத்து அவனை அக்குழந்தை முருகனோடும் போரிடும்படி செல்ல விடுவாயாயின் அந்த வீரன் உடனடியாக சென்று முருகனையும் படையையும் அலைவுசெய்து விரைவில் வெற்றிகொண்டு மீண்டு வருவான். 53

அன்னது செய்கென அறத்தைச் சீறுவான்
சொன்னதோர் இறுதியின் முறுவல் தோன்றிடக்
கன்னிகர் மொய்ம்புடைக் கால சித்தெனுங்
கொன்னவில் வேலினான் இனைய கூறுவான்.

அதையே செய்வீராக என்று தருமத்தைக் கோபிப்பவனான தருமகோபன் என்னும் மந்திரி சொன்னதொரு முடிவிலே புன்சிரிப்பும் தோன்றிட கல்லை ஒத்த வலிபொருந்திய தோளுயுடைய காலசித்து என்னும் மிக உயர்ச்சி வாய்ந்த வேலினையுடையவனான இன்னுமொரு மந்திரி எழுந்து இந்த வார்த்தையைக் கூறிடுகின்றான். 54

செந்தியின் இருந்திடுஞ் சிறுவன் சாரதர்
தந்தொகை தன்னொடு மீண்டு சாருமேல்
எந்தையொர் சிலவரை ஏவல் அல்லது
மந்திரம் வேண்டுமோ மற்றி தற்குமே,

திருச்செந்தூரில் இருந்திடுகின்ற சிறுவனான முருகன் பூதங்களாய கூட்டத்துடன் இவ்விடத்துச் சேருமேல் எந்தை பெருமானே அரசே நீர் ஓர் சில ஆட்களை போரிட அனுப்புதலே அல்லாது இதற்காக மந்திராலோசனைச் சபை ஒன்றையும் நடத்த வேண்டுமா ? 55

வயந்தன தையனை வாச வன்றனைச்
சயந்தனைப் பிறர்தமைச் சமரின் வென்றநாள்
இயைந்தெமை வினவலை இன்றோர் பாலற்கா
வியன்பெரு மந்திரம் வேண்டிற் றுங்கொலோ.

மன்மதனின் தந்தையான நாராயணனை இந்திரதேவனை சயந்தனை பிறர்தமைப் போரின் வென்ற நாள் மிக்க சிறப்புடன் எமை நீ அழைத்து சபைகூடி இவ்வண்ணம் கேட்டுக் கொண்டாயில்லை. இப்போது ஓர் குழந்தைக்காகவோ மேலான ஒரு மந்திராலோசனைச் சபை வேண்டியிருக்கின்றது. 56

அண்டர்கள் ஒடுங்கினர் அரக்கர் அஞ்சினர்
எண்டிசைக் கிழவரும் ஏவ லாற்றுவார்
மண்டமர் அவுணரின் வலியர் பூதராங்
கண்டனம் இன்றியாங் கலியின் வண்ணமே.

தேவர்கள் யாபேரும் ஒடுங்கப்பெற்றார்கள். இராக்கதர்கள் எமக்கு அச்சம்கொண்டார்கள். எட்டுத்திக்கு பாலகரும் எமது ஏவலினைச் செய்வார்கள். மண்டி நெருங்கிப் போரிடும் அசுரரிலும் வலுவுடையராகப் போகின்றனரா பூதங்கள். இப்படியான கலிகால மாறுபாட்டை இன்று நான் கண்டுகொண்டேன். 57

பணிக்குதி தமியனைப் பரமன் மைந்தனைக்
கணத்தொகை வீரரைக் கால பாசத்தாற்
பிணித்திவண் வருகுவன் என்று பேசலுந்
துணுக்கெனச் சண்டனென் றொருவன் சொல்லுவான்.

அரசே என்னைப் போரிடச் செல்லும்படி உத்தரவு கொடும். நான் சென்று சிவபிரான் குமரனை பூதகணங்களின் வீரரை, என் கையில் இருந்திடும் காலபாசம் என்றும் நாணால் கட்டி இங்கு கொண்டு வருவேன் என்று காலசித்து என்னும் மந்திரி பேசி முடித்ததும் அப்போது துணுக்கென எழுந்து சண்டன் எனும் பேருடைய அசுரர் தலைவன் சொல்வான். 58

கழிபசி நோயடக் கவலும் பூதரும்
மழலையம் பிள்ளையும் மற்ற வற்குறு
தொழில்புரி சிலவருஞ் சூழ்ச்சிப் பாலரோ
அழகிது மந்திரம் அவுணர்க் காற்றவே.

அரசே என்னே இது ! உணவு செவ்வனே கிடைக்காமையால் வருத்தமடைந்து கவலைகொள்ளும் பூதங்களும் அவரையே படையாகத் துணைகொண்ட மழலைச் சொல் மாறிடாத குழந்தையும் மற்று அந்த குழந்தைக்கு உற்ற தொழிலைச் செய்கின்ற சிலபேருமாகும் இவர் எல்லாரும் அவ்வளவு சூழ்ச்சியில் வல்லமையுடையாரோ. இது அழகாயிருக்கின்றது இந்த அசுரர்க்கு இப்படி ஒரு மந்திராலோசனைச்சபையைக் கூட்டி இந்த அற்பனுனவருடன் போரிட ஆலோசனை நடத்திடும்படியாக. 59

கொல்லுவன் பூதரைக் குமரன் றன்னையும்
வெல்லுவன் பிறரையும் வினிவு செய்வனால்
மல்லலந் தோளுடை மன்னர் மன்னவுன்
சொல்லதின் றென்ன இத் துணையுந் தாழ்த்துளேன்.

என்னைப் போருக்கு விடுத்தால் அங்கு போய் அத்தனை பூதங்களையும் கொல்வேன். அந்தக் குமரனையும் வெற்றிகொள்வேன். இதுவன்றி பிறர் யாராயிருந்தாலும் சரி; அவரையும் நான் முடிவாக்குவேன். ஆனுல் பருத்த தோளுடைய எம் அரசர்க்கரசே! உமது கட்டளையான சொல் இல்லாமையின் இத்துணையும் நான் தாழ்ந்து நின்றேன். 60

ஏவுதி தமியனை இமைப்பிற் சென்றியான்
மூவர்கள் காப்பினும் மூரணிற் றாக்கியே
தூவுறு சாரதத் தொகுதி தன்னொடு
மேவலன் தனைஇவண் வென்று மீள்வனால்.

என்னையே செலுத்துவீராக நான் ஓர் இமைப்பொழுதினில் சென்று அக்குழந்தையை பிரம்மா விஷ்ணு உருத்திரன் காத்து நின்றாலும் மிக்க முரணுன வலியுடன் தாக்கி அங்கு பரந்துநிற்கும் பூதசேனையோடு பகையாள குழந்தையையும் வெற்றிகொண்டு மீளுவேன். 61

எனவிவை சண்டனுங் இசைத்த வெல்லையின்
அனலியென் றுரைத்திடும் அவுணர் காவலன்
சினமொடு முறுவலுஞ் சிறிது தோன்றிட
வினையமொ டிம்மொழி விளம்பல் செய்குவான்

என்று இந்த வார்த்தைகளைச் சண்டன் என்பவன் இசைத்த நேரத்தில் அனலி என்று சொல்லுகின்ற அசுர சேனுதிபதியானவன் எழுந்து நின்று கோபமும் புன்சிரிப்பும் உடன் சிறிது தோன்றிட அதிக அக்கறையுடன் இந்த வார்த்தைகளை இப்படிச் சொல்வான். 62

தெம்முனை மரபிலோர் சிறுவன் என்னினும்
வெம்மையோ டேற்குமேல் வெகுண்டு மேற்செலா
தெம்மொடு மந்திரத் திருப்ப ரேயெனின்
அம்மவோ சூரருக் கழகி தாற்றவே.

நாங்களோ அசுரர் குலத்தவர்கள், அவ்வாருகிய எம்மை எதிர்த்து போரிடுவ
தற்கு முனைகொண்டு ஓர் குழந்தைச் சிறுவனென்றாலும் மிக்க கோபத்துடன் எதி
ரேற்றுச் கொள்வார் என்றால் அப்பிள்ளையோடு நாமும் பதில் வெகுட்சியுடன் போர்
செய்யச் செல்லாமல் இங்கு தெட்பமுடன் எல்லாரும் சபைகூடி இருப்பரேயெனின்!
அசுரராகிய எங்களுக்கு இது மிகவும் அழகாக இருக்கின்றது. 73

என்றிது மொழிதலும் எரியுங் கண்ணினன்
ஒன்றிய முறுவலன் உயிர்க்கு நாசியன்
கன்றிய மனத்தினன் கறித்து மெல்லிதழ்
தின்றிடும் எயிற்றினன் சிங்கன் கூறுவான்.

என்று இந்த வார்த்தையை அனலி என்பான் கூறி முடித்தலும் அப்போது
கோபத்தால் எரியும் கண்ணிணையுடையவனும் புன்சிரிப்பும் தோன்றிடுகின்றவனும்
மூச்செறியும் நாசியுடன் கறுவியமுற்ற மனத்துடன் தனது சொண்டுகளைக் கடித்து
தின்றிடுகின்றவன் போன்று இதனைச் சொல்கின்றான் சிங்கன் என்னும் பேரு
டைய அசுர சேனாதிபதி. 64

வெந்தொழில் மறவரை விளித்த தன்மையும்
மந்திரம் இருந்தது மனங்கொள் சூழ்ச்சியும்
இந்திரன் உதவிசெய் இளையன் வன்மையைச்
சிந்திட வேகொலாம் நினைந்த செய்கையே.

அரசே கேட்பீர்; இங்கு கொடும் தொழிலுடைய வீரரை வரவழைத்த தன்
மையும் எல்லாரும் நாங்கள் மந்திராலோசனை செய்ய சபை கூடி இருந்துள்ளதும்
எமது மனதிலே கொண்டுள்ள சூழ்ச்சிகள் யாவும் அந்த இந்திரனுக்கு உதவி செய்
திட வந்த குழந்தையின் வலிமையைச் சிந்திடுதற்காகவோ நாங்கள் எல்லாரும்
நினைந்துகொண்டு செய்துள்ள இச்செயல்களாகும். இது எவ்வளவு வீணான செயலா
கின்றது. 65

இருநில அண்டமேல் இருந்து ளோரெலாம்
மருவல ராகியே வருக வந்திடின்
ஒருதமி யேன்பொரு துலையச் செய்வனால்
தெரியலை போலுநின் னடியன் திண்மையே.

ஆனால் என் நிலை சொல்வேன். இந்த பெரிய பூமியிலும் அல்லது மற்று
எந்த அண்டத்திலும் இருப்பாரெல்லாம் எனது பகைவராக வரினும் வரட்டும் இப்
பூதங்களல்ல குழந்தையல்ல; யார் வரினும் நான் ஒருவன் தனியனாக நின்று போர்
செய்து அவர்களை உலையச் செய்வேன். அரசே உமக்கு தெரியாது போலும் உமது
அடியேனுடைய திண்மைகொண்ட வீரச் செயலை. 66

வன்மையை உரைப்பது மரபன் றால் எனைச்
சென்மென விடுக்குதி சேனை யோடுபோய்
என்முனி வுற்றிடும் ஒன்ன லாரையட்
டின்மைய தாக்கியே வருவன் ஈண்டென்றான்.

அரசே எனது வலிமையைப் பற்றி இங்கு பேசுதல் முறையல்ல. ஆகவே என்னைப் போர் செய்ய விடும்பீராக. நான் சேனையோடு போய் உன் கோபத்திற்கு ஆளாயிருக்கின்ற அந்த பகைவர்கள் யாரையும் கொன்று அழித்து பகைவர் என்பது இனி இல்லையெனும்படி செய்திட்டு மீண்டு இங்கு வருவேன் என்றான் சிங்கன், 67

இன்னவை போல்வன இயல்பி னேனைய
துன்னெறி அமைச்சருஞ் சூழ்ச்சித் தொல்படை
மன்னரும் இசைத்தலும் வயங்கு செங்கதிர்
ஒன்னலன் கையமைத் துரைத்தல் மேயினான்.

இவைபோல்வனவான இயல்பிலே ஏனைய துன்மார்க்கமுடைய மந்திரிகளும் சூழ்ச்சியில் மிக்குள்ள முதிய படைவலின் வீரரான சேனாதிபதிகளும் எடுத்து சூரபன் மனுக்கு சொல்லி நிற்றலும் அப்போது பிரகாசமுடைய சிவந்த கதிரொளியுடைய சூரியனின் பகைவன் பானுகோபன் முன் பேசியவனை நிற்பாட்டும்படி கையால் அமைத்துக் காண்பித்து பின்பு சொல்லத் தொடங்குகின்றான். 68

சென்றிடு முனிவரர் தியங்க மாயை செய்
குன்றுடன் இளவலைக் குமரன் கொன்றிடும்
அன்றெனை விடுத்திலை அழைத்தொன் றோர்ந்திலை
இன்றிது வினவுவ தென்னை யெந்தையே.

தந்தையே கேட்பீராக; தன்னிடத்து வருகின்ற எத்தகையான முனிவரையும் மாயை செய்து தியங்க வைக்கும் கிரவுஞ்ச மலையுடன் உமது இளைய தம்பியான தாரகாசூரனை குமரமூர்த்தி கொன்றிட்ட அப்பொழுதே என்னை அழைத்து அக்குமரனுடன் போர் செய்ய விடுத்தாயல்லை. அல்லது என்னை அழைத்து மகனே இப்படி நடந்துள்ளது என் செய்யலாம் என ஆலோசனை நடத்தவில்லை. இவ்வளவு நாளும் தாமதித்திருந்துவிட்டு இன்றுமட்டும் நீ இதை ஆலோசிப்பது எனது தந்தையே என்ன காரணம்? 69

உள்ளுறு கரவினன் ஒருவ னும்பரான்
எள்ளரும் ஒற்றுவந் தீண்டு போர்செயின்
முள்ளெயி றின்னமும் முற்றுந் தோன்றிலாப்
பிள்ளையை விடுக்குமோ பெரியை சாலநீ

உள்ளத்திலே பெரும் வஞ்சனையுடைய தேவன் ஒருவன் தேவ உலகைச் சார்ந்தவன் இங்கு யாவராலும் இகழ்ந்து நீக்கிவிட முடியாதபடி தூதன் எனும் போர்வையில் தூதுவனின் கடமையல்லாத போரைச் செய்யின் இன்னமும் முள்ளுப் பல்லான கடைவாய்ப் பல் செப்பனே முளைத்திடாத ஓர் பிள்ளையை அவனோடு போர் செய்ய இத்துணை மிகவும் பெரியவனாக இருக்கப்பட்ட நீ விடுக்கலாமோ?

இவ்வளவு பெரியவனாக எல்லார்க்கும் தலைமையாக இருக்கும் உனக்கு புத்தி மட்டும் பெரும் நிலைக்கு ஏற்றபடி பெருமையாகவில்லையே? என்ன மடமையான செயலைச் செய்தாய் எனஇகழ்கின்றான் தந்தை சூரபன்மனை பானுகோபன். 70

இழித்தரு தூதனால் இடர்பட் டாயெனும்
பழித்திறம் பூண்டனை பாலன் ஆவியை
ஒழித்தனை நகரமும் ஒருங்கு சீரற
அழித்தனை நீயுன தறிவி லாமையால்.

மிகவும் இழிவுடைய தூதுவன் ஒருவனால் ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆள்கின்ற நீ பெரிதும் சங்கடப்பட்டாய் என்ற பழியான வார்த்தையைப் பெற்றுக் கொண்டாய். ஐயையோ உனது செயலால் ஓர் பாலனுடைய உயிரைக் கெடுத்து சாக்காட்டினாய். இந்த நகரமெல்லாவற்றையும் ஒருங்கே சீர்கெட்டுப் போக அழிய வைத்தாய். இது எல்லாம் தந்தையே உனது அறியாமையான செயலாலே நடத்தி முடித்துள்ளாய். எனது தம்பி இறந்ததும் நகரம் அழிந்ததும் எல்லாம் உன்னுடைய அறியாமையாகும். 71

பொருளல தொன்றினைப் பொருளெ னக்கொடு
வெருவுதல் செய்வது வினைய மோர்கிலா
தொருசெயல் விரைந்துசெய் தயங்கி வாழ்தலும்
பெரியவர் கடமையோ பேதைத் தன்மையே.

ஓர் பொருளல்லாத காரியத்தை பெரிய கருமம் போல் எண்ணிக்கொண்டு பெரும் பயம் கொள்ளலும். ஒவ்வோர் காரியங்களின் தாற்பரியத்தை அறிந்திடாது கண்டபடி அவசரப்பட்டு ஓர் செயலினைச் செய்து வருத்தம் அடைந்து வாழ்தலும் ஓர் அறிவுடைய பெரியவனின் கடமையாகுமோ? இது உண்மையில் பேயனுடைய செயலாகும் பேதத் தன்மையே.

எக்காரியம் செய்திடும்போதும் முன்யோசனையுடன் நிதானமாக நடந்துகொள்ளல் வேண்டும். அதுவன்றி கண்டபடி நடந்துவிட்டு ஐயோ இப்படி நேர்ந்ததே என பின்னர் கவலைப்படல் பெரியவன் என்பானின் செய்கையாகுமோ? என மகன் பானுகோபன் தந்தையைப் பார்த்துக் கேட்டமை காண்க. 2

பொற்றையொ டிளவலைப் பொன்ற வீட்டினோன்
கொற்றமும் பூதர்தங் குழாத்தி னாற்றலும்
ஒற்றுவன் நிலைமையும் உணரிற் சென்றியான்
பற்றிமுன் னுய்க்குவன் பிணித்துப் பாசத்தால்.

கிரவுஞ்ச மலையையும் இளைய தந்தையான தாரகனையும் அழிவுறும்படி கொன்றிட்ட அக்குமர மூர்த்தியின் மேன்மையையும் பூதங்கள் முதலியோரின் கூட்டத்தின் ஆற்றலையும் அந்தத் தூதுவனுடைய கெட்டித்தனங்களையும் நான் அன்று தெரிந்திருந்தால் ஐயையோ! அன்று உடனே சென்று அவர்களை எனது பாசத்தாலே கட்டி வந்து உனது முன்னால் விடுத்திருப்பேனே. 73

ஆயிரத் தெட்டெனும் அண்டத் துக்கெலாம்
நாயக முதல்வனீ நம்பன் நல்கிய
சேயமர் குறித்தெழல் சிறி தன்றெனை
ஏயினை வெற்றிகொண் டிருத்தி எம்பிரான்.

தந்தையே! நீர் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கெல்லாம் தனி அரசனாகும் தலைமைப்பாடுடைய முதல்வன். ஆதலின் சிவபிரான் தந்த ஓர் குழந்தையுடன் போர் புரிய எண்ணி செல்லல் பெருமையல்ல. என்னை சிவகுமரனோடும் போர்செய அனுப்பி வெற்றியினை அடைந்துகொண்டு இருப்பீராக எமது பெருமானே! என்றான். 74

ஆண்டெனை விடுத்தியேல் அமர தாற்றிட
மூண்டிடும் அவர்தொகை முருக்கித் தேவராய்
ஈண்டுறு வோரையும் இமைப்பில் வென்றுபின்
மீண்டிடு வேனென விளம்பி னானரோ.

சிவகுமரன் இருந்திடுகின்ற திருச்செந்தூருக்கு நான் சென்று போரிட என்னை இப்பொழுது விடுத்தீராகில் நான் சென்று எம்முடன் பகையாகிப் போர் செய்திட வந்த அவர்கள் கூட்டம் யாவற்றையும் அழித்துத் தொலைத்து அங்கு தேவராய் எங்கிருப்பாரையும் இமைப்பொழுதில் வென்று பின்னர் மீண்டு வெற்றியுடன் வருவேன் என்று கூறி தனது பேச்சை முடித்தான் பானுகோபன். 75

இரவியம் பகையவன் இனைய சிற்சில
உரைதரும் இறுதியின் உலைவு றாததோர்
முரணுறு தாதைதன் முகத்தை நோக்கியே
குரைகழல் இரணியன் கூறல் மேயினான்.

சூரியதேவனின் பகைவன் என்னும் பானுகோபனான அசுரன் இதுபோன்ற இன்னும் சிற்சில வார்த்தைகளை எடுத்து உரைத்து முடிந்த எல்லையில் எந்தவகையாலும் உலைதல் அடைந்திடாத தந்தை சூரபன்மனின் முகத்தைப் பார்த்து ஓசை செயும் சிலம்பணிந்த இரணியன் என்னும் சூரனின் இரண்டாவது மகன் பேசத் தொடங்குகின்றான். 76

## வேறு

வள்ளல் தன்மைசேர் வயப்பெருஞ் சூரனோர் மழலைப்
பிள்ளைப் போர்வலிக் கிரங்கினன் எனுமொழி பிறக்கின்
உள்ளத் தேதினை நினைக்கினும் வெருவுமொன் னலரும்
எள்ளற் கேதுவாம் விடுத்தியான் மந்திரம் இனியே.

எல்லா உலகிற்கும் அரசனான மேன்மையும் கொடையின் சிறப்பும் உடைய வள்ளல் தன்மை கொண்ட சூரபன்மன் என்பவன் ஓர் குழந்தையின் போர் ஆற்றலைத் தாங்கிடமுடியாது இரக்கப்பட்டுத் துயருற்றான் என்று நீர் இப்போது எம்முடன் வருத்தத்துடன் பேசிய வார்த்தைகளை இவ்வுலகில் உள்ளோர் அறியுமாறு வெளிப்படுமேல் உம்மை மனதிலே நினைத்தாலுமே நடுங்குகின்ற நாயகரான அப்பகைவரெல்லாம் எள்ளி நகையாடுதற்கு இடமாகும். தந்தையே இந்த மந்திராலோசனைச் சபை வேண்டாம். இதை இப்போதே கலைத்து விடும். 77

மைதிகழ்ந் திடு மிடற்றவன் மதலைமா நிலத்தின்
எய்தி னான்அமர்க் கென்றலும் என்றனை விளித்து
வெய்தெ னப்பொர விடுத்திலை வெறுத்தியோ வினையேன்
செய்தி டுந்தவ றுண்டுகொல் உனக்கொரு சிறிது.

அருமை திகழும் கண்டமுடைய கடவுளின் குமரன் இப்பூமண்டலத்துஎம் முடன் போர் புரிய வந்துள்ளான் என்னும் அளவையில் என்னை அழைத்து விரைவுடன் சிவகுமாரனோடு போர் செய்யும்படி நீர் விடுக்கவில்லை. ஏன் அவ்வணம் செய்யாதிருந்தாய். என்னை வெறுத்திட்டாயோ? கொடியேனை யான் செய்திட்ட தவறுதல்கள் ஏதாகிலும் ஓர் சிறிதளவேனும் உண்டாமோ? இல்லையே. 78

பானல் போலொளிர் மிடற்றினன் பாலன்மேற் பசிநோய்க்
கூனை வேட்டுழல பூதர்மேல் ஒழிக்குளார் தம்மேன
மான வெஞ்சமர்க் கெமமுன்னோன சேறலும் வசையே
சேனை யோடியான் ஏகுவன் செருத்தொழில் புரிய.

பால் போன்று மிளிர்கின்ற கண்டத்தையுடைய கடவுளின் பாலன் மேலும் பசியான நோயால் பாதிக்கப்பட்டு உணவுக்காக விரும்பி உலைகின்ற பூதங்களுடனும் இன்னும் இவர்களை நீங்கிய ஏனைய வீரர்கள் மேலும் மானம் கொண்டு இழைத்திடும் கொடிய போருக்கு எமது தமையன் பானுகோபன் சென்றிடுதல் கூட வசையாகும். ஆதலின் யானே பெருஞ் சேனையைத் திரட்டிக்கொண்டு போர் புரிந்திடப் போகுவேன்.

தந்தையே நீர் குழந்தையுடன் போரிடச் செல்லல் வசையன்றி என் அண்ணனும் செல்லல் வசை. யானே போவேன் என்றான் இரணியன். 79

வெற்றிப் பேரமர் ஆற்றியே மேவலர் தொகையைச்
செற்றுத் தேவர்கள யாரையுந் தடிந்து செல் குவனால்
இற்றைக் கங்குலின் என்றனை ஏவுதி யெனலும்
மற்றைத் தம்பியாம் எரிமுகன் இனையன வகுப்பான்.

வெற்றி தரும் பெரும் போரினைப் புரிந்து பகைவர்களது தொகையை அழித்து ஒழித்து தேவர்களை எல்லாரையும் கொன்று நான் திரும்ப வருவேன், இன்று இந்த இராப்பொழுதிலே என்னைப் போரிட உடன அனுப்பும் என இரணியன் கூறி நிற்றலும் அவனின் அடுத்த தம்பி அக்கினிமுகன் எனும் அசுரன் எழுந்து இவற்றை 80
வகுத்து எடுத்துக் கூறுகின்றான்.

இணையி லாவண்டம் ஆயிரத் தெட்டினுக் கிறைநீ
துணைய தாயொரு வீரகே சரியுளன் சுதராய்க்
கணித மில்லவர் யாமுளங் கரிபரி கடுந்தேர்
அணிகொ டானவப் படையுள அலகிலா தனவே.

எமது தந்தையே தனக்கு இணையாக பிறிதிலாத அண்டங்கள் ஆயிரத்தெட்டிற்கும் நீர் அரசன். உமக்குத் துணைவனாக ஓர் வீரகேசரி சிங்கமுகாசுரன் உள்ளான். உனக்கு பிள்ளைகளாக கணக்கற்றோர் வலுவுடையோர் யாங்கள் இங்கு இருக்கின்றோம். யானை குதிரை. தேர்கள், அணியணியான அசுரப்படைகள் உள்ளன. இவைகள் 81
ஒழிவில்லாதன.

அழிவில் பாகுள தேருள சிலையுள அலைதான்
ரொழிவி லாதமர் அம்புபெய் தூணியும் உளவால்
இழிவில் தெய்வதப் படைகண்முற் றும்முள இறைமைத்
தொழில் நடாத்துறு பரிதியும் ஒன்றுண்டு தொல்லோய்.

இழிவில்லாத தேர்ச் சாரதிகள் உண்டு. தேர்கள் உண்டு, விற்கள் வலியானவை உண்டு. அதுமட்டன்றி எக்காலமும் ஒழியாதபடி அம்பு எடுத்து எய்திட அம்புகள் தரும் அம்புக் கூடுகளும் உண்டு. இழிவு இல்லாத தெய்வப் படைகள் முழுவதும் உண்டு. எல்லா உலகமும் உமது ஆணைக்குள் ஒடுங்கச் செய்யும் சக்தி நிறைந்த ஆஞ்ஞாசக்கரமும் உண்டு. என் முதுமையான பிதாவே இதை அறிவீர். 82

அண்டம் ஆயிரத் தெட்டெயுங் கன்னலொன் றதனில்
கண்டு மீடரும் இந்திர ஞாலமுங் கவனங்
கொண்ட தோர்தனி மடங்கலும் உனக்குள குறிக்கின்
விண்டு மாலுறு மாயைகள் பலவுள மேலோய்.

அண்டங்கள் ஆயிரத்தெட்டையும் ஓர் நாழிகைப் பொழுதினில் சென்று கண்டு மீளக்கூடிய இந்திர ஞாலம் என்னும் தேர் உள்ளது. மிக்க வலிமை கொண்டதொரு தனியான திறலுடைய சிங்க வாகனமும் உனக்கு உண்டு. இன்னமும் எண்ணிப் பார்க்கையில் விஷ்ணு மூர்த்தியும் கண்டு மயங்கிடும் மாயத் தன்மைகள் பல உம்மிடத்து உண்டு. மேலான என் தந்தையே இதையும் உணரும். 83

இன்ன பான்மைசேர் வெறுக்கைபெற் றீறிலா துறையும்
மன்னர் மன்னநிற் போன்றுளார் யாவரே மலையக்
கன்னி பாலகன் தூதுவன் சிறுதொழில் கருத்தின்
உன்னி யுன்னியே இரங்கவுந் தகுவதோ உனக்கே.

இன்னவகையாகும் பாங்கான செல்வ வளம் யாவும் பெற்றுக்கொண்டு முடிவிலாத ஆயுள் பெருக்கத்துடனும் அரசர்க்கரசராய் இருக்கின்ற உம்மைப் போன்றுள்ள அரசர் வேறு யார் உளர்? அவ்வண்ணமான அழிவுறுத பெருமையுடைய நீர் இமய மலையில் தோன்றிய கன்னியாகும் உமையின் பாலகனதும் அவனது தூதுவனதும் சின்னத்தனமுடைய செயலை மனதில் நினைந்து நினைந்து இரக்கப்படுவதற்கும் உனக்கு தகுதியுடையதாகுமோ? 84

குழந்தை வெண்பிறை மிலைச்சினோன் மதலையைக் குறுந்தாள்
இழிந்த பூதரைப் பிறர்தமை வென்றிட எமரில்
விழைந்த மானவர் ஒருவரை விடுப்பதே யன்றி
அழிந்தி ரங்கியே .வினவுமோ இதுகொல்உன் னறிவே.

இளம் குழந்தை போலும் சிறு பிறையை அணிந்தோனான சிவபெருமானின் குமரனை குறுகிய கால் கொண்ட இழிவான பூதங்களை இன்னும் மற்றையோரை வெற்றி கொண்டிட எமது ஆட்களில் போர் செய்ய விருப்பமுடைய ஒருவரை விடுப்பதேயன்றி இப்படியும் இருந்து கவலையால் வாடி இரக்கப்பட்டு நான் என்ன செய்ய என்று சபையில் உள்ளாரை நீர் கேட்பதா? இதுதானா உமது அறிவு.

தந்தையே ஆயிரத்தெட்டு அண்டமும் ஆட்சிகொண்டு அழிவிலாத ஆயுள் கொண்டு முடிவிலாப் படை கொண்டு தேர் கொண்டு வளங் கொண்டு வானத்தாரும் அஞ்சி வணங்கிட வாழ்கின்ற நீர் பசியால் அலையும் பூதங்கட்கும் பார்வதி புதல்வனுக்கும் பயந்து இரங்கி எங்களை அழைத்து என் செய்வது எனக் கேட்கலாமா? இதுவா உனது அறிவு என்று அக்கினிமுகாசூரன் கூறியபின்னர். 85

மூளும் வெஞ்சமர் புரிந்தஎன் னிளவல்பன் முடியும்
வாளி னாலடும் ஒற்றனை மற்றுளார் தம்மைக்
கேளொ டுந்தடிந் தல்லது கேடில்சீர் நகர்க்கு
மீள்க லேனெனப் பகர்ந்தனன் வெய்யசூ ளுரையே.

மூண்டுகொண்ட பெரும் போரினைப் புரிந்த எனது தம்பியினுடைய பல தலைகளையும் வாளினால் வெட்டி எறிந்த அந்தத் தூதுவனை அல்லாமல் மற்று அங்கிருப்பாரையெல்லாம் சுற்றத்துடன கொன்றபின் அல்லாது எனது நகர்க்கு மீண்டு வரேன் எனக் கொடிய சபதம் ஒன்றை தந்தை மூன்னாக நின்று புகன்றான் அக்கினி மூகன். 86

கரந்தை சூடுவான் குமரனைப் பொருதல்கா தலியா
இருந்த வீரர்கள் அளப்பில ராயினும் இப்போர்
விரைந்து நீயெனக் குதவுதி ஏகுவன் மேனாட்
பொருந்து பாதலத் தரக்கர்மேற் சென்றதே போல.

அக்கினிமுகன் பின்னரும் சொல்வான்: கொன்றை மாலை சூடியருளிய சிவ பெருமான் திருக்குமரனுடன் போர் புரியக் காதல் கொண்டு இருக்கும் வீரர்கள் இங்கு அளவிறந்தோராக இருப்பினும் இந்தப் போரை விரைவுடனாக எமக்குக் கொடுத்திடுவீராக. நான் போருக்கு இப்பொழுதே செல்வேன் முன்னாளில் பாதலத்துள்ள இராட்சதர் மேல் சென்ற வண்ணம் போன்று 87

வலிய தோர்சிலை ஈறிலாக் கவசம்வான் படைகள்
உலகு தந்தவன் அளித்திட முன்புபெற் றுடையேன்
குலம டங்கவாள் அரக்கரைத் தடிந்திசை கொண்டேன்
மெலியன் அன்றியான் அறுமுகன் மேலெனை விடுத்தி.

எனது தந்தையே யான் வலிமையாகும் ஓர் வில், அழிவிலாத கவசம், உயர்வான தேவப் படைக்கலங்கள் ஆகிய யாவற்றையும் உலகைப் படைத்திடும் பிரமனை கடவுள் கொடுத்திட பெற்றுக்கொண்டிருக்கின்றேன். வாள் போன்ற கடைவாய்ப் பற்களை உடைய இராட்சதர் குலங்கள் அடங்கலும் வெற்றிகொண்டிருக்கிறேன். யான் மெலிவுடையேன் அன்று. பெருவீரன் என்னையே ஆறுமுகன் மேலாகச் சென்று போர் புரிய விடுவாயாக என்றான் அக்கினிமுகாசூரன். 88

என்னு மாற்றங்கள் எரிமுக முடையவன் இசைப்ப
அன்ன வன்றனை விலக்கியே கரதலம் அமைத்துச்
சென்னி ஆயிரம் பெற்றுள சிங்கமா முகத்தோன்
மன்னர் மன்னனை நோக்கியே வகுத்துரை செய்வான்.

என்று இந்த வார்த்தைகள் யாவற்றையும் அக்கினி முகமுடைய அசுரன் எடுத்துக்கூறி நிற்ப அதுவேளை அவனை; மகனே! கொஞ்சம் பொறு! பேசியது போதும் என தனது கையால் தடுத்து விலக்கிவிட்டு தமையனும் அரசர்க்கரசனுமான சூரபன்மனை நோக்கி ஆயிரம் தலைகள் கொண்ட சிங்கமுகாசூரன் இப்பொழுது யாவற்றையும் வகுத்து எடுத்துக் கூறுவான். காரணம், காரியம், பயன், பெறுபேறு இவை யாவும் தனது பேச்சிலே இடம்பெறச் சொல்வான். 89

மந்தி ரத்தருந் தானையந் தலைவரும் மகாருந்
தந்த மக்கியல் வன்மையே சாற்றிய தல்லால்
இந்தி ரப்பெருந் திருவுறும் உன்றனக் கியன்ற
புந்தி சொற்றிலர் இம்மொழி கேளெனப் புகல்வான்.

அரசே கேளும்; இங்குள்ள மந்திரிமாரும் சேனாதிபதிகளும் உனது பிள்ளைகளும் தமக்குத் தமக்கு இயல்பாகும் வீரச் செயலைப்பற்றி இங்கு சொன்னார்களேயன்றி இந்திரபோகமான செல்வங்களுடன் வாழ்கின்ற நீ கெடாது இருப்பதற்கு ஏற்ற புத்திகளை ஒருவரேனும் சொன்னாரில்லை. அவர்கள் தங்களது வீரத்தை, பெருமையை எடுத்துரைத்தாரேயன்றி மந்திராலோசனைச் சபையில் எடுத்து நாம் அலசி ஆராய வேண்டிய யுத்திகளை ஒருவரும் சொல்லவில்லை. இப்போது நான் சொல்கின்ற இந்த வார்த்தையைக் கேட்பீராக எனச் சொல்கின்றான் சிங்கமுகாசூரன். 90

வேறு

பெற்றிடு திருவினிற் பிறந்த வெஞ்சினங்
கற்றவர் உணர்வையுங் கடக்கும் அன்னது
முற்றுறு கின்றதன் முன்னம் அன்பினோர்
உற்றன கூறியே உணர்த்தல் வேண்டுமால்.

மூதறிஞன் ஒருவன் பெற்றிட்ட பெரும் செல்வத்தால் விளைந்திடும் பெருமிதத்தில் தோன்றுகின்ற கொடிய கோபம் எந்த ஒரு கல்விமானுடைய நல்லுணர்ச்சியையும் கடந்து மேற்கொண்டிடும். ஆதலால் அவ்வாறு கோபமுற்றோரின் அன்பினருடைய கடமை அவருக்கு அக்கோபமானது முதிர்வதன் முன்னம் ஆவனவற்றை எடுத்துக் கூறி அவரைத் தெளிவுற வைத்தல் வேண்டும்.

கோபம் இயல்பிலே பொல்லாதது. அது கொண்டவரையே தீங்குறச் செய்யும். ஆனால் பெரும் திருவுடன் விளங்கிடுகின்றவரிடத்து தோன்றிடும் கோபமோ மிகப் பொல்லாது. ஏனெனில் அது அவரையும் கெடுத்து திருவையும் கெடுக்கும். இப்படியான திருவுடைய நிலையில் வரும் கோபத்தை எந்த ஒரு அறிவாளி தீதென உணர்ந்திருந்தாலும் அவன் அறிவை அந்தக் கோபம் கடந்திடும். ஆகவே அன்பனுடைய கடமை இதை நன்றாக விளங்கி கோபமுடையாரைத் தெளிய வைத்தல். 91

மன்னவர் செவியழல் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள் துணைவர் மேலையோர்
ஒன்னலர் விழைந்தவாறு ரைக்கின் றார்களே.

அடுத்ததாக ஓர் அரசனிடம் ஓர் மந்திரி தான் சொல்லப்போகும் வார்த்தை அரசன் காதில் நெருப்பால் சுட்டது போன்றிருந்தாலும் அரசனுக்கும் அனைவர்க்கும் நல்நிலையைப் பின்னால் தரக்கூடிய ஓர் நடுவான நீதியைச் சொல்பவன் தான் உண்மையான மந்திரியாவான். ஆனால் இங்கு உனது ,முன்பு பேசிய மந்திரிகள் உனது பகைவர் உனக்கு என்ன ஆகவேண்டுமென்று விரும்புவாரோ அதை நீ பெறும்படியாகவே சொல்லியிருக்கின்றார்.

உனது பகைவர் நீ கெடுதலை விரும்புவர். ஆகவே நீ கெடுதற்கு ஏற்ற புத்தியைச் சொன்னார்கள் இம்மந்திரிகள் என்றான் சிங்கமுகன். 92

முற்றுற வருவது முதலும் அன்னதால்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே
தெற்றென உணர்ந்துபின் பலவுஞ் செய்வரேல்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ.

ஓர் காரியத்தைச் செய்திடும்பொழுது அக்காரியத்தின் முடிவான வரலாறும் அது வந்துள்ளதற்கு மூலமான காரணமும் அந்தக் காரியத்தைச் சாதித்து முடித்தால் அவன் பயனாக விளைகின்ற பெறுபேறுகளும் பிறவற்றையும் ஒருவர் சீர்தூக்கி அலசி ஆராய்ந்து பின்னர் பலவற்றையும் செய்வாராயின் அவரிடத்தாக ஓர் தீங்காகிய குற்றமொன்று வந்து சேர்ந்து கொள்வதற்கு வல்லமையுடையதா? 93

மால்வரு தொடர்பினால் வனத்துச் செல்லுமீன்
கோல்வரும் உணவினைக் குறித்து வவ்வியே
பால்வரு புணர்ப்பினிற் படுதல் போலநீ
மேல்வரு கின்றதை வினவல் செய்கிலாய்.

உணவின் மேல் ஆசை பெருகின்ற நிலையினால் கடலில் ஓடும் மீன் தூண்டிலில் செருகப்பட்ட உணவினைக் குறித்துச் சென்று அதனைக் கவ்வுதலும் அந்த உணவினுள் மறைந்திருந்த தூண்டிலினில் அகப்படுதல் போன்று நீயும் முன் பின் யோசனையிலாது இப்போது நீ கொண்ட மனவெப்பினை தீர்வதற்கு இந்தக் கருமத்தைச் செய்தால் என்ன நேருமென பின்னால் வருவதைச் சிந்திக்கின்றாயில்லை. 94

இந்திர னாதியாம் இறைவர் தங்களை
அந்தரத் தமரரை யலைத்த தீயவர்
முந்துறு திருவொடு முடிந்த தல்லதை
உய்ந்துளார் இவரென உரைக்க வல்லமோ.

அரசே இதை நன்கு கவனிப்பாய். இந்திரன் முதலாகிய அரசர் தங்களையும் அந்தர உலகில் உள்ள தேவர்களையும் அலைவு செய்த தீயவரான எவருமே தாங்கள் முன்னே பெற்றுக்கொண்ட செல்வ வளங்களுடன் மாண்டுபோனார் அல்லது அப்படி செய்தவர் ஒருவரேனும் உய்ந்தாரென நாம் கூறமுடியுமோ? 95

தேவர்கள் யாரையுந் திரைகொள் வேலையின்
மேவரு மீன்றொகை விரைவில் றம்மென
ஏவினை இனிதுகொல் இனிய செய்கைதம்
மாவியில் விருப்பிலார் அன்றி யார்செய்வார்.

எமது அண்ணனே! நீர் தேவர்கள் யாரையும் திரைகொண்ட சமுத்திரத்திடத்து வாழ்ந்து இருக்கின்ற மீன்களையெல்லாம் விரைவுடன் பிடித்து வாருங்கள் என ஏவிவிட்டு அடிமைத் தொழில் செய்வித்தாய். இது உனக்கு இனிதான செயலா? அவர்கள் மேலாம் வேதநெறியாகும் புண்ணிய நெறி நிற்பாரை இத்தகைய தீங்காகிய செயலைச் செய்யும்படி நீ பணிக்கலாமா? ஒருவரைத் தனக்காக அவர் செய்யாத தொழிலைச் செய்யும்படி செய்வது என்னவாக முடியும்? இந்த வகையான செய்கையைத் தனது உயிரில் விருப்பிலாதவர் அன்றி வேறு யார் செய்வார்கள். 96

அறைகழல் வாசவற் கலக்கண் ஆற்றியே
இறையினை அழித்தனை இருந்த மாநகர்
நிறைதரு வளனெலாம் நீக்கு வித்தனை
சிறையிடை உய்த்தனை தேவர் யாரையும்.

ஒலி செய்யும் வீரகண்டை உடைய இந்திரனை அவனது தலைமையை நீக்கினாய். உனக்கு அவன் பணிவுடன் பல ஏவல் பணியினைச் செய்யவும் அவனது மனைவிமேல் நீ ஆசை கொண்டு அவன் ஊர்விட்டு ஓடி ஒழித்திருக்கும்படி செய்தாய். இது மட்டன்றி அவன் இருந்த நகரின் பெருவளங்களையெல்லாம் எரித்து அழித்து நீக்கினாய். அங்கிருந்த தேவர் யாரையும் சிறையிடத்து வைத்தாய். 97

அத்தகு தேவரால் ஐய நங்களுக்
கித்துணை அலக்கண்வந் தெய்திற் றிங்கிது!
மெய்த்திற மாமென விரைந்துட் கொள்ளலை
பித்தரின் மயங்கினை பேதை ஆயினாய்.

அவ்வாறாக நாம் துயரம் புரிந்து வருத்திய அந்தத் தேவரால் எமது ஐயனே இன்று எமக்கு இத்தகைய துயரம் வந்து சேர்ந்துகொண்டது. ஆனமையால் இது தான் உண்மையான நிலையென்று விரைவில் நீ நினையவில்லை. நமக்கு இப்பொழுது வந்த காரியத்திற்கு நாம்தான் பொறுப்பானவர் என்பதை நினையாது ஓர் பைத்தியகாரனைப் போன்று எதைச் செய்வது எப்படிச் செய்வது என்று தெரியாதபடி மயங்குகின்றாயே. நீ ஓர் நல்நெறி கைகூடாத பேயனாய்விட்டாயே. 98

பொன்னகர் அழிந்தநாட் புகுந்த தேவரை
இன்னமும் விட்டிலை இரக்கம் நீங்கினாய்
அன்னதற் கல்லவோ ஆறு மாமுகன்
உன்னுடன் போர்செய வுற்ற தன்மையே.

தேவ உலகமானது எரிந்து அழிந்துபோன நாளில் இங்கு கொண்டு வரப்பட்ட அந்தத் தேவரை அன்று நீ சிறை வைத்தாய். அவர்களை நீ இன்னமும் சிறைவிடவில்லையே. இரக்கம் என்பதை கொஞ்சமேனும் இலாது நீங்கினாய். அவ்வாறாக உனது கொடுஞ் செயலைக் கண்டல்லவோ ஆறு முகமுடைய பகவான் உன்னுடன் போர் புரிய எழுந்தருளி வந்துள்ள தன்மையாகும். 99

வேறு

பேறு தந்திடு பிஞ்ஞகன் பெருந்திரு வுடனீர்
நூறு தன்னுடன் எட்டுகம் இருமென நுவன்றான்
கூறு கின்றதோர் காலமுங் குறுகிய ததனைத்
தேறு கின்றிலை விதிவலி யாவரே தீர்ந்தார்.

இன்னமும் எனது அண்ணனே கேளும். எமக்கு இந்தப் பேற்றையெல்லாம் தந்தவனான சிவபெருமான்; எமக்கு நீங்கள் நூற்றெட்டு யுகம் வரை இனிதுடன் வாழ்வீராக என்று வரம் தந்தருளினார். அவ்வாறு ஈசனால் கூறப்பட்டருளிய அக்காலமும் முடிவாகிக்கொண்டு வருகின்றது. அதனை நீ தெளிந்து கொள்கின்றாயில்லை. விதியின் வலிமை யார்தான் தீர்ந்துகொண்டவர். 100

எத்தி றத்தரும் நுங்களை வெல்கிலர் எமது
சத்தி வென்றிடும் என்றனன் கண்ணுதற் றலைவன்
அத்தி றத்தினால் அல்லவோ அறுமுகக் குமரன்
உய்த்த செய்யவேல் உண்டது தாரகன் உயிரை.

அண்ணனே! அன்று நெற்றிக் கண்ணுடைய எம்பிரான் எம்மை நோக்கியருளி எத்தன்மை உடையாரும் உம்மை வெல்லமுடியாது. ஆனால் எமது சக்திதான் உம்மை வென்றிடும் என வரம் கொடுத்தார். அன்னதன்மையால் அல்லவோ காத்தற் கடவுளான விஷ்ணு மூர்த்தியாலும் வென்றிடமுடியாத தாரகாசுரனுடைய உயிரை ஆறுமுகமுடைய குழந்தை நாயகரான பெருமான் செலுத்திய வேல் உண்டது. இதை நீர் நன்றாகத் தெளிந்துகொள்ளும். 101

பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தாய்
ஆத லாலுனக் கானதென் றுன்பமே அல்லால்
ஏது மோர்பயன் இல்லதோர் இறுதொழில் இயற்றி
வேத னைப்படு கின்றது மேலவர் கடனே.

ஏழைகளாக இருக்கின்ற அத்தேவர்கள் யாரையும் சிறையிடத்தாக நீ அடைத்து வைத்தாயே. இந்தச் செயலால் உனக்கு நேர்ந்த பயன் யாது? துன்பமாகவே முடிந்துகொண்டது. ஆனதன்மையால் தனக்கு ஏதேனும் ஒரு பயன் தந்திடாத அற்பத் தனமான செயலைச் செய்து பின்னால் வேதனைப்படுவது பெரியோருடைய கடனாமோ? 102

குரவ ரைச்சிறு பாலரை மாதரைக் குறைநீர்
விரத தற்றொழில் பூண்டுளோர் தம்மைமே லவரை
அரும றைத்தொழி லாளரை ஒறுத்தனர் அன்றே
நிரய முற்றவுஞ் சென்றுசென் றலமரும் நெறியோர்.

எனது அண்ணனே! இதை இன்னமும் பாரும். தனது தாய் தந்தையரை குருவை சிறு குழந்தைகளை பெண்களை குறையெல்லாம் தீர்ந்த விரத நெறியைக் கடைப்பிடித்து நிற்கின்ற முனிவரை மேலான நெறிகளின் வழி ஒழுகிடும் பெரியோரை அரிய வேத விதிப்படி தொழில் கொண்டு செயல்புரியும் பிராமணர்களை துயருறுத்தி தண்டித்தவர்தான் கொடியதான இருபத்தெட்டுக் கோடி நரகத்தில் சென்று துயருறும் கொள்கையுடையவர். இத்தகைய பெரியோரைத் தண்டித்தார்க்கு உறுதியான வழி நரகம்தான். 103

அமரர் தம்பெருஞ் சிறையினை நீக்குதி யாயிற்
குமர நாயகன் ஈண்டுபோ ராற்றிடக் குறியான்
நமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளலன் நாளை
இமையொ டுங்குமுன் கயிலையின் மீண்டிடும் எந்தாய்.

ஆதலால் எமது அண்ணனே! நீ தேவர்களினுடைய சிறையினை நீக்குவீர் என்றால் குமரனை கடவுள் இவ்விடம் வந்து போர் புரிதற்கு எண்ணம் கொள்ளார். எமது குற்றத்தையும் சிந்தையிற் கொள்ளார். நாளைக்கே ஓர் இமைப்பொழுது முடிவதன் முன்பே திருக்கைலாய மலைக்கு மீண்டு சென்றிடுவார். எந்தையே இதனை நீர் தெளிந்து கொள்ளும். 104

சிட்ட ராகியே அமர்தரும் இமையவர் சிறையை
விட்டிடாதுநீ யிருத்தியேன் மேவலர் புரங்கள்
சுட்ட கண்ணுதல் குமரனங் குலமெலாந் தொலைய
அட்டு நின்னையும் முடித்திடுஞ் சரதமென் றறைந்தான்

மேலான நெறி நின்ற பெரியோர்களாய் வாழ்கின்ற தேவர்களது சிறையை நீ விட்டிடாது இருப்பாய் என்றால் பகைவரது முப்புரங்களையெல்லாம் சுட்டிட்ட நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான் தந்த குமரனும் கடவுள் நம்முடைய அசுரர் குலமெல்லாம் தொலைவுறும்படி அழித்து உம்மையும் சங்கரிப்பார். இது உண்மையாகும் எனக் கூறினன் சிங்கமுகாசூரன். 105

தடுத்து மற்றிவை உரைத்தலும் வெய்யசூர் தடக்கை
புடைத்து வெய்துயிர்த் துரப்பியே நகை நிலாப் பொடிப்பக்
கடித்து மெல்லிதழ் அதுக்கிமெய் பொறித்திடக் கனன்று
முடித்த னித்தலை துளக்கியே இன்னன மொழிவான்.

மற்றையோர் எல்லாரும் முன் பேசியவாறு போல போர் செய்திட வேண்டும் என்று பேசிடாது போர் வேண்டாமெனத் தடுத்து இந்த வார்த்தையைச் சிங்கமுகாசூரன் பேசி நிற்றலும் கொடிய சூரபன்மன் அதுகேட்டு தனது பெரிய கையை தட்டி பெருமூச்செறிந்து உரப்பி ஏளனமான சிரிப்பின் ஒளியான நிலவு பளிச்சிட தனது மிருதுவான சொண்டைக் கடித்து இதழைச் சப்பியது போன்று அதுக்கி மேனி முழுவதும் பொறிப் பறக்கும்படி கோபித்து இவ்வண்ணமாக மொழிகின்றான். 106

ஏவற் றொண்டுசெய் தின்னமுங் கரந்தஇந் திரற்குந்
மேவர்க் குஞ்சிறு பாலற்குஞ் சிவனுறை கயிலைக்
காவற் பூதர்க்கும் அஞ்சினை கருத்தழிந் தனையோ
மூவர்க் கும்வெலற் கரியதோர் மொய்ம்புகொண் டுடையோய்.

சிங்கமுகனே! என்னடா இது. எனது எவற் தொண்டுகளைச் செய்து ஆற்றாது இன்னமும் காணாதபடி ஒழித்து ஓடிப்போன இந்திர தேவனுக்கும் தேவர்களுக்கும் சிறு குழந்தைக்கும் சிவபிரான் இருக்கின்ற கைலைமலையைக் காவல் கொள்கின்ற பூதங்களுக்கும் பயந்தனையோ? உனக்கு என்ன புத்தி கெட்டுவிட்டதா? நீயோ மூவராலும் வெல்லமுடியாத வலிகொண்டுள்ளவனானையே. 107

எல்லை நாள்வரை இழைத்ததும் எம்பெருஞ் சத்தி
வெல்லு நுங்களை என்றதுங் கண்ணுதல் விமலன்
சொல்ல யான்முன்பு கேட்டிலன் வஞ்சமுஞ் சூழ்வும்
வல்லை வல்லைகொல் எம்பிநீ புதிதொன்று வகுத்தாய்.

எனக்கு முடிவான காலம் இன்ன எல்லையில் என வாழ்நாளின் எல்லையை விதித்திட்டதும் எமது பெரும் சத்தியே உங்களை வென்றிடும் என்றும் நெற்றிக் கண்ணுடைய கடவுள் சொல்ல நான் முன்பு கேட்கவில்லை. இப்படியான வஞ்சனையையும் சூழ்ச்சியையும் புதிது புதிதாகவா தம்பி நீ இப்போது வகுத்துச் சொல்கின்றாய்? 108

நூற்றின் மேலுமோ ரெட்டுக நுவலருந் திருவின்
வீற்றி ருந்தர சியற்றுதிர் என்னினும் மேனுன்
ஆற்றி னேச்சடை வைத்தவன் கொடுத்திடும் அழியாப்
பேற்றை யாவரே விலக்குவர் அதுபிழை படுமோ.

அவ்வண்ணமாக நூற்றெட்டு யுக காலம் வரையும் சொல்லற்கரிய திருவோடும் நீவிர் வீற்றிருந்து அரசுசெலுத்தி வருவீராக என எம்பிரான் கூறியருளினுர் என்ருலும் முன்னுளில் கங்கையைச் சடையில் வைத்த அந்தக் கடவுள் எமக்குக் கொடுத்திருக்கின்ற அழிவிலாத பேற்றை யாவரால் விலக்க முடியும் அது பிழையாகிப் போக முடியுமோ ? 109

ஆதி நாயகன் எம்பெருஞ் சத்தியே அல்லால்
ஏதி லார்வெலார் என்னினுஞ் சத்தியும் இறையும்
பேத மோவரங் கொடுத்தவன் அடுமென்கை பிழையே
ஓத லாவதோர் வழக்கமே உண்மைய தன்றுல்.

ஆதியாகிய சிவபெருமான் அன்று எம்பெரும் சத்தியே அல்லாது வேறு எந்தப் பகைவரும் உம்மை வெல்லமாட்டார்கள் என்ருலும்; சத்தியும் சிவமும் வேருமோ, இல்லையே. ஆனதினுல் வரத்தினைக் கொடுத்தவன் எம்மைக் கொல்வான் என்பது பிழையாகும். அது எவராலும் எடுத்துப் பேச முடியாத ஓர் வழக்கமுமாகும். இது உண்மையும் அல்ல. 110

பழுது ளுதுநம் போலவே வேள்வியைப் பயிலா
தழிவி லாவரம் பெற்றிலன் தாரகன் அதனுல்
ஒழிவ தாயினன் வச்சிர வாகுவும் உணர்வில்
குழவி யாதலின் மாய்ந்தனன் ஈதுகொல் குறையே.

தாரகாசூரன் எம்மைப் போலப் பழுதில்லாத நல்ல யாகத்தைச் செய்து அதனுல் அழிவில்லாத வரத்தைப் பெற்றுக்கொள்ளவில்லை. அதனுலே அவன் இறந்து போயினுன். எனது இளைய மகன் வச்சிரவாகுவும் உணர்வில்லாத சிறு குழந்தை யானபடியால் தூதுவனேடு செய்த போரில் இறந்துபோயினுன். இதுதானு குறை. 111

அண்ட மாயிரத் தெட்டையுந் தனியர சாட்சி
கொண்டு வைகினன் குலத்தொடும் அமரர்தங் குழுவைத்
தொண்டு கொண்டனன் யாவர்வந் தெதிர்க்கினுந் தொலேயேன்
உண்டு கொல்லிவண் எனக்குநே ராகவே ஒருவர்.

யானே அண்டங்கள் ஆயிரத் தெட்டையும் தனியரசாட்சி செய்து கொண்டு இருக்கின்றேன். தனித்துச் சிலரல்லாது தேவர்களின் குலம் முழுவதும் நமக்கு ஏவல் செய்யும்படியாகத் தொண்டு கொண்டுள்ளேன். எவர்தான் வந்து என்னை எதிர்த்திட்டாலும் நான் தோல்வியடைய மாட்டேன். ஆதலின் எனக்கு நிகராக யாரேனும் உண்டா? சொல்வாயாக. 112

தவமு யன்றுழல் அமரரின் அரக்கர்கள் தம்மின்
அவுணர் தங்களின் ஆயிரத் தெட்டெனும் அண்டம்
புவன முற்றவும் ஒருதனி யாழியால் புரந்தே
எவரெ னக்குநே ராகவே அழிவிலா திருந்தார்.

தவத்தினைச் செய்யும்படி முயன்று, அதுவும் கைகூடிட முடியாது உழன்று திரியும் தேவர்களில் இராட்சதர் தங்களில் அல்லது அசுரர்கள் தங்களில் என்போல் ஆயிரத்தெட்டு என்னும் அண்டங்கள் முழுவதையும் புவனங்கள் முழுவதையும் ஒரே ஒரு தனியான ஆணைச் சக்கரத்தின் கீழ்வைத்து ஆண்டுகொண்டு வேறுயார் எனக்கு சமமாக அழிவிலாதிருந்தார்கள் ? 113

மால யன்முத லாகிய முதுவர்கள் வரம்பில்
கால மாகயான் அமரரைச் சிறைசெயக் கண்டுஞ்
சால வென்றனக் கஞ்சியே இருந்தனர் தனியோர்
பால னேகொலாம் அழிவிலா என்னுயிர் படுப்பான்.

உலகைப் படைக்கின்ற பிரம தேவன், காக்கின்ற நாராயணக் கடவுளாகும் பெரு முதியோர்கள் யாரும் அளவுகடந்த காலமாக நான் தேவரைச் சிறைசெய்து வைத்திருப்பதைப் பார்த்திருந்தும்; எனக்கு மிகவும் பயங் கொண்டமையால் ஒன் றும் செய்ய இயலாது இருந்தனர். இப்போது தனியனாகும் இந்தக் குழந்தையோ என்னை வென்றிட வல்லமை உடையான் ? 114

வேறு பாடுறு வச்சிரப் படிவமும் மிடலும்
ஈறி லாததோர் ஆயுளும் பெற்றிடும் என்னை
ஊறு தான்செயக் கூடுறு தொருவர்க்கு மென்றான்
மாறு போர்செய்து பாலனே எனையட வல்லான்.

எக்காலத்திலும் வேறுபாடு அடைந்திடாத வச்சிர உடம்பும், வலிமையும் முடிவு என்பதில்லாத வாழ்நாளும் பெற்றுக்கொண்டு இருக்கின்ற என்னை எத்தகைய ஒருவராலும் ஓர் ஊறுபடுத்திவிட முடியாது என்றால் என்னுடன் இப்பொழுது போரிட்டு ஒரு பாலகன்தானா என்னைக் கொல்லப் போகின்றான். நன்றாக இருக்கின் றது. 115

எண்ணி லாததோர் பாலகன் எனைவெல்வன் என்கை
விண்ணி லாதவன் றன்னையோர் கனியென வெஃகிக்
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன்போய்
உண்ணி லாதபேர் ஆசையால் பற்றுமா றெக்கும்.

ஒருவராலும் மதிக்கவும் பெருமையில்லாத அந்த ஒரு பாலகன் என்னை வெற்றி கொள்வான் என்னும் செயல் எப்படி இருக்கிமென்றால், வானிலே இருக்கின்ற சூரிய பகவானை இது ஒரு நல்ல கனி என்று கண்ணில்லாத ஒரு குருடன் நினைந்து அதைப் பிடிக்கும்படி கையில்லாத இன்னுமொருவனுக்கு காட்டும்போது அந்தக் கையில்லாத வன் சென்று கண்ணில்லாதவன் காட்டிய சூரிய தேவனைப் பிடிப்பதுபோலத்தான் தம்பி இருக்கும். 116

என்று மற்றிவை சூரபன் மாவிசைத் திடலுந்
துன்று பஃறலைச் சீயமா முகமுடைத் துணைவன்
நன்று நன்றென வினவியே இன்னமும் நானிங்
கொன்று கூறுவன் முனியலை கேட்டியென் றுரைப்பான்.

என்று இந்த வார்த்தைகளைச் சூரபன்மன் எடுத்துச் சிங்கமுகனிடம் கூறி நிற்றலும் அதுவேளை நெருக்கமாக இருக்கின்ற பல தலைகளையுடைய சிங்கமுகா சூரன் என்னும் தம்பி சூரபன்மன் அவைகளை ஒவ்வொன்றாகச் சொல்லும்போது எல்லாம் நல்லது நல்லது எனக்கேட்டு பின்னர் தமையனை நோக்கி, இன்னமும் நான் உன்னிடம் ஒன்று சொல்வேன். என்னைக் கோபிக்காதீர் என எடுத்து இதைச் சொல்லுகின்றான். 117

வாலி தாமதிச் சடிலமும் பவளமால் வரையே
போலும் மேனியும் முக்கணும் நாற்பேருக் புயமும்
நீல மாமணிக் கண்டமுங் கொண்டுநின் றனனால்
மூல காரணம் இல்லதோர் பராபர முதல்வன்.

(இப்பால் வருபவை வேத ஆகமங்களின் சாரமாகும்
அருளுடை வாக்குகள்)

மிகவும் அழகுடைய இளம் பிறை அணிந்த திருச்சடை முடியும் பவளமாகும் பெரு மலையே போலும் திருமேனியும், மூன்று கண்களும், நான்கு பெரிய தோள்களும் நீல நிறமுடைய மணி கண்டமும் கொண்டு அன்றும் இன்றும் என்றும் நின்று கொண்டான் தனக்கு மூலமாகும் ஒரு பொருளாய காரணம் ஏதும் இல்லாத முதல்வனாகும் சிவம். 118

தன்னை நேரிலாப் பரம்பொருள் தலியுருக் கொண்ட
தென்ன காரணம் என்றியேல் ஐந்தொழில் இயற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கள் முழுவதும் அகற்றிப்
பின்னை வீடுபே றருளுவான் நினைந்தபே ரருளே.

தனக்கு வேறுயாரும் நேரில்லாத அறிதற்கரிய பரப்பொருளாகும் பெருமான் இவ்வண்ணம் சடைமருங்கில் இளம்பிறையும், தனிவிழிக்கும் திருநுதலும் திருப்புயங்கள் நான்குமாகும் தனியான ஓர் உருவைக் கொண்டது என்ன காரணம் என்று கேட்டால் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்து தொழில்களையும் செய்து இருளாய மூடத்தில் கிடக்கும் முன்னைய அரிய உயிர்களின் பந்த பாசங்களை நீக்கி எல்லையற்ற இன்பமென்னும் முத்தியான பேற்றை அருள் புரியும் படியாக நினைந்து கொண்ட அளவிறந்த கருணையாகும் பேரருளே என்பதை அறிவாயாக. 119

அப்ப ரன்றனை உன்னியே அளவைதீர் காலம்
மெய்ப்பெ ருந்தவம் இயற்றினை அதுகண்டு வெளிப்பட்
டொப்பி லாவர முதவியே ஆங்கதற் கொழிவுஞ்
செப்பி வைத்தனன் தேர்ந்திலை போலுமத் திறனே.

அவ்வாறான எல்லார்க்கும் முதல்வனாகும் பரனையே நினைந்து நீ அளவிறந்த காலமாக உண்மையான பெரும் தவத்தைச் செய்தாய். அதனை எம்பிரான் கண்டருளி உனக்கு முன்பு வெளிப்பட்டு இதுகாறும் எவரும் பெற்றிடாத ஒப்பிலாத வரங்களைத் தந்து அந்த வரம்பெற்றால் வரும் உனது வாழ்க்கைக்கு முடிவாகும் காலத்தையும் சொல்லியருளி வைத்தார். ஆனால் நீ அவைகளை மனதில் தெளிந்து கொள்ளவில்லை. 120

பெறல ருந்திரு வுடையநீ அறத்தினைப் பேணி
முறைபு ரிந்திடா தாற்றலால் அமரரை முனிந்து
சிறையில் வைத்தனை அதுகண்டு நின்வலி சிந்தி
இறுதி செய்திட உன்னினன் யாவர்க்கும் ஈசன்.

எவராலும் பெறுதற்கரிய திருவைப் பெற்றுக்கொண்ட நீ தருமத்தைக் கடைப் பிடித்துப் பேணி அரசு செய்திடாதிருக்கும் அந்த நிலையால் தேவர்களை உனது வலி யால் வென்று பகையாகி அவர்களைச் சிறையிலே வைத்தாய். அதனை எம்பிரான் கண்டருளி உனது வலியை நீக்கி உன்னை முடிவு செய்திடவும் எண்ணினான் எல் லார்க்கும் ஈசனாகும் பெருமான். 121

வரம ளித்தயாம் அழிப்பது முறையன்று வரத்தால்
பெருமை பெற்றுள சூரனை அடுவது பிறர்க்கும்
அரிதெ னப்பரன் உன்னியே தன்னுரு வாகும்
ஒரும கற்கொடு முடித்துமென் றுன்னினான் உளத்தில்.

உனக்கு வரத்தினைக் கொடுத்த நாம் உன்னை அழிவு செய்வது முறையன்று என திருவுளத்து கொண்ட கருணையாலும்; தனது வரங்களால் வலியுடன் சிறந்தி ருக்கும் சூரனைக் கொல்வது பிறருக்கும் அரிதாகும் என பரமாகும் ஈசன் எண்ணிய ருளி தனது உருவாகும் ஓர் குமரனைக் கொண்டு உன்னை முடிவு செய்வோமென திருவுளத்து எண்ணியருளினார். 122

செந்நி றத்திரு மேனியுந் திருமுக மாறும்
அன்ன தற்கிரு தொகையுடைத் தோள்களு மாக
முன்ன வர்க்குமுன் னாகிய பராபர முதல்வன்
தன்னு தற்கணால் ஒருதனிக் குமரனைத் தந்தான்.

ஆதலின் அதற்கிணங்க சிவந்த ஒளியாய் பரவுகின்ற திருமேனியும் திருமுகங் கள் ஆறும் பன்னிரண்டு தொகையுடைய திருத்தோள்களுமாக முற்பட்டார் எல்லார் க்கும் முன்னவராய் எல்லாமாய் அல்லவுமாய் இருக்கும் முதல்வன் ஓர் திருவுருவம் கொண்டு தனது நெற்றிக் கண்ணால் ஒரு தனியாகும் குமரனைத் தந்தருளினான். 123

மானு டத்தரில் விலங்கினில் புட்களில் மற்றும்
ஊன முற்றுழல் யாக்கையின் பிறந்துளார் ஒப்ப
நீநி னைக்கலை பரஞ்சுடர் நெற்றியந் தலத்தே
தானு தித்தனன் மறைகளுங் கடந்தோர் தலைவன்.

அவ்வாறு தோற்றியருளிய தன்னந் தனியான குமரனை இவ்வுலகில் உள்ள மனி தர்களிலோ அல்லது மிருகங்களிடமோ அன்றி பறவைகளிலோ இதுவன்றி மற்றும் ஊனப்பட்டு உழன்று திரியும் உடலில் பிறந்துளார் போன்று நீ நினைந்து கொள் ளாதே. பரஞ்சோதியாகும் பெருமானின் நெற்றியந்தலத்துத்தான் உதித்தருளினார் வேதங்களும் காண்பரியதாய் யாவையும் கடந்துநின்ற ஓர் கடவுளாகும் குமரன். 124

சீல மில்லவர்க் குணரவொண் ணாதசிற் பரனைப்
பால னென்றனை அவனிடத் திற்பல பொருளும்
மேலை நாள்வந்து தோற்றிய சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஓடுங்கியே அவதரித் ததுபோல்.

சீலம் என்னும் வாழ்க்கை இல்லாதாரிக்கு எந்நிலையாலும் உணரமுடியாதபடி ஞானவடிவாயிருக்கின்ற பெருமானை நீ பாலன் என்று கூறினாய். அந்தப் பாலன் இடத்தில் தான் உலகுமுதற்பல பொருளும் முன்னாளில் வந்து தோன்றியது. எப்படியெனின் சிறியதொரு ஆலம் வித்திலே பெரிய ஆலமரம் அடங்கியிருந்து பின்னர் வானளவு முளைத்தெழுகின்ற தன்மை போன்று பார் பதம் அண்டம் யாவுமாய் முளைத்தெழுந்து பரந்தவன் அவனே என அறிவாய் 125

அருவு மாகுவன் உருவமு மாகுவன் அருவும்
உருவு மில்லதோர் தன்மையும் ஆகுவன் ஊழின்
கருமம் ஆகுவன் நிமித்தமு மாகுவன் கண்டாய்
பரம னுடலை யாவரே பகர்ந்திடற் பாலார்.

அப்பாலன் அருவமாய் தோன்றாதாயும் இருப்பான். தோன்றிடும் உருவமுமாகுவான். அருவமும் உருவமும் இல்லாத தன்மையும் ஆகுவன். ஒவ்வோர் செயலும் நடைபெறற்குரிய ஊழின் கருமங்களும் அவ்வாறு அவைகள் நிகழ்வதற்கு உரிய நிமித்தமாகும் முன் எதுவும் ஆகுவன் காண்பாயாக. அம்மவோ பரமனாகும் பாலன் ஆடலை யாவர்தான் எடுத்துச் சொல்லிட முடியும்? முடியாதே. 126

வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன் புதியரில் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவாய்
ஆதிக் காதியாய் உயிர்க்குயி ராய்நின்ற அமலன்

அவன் வேதங்கள் இவ்வணமாகுவன் என எடுத்து ஓதிடுகின்ற காட்சிகளுக்கும் உபநிடதங்களின் முடிவாகும் உயர் நிலையாகப் பேசப்படும் ஞானக் காட்சிக்கும் காணப்படாவன், முன்னையோராய் மூத்துள்ள கடவுளர் யார்க்கும் மூத்தவனுவய் பின்னராக முடிவு என்பதன் முடிவாகி ஆதிக்கு ஆதியாக உயிர்கட்கு உயிராகி நின்ற நின்மலமாகும் சோதியாயவன். 127

ஞானந் தானுரு வாகிய நாயகன் இயல்பை
யானும் நீயுமாய் இசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்க்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை.

ஞானமே தனது திருவுருவம் ஆகிய நாயகனின் இயல்பை இவ்வணமானது இத்தகைத்தாயது என பொல்லாங்கினால் நிரப்பப்பெற்ற வாழ்வுடைய யானும் நீயுமாக பேசிடுவோம் என்றால் அது எளிதாகிய காரியமோ? அவனது இயல்பை வாழ்வில் எல்லாப் பற்றினையும் நீக்கி பேச்சிறந்த மௌன விரதத்தை நீக்கிடாது நிற்கும் முனி

வர்களும் அறியமாட்டார்கள். அஃதன்றி அப்பகவானே இன்னமும் தானும் காண மாட்டான் தன்னுடைய தலையாய பெருநிலை. 128

தத்த மாற்றங்கள் நிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவினர் அவன்செயல் காணார்
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
உய்த்து ணர்ந்திடு நீரரே ஒருசிறி துணர்வார்.

தங்கள் தங்கள் சமய நீதிகள்தான் சரியென அதனையே நிறுவி நிற்க முற்படும் சமயவாதிகள் மதகுருமார்கள் யாவரும் தாங்கள் கொண்டுள்ள கற்பனையினால் எழுந்த வீண் சொற்களை வாதிட்டும் கேட்டும் பிரசங்கித்தும் நின்றார்களே ஒழிய அவனுடைய செயலை உண்மையாம்படி காணஇலர். ஆனால் தூயதான வாதுள ஆகமம் முதலிய தந்திரங்களில் சொல்லிய நெறிப்படி ஒழுக்கம் கொண்டு அந்த ஒழுக்கத் தால் விளையும் விழுப்ப நிலையாய உணர்வு சேரப் பெற்ற அருள் நீர்மை உடையரே அவன் இயல்பை ஒரு சிறிது உணர்வார்கள், 129

கருவி மெய்ப்புலன் காட்டுவான் காண்பவன் காட்சிப்
பொருளெ னப்படு நான்மையும் ஐவகைப் பொறியும்
இருதி றத்தியல் வினைகளுங் காலமும் இடனும்
மரபின் முற்றுறு பயனுமாய் நின்றனன் வள்ளல்.

காண்பார்க்கு உற்ற கருவிகளாகும் உடலின் புலன்களும் காட்டுவானும் காண் பவனும் காட்சிகளும் எனவாகும் பொருளாகிய நான்கும் ஐந்து பொறிகளும் நல் வினை தீவினையான இருதிறத்து செயல்பட்டுவரும் வினைகளும் காலங்களும் இன்னும் இவற்றினால் உயிர்கள் செய்யும் கருமங்களால் விளையும் பயன்களுமாக நின்றான் எமது அருள்வள்ளலான முருகப்பிரான் என அறிவாயாக. 130

ஞால முள்ளதோர் பரம்பொருள் நாமெனப் புகலும்
மாலும் வேதனும் மாயையாம் வரம்பினுட் பட்டார்
மூல மாகிய தத்துவ முழுவதும் கடந்து
மேலு யர்ந்திடு தனிமுத லவன் அன்றி வேறார்.

இப்பூமியில் உள்ளதோரார் பரம்பொருள் நாம் தான் எனப் புகல்கின்ற நாரா யணக் கடவுளும் பிரமதேவனும் அவ்வாறு தம்மையே பரமென சொல்கின்றமையால் அவர்களும் மாயையின் எல்லைக்குள் அகப்பட்டாராயினார்கள். உடம்பிற்கு மூலமாகிய தத்துவங்கள் தொண்ணூற்றாறும் கடந்து மிக மேலாகி ஈறு காண்யரியதாய் நின் றிட்டதனி முதல் அப்பாலனேயன்றி வேறு யார்?
தானான தன்மை அவனன்றி வேறு யார்? 131

தூய பார்முத லாகவே குடிலையின் துணையுங்
மேய அண்டமும் உயிர்களும் வியன்பொருள் பலவு
மாயும் நின் றனன் அல்லனு மாயினன் அவன்றன்
மாயை யாவரே கடந்தனர் மறைகளும் மயங்கும்.

தூயதான பூமி முதலாக பூமியின் தோற்ற விரிவிற்கு ஏதுவாகும் முதற்பொருளாகிய குடிலை எனும் ஓங்காரம் வரையில் இடையில் பொருந்தியிருக்கும் அண்டங்களும் உயிர்களும் மேலாகிய அற்புதமுடைய பொருள்கள் பலவும் ஆகவும் அவன் நிற்கின்றான். அப்பொருள்கள் அல்லாதவனாகவுமாயினான். ஆதலினால் அவனுடைய மாயையை யார்தான் கடந்துள்ளார்கள். வேதங்களும் சொல்லிடமுடியாது தடுமாறும்

அவனை அவனருளால் சொல்லவந்த வேதங்களும் பூதங்கள் அல்ல பொறிகள் அல்ல, புலன் அல்ல அல்ல. உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களின் பேதங்கள் அல்லை இவையல்லாது பிறிதல்ல என்றி கூற முடியாது தடுமாற்றத்துடன் மயங்கிடுமே! ஆகையின் மயக்கத்தை விளைவித்து நிற்கும் அவனது செப்படி வித்தையில் செயல்பட்ட நாம் எப்படி அறிவோம். 132

இன்ன தன்மைசேர் முதல்வனைச் சிறுவனென் றிகழ்ந்து
பன்னு கின்றனை அவுணர்தங் கிளையெலாம் படுத்து
நின்னை யுந்தடிந் திடுவனோர் இமைப்பினின் நிரப்புந்
தன்ன ருட்டிறங் காட்டுவான் வந்தனன் சமர்மேல்

இன்னதன்மை சேர்ந்துள்ள முதல்வனை நீ சிறுவன் என ஏளனமாகப் பேசிடுகின்றாய், அவனோ தான் நினைத்தால் இந்த அசுரர் கிளைகளை வேரோடு மடியச்செய்து உன்னையும் முடிவாக்குவான் ஓர் இமைப்பொழுதினில். ஆனால் அவ்வண்ணம் செய்யாதபடி நிரம்பி எங்கும் வழிந்திடுகின்ற கருணையென்னும் அருட்திறத்தை எல்லார்க்கும் காட்டும்படியாக உன்னுடன் போர் செய்யும்படியாக இங்கு எழுந்தருளி வந்திருக்கின்றான். அண்ணனே அளவிறந்து நிறைகின்ற கருணையுடைய அவன். அதனை அறி. 133

அற்றம் இல்வகை ஆயிரத் தெட்டெனும் அண்டம்
பெற்ற னம்மென வியந்தனை தத்துவ பேதம்
முற்று ணர்ந்திலை தரணியோ அளப்பில வுளகாண்
மற்றை அண்டங்கள் கேட்டியேல் மருளுதி மன்னோ.

குற்றமில்லாத ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசாளும் பேறு பெற்றனம் என்று மனதில் நீ எண்ணி உன்னையே வியந்துகொண்டாய். தத்துவங்களின் பேதங்கள் முழுவதின் இயல்பையும் நீ அறிந்தாயில்லை. இங்கு நீ இருக்கும் பூமி ஒன்றுதானேயென எண்ணனும் போலும். அப்படி அன்று, பூமிகளின் தொகைக்கு அளவில்லையெனக் கண்டுகொள்வாய். அண்டங்கள் ஆயிரத்தெட்டுடன் மட்டுமன்று. அம்மவோ மற்றையதான அண்டங்களின் இயல்பை நீ கேட்டால் மயங்கிப்போவாயே. 134

குடிலை யீறதா வாரியே முதலதாக் குழுமி
யுடைய அண்டங்கள் அலகில என்பரொன் றொன்றின்
அடைத லுற்றிடு புவனத்தின் பெருமையார் அறிந்தார்
முடிவு றாததோர் பொருளினை முடிவுகூ றவற்றோ.

குடிலை என்னும் பதநிலை முடியும் வரையும் பூமி முதல் தொடக்கமிருந்து காணப்பெறும் அண்டங்கள் அளவிறந்தன எனச் சொல்லுவார்கள். ஒன்றில் ஒன்று தங்கியவாறு நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்துள்ள அண்டங்களின் வளமுடைய பெரும் காட்சியின் அளப்பரும் தன்மையை யார் அறிந்தார். அது முடிவுறாத ஓர் பொருளாகும். முடிவுறாத பொருளை முடிவு கூறிட எம்மால் முடியுமோ? அது ஆகாது. 135

அன்ன தாகிய அண்டங்கள் அனந்தகோ டியையும்
தன்ன தாணையால் ஓரிமைப் பொழுதினில் தரவும்
பின்னர் மாற்றவும் வல்லதோர் ஆதியம் பிரான்காண்
உன்னொ டேபொரும் ஆடலாற் செந்திவந் துற்றான்.

அவ்வாறான அண்டங்கள் அனந்த கோடிகளையும் தன்னுடைய ஆணையால் ஓர் இமைப்பொழுதில் படைத்திடவும் பின்னர் அழித்திடவும் செய்யவல்லதொரு ஆதியான பெருமானே நீ கண்டுகொள் உன்னோடு போர் செய்திடும் ஓர் திருவிளையாடலை எண்ணித் திருச்செந்தூர் என்னும் பதி வந்துற்றார்.

காத்தும் படைத்தும் கரந்தும் விளையாட வல்ல எல்லார்க்கும் மூலமான கடவுள் உன்னோடு போர் செய்வது தமக்கு ஓர் ஆடலாகக் கொண்டு செந்தியில் வந்து அமர்ந்திருக்கின்றான். அதனை அறிவாயாக. 136

வச்சி ரத்தனி யாக்கைபெற் றனமென மதித்தாய்
இச்சி ரத்தையை விடுமதி இருவினைக் கீடாய்
அச்செ டுத்திடும் உயிர்கண்மாய்ந் திடுமென அறிஞர்
நிச்ச யித்தனர் முடிவுறா திருத்திகொல் நீயே.

அண்ணனே அழிவிலாத வச்சிரமாகும் தனி உடம்பைப் பெற்றுள்ளேன். அழிவிலாத உடலுடைய என்னை யார் என் செய்வார் என எண்ணினாய். இந்த எண்ணத்தை நீ விடுத்திடுவாயாக ஏனெனில் உயிர்கள் தாம் தாம் செய்துகொண்ட நல்வினை தீவினைகட்கு ஏற்ப உரு எடுத்திடும் எந்த உயிர்களும் மாய்ந்திடும் என அறிஞர் நிச்சயம் செய்துள்ளார்கள். ஆதலால் உன் வினை அநுபவித்து ஒழியும் வரையும் வச்சிரயாக்கை எனும் உடம்பு இருக்குமேயன்றி ஓய்வின்றி நெடுகிலும் இறவாது நீ இருக்கப் போகின்றாயோ? 137

பெருமை பெற்றிடு வானத்தின் நிலத்திடைப் பிறந்தோர்
இருமை பெற்றிடு காயமும் இறந்திடுந் திண்ணம்
பருமி தத்துநின் வச்சிர யாக்கையும் பாரின்
உரிமை பெற்றுள தாதலான் அழிவின்றி யுறுமோ.

பெருமை பெற்றிட்ட வான உலகில் அன்றி நிலத்தினில் இடையாகப் பிறந்தோருடைய தூலம் சூக்குமம் எனப்படும் இருவகையாகும் உடல்களும் இறந்திடும். இதுதிண்ணமாகும். ஆதலின் மிக்க பருத்தமான உனது வச்சிர உடம்பும் இப்பூமியின் உரிமை பெற்றுடையது. ஆதலால் அது அழிவிலாது இருக்குமோ. 138

அழிவில் மெய்வளம் பெற்றனம் என்றனை அதற்கு
மொழித ரும்பொருள் கேண்மதி முச்சகந் தன்னுட்
கெழிய மன்னுயிர் போற்சில வைகலிற் கெடாது
கழிபெ ரும்பகல் இருந்திடும் பான்மையே கண்டாய்.

அழிவில்லாத மேன்மையில் சிறந்துள்ள செல்வம் பல பெற்றுக்கொண்டேன் என எண்ணி இங்கு பேசினாய். அதற்கும் நாம் இங்கு சொல்லும் பொருளைக் கேட்

பாயாக. இந்த மூன்று உலகங்களில் குழுமியிருக்கின்ற யேலாம் உயிர்களின் செல்வம் போன்று சில நாட்களில் கெடாது இன்னும் சில நீண்ட நாட்களாகும் காலம் வரையும் உனதுசெல்வம் இருந்திடும் தன்மையே என்பதை அறிவாயாக. உலகில் உயிர்கள் பெறும் செல்வம் சில நாள் தங்கிவிட்டு பின்னர் அழிவதுபோலல்லாது உனது செல்வமும் நீண்ட காலம் வரையும் இருப்பதல்லாது முற்றுக அழியாமலிருக்கும் எனக் கொள்ளலாகாது என்றான் சிங்கமுகன். 139

அச்சு தன்அயன் அமரரா கியபெய ரவர்க்கு
நிச்ச யம்படு முகமனே யானபோல் நினது
வச்சி ரத்தனி யாக்கையும் அழிவிலா வரமும்
முச்ச கந்தொழப் பல்லுகம் இருத்தலாய் முடியும்,

அச்சுதன் அயன் அமரர்கள் எனும் பெயர்களால் இவர்களும் அழிவுறுர் போன்று பொருள்கொள்ளப்பட்டாலும் அது அவர்கட்கும் நிச்சயமான முகமன் வார்த்தையேயாகிவிட்டது. ஏனெனில் அவர்களும் இறந்துள்ளார்களே ? அதே போல உனது வச்கிரமாகிய உடலும் அழிவில்லாத செல்வமும் மூன்று உலகமும் வணங்கித் தொழும்படியாக பல யுகங்கள் வரையும் இருக்கும்படியாகி முடியுமேயன்றி ஒருக்காலும் அழிவில்லாது இருக்க முடியாது. 140

வான்செய் தேவரை நீயலைக் கின்றதை மதியா
ஊன்செய் கின்றபல் லுயிருக்கும் உயிரதாம் ஒருவன்
தான்செய் கின்றதொல் வரத்தினைத் தான்தவிர்ந் திடுமேல்
ஏன்செய் தாயென வினவியே நிறுவுவார் எவரே.

வான உலகங்களை விளங்கிடச் செய்யும் உத்தமர்களாகிய தேவரை நீ அலைத்து துன்புறுத்தலை உணர்ந்தருளிக் கொண்டு ஊனினால் செய்திடப் பெற்ற உடம்புகளில் வாழ்ந்திடும் பல உயிர்கட்கெல்லாம் உயிராய் விளங்கிடுகின்ற ஒருவனாகும் பெருமான் தான் கொடுத்த வரத்தினை தானே நீக்கியருள்வாராயின் அப்போது அப்படி ஏன் செய்தீர் என எம்பிரானிடம் கேட்டு அதை அவர் செய்யாதபடி தடுத்து நிறுத்துவார் எவர் உளர் ... ? 141

கெடுத லில்லதோர் வளனொடு நீயுநின் கிளையும்
படுத லின்றியே வாழ்தியென் றின்னன பகர்ந்தேன்
இடுதல் கொண்டிடு சிறையிடைத் தேவரை யின்னே
விடுதல் செய்குதி யென்றனன் அறிஞரின் மிக்கான்

எனது அண்ணனே ? எக்காலமும் கெடுதல் இல்லாத இந்த பெரும் செல்வங்களுடன் நீயும் நினது சுற்றத்தவரும் அழிந்துபோகாது நெடுநாளாக வாழவேண்டும் என்பதற்காக இந்த வாக்கியங்களை எடுத்துக் கூறியுள்ளேன், ஆனமையால் நீ தேவரை இட்டு வைத்திருக்கும் சிறையில் நின்றும் நீக்கி அவர்களை இப்பொழுதே விடுதலை செய்வாயாக எனக் கூறினன் அறிவாளிகளிலும் மிகுந்த மேம்பாடுடைய வலுகிய சிங்கமுகாசுரன். 14

இன்ன பான்மையான் மடங்கலம் பெருமுகத் திளவல்
சொன்ன வாசகம் வினவியே மணிமுடி துளக்கிக்
கன்ன மூடுசெங் கனல்செறிந் தாலெனக் கனன்று
முன்னை யாகியோன் பின்னருஞ் சிற்சில மொழிவான்.

இன்ன பான்மையாக சிங்கங்களின் பெருமுகமுடைய தம்பியாகும் சிங்கமுகாசூரன் சொன்ன வார்த்தைகளை சூரபன்மன் கேட்டு அப்படியா தம்பி! என இரத்தின முடிசூடிய தலையை அசைத்துத் தனது காதூடு நெருப்புப் புகுந்து சுட்டது என்னும்படியாகக் கோபமடைந்து மூத்தவனாகும் சூரபன்மன் தனது தம்பியாகும் சிங்கனுக்குப் பின்னரும் சிற்சில வார்த்தைகளை எடுத்துச் சொல்வான். 143

காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
ஆற்றில் தாக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் பேர்முலை உண்டழு தேவிளை யாடும்
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய்.

சிங்கமுகனே உனது எண்ணங்கள் இதுவா? காற்றினால் கைலையிலிருந்து தள்ளிக்கொண்டுவரப்பெற்று பின்னர் நெருப்பின் தலையிலே ஏந்தப்பெற்றுக் கிடந்து சூடுண்டு; கங்கையாற்றிலே வந்து அங்கு ஆற்றோட்டத்தில் தாக்குண்டு பின்னர் சரவணப் பொய்கையிலே சென்று அங்கும் அலையுண்டு கிடந்து பின்னர் உருவாகி வந்த பிற்பாடும்பெற்ற தாயின் பால் அருந்தாது வேறு பெண்களாகும் கார்த்திகைப் பெண்களின் முலை உண்டு அழுது விளையாடுகின்ற நான் அறியத்தோன்றிய நேற்றைப் பாலனையோ! நீ பரம்பொருளென உனது மனதிலே மதித்தாய். பரம்பொருள் என்பது இப்படியானது என்று நினைத்தாய். 144

பிரம மாகிய ஒருபொருள் உயிரெனப் பேர்பெற்
றுருவ மெண்ணில கொண்டுதன் மாயையால் உலப்பில்
கரும பேதங்கள் ஆற்றிடும் பல்புனற் கடத்துள்
இரவி தன்னுருத் தனித்தனி காட்டிய இயல்பின்.

பரம்பொருளின் இயல்பை நான் உனக்குச் சொல்கின்றேன் கேட்பாயாக. எவராலும் அறியமுடியாத பிரமமாகிய ஒரு பொருள் உயிர் என்னும் பெயர் கொண்டு அதன் பிரகாரம் பல உருவங்கள் எண்ணற்றவையை எடுத்துக்கொண்டு தனது மாயையால் அளவு காண்பரிய ஒய்விலாத பல கருமங்களையும் செய்து நிற்கும். இது எப்படியெனில் பல நீர்வைக்கும் குடங்களில் சூரியனுடைய உருவம் ஒவ்வோர் குடத்து நீரிடமும் தனித்தனி தோன்றிடும் இயல்புபோன்றது.

ஒன்றாகும் பிரமமாகிய உயிரே பல உடல் கொண்டு எண்ணற்ற உடலூடாக எல்லாக் கருமங்களையும் தான் செய்திடும். 145

கடந்த கர்க்துழி அவற்றிடை வெளி கனத்தோ
டடைந்த வாறுபோல் யாக்கையின் பேதகம் அனைத்தும்
முடிந்த காலையில் தொன்மைபோல் அபேதமாம் மொழிக்குந்
தொடர்ந்த சிந்தைக்கும் நாடொணு தமர்பெருஞ் சோதி.

இப்போது அந்த குடம் உடைந்தால் அந்தக் குடத்துள் இருந்த வெளியானது மீண்டும் பெருவெளியாகும் ஆகாயத்துடன் அடைந்துகொள்வது போன்று இந்த உடலின் வெவ்வேறாகும் வடிவங்கள் அனைத்தும் முடிந்துபோகும் காலையில் பழமைபோல அந்த உடலூடு இருந்த உயிர் யாவும் ஒன்றாய் விளங்கிடும். பிரமமானதை ஆராயமுற்பட்டால் அது சொல்கின்ற சொற்களுக்கும் எண்ணுகின்ற சிந்தைக்கும் எட்டொணாது அமர்கின்ற பெரும் சோதியாகும். 146

பிரம மேயிவர் அல்லவர் இவரெனப் பேதித்
திருமை யாகவே கொள்ளலை யாக்கையே வேறு
பரம மாகிய உயிரெலாம் ஒன்றுபல் பணியும்
பொருள தாகியே ஒருமையாய் முடிந்தவா போல,

ஆதலின் ஒருவரைப் பிரமாவார் என்றும் மற்றையோரை பிரமம் அல்லாதவர் என்றும் (அதாவது சரவணத்தில் தோன்றிய பாலனை பரம்பொருளாகும் பிரமம் என்றும் என்னை வெறுகும் என்றும்) இரண்டாகப் பிரித்து எண்ணாதே; உடம்புதான் வேறு. பரமாய் எட்டொணாது எல்லா உடலிடத்தும் இருப்பதான உயிர் ஒன்று தான். அது எப்படியெனின் பலவிதமான ஆபரண வகைகள் யாவும் பொன் ஒன்றினால் மட்டும் வெவ்வேறு வடிவில் செய்தமைத்தது போன்று என்பதை அறிவாயாக. 147

விறலும் வன்மையும் இல்லவர் தாழ்வர்மே தக்க
நெறியர் ஓங்குவர் ஈதுல கத்திடை நிகழ்ச்சி
இறுதி யில்லதோர் பெரியன்யான் அறுமுகன் என்போன்
சிறியன் ஆதலின் அவனையான் வெல்குவன் திண்ணம்.

ஆதலின் இந்த உலகத்திலே விறலும் வலிமையும் இங்கிலாதவர்கள் தாழ்ந்து போவார்கள். மேலான நெறியில் நிற்பார்கள் ஓங்கி வாழ்வார்கள். இதுதான் உலகில் எக்காலமும் உள்ள நிகழ்ச்சியாகும். நானே முடிவில்லாத பெரியவன். ஆறுமுகன் என்பவன் சிறியவன், ஆற்றலிலாதவன். ஆதலால் அவனை யான் வெல்லுவன். இது திண்ணம் என்பதை நன்றாக நீ தெளிந்துகொள். 148

தொகைமை சான்றநங் குரவர்பல் லோருயிர் தொலைத்த
பகைஞ ராதலின் அமரரைச் சிறையிடைப் படுத்தேன்
மிகைசெய் தார்களை நாடியே வேங்தொறுத் திடுதல்
தகைமை யேயென மனுமுறை நூல்களுஞ் சாற்றும்.

தேவர்கள் பலரை யான் சிறைவைத்த காரணத்தை இங்கு கேள், எந்தையே. தொகையுடைய எங்களது மிக முன்னைய சந்ததியாகும் அசுரமுதல்வர்கள் பலருடைய உயிரைத் தொலைத்தவர்கள் இந்த தேவர்கள். இவர்கள் எங்களது நெடுங் காலப் பகைவராதலின் இந்தத் தேவரை யான் சிறையிடை வைத்தேன். தனக்கு மாறாக மிகையான கருமங்கள் செய்வாரையெல்லாம் நாடியறிந்து அரசன் தண்டனை செய்தல் நீதியாகுமென மனுநீதியைக் கூறும் நூல்களும் எடுத்துச் சொல்லிடும். 149

மாக ராயுளோர் காப்பினை விடுகிலன் மற்றைப்
பாக சாதனன் தன்னையும் அருஞ்சிறைப் படுப்பன்
ஏக நாயகன் எய்தினும் எதிர்ந்துபோர் புரிவன்
ஆகை யால்இனி இச்சிறு மொழிகளை அயர்த்தி,

அது இருப்ப தேவராயினோர் சிறையினை ஒருபோதும் விடமாட்டேன். இதுமட்டன்றி அந்த இந்திரன் என்பானையும் கொடிய சிறையில் அடைப்பேன். பாலனாகும் ஆறுமுகன் அல்ல ஏகநாயகரான சிவபிரான் வந்து எதிர்த்தாலும் அவருடனும் எதிர்த்து நான் போர் புரிவன். ஆனமையால் இனிமேல் இப்போது நீ பேசிய சின்னத்தனமான வார்த்தையை மறந்துவிடு. 150

உரைப்ப தென்னினி ஒருவயிற் றென்னுடன் உதித்துப்
பெருக்க முற்றனை நங்குலப் பகைஞரைப் பெரிது
நெருக்கல் இன்றியே அவர்கள்பாற் பட்டனை நீயே
இருக்க மற்றொரு தெவ்வரும் வேண்டுமோ எனக்கே

நான் வேறு இனி என்னத்தை எடுத்து மொழிவேன். ஒருதாய் வயிற்றிலே என்னுடன் பிறந்து இப்படி பெருத்த வடிவம் கொண்டாய் இப்படி இருப்பவும் எங்கள் குலத்திற்கு பெரும் பகையாயிருக்கின்ற அந்த தேவர்களை நெருக்கி அடித்துக் கொல்லவேண்டும் என்பதில்லாமல் அவர் பக்கமாகச் சேர்ந்துகொண்டாய். என் தம்பி! இப்படியாக நீயும் இருக்க எனக்கு இன்னுமொரு பகைவர் வேண்டுமோடா? 151

பத்துக் கொண்டநூ றுடையதோர் சென்னியும் பலவாங்
கொத்துக் கொண்டமர் தோள்களுங் கரங்களின் குழுவும்
எத்துக் காற்றினை வன்மையும் வீரமும் இழந்தாய்
பித்துக் கொண்டவர் தம்மினும் பேதைமை பிடித்தாய்.

ஆயிரம் எனும் எண்ணிக்கைகொண்ட தலைகளையும்; பலவாகும் கொத்துக்கொந்தாகி இருக்கும் தோள்களும கைகளின் கூட்டமும் ஆகிய இவற்றினை எல்லாம் எதற்காக நீ வைத்திருக்கின்றனை. இவ்வளவு பெருவடிவுகொண்டு வலிமையையும் வீரத்தையுப் இழந்தாய். பைத்தியம் கொண்டார்களினும் நீ பெரும் பைத்தியகாரனாகி விட்டனையே? 152

வேறு

தானவர் வழிமுறை தன்னை விட்டனை
வானவர் போன்றனை வன்மை சிந்தினை
மேனிகழ் திட்பமும் விறலு மாண்டனை
மோனமொ டருந்தவ முயலப் போதிநீ.

அசுரர்கட்குரியதான வழிமுறைகளாகும் செயலை அடியோடு விடுத்துள்ளாய் தேவர்களைப்போன்று நடுங்குகின்றாய். வலிமை யாவும் கெட்டுவிட்டாய். மேனாக உன்னிடத்துள்ள திடகாத்திரமும் வலிமையும் மாண்டு போகப்பட்டாய். நீ இங்கு இந்த நகரில் உதவாது. மெதுவாக நீ இச்சபையை விட்டு மௌன விரதம்பூண்டு அரிய தவம் செய்யச் சென்றிடுவாய். 153

மறந்தனை இழந்தனை மான நீங்கினை
சிறந்திடும் அவுணர்தஞ் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை ஈண்டொரு பயனும் பெற்றிலை
இறந்தனை போலும்நீ இருந்துளாய்கொலோ.

மறமான பெரிய போர்ச் செயல்களை விடுத்தாய். மானமும் நீங்கப்பெற்றாய். சிறந்துள்ள அசுரர்களாகும் எங்குலத்தோரின் சீர்கள் யாவும் மாண்டுபோம் படித்தாக நீ ஒருவன் பிறந்திருக்கின்றாய். நீ எடுத்த பிறவியால் இவ்விடம் ஓர் பயனும் பெற்றாயில்லை என் தம்பி நீ இறந்துள்ளாய் போலும், நீயும் இருக்கின்றாயோ? 154

மந்திரி யாதியான் மற்றி தற்குநீ
சிந்தையில் வெருக்கொளின் திசைமு கத்தர்போல்
ஐந்தியில் அங்கமொன் றங்கை பற்றுதி
வெந்திற லேயெனப் படையும் வீசியே.

நீ இனிமேலாக உனக்குரிய அரச யதவியை விடுத்து மந்திரியாக வாழப்பார். நீ இந்த போரை நினைந்து உனது மனதில் பயங்கொள்வாய் என்றால் அந்த பிரம தேவனைப்போன்று பஞ்சாங்கம் ஒன்றைக்கையில் எடுத்துக்கொண்டு படைகளை வீசி எறிந்துவிடுவாய். படைகள் வேண்டாம். பஞ்சாங்கம் மட்டும் போதும் என்றான் 155

கிளைத்திடு கள்ளியின் கிளைக ளாமென
வளர்த்தனை பலதலை வரம்பில் கைத்தலம்
தெளித்தனை சுமந்தனை நெடிது காலமா
இளைத்தனை வலியிலாய் யாது செய்திநீ

தம்பி சிங்கமுகனே கள்ளி மரத்தில் கிளைவிட்டெழும் பல தலைகள் போன்று நீயும் பல தலைகளை வளர்த்துக்கொண்டாய்: அதனால் என்ன பிரயோசனம்? அளவு கடந்த கைகளை எடுத்து தெளித்து வளைத்துப் பெரு சிரமத்துடன் நெடுங் காலமாக சுமந்துகொண்டாய். அவற்றைச் சுமந்து நீ களைப்பால் இளைத்துப் போனாய். வலியிலாது போய்விட்டாய் நீ பின் இனி என்ன செய்வாய். 156

பண்டுணர் வில்லதோர் பருவம் ஆதலின்
சண்டனை வருணனைத் தளையின் இட்டனை
அண்டரை யலைத்தனை அறிவு கூடலின்
பெண்டிரின் நடுங்கினை பேடி போலுநீ.

முன்னர் காலத்து உனக்கு உணர்வுகள் இப்போதைய நிலைபோன்று இல்லாத காலமானபடியால் அன்று நீ இயமனை வருணனை வென்று விலங்கிட்டு வைத்தாய். தேவர்கள் பலரை அலைத்தாய். இப்போது அறிவு சேர்ந்துள்ளதால் ஓர் பெண்ணைப் போல நடுங்கினாய். நான் நினைக்கிறேன் நீ பெண்ணும் அல்ல பேடியாய் விட்டாய் போலும். 157

பன்னெடுந் தலையுடைப் பால னாகுமுன்
வன்மையும் ஆடலும் வந்து பார்த்திட
இன்னமும் வந்திலள் வருந்தி ஈன்றதாய்
அன்னைதன் குறைகொலோ அருவ மானதே.

ஐயய்யோ ! இத்தனை பெரும் தலைகளையுடைய பாலனாகின்ற உனது வன்மையையும் இப்போது நீ பேசிய வார்த்தைகளான நடிப்பையும் பார்ப்பதற்கு இன்னமும் வந்தாள் இல்லையே உன்னை வருந்தி ஈன்ற தாய். நான் நினைக்கின்றேன், எனது தாய்க்கும் உன்நிலை முன்கூட்டியே விளங்கியிருந்தமையால்போலும் அவள் வெளிப்படாது மறைந்துள்ளாள் போலும். 159

பகையென ஒன்றுறிற் பதைபதைத் தெழீஇச்
சிகையுடை வாலுளைச் சீயஞ் சீறியே
தகுவிறல் கொள்ளுமால் அவற்றின் தன்மையாய்
மிகுதலை பெற்றதும் வீண்கொல் எம்பிநீ.

பகை என ஒரு பொருள் வந்துவிட்டால் அதுவேளை பதைபதைத்துக்கொண்டு சிலிர்க்கின்ற பிடரி மயிருடைய சிங்கம் எழுந்து பாய்ந்துகொண்டு சென்று பகை மிருகத்தைக் கொன்று வெற்றிகொள்ளுமே. அந்த மிருகத்தின் தன்மையாக நீ மிகுந்த தலைகளைப் பெற்றுக்கொண்டிருந்ததும் உனக்கு ஏதுமொரு பிரயோசனமில்லாது வீணாயதுபோலும். 156

பூதரைத் தலைவரைப் புராரி மைந்தனை
ஏதிலர் யாரையும் யான்வென் றேகுவன்
நீதளர் வெய்திடல் நினது மாநகர்
போதுதி என்றனன் புலனில் புந்தியான்.

பூதங்களை அவைகளின் தலைவரை முப்புரமெரித்த கடவுள் மைந்தனை இன்னுமுள்ள எம் பகைவர் யாரையும் வென்றிட நான் சென்று போரிட்டு வென்று வருவேன். நீ தளர்வடையாதே. உனது பெரு நகரில் போய்விடு. இங்கு நிற்கவேண்டாம் எனக்கூறினான் யாரெனில் எல்லார்க்கும்போல அறிவைப் பெறும் புலன்கள் இருந்தும் அவையால் உண்மையை அறிந்துகொள்ள முடியாத நற்சிந்தை கூடாத சூரபன்மன். 160

என்றிவை அவுணர்கோன் இசைத்த காலையின்
நன்றிவன் உணர்வென நகைத்துக் கண்டொறுந்
துன்றிய பேரழல் சொரிய வெஞ்சினத்
தொன்றிய தன்னுளத் தினைய உன்னுவான்.

என்று இவைகளை சூரபன்மன் சொல்லிய காலத்தில் அது கேட்ட சிங்கமுகன் நன்றாக இருக்கின்றது இவனுடைய உணர்வுகள் என்று சிரித்தான். தமையனது இழிவான பரிகசிப்பு வார்த்தைகளால் கண்களிலே பெரு நெருப்பாகிய பொறி சிந்திட கொடுங் கோபத்தால் ஒடுங்கப்பெற்ற உளத்துடன் தன் மனதில் இப்படி எண்ணுவான். 161

உறுதியை உரைத்தனன் உணர்வி லாதவன்
வறிதெனை இகழ்ந்தனன் வருவ தோர்கிலன்
இறும்வகை நாடினன் யாதொர் புந்தியை
அறிவிலார்க் குரைப்பவர் அவரிற் பேதையோர்.

நான் எனது குலம்வாழ இவனும் வாழ உறுதியான ஒன்றை எடுத்து உரைத்தேன். உணர்விலாத என் அண்ணன் வீணே என்னை இகழ்ந்தனன். தனக்கு வரப்போகும் காரியங்களை உணர்ந்துகொள்கின்றானில்லை. தான் அழிவதற்கே வழிதேடிக்கொண்டான். யார் என்றாலும் ஓர் நற்புத்தியை அறிவிலார்க்கு எடுத்துரைப்பவர் அந்த அறிவில்லாதவரிலும் பார்க்க பேதமை உடையர் என்பது இப்போது தெளிவாயது. 162

உய்த்தனர் தேன்மழை உதவிப் போற்றினுங்
கைத்திடல் தவிருமோ காஞ்சி ரங்கனி
அத்தக வல்லவோ அறிவி லாதவன்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே.

காஞ்சுரங்கனியின் கசப்பை நீக்கி அதை உய்ய வைக்க வேண்டி அதன்மீது தேனை மழையாகச் சொரிந்து பக்குவப்படுத்தினாலும் அது கைத்திடுதலை தவிர்ந்து கொள்ளுமோ? ஆகாது. அதேபோன்றுதான் அல்லவோ அறிவில்லாத ஒருவனுடைய சித்தத்தையும் தெளிந்து உணரவைக்கவேண்டி நாம் தெளிவுபடுத்தும் முயற்சிகளை கொள்வது. 163

தொலைக்கருந் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினும் உய்வகை கருது கின்றிலன்
அலக்கணுற் றிருந்துநாம் இரங்கி ஆவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ.

யாவராலும் தொலைக்க முடியாத திருஉடைய சூரபன்மனின் புத்தியை நான் கலக்கி பல பல விடயங்களை எடுத்துச் சொன்னாலும் எனது அண்ணன்தான் உய்கின்ற மார்க்கத்தை உணர்கின்றானில்லை. இங்கு நான் மட்டும் அலக்கட்பட்டிருந்து அழுது இரங்கினால் ஆவது என்ன. விலக்கிட முடியாத விதியை யாம் வென்றிட வல்லமோ? முடியாதே. 164

ஆவது விதியெனின் அனைத்து மாயிடும்
போவது விதியெனின் எவையும் போகுமால்
தேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
ஏவரும் அறியொணா ஈசற் கல்லதே.

எல்லாக் கருமமும் நன்மையாக ஆகவேண்டி இருந்தால் எல்லாம் நன்மையாகவே முடிந்திடும். எல்லாம் அழிந்துபோவதுதான் விதி என்றால் எவையும் அழிந்துபோம். இது தேவர்கட்கு என்றாலுப் தீர்க்கத் தக்கதொன்றாகுமோ? முடியாது. இதனை மாற்றி அமைத்திட வல்லவன் ஒருவன் உளன். அவன்தான் யாவரும் அறிந்திட முடியாத ஈசன் ஒருவனாவன், அல்லாது வேறு யாருமில்லை. 165

நீண்டசெஞ் சடைமுடி நிமலன் ஈந்தநாள்
மாண்டது மாய்ந்திடு மெல்லை வந்ததால்
ஈண்டுளார் யாவரும் இறையுந் துஞ்சுமால்
பூண்டிடும் அமரர்கோன் தவமும் பொய்க்குமோ.

நீண்ட சிவந்த சடைமுடியுடைய சிவபிரான் தந்தருளிய வாழ் நாளும் மாண்டுபோயது. எல்லாரும் இறக்கின்ற எல்லை வந்துகொண்டது. இங்கே இருப்பார் யாரும் எமது அரசனும் இறப்பார்கள். இப்போதுதான் நல்நிலையடைய வேண்டுமெனத் தவஞ்செய்திருக்கின்ற இந்திர தேவனுடைய தவமும் பொய்த்து விடுமோ, ஆகாதே. 166

இறப்பது சரதமேல் இறைவன் என்னுரை
வெறுத்தனன் இகழுமேல் வேண்டி இன்னும்யான்
மறுத்தெதிர் மொழியலன் மன்ன என்பிழை
பொறுத்தி' யென் றின்னுரை புகல்வ தல்லதே.

யாரும் இறப்பது உண்மையாகும். எனது வார்த்தைகளை மேலாக அரசன் வெறுத்துவிட்டான். இன்னமும் பல நியாயங்களை எடுத்துக் கூறினும் இவன் இகழுவான். ஆதலின் இன்னமும் யான் இவன் போக்குக்கு மாறாகச் சொல்ல மாட்டேன். இப்பொழுது அரசே எனது பிழையான வார்த்தைகளைப் பொறுத் திடுவீர் என இனியமொழி பேசுதலே யல்லாது வேறுசெயல் இல்லை. 167

மன்னவர் மன்னவன் வள்ளல் வேலினால்
இன்னினி இறந்திடும் இதுவும் நோக்கியே
பின்னுமிங் கிருந்திடல் பிழைய தாகுமால்
முன்னுற முடிவதே முறைய தாமென

அரசர்க்கரசனான சூரபன்மன் அருள் வள்ளலான முருகப்பிரான் வேலினால் இனிமேல் இறந்துபோவான். இதையும் பார்த்துக்கொண்டு பின்னால் நான் இங்கு இருந்து வாழ்கின்றதும் பிழையதாகுமால். ஆதலால் எனது தமையன் இறப்பதற்கு முன்பு நான் முடிவாகிப் போதலே முறையான தொன்றாகும் எனத் தனது மனதில் எண்ணினான் சிங்கமுகாசூரன். 168

சிந்தனை செய்திடு சிங்க மாமுகன்
தந்தையை நிகர்வரு தம்முன் தாள்தொழா
வந்தனை செய்தனன் மன்ன சீறிடேல்
புந்தியி லேன்பிழை பொறுத்தல் வேண்டுமால்.

இவ்வாறுசிந்தனை செய்திட்ட சிஙகமுகாசூரன் காசிபமுனிவன் என்னும் தந்தையை நிகர்த்து விளங்கிடுகின்றவனான தனது தமையனின் திருவடிகளை வணங்கி வந்தனை செய்து நின்று அரசே என்னைக் கோபிக்காதீர். புத்தியில்லாத என்னுடைய சொல்லால் வந்த குற்றமெல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளல் வேண்டும். 169

சிறியவர் ஒரு பிழை செய்யின் மேலவர்
பொறையொடு பின்னரும் போற்றல் அல்லதை
இறையதும் வெகுள்வரே யானுஞ் செய்பிழை
அறிவன்நீ அன்றியே ஆர தாற்றுவார்.

சிறியவர்கள் ஓர் பிழைசெய்தால் பெரியோர்கள் மிகும் பொறுமையோடும் அவைகளைப் பொறுத்து அந்தகைய சிறியோரையும் காத்துப்பேணுதலேயன்றி! கொஞ்சமேனும் அப்பெரியோர் கோபிப்பாரோ? ஆதலின் யானும் செய்த இப் போதைய பிழையினை அறிவில் மேம்மாடுடைய நீ ஒருவன் அன்றியே வேறு யார் அப்பிழையினைத தாங்கிடுவர். 170

பொறுத்தனை கோடியென் புன்மை யுள்ளமேற்
செறுத்தெனை இகழ்ந்திடல் செருவிற் சென்றியான்
மறுத்தெதிர் மலைந்திடு மாற்ற லார்தமை
ஒறுத்திடு கின்றனன் அதனை ஓர்திநீ.

அரசே என் பிழைகள் யாவையும் பொறுத்துக்கொள்ளும் எனது புன்மை யாகும் வார்த்தையால் வந்த வெறுப்பால் உமது உள்ளத்தில் கோபித்து என்னை இகழாதீர். இப்பொழுதே போர்க்களத்து யான் சென்று அங்கு என்னுடன் மாறு கொண்டு எதிர்த்துப் போரிட வல்லார் யாரையும் வெற்றிகொண்டு அழித்திடுகின் றனன். அதனை நீர் நன்றாக எண்ணிக்கொள்ளும். 171

செருவினுக் கேகுவன் செறுநர் தம்மிசைத்
தருதியால் விடையெனத் தம்பி கேட்டலும்
பெரிதுள மசிழ்ந்தனன் பிறங்கு காதலால்
வருதியென் றனையனை மார்பிற் புல்லினன்

இப்பொழுதே பகைவருடன் போரிடச் செல்வேன். எனக்கு உத்தரவு தரு வீராக என்று தம்பியாகும் சிங்கமுகன் கேட்டலும் அதுவேளை அதுகேட்ட சூரபன் மன் பெரிதும் தனது உள்ளம் மகிழ்வாயினன். தம்பி கூறிய இப்போதைய இந்த வார்த்தையால் எழுந்த காதலினால் தம்பி இங்கே வருவாய் என அவனை அணைத்து தனத மார்புடன் ஒருங்கு சேரத் தழுவிக்கொண்டான். 172

பையர வளித்திடும் பாத லத்தினில்
வையக வரைப்பினில் திசையின் வான்களிற்
செய்யஅண் டங்களிற் செய்யும் வென்றியுள்
ஐயநிற் கேதுகொல் அரிய தானதே.

எனது ஐயா சிங்கமுகனே! படத்துடன் இப்பூமியைத் தாங்கிடும் பாம்புகள் காவல்கொள்ளும் பாதாள உலகங்களில் இந்தப் பூமியின் எல்லையில் எங்கும் வான உலகமெங்கும் நிறைய விளங்கிடும் அண்டங்களில் எல்லாம் செய்யப்பெறும் போர் களில் வருகின்ற வெற்றிகளிலே உனக்கு முடித்திட முடியாத அரிதான ஓர் வெற்றி எது இருக்கின்றது. 173

நீக்கமில் கேள்வியாய் நீமுன் சொற்றன
தூக்குறின் என்மனத் துணிவுந் திட்பமும்
ஊக்கமு முணரவே ஒன்ன லாரெனும்
மாக்களை அடுவதோர் மடங்கல் அல்லையோ.

நீங்கிடாது நல்ல நூல்களையெல்லாம் கற்றுத்தெளிந்துகொண்ட அறிவனே நீ முன்னர் சொல்லியவாறெல்லாம் எதற்காக என சீர் தூக்கி நான் ஆலோசனை செய்தால் நீ எனது மனதின் துணிவையும், திடத்தையும் ஊக்கத்தையும் உணரவே யாகும் என்பதை இப்பொழுது உணர்ந்துகொண்டேன். நீயா எதற்கும் அஞ்சிடு பவன். நீ மிருகம் அனைத்தையுமே கண்டபோதே கொன்றிடும் இயல்புபடைத்த என் சிங்கன் அல்லவோ. 174

சென்றனர் மாற்றலர் என்கை தேர்தியேல்
கொன்றபின் அல்லது கும்பிட் டோடிட
வென்றபின் அல்லது வெகுளி தீர்தியோ
உன்றன தாற்றலை உணர்கி லேன்கொலோ.

பகைவர் ஒருவர் வந்துள்ளார் எம்முடன் போரிட என்பதை நீ தேர்ந்து கொண்டால் அந்தப் பகைவரைக் கொன்றபின் அல்லாது கும்பிட்டுக் கும்பிட்டுத் திரும்பி ஓடிடும்படி வென்றபின் அல்லாது உனது கோபம் தீர்வாயோ? உனது ஆற்றல்பற்றி நான் என்ன அறிந்துகொள்ளமாட்டேனோ நன்று தெரிந்தவன் தானே? 175

இற்றைநாள் நின்னகர் ஏகி ஆயிடை
உற்றிடு படையெலாம் ஒருங்கு கொண்டுநீ
கொற்றமொ டிருக்குதி குமரன் ஈண்டுறின்
மற்றுனை விளிக்குவன் வருதி யாலென்றான்.

இந்த நாள் நீ புறப்பட்டுச் சென்று அவ்விடத்துள்ள படைகள் யாவற்றையும் ஒருங்காக திரட்டிக்கொண்டு சிறப்புடன் நீ இருப்பாயாக குமரக்கடவுள் இங்கே போரிடும்படி வந்தால் உன்னை இங்கு அழைப்பேன் அப்பொழுது வருவாயாக என்றான் சூரபன்மன். 176

ஒல்லென முருகவேள் உனது மாநகர்
செல்லினும் ஏகலே செருவுக் கன்னது
சொல்லினை விடுத்தியோர் தூதன் தன்னையான்
வல்லையின் அமர்செய வருகின்றேன் என்றான்.

அப்பொழுது சிங்கமுகன் தமையனை நோக்கி அண்ணனே சடுதியாக முருகக்கடவுள் உனது பெருநகரத்தினில் போரிட வந்தாலும் நீ போக்குக்குச் செல்லக்கூடாது. அந்த நிலையை உடன் எனக்குச் சொல்லி ஓர் தூதனை அனுப்புவாயாக. யான் விரைவுடன் போர் செய வருகின்றேன் என்றான் 177

என்றலும் அவுணருக் கிறைவன் ஈங்கிது
நன்றென விடையது நல்கத் தாழ்ந்துபோய்த்
தன்றிரு மாநகர் சார்ந்து வைகினான்
வன்றிறல் உடையதோர் மடங்கற் பேரினான்.

என்று சிங்கமுகா சூரன் வேண்டிடுதலும் அதுவேளை அசுரர்க்கெல்லாம் தலைவனான சூரபன்மன் அது நன்று எனக்கூறி சிங்கமுகனை சென்றுவருமாறு விடைகொடுத்திட தமையனை தாழ்ந்து வணங்கிப் போய் தனது இருப்பிடத்தைச் சேர்ந்து கொண்டான் மிகத் திறலுடைய சிங்கத்தின் பேர்கொண்ட சிங்கமுகாசூரன். 178

ஆனதோர் பொழுதினில் அரசன் ஆண்டுறை
தானையந் தலைவரைத் தனயர் தங்களை
ஏனையர் யாரையும் ஏகச் செய்துதன்
மாநகர் இத்திர வளத்தின் வைகினான்.

ஆனதான அந்த வேளையில் சிங்கமுகன்போய பிற்பாடு சூரபன்மன் அங்கிருக்கும் சேனைத்தலைவரை பிள்ளைகள் தங்களை மற்றுள்ளாராய் மந்திராலோசனைச் சபையில் இருந்தார் யாவரையும் செல்லும்படியாக செய்துவிட்டு பின்னர் தனது பெருநகரத்தில் இருக்கின்ற இந்திரபோக வளத்துடன் சிறந்து இருந்தான்.

இந்த மந்திராலோசனை வீரவாகுதேவர் தூதுவந்து போய் மீண்ட அன்றிரவு கடந்ததொன்றாகும். 179

அந்தமில் வளனுடை அவுணர் காவலன்
மந்திரம் இருந்தது வகுத்துக் கூறினம்
இந்திரன் முதலினோர் யாரும் ஏத்திடச்
செந்தியின் அமர்ந்தவன் செய்கை செப்புவாம்.

எல்லையற்ற வளங்களையுடைய அசுரர்க்கெல்லாம் தலைவனான சூரபன்மன் அன்றிரவு சபை கூடி இருந்த வரலாற்றினை முனிவர்களே உங்கட்கு வகுத்து எடுத்துக் கூறினோம். இனிமேலாக இந்திரன் முதலாம் கடவுளர் யாரும் சூழ்ந்துநின்று துதித்திட திருச்செந்தூரில் அமர்ந்தருளிய குமர தேவனுடைய செய்கைகளைக் கூறுவாம், என சூத முனிவர் மீண்டும் சொல்கின்றார். 180

சூரன் அமைச்சியற் படலம் முற்றும்.
ஆகத்திருவிருத்தம் 1178
மகேந்திர காண்டம் முற்றுப்பெற்றது.
காண்டம் மூன்றிற்கும திருவிருத்தம்; 4890
கச்சியப்பசிவாசாரியார் திருவடி வாழ்க.
குருபரன் திருவடி வாழ்க.

---

அச்சுப்பதிவு: அ. இ. மி. அச்சகம், மானிப்பாய்.

